ஸ்ரீமத்

# கம்ப ராமாயண அகராதி

நான்காம் பாகம் ம-வ



அ. சே. சுந்தரராஜன், B. A.

உ

ஸ்ரீ மத்

# கம்ப ராமாயண அகராதி

## நான்காம் பாகம் ம — வ




தொகுப்பாசிரியன்

முன்னாள், இலங்கை இராமநாதன் கல்லூரி ஆசிரியர்

**அ. சே. சுந்தரராசன், B. A.**

10-A, அல்மோரா, அணுசக்தி நகர்

பம்பாய் - 400 094

## அணிந்துரை

'ஞாலமளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்' என அருளாசிரியர் களாற் போற்றப் பெறும் சிறப்புடையது தமிழ். தமிழில் வழங்கும் பெருங்காப்பியங்களில் உலகியல்வழக்கும் நாடகவழக்குந் தழு வியதாய் வழக்கும் செய்யுளும் ஆகிய இருவகை நெறிகளிலும் பயின்றுள்ள சொற்றொகுதியின் களஞ்சியமாய்த் திகழ்வது கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் இயற்றிய இராமாயணமாகிய பெருங் காப்பியம் என்பதனைத் தமிழுணர்ந்தோர் அனைவரும் நன்குணர்வர். 'கல்வியிற் சிறந்தவர் கம்பர்' என உரையாசிரியர்களால் எண் ணத்தகும் புலவர்பெருமானாகிய கம்பர், தம் காப்பியத்தில் ஒரே சொல்லைக் கையாளுந் திறத்தில் காப்பிய நிகழ்ச்சிகளின் சூழ்நிலைக் கேற்பவும் கூற்று நிகழ்த்துவோர் கேட்போர் ஆகிய காப்பிய மாந் தர்களின் பண்புநலன், சொல்வன்மை முதலிய தகுதிகளுக் கேற்பவும் காப்பியத்தினைப் பயில்வோர் உணர்வு நிலைக்கேற்பவும் புதிய புதிய பொருள் நயங்கள் புலப்பட்டுத் தோன்றும்படி செய்யு ளியற்றும் சித்திரப் புணர்ப்பிற் சிறந்து விளங்குபவர் என்பதனை அறிஞருலகம் நன்குணரும்.

கம்பர் காப்பியத்துட் பயின்றுள்ள சொற்களையெல்லாம் அகர வரிசையில் தொகுத்து நோக்கி, அச்சொற்கள் கருவியாகக் கம்பர் உணர்த்திய பொருட் கூறுகளையும் முறைப்படுத்தி, இராமகாதை யாகிய பெருங்காப்பியத்திற்கெனச் சிறப்புடையதோர் அகராதி யினை அமைத்தல் வேண்டும் என்னும் பெருவேட்கை, இலங்கை இராமநாதன் கல்லூரியிற் பல்லாண்டுகள் தமிழ்ப்பணிபுரிந்து ஓய்வு பெற்ற திருவாளர் அ. சே. சுந்தரராஜ ஐயங்கார் பி. ஏ. அவர்களது புலமையுள்ளத்தில் முகிழ்த்தது. அதன் பயனாகப் புலமைச் செல்வர் திரு. அ. சே. சுந்தரராஜ ஐயங்கார் அவர்கள் கம்பராமாயணத்தில் அகர முதல் ஔகாரம் இறுதியாக அமைந்த சொற்றொகுதிகளைக் கொண்ட கம்பராமாயண அகராதி முதலாம் பாகத்தை அரிதின் முயன்று அமைத்து 1970-ஆம் ஆண்டில் வெளி யிட்டுதவினார்கள். அவ்வகராதி தமிழ் வளர்ச்சியில் ஈடுபட்டுள்ள தமிழறிஞர்களும் பேராசிரியர்களும் தமிழன்பர்களும் ஒருமித்துப் பாராட்டப்பெறும் சிறப்புடையதாக விளங்குகின்றது. அதனைத் தொடர்ந்து 'க' முதல் 'ச' வரையுள்ள எழுத்துக்களை முதலாக வுடைய சொற்றொகுதியைக் கொண்ட இரண்டாம் பாகத்தினையும் 'ப' முதல் 'த' வரையுள்ள எழுத்துக்களை முதலாகவுடைய

சொற்றெகுதியைக் கொண்ட மூன்றும் பாகத்தினையும். 'ம' முதல் 'வ' வரையுள்ள எழுத்துக்களை முதலாகவுடைய சொற்றெகுதியைக் கொண்ட நான்காம் பாகத்தினையும் இப்பொழுது வெளியிடுகிறார்கள்.

அகராதிப்பணி என்பது அறிஞர் பலரும் கூடிச் செய்தற்குரிய அருமையுடைய தென்பதனையும் பெரும்பொருட் செலவில் நிகழ்தற் குரிய தென்பதனையும் பலரும் அறிவர். பல்கலைக்கழகம் மேற் கொண்டு நிறைவேற்றுதற்குரிய இவ்வரிய பெரும் பணியினைத் தமது முதுமை நிலையிலும் மேற்கொண்டு உடல் நலத்தினையும் பொருட் செலவினையும் கருதாது இடைவிடாது உழைத்து இவர்கள் இனிது நிறைவேற்றி வருகின்றமை குறிப்பிடத்தகுவதாகும்.

கம்பர் பாடல்களைக் கதைப்போக்குக்கு இடையறவின்றித் தொகுத்து விளக்கும் பணியினை முன்பு செய்துதவிய இவர்கள், கம்பரது புலமைத் திறனை மக்கள் உணர்ந்து பயன் கொள்ளுதல் வேண்டும் என்னும் பேரார்வத்துடன் தமது வாழ்நாட்களையும் ஒய்வூதியத்தினையும் தமிழ்ப்பணிக்கெனவே உரிமை செய்து உழைத்து வருகின்றார்கள். இவ்வாறு தமிழ் வளர்ச்சிக்கு ஆக்கந் தரும் முறையில் இவர்கள் ஆற்றிவரும் நற்பணியின் அருமை பெருமைகளை எண்ணுங்கால் ஆழ்வார், அருளிச்செயலில் அமைந் துள்ள 'பெருந்தமிழன்' என்னுந் தொடருக்குச் சிறந்த இலக்கிய மாகத் திகழ்பவர் இப்பெரியார் என்பது இனிது புலனாகும்.

"இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்த மென்றாலும் வேண்டேன்"

என்னுந் தெளிந்த சிந்தையினராய், ஆங்கில மொழியிலும் தமிழ்த் துறையிலும் புலமைச் செல்வராய்த் தமிழ் வளர்ச்சிக்குத் தளராது உழைத்து வரும் திரு. அ. சே. சுந்தரராஜ ஐயங்கார் அவர்களுக் குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடப்பாடுடையதாகும். செந் தமிழ்ப் புலமை நலம் வாய்ந்த இவர்களுக்கு இத்துறையில் மேன் மேலும் ஊக்கமும் ஆக்கமும் அளிக்கும் முறையில் தமிழ் வளர்ச்சி நிலையங்களும் பல்கலைக் கழகங்களும் கல்லூரிகளும் நூல் நிலையங் களும் தமிழன்பர்களும் கம்பராமாயண அகராதித் தொகுதிகளை ஆர்வமுடன் வாங்கி ஆதரித்தல் வேண்டும் என அன்புடன் வேண்டிக் கொள்கின்றேன்.

க. வெள்ளைவாரணன்,
தமிழ்த்துறைத் தலைவர்
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

சிதம்பரம்,
7—8—78

## நன்றியுரை

1967-ஆம் ஆண்டளவில் ஏறக்குறைய 9500 சொற்கள் அடங்கிய அரும்பத அகராதியாகத் தொகுக்கப்பட்ட இந்நூல் 1970இல் சிறிது குறைய 25,000 சொற்களைக்கொண்ட முழு அகராதியாக விரிவடைந்தது. நான்கு பாகங்களாக வெளியிடுவதாயிருந்த நூலின் முதலாம்பாகம் சுமார் 5000 சொற்களைக் கொண்டதாக 1971 ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. அதில் மிகக்குறைந்த அளவுள்ள பிரதிகளே விற்பனை ஆயின. காகிதத்தின் விலை பெரிதும் ஏறிவிட்டது. அச்சிடும் செலவினங்களும் அங்ஙனமே அதிகமாயின. எஞ்சியுள்ள மூன்று பாகங்களையும் அச்சிட்டு வெளியிடும் முயற்சியைக் கைவிடக் கூடிய நிலைமை ஏற்பட்டது. அந்நிலையில் திருமிகு சேனாதிராஜா தம்பதியினர் தாமாகவே அச்சிடுவதற்கு வேண்டிய பொருளைக் கொடுத்துதவ முன்வந்தார்கள். அவர்கள் காலத்தினாற் செய்த செயற்கரிய பேருதவியின் பயனாக இப்பொழுது இந்நூலின் ஏனையமூன்று பாகங்களும் ஏக காலத்தில் வெளிவருவன ஆயின. மேலும் Dr. (திருமதி) நல்லம்மா சேனாதிராஜா அவர்கள் அரியதொரு மதிப்புரையும் எழுதியனுப்பினார்கள். (அதனை இரண்டாம் பாகத்திற் காணலாம்). அக்குடும்பத்தினர் எல்லா நலங்களும் குறைவின்றிப்பெற்று நீடுழி வாழ்கவென எல்லாம் வல்ல இறைவனை வாழ்த்துவதன்றி யான் செய்யும் கைம்மாறு யாதுளது?

முதலாம் பாகத்தில் விடுபட்டுப்போன சில சொற்களும் சொற்றொடர்களும் மேற்கோள் முதலியனவும் பிற்சேர்க்கையாக இரண்டாம் பாகத்தில் இணைக்கப்பட்டுள்ளன. இங்ஙனமே ஏனைய மூன்று பாகங்களிலும் சேர்க்கக் கூடிய சொற்கள் சில பல இருக்கக் கூடும். அவற்றையெல்லாம் அவ்வப்போது குறித்துவைத்துக் கொண்டு உரிய காலத்தில் அனுபந்தமாக வெளியிடலாமென்று எண்ணியுள்ளேன். சென்ற ஆண்டு வெளியான சென்னை கம்பன் கழக இராமாயணப் பதிப்பில் புதிய பாடங்கள் இடையிடையே காணப்படுகின்றன. அவற்றாற் பெறப்படும் புதிய சொற்களையும் வேறுபட்ட பொருள் முதலியவற்றையும் இந்த அனுபந்தத்

சேர்க்கவேண்டுவதும் அவசியமாகின்றது. இப்பதிப்பிற்குரிய செய்யுட்களின் மாற்று எண் அட்டவணை ஒன்று இரண்டாம் பாகத்தில் மூன்று பக்கங்களில் சேர்க்கப்பட்டுள்ளது.

இந்நூலைத் தொகுக்கும்போதும் அச்சிடும்போதும் அவ்வப்போது நிகழும் ஐயங்களை நீக்கியும் இடையூறுகளைக் களைந்தும் பல வழிகளிலும் பேருதவி செய்து முடிவில் பேரன்புடன் அரியதொரு அணிந்துரையும் வழங்கிய பெருந்தகைமைப் பேரியலாளர் பேராசிரியர் திருமுறை ஆராய்ச்சிக் கலைஞர் வித்துவான். க. வெள்ளைவாரணனார் அவர்களுக்கு யான் எழுமையும் கடப்பாடுடையேன்.

எனது வேண்டுகோளுக்கிணங்கி இந்நூலுக்கு ஆங்கிலத்தில் ஒரு மதிப்புரை எழுதியளித்த வித்துவான் திரு M. V. சுப்பிரமணிய அய்யர், M.A., B.O.L. (Frcneh Institute of Indology) அவர்களுக்கும், தமிழ் அகராதிக் கலை என்னும் நமது அரிய நூலிலிருந்து இந்நூல் பற்றிய சிறப்புரையில் வேண்டியவற்றை எடுத்துக் கொள்ளுமாறு அனுமதியளித்த புலவர் சுந்தர சண்முகனார் அவர்களுக்கும் எனது ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வகராதியின் இரண்டாம் பாகத்தை அழகுற விரைவில் அச்சிட்டு நிறைவேற்றிய பகோலா அச்சகத்தாருக்கும் மூன்றும் நான்காம் பாகங்களைச் செவ்விய முறையில் அங்ஙனமே அச்சிட்டுதவிய சிவகாமி அச்சகத்தாருக்கும் எனது ஆழ்ந்த நன்றி உரியதாகும்.

அணுசக்திநகர்<br>
7 — 8 — 1978

அ. சே. சுந்தரராஜன்

## குறியீடுகளின் விளக்கம்

அ — அயோத்தியா காண்டம்

அண் — அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு

ஆ — ஆரணிய காண்டம்

இலக் — இலக்கணை

உ.வி. — உரைவிகற்பம்

கலா — கலாக்ஷேத்திரம் பதிப்பு

கி — கிட்கிந்தா காண்டம்

கு — குமாரசாமிப்புலவர் பதிப்பு

சு — சுந்தர காண்டம்

பா — பால காண்டம்

பா : பே — பாடபேதம்

பாயி — பாயிரம்

மு.ரா — மு.ரா. கந்தசாமிக் கவிராயர் பதிப்பு

யுத் — யுத்தகாண்டம்

வெ.ப — வெ. ப. சுப்பிரமணிய முதலியார் பதிப்பு

வை.மு — வை.மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் பதிப்பு

உ

ஸ்ரீமத்

# கம்ப ராமாயண அகராதி - IV

## ம

மக்கட்குரல் - மக்கள் குரல். மனிதரது சத்தம். மக்கட் குரலென் றயர்வேன். (அ : 370)

மக்கட்டுணை - மக்கள் துணை. பிள்ளைகளின் உதவி. புந்தியில்லாய் மக்கட்டுணை யற்றனை. (யுத் : 1960)

மக்கட் பெற்றுயிர் வாழ்வார் - மக்களைப் பெற்று உயிர்வாழ்பவர். மக்கட் பெற்றுயிர் வாழ்வார்க் கவமுண்டே. (அ : 595).

மக்கள் - பிள்ளைகள். மனையின் நீங்கிய மக்களை. (அ : 130) மக்களைச் சுமந்துசெல்லும் தாதையர். (யுத் : 1936)

மக்காள் - மக்களே. மக்காள் நீரே உரியகடன் வினையேற்கு முதவுவீர். (ஆ : 208)

மகத்துறை - யாகஞ் செய்யுமிடம். முறைமுனி யுரைத்த வண்ணம் மகத்துறை மைந்தனுய். (பா : 692) [பா : பே]

மகம் - 1. யாகம். அரி மகம் நடத்த எண்ணியோ. (பா : 260) 2. ஒரு நட்சத்திரம். மடங்கலும் மகழுமே வாழ்வினேனுங்கிட. (பா : 287)

மகரக்கண் - மகரம் போன்ற கண். (யுத் : 2367)

மகரக் கண்ணன் - கரன் மகன். அவ்வுரை மகரக் கண்ணனறை தலும். (யுத் : 2359)

மகரக்குழை - மகரமீன் வடிவிற் செய்த குண்டலம். குழைமகரம் சுடர் மகுடம். (யுத் : 3371)

மகர கேதனன் - மீனக் கொடியை யுடைய மன்மதன். வள்ளுறை வயிரவாள் மகரகேதனன். (பா : 1050)

மகரதோரணம் - மகரமீன் வடிவாகச் செய்யப்பட்ட ஒளியையுடைய தோரணம். மதிதொட நிவந்தன மகர தோரணம். (அ : 128)

மகரந்தம் - சுண்ணம். மாகந்தமும் மகரந்தமும் அளகந்தரு மதியின் பாகந்தரு நுதலாள். (அ : 621)

மகரநீர் - கடல். மகர மீன்களின் இருப்பிடமாதலால் இப்பெயர் பெற்றது. வருணனுய்த்தன மகரநீர் வெள்ளத்து மறைந்து. (யுத் : 519)

மகரம் - 1. மீன். கொடித்தனி மகரங் கொண்டான். (பா : 427)
2. முதலை. குமுதத்து நறுந்தேன் வவ்வி மாந்தரிற் களிமயக் குறுவன மகரம். (கி : 17)
3 சுறுமீன். பிணையொடுறங்கும் மகரங்கள். (சு : 47)

மகரமீன் - ஒருவகை மீன். சங்கமும் மகரமீனும். (அ : 1042)

மகரயாழ் - மகரமீன் வடிவுடைய யாழ்; 19 நரம்புகளையுடையது. இறங்குவ மகரயாழ் எடுத்த இன்னிசை. (பா : 140)

மகரவாய் - சுறு என்ற பெருமீனின் அங்காந்த வாயின் வடிவிற் செய்யப்பட்ட ஓர் ஆபரணம்; கிம்புரி; குரங்குசெறி. மகரவாய் விளங்கு வாண்முகம். (பா - 1310)

மகரவாரிதி - கடல். சாகரமெனப் பெயர் தழைப்ப மகர வாரிதி சிறந்தது. (பா : 520)

மகரவீணை-மகரமீன் வடிவாகச் செய்யப்பட்ட வீணை. மகரவீணையின் மந்தர கீதம். (சு : 124)

மகரவெள்ளம் - கடல். கடற்கரை. ஏழுபத்தின் பெருவெள்ளம் மகர வெள்ளத்திறுத்ததால். (யுத் : 2)

மகரவேலை - சுறுக்களையுடைய கடல். (கலா) சுறுமீன்களையுடைய பாற்கடல். (வை.மு.) மகர வேலையை ஒத்தது மாநகர். (கி:603)

மகரவேலைக் காவலன் - வருணன். துணுக்கத்தோடும் சீகர மகர வேலைக் காவலன் சிந்த. (ஆ : 573)

மகர வேலைமண் தொட்ட சகரர் - சுறுமீன்களையுடைய பெருங்கடல் ஆகுமாறு மண்ணைத் தோண்டி யெடுத்த சகரர். மகரவேலை மண் டொட்ட வண்டாடு தார்ச் சகரர். (அ : 320)

மகராக்கன் - மகரக் கண்ணன். (யுத் : 2367) [பா:பே]

மகரிகை - சுறுமீன். மகரிகை வயிரக் கிம்புரி வலயமாச் சுடர்கள். (சு : 412.

மகரிகை நெடுமுடி - சுறுமீன் வடிவு பொறித்த நீண்ட கிரீடம். வளர்ந்த காதலர் மகரிகை நெடுமுடியரக்கனை வரக்காணர். (சு : 287)

மகரிகை வயிரக் கிம்புரி வலயமாச் சுடர்கள் - சுறுமீன் வடிவமைய வயிரமணிகள் அழுத்திச் செய்யப்பட்ட பூணுகிய கேயூரத்தின் மிக்க ஒளிகள். (சு : 412)

மகரிகை வயிர குண்டலம் - சுறுமீன் வடிவமைய வயிரத்தாற் செய்யப்பட்ட குண்டலமென்னும் காதணி. மகரிகை வயிர குண்டலமலம்பு திண்டிறல் தோள் புடைவயங்க. (சு : 407)

மகவருளாகுதி - புத்திரர்களைக் கொடுத்தற்குரிய ஆகுதி. முனியும் அத்தழலின் நாப்பணே மகவருள் ஆகுதி வழங்கினனரோ. (பா : 266)

மகவாமை - மகா கூர்மம். பெரிய ஆமை. மகவாமை முதுகிற் ரேன்றும் மந்தர மெனலும் ஆனன். (கி : 1040)

மகவாய் - யாகத்தில். முன்னமும் மகவாய் வந்த மூவரில் ஒருவன் போனன். (ஆ : 799)

மகவு - குழந்தை. மகவு முலைவருட இளமகளிர்கள் துயின்ருர். (அ : 544)

2. புத்திரன். வயிற்றுறுமகவை வீட்டியே யெழுகூறு செய்திடு தலும். (பா : 506) போன மகவுடையார். (யுத் : 1951)

மகள் - புத்திரி. கைகயன் மகள் விழுந்தரற்றக் காண்டியால். (அ : 1105)

மகளிர் - பெண்கள். மகளிர் கண்களே. (பா : 146)

மகன் - 1. மைந்தன். என்மகன் என் கண். (அ : 217)

2. கணவன். வீரன்- (உ.வி.) (கலா) மகனே கண்டிலேயோ நம் வாழ்வெலாம். (கி : 404)

மகன் மகன் மகன் – மகனுடைய மகனின் மகன். மகனுக்குப் பேரன் முறையானவன். அயன் மகன் மகன் மகன் அடியில் வீழ்ந்தனள் மயன் மகள். (சு : 978)

மகன் மகன் மைந்தன் – மகனுடைய மகனின் மைந்தன். தரும நீதியன் மகன் மகன் மைந்தன் நான் முகற்கு வாய்மையான். (யுத் : 351)

மகன் மைந்தன் – மகனுக்கு மகன் நான்முகன் மைந்தன் மகன் மைந்தன். (சு : 483)

மகன்றில். அன்றிலின் ஒரு சாதி. இணைபிரியா நீர் வாழ் பறவை. உறைந்தன மகன்றிலுடன் அன்றிலுயிர் ஒன்றி. (கி : 514) (சு : 206)

மகார் – புத்திரர். மகாரை நல்குவதாம் புரை ஆவுதி. (பா:273)

மகிணர் – கணவர். மகிழ்நர் என்பதன் மரூஉ. அம்மகிணர் தம் முடியில் தையலார் கூந்தலும் வறுமைய மலரின் கூலமே. (அ : 506)

மகிதலத்திரு – இவ்வுலகச் செல்வம். (அண்) புவியாளும் உரிமைச் செல்வம். (வை.மு) மகிதலத்திருவெலாம் இளையவற்குதவி. (கி : 86)

மகிதலம் – பூவுலகம். பூமி. மகிதலமுழுதும் நிகரில் மைந்தனே புரந்தனன். (பா : 520)

மகிழ் – போல. ஒப்ப. சுயல் மகிழ் கண் மலர். (சு : 978)

மகிழ்தந்தனர் போனர் - மனமகிழ்ந்து போனர். பொன்னுந்திய நதிகண்டுள மகிழ் தந்தனர்போனர். (அ : 624)

மகிழ்நர் - கணவர். மகிணர் என மருவிவரும். (அ : 506)

மகிழ்வு – சந்தோஷம். மகிழ்வால் ஊழியின் முதன் முனி உறையுளை யணுகா. (ஆ : 107)

மகிழ்வுறுதல் - மகிழ்ச்சியடைதல். மைந்தரு மகிழ்வுற்றார். (அ:717)

மகுடகோடி – மகுடவரிசைகள். செழு மணி மகுட கோடி. (யுத் : 4326).

மகுடஞ்சூடல் - முடிசூடுதல். பொற்றட மகுடஞ்சூடப் போதுதி விரைவில். (அ : 266) சுடருங்காசு குயின்றுயர் மகுடஞ்சூடும் செல்வமும் கொள்வென்யானே. (அ : 1032)

மகுடம் - முடி. பாந்தளின் மகுட கோடி பரித்த பார். (பா : 213) (யுத் : 1209)

மகுடமேற்றுதல் - தலை நிமிர்த்தசைதல். ஏற்றினன் மகுடம் என்னே இவனெரு மனிசன் என்ன. (யுத் : 1105)

மகேந்திரம் - ஒருமலை. மகேந்திரத் தெம்மிற்கூடும் என்று. (கி : 837)

மகோததி - கடல். மகோததி வளாவும் பூதலமெழுந்து படர் தன்மைய பொலந்தேர். (யுத் : 3647)

மகோதயம் - குசநாபன் நகரம். நாபன் குளிர் மகோதயம். (பா : 425)

மகோதரன் - இராவணன் சேனைத்தலைவருள் ஒருவன். மகோதரப் பெயர்க் கற்றடந்தோளினன். (யுத் : 62) (யுத் : 497) (யுத் : 1252)

மகோதரனர் - மகோதரன். மாருேர்திசை நோக்கிப் போனர் மகோதரனர். (யுத் : 1673)

மங்கல அங்கி - திருமண வேள்வித் தீ. மங்கல அங்கி வசிட்டன் வகுத்தான். (பா : 1344)

மங்கல அணி- திருமங்கலியம். மங்கல அணியை நீக்கி மணியணி துறந்து. (கி : 616)

மங்கலக் கழுத்து - மங்கல நாணேடு கூடிய கண்டம். மங்கலக் கழுத்துக் கெல்லாம் தானணியான போது. (பா : 1208)

மங்கல கலசம் - மங்கலமான கலசங்கள். வெடித்தன பூரண மங்கல கலசங்கள். (சு : 299) மங்கல கலசஞ்சிந்தின. (சு : 374)

மங்கலகீதம் - மங்கல வாழ்த்துப் பாட்டு. பாண்டிலும் சங்கும் வழங்கு கம்பலை மங்கல கீதத்தை மறைப்ப. (பா : 489) மங்கல கீதம்பாட. (யுத் : 4311)

மங்கலச் செய்ய கோலம் - மங்கல காலத்திற் கொள்ளும் செந்நிறக் கோலம். வைய மங்கை பொலிந்தனள் மங்கலச் செய்ய கோலம் புனைந்தன்ன செய்கையாள். (யுத் : 3393)

மங்கல சோபனம் - மிக்க மங்களம். வாழி சோபனம் மங்கல சோபனம். (யுத் : 3937)

மங்கலத்தாலி - திருமங்கலியம் அமைந்த தாலி. மங்கையர் மங்கலத் தாலி. (சு : 377)

மங்கலத் தீ - பொலிவு பெற்ற தீ. மீதிமங்கலந்தாலன்ன வெம் புகை சோதி மங்கலத் தியொடு சுற்றலால். (சு : 1191)

மங்கல நாண் - திருமங்கலியக் கயிறு. நிலமகள்முகமோ திலகமோ கண்ணே நிறை நெடுமங்கல நாணே. (பா : 94)

மங்கலநாண்களைத் தொடுதல் - அச்சங்காரணமாக மங்கல நாணைத் தொட்டுப்பார்த்துக் கொள்ளுதல். வானவர் தானவர் மகளிர் துணுக்கம் எய்தினர் மங்கல நாண்களைத் தொட்டார். (யுத்: 3635)

மங்கல நாதம் - மங்கலம் பொருந்திய பாடல். நன்றிகொள் மங்கல நாதம் பாடினர். (பா : 203)

மங்கல நீங்கினர் - பிராணநாயகன் இறக்கப்பெற்றதனுல் மங்கல நாண் வாங்கப் பெற்றவர். மங்கல நீங்கினரை ஆருயிர் வாங்கினரை நங்கை இக்கடவுள் மானம் தாங்குறு நவை யிற்றன்ருல். (யுத் : 2652)

மங்கலப்புனல் - மங்கலநீர். கங்கையே முதலவாய கன்னியீருக வுள்ள மங்கலப்புனலும். அ : 262)

மங்கலபேரி - மங்கல முழவங்கள். மங்கலபேரிசெய்த பேரொலி மழையை ஓட்ட. (அ : 893)

மங்கலம் - 1. சுபம். (மு.ரா) மங்கல வாக்கியம். (வை மு) மங்கலப் பாடல். (அண்) (கலா) கடவுட் கன்னியர்...... மங்கலம் முறை முறை கூறி வாழ்த்தவே. (ஆ : 580)
2. திருமங்கலியம். சுமங்கலித்துவம். மற்றை நல்லணிகள் காண் உன் மங்கலங் காத்தமன்னே. (சு : 524) (அ : 391)
3. பொலிவு. சோதி மங்கலத் தீயொடு சுற்றலால். (சு : 1191)
4. நன்மை. மங்கலம் பொருந்திய தவத்து மாதவர். (யுத்:569)
5. மங்கலப் பொருள். மகுடஞ் சூட்டற்தேயு மங்கலங்களான யாவையும் இயையக்கொண்டு. (அ : 261)

மங்கலம் சொல்லல் - மங்கல வாழ்த்தியம்பல். மங்கலம் வானோர் சொல்ல. (யுத் : 2128)

மங்கல மஞ்சனம் - மங்களகரமான திருமஞ்சனம். மங்கல மஞ்சனம் மரபினுடியே. (பா : 1292)

மங்கல முகுர்த்தம் - மங்கலகரமான முகூர்த்தம். மங்கல முகுர்த்த நன்னுள். (பா : 888)

மங்கல முரசினம் - மங்கல முரசங்கள். மங்கல முரசினம் மழையின் ஆர்த்தன. (பா : 1285)

மங்கல முறை மொழி - மங்கல வாழ்த்து முறையிற் கூறப்படும் வார்த்தைகள். மங்கல முறை மொழிகூறி வாழ்த்தவே. (ஆ:580) [பா.பே]

மங்கல வள்ளை – மகளிர் நெற்குத்தும்போது தலைவனைப் புகழ்ந்து பாடும் பாட்டு. (அண்) உலக்கைப்பாட்டு. (கலா) (வை.மு) மனைச் சிலம்புவ மங்கல வள்ளையே. (பா : 62)

மங்கல வாழ்க்கை - இன்ப வாழ்வு. மோடி மங்கல வாழ்க்கை வைப்பில். (யுத் : 2172)

மங்குதல் – 1. குறைதல். மாமங்கு பாதகம் விடங்கனல் வயங்கி நிமிர. (ஆ : 14)

2 உயிரொடுங்கி இறத்தல். மங்குவென் உயிரோடென்றுன் மலரடி சென்னி வைத்தாள். (சு : 1326)

மங்குநர் – மழுங்கினவர்கள். (அண்) (வை.மு) அழிபவர். (கு) தரணி தாங்கினர் மங்குநர் இல்லென. (பா : 181)

மங்கு பாதகம் – அழிதற்குக் காரணமான பாவம். மா மங்கு பாதகம் விடங்கனல் வயங்கி நிமிர (ஆ : 114)

மங்குல் – மேகம். மங்குல் தோய் நகர். (அ : 918) மங்குலிற் பொலிந்த ஞாலம் (சு : 1130) (யுத் : 3746)

மங்குல் தோய் நகர் – மேகம் தவழும் உயர்ச்சியையுடைய அயோத்தி நகரம். (அ : 918)

மங்குலிற் பொலிந்த ஞாலம் – மேகங்களாற் பொலிவு பெற்ற இவ் வுலகம். மங்குலிற் பொலிந்த ஞாலம் மாதுமையுடைத்து மாதோ. (சு : 1130)

மங்குலின் ஒலி – மேக முழக்கம். மங்குலின் ஒலிபடத் திறந்த வாயினள். (ஆ : 583)

மங்கை – பெண். (கோசலை) மங்கை யம்மொழி கூறலும். (அ : 299)

மங்கை காண ஆடுகின்றான் – சிவன். (இராமன்) கற்புடை மங்கை காண நின்றாடுகின்றான் வகிர்த்திங்கள் சூடிய செல்வனில் தோன்றினான். (அ : 635)

மங்கைத் தீயனையாள் – ஒரு பெண்ணின் வடிவங் கொண்ட அக் கினியை ஒத்தவள்; தாடகை. (பா : 409)

மங்கை பங்கன் – சிவன், (சு : 383a)

மங்கைபாகன் – சிவபிரான். (பா : 527)

மங்கைமார் – மகளிர். தங்கள் நாயகரில் தெய்வம் தான் பிறிதில் லென்றெண்ணும் மங்கைமார் சிந்தை போலத் தூயது. (பா : 434)

மங்கையர் – மகளிர். மங்கையர்க்கு விளக்கன்ன மாது. (அ : 633) புக்க மங்கையர் பூத்த கொம்பாமெனப் பொலிந்தார். (பா : 907)

மங்கையர் எழுவர் – ஏழு கன்னிமார்கள். அவர்களாவார் :— பிராஹ்மி, மஹேச்வரி, கௌமாரி, நாராயணி, வாராகி, இந்திராணி, சாமுண்டி. புரவியேழும் மங்கையர் எழுவரும் நடுங்கின என்ப. (கி : 174)

மங்கையர்க்கு விளக்கன்ன மாது – பெண்ணினம் புகழுறச் செய்யும் தனி விளக்காய்த் திகழ்கின்ற சீதாபிராட்டி. (அ : 633)

மங்கையர்க்கினியதோர் மருந்து மாயவள் – மங்கையர்க்கெல்லாம் இனிப்புத் தரும் ஒப்பற்ற அமுதம் போன்றவள். மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவள் எங்கணுயகற்கினி யாவதாங் கொலோ. (பா : 596)

மங்கையர் திறத்து – மகளிரைக் குறித்து. மங்கையர் திறத்தொரு மாற்றங் கூறினும். (ஆ : 568)

மங்கையைப் பயந்த மன்னன் – சனகன். மங்கையைப் பயந்த மன்னன் வளநகர். (பா : 1118)

மச்சர் – மச்ச நாட்டரச பரிவாரம். மானமாகதர் மச்சர் மிலேச்சர்கள். (பா : 1195)

மசரதம் – கானல் நீர். பேய்த் தேர். மசரத மனையவர் வரமும் வாழ்வும். (பா : 201)

மஞ்சர் – மைந்தர்கள். ஆண்மக்கள். மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனமென்ப தொன்றேயன்றே. (பா : 1220) மஞ்சு தோய்புய மஞ்சரே. (அ : 240)

மஞ்சளாவிய மாணிக்கப் பாறை – அழகு பொருந்திய மாணிக்கப் பாறை. மஞ்சளாவிய மாணிக்கப் பாறையின் மறைவ. (அ : 756)

மஞ்சன் - 1. மகன் என்பதன் போலி. மைந்தன். (இராமபிரான்) (சக்கரவர்த்தி திருமகன்) கஞ்சங்களை மஞ்சன் கழல் நகுகின்றது கண்டாள். (அ : 620) அஞ்சனக் கிரியனைய மஞ்சனைக்குறுகி. (கி : 47)

2. மைத்துனன். மகன் போன்றவன். என்மஞ்சனை வைது பின் வழிக்கொள்வா யென நஞ்சனையானகம் புகுந்த நங்கையான். (சு : 505)

மஞ்சன் கழல் - இராமபிரான் பாத மலர். (அ : 620)

மஞ்சனத் தொழில் - நீராடுதல். நீராட்டுதல். யாரினும் புனிதன் மஞ்சனத் தொழில் புரிந்து. (கி : 112) செய்ய தாமரைக் கண்ணி ரால் மஞ்சனத் தொழிலுஞ் செய்தார். (யுத் : 4263,

மஞ்சனம் - நீராட்டம். ஸ்நானம். மழை பொதுத் தொமுகு நீரால் மஞ்சனமாடுவாரும். (சு : 279) (யுத் : 3962)

மஞ்சன மருவுதல் - முழுகுதல். ஸ்நானஞ் செய்தல். மரபின் மாப் பெரும் புறக்கடல் மஞ்சனமருவி. (யுத் : 135)

மஞ்சன மாட்டுதல் - நீராட்டுதல். குளிப்பாட்டுதல். அன்பனை அமரப் புல்லி மஞ்சன மாட்டிவிட்டான். (யுத் : 873)

மஞ்சன விதிமுறை மரபினுடல் - நூல்களில் விதித்த முறைப்படி நீராடல். மஞ்சனவிதி முறை மரபினுடினை எஞ்சலில் இன்ன முதருந்தின். (கி : 675)

மஞ்சிடை – கரிய மேகத்தினிடையே. மஞ்சிடை வயங்கித் தோன்றும் பவளத்தின் வல்லி. (ஆ : 260)

மஞ்சின் மாமழை – கறுத்த நீருண்ட மேகம். மஞ்சின் மாமழை போயின தாமென மாற. (யுத் : 2475)

மஞ்சின் மெய் – மேகம் போன்ற உடல். மஞ்சின் மெய்யுறத் தழீ இய மெல்லென் பிடியொடும். (க : 6)

மஞ்சு – 1. மைந்து. வலிமை. (அண்) மேக மண்டலம். (கலா) (வை. மு) மஞ்சுற ஆர்க்கின்றுரும். (பா : 48)

2. மேகம். மஞ்சிவரும் நெடுங்கிரியும். (கி : 768) மஞ்சு சுற்றிய கிரி. (ஆ : 7) மஞ்சே பொழிலே. (ஆ : 890)

3. அழகு மஞ்சு தோய் புய மஞ்சரே. (அ : 240)

மஞ்சுகக் குமுறு சொல் – மேகமும் உதிர்ந்து விழும்படி குமுறி ஒலிக்கின்ற சொல். மஞ்சுகக் குமுறு சொல்லினர். (யுத் : 818)

மஞ்சு சுற்றிய கிரி – மேகங்கள் சூழ்ந்து தங்கப் பெற்ற மலைகள். (ஆ : 7)

மஞ்சுளப் பஞ்சி – அழகிய செம் பஞ்சுக் குழம்பு. (சு : 127)

மஞ்சுளம் – அழகு. மலரடி மஞ்சுளப் பஞ்சி. (சு 127)

மஞ்சுற – வலிமையாக. மேக மண்டலத்தையடைய. (பா : 48)

மஞ்சுறு நெடு மழை - மேகங்கள் பொருந்திய பெரிய மழைக் காலம். மஞ்சுறு நெடுமழை பிரிந்த மாமயில் எஞ்சின. (க : 555)

மஞ்ஞை - மயில். களி மஞ்ஞை பாந்தளி தென உன்னி. (அ : 698) (கி : 487)

மஞ்ஞை எனவருதல் - மயில் என்று சொல்லும்படி வருதல். கலாபம் வழங்க நிழன் மஞ்ஞையென வந்தாள். (பா : 1226) [பா : பே]

மட்கலத் தாழி - மட் கலங்களை வனைதற் பொருட்டுச் சுழற்றப் படும் சக்கரம். நிலந்திரிந்த வன்ரேட்குயவன் திரிமட்கலத் தாழியென்ன. (கி : 274)

மட்கலத்திகிரி - மட்கலஞ் செய்யும் கருவியாகிய சக்கரம். குலான் மகன் முடுக்கிவிட்ட மட்கலத் திகிரி போல. (பா : 576)

மட்கிய - மழுங்கிய. கேகயன் பயந்த நங்கை தன் .. மட்கிய சிந்தையின் இருண்டது. (அ : 536)

மட்குதல் - 1. நன்னிலை கெடுதல். குறைதல். மட்கிய சிந்தை. (அ : 536)

2. ஒளி மழுங்குதல். நாகத்தின் நஞ்சவாயின் மதியென மட்கு வாள். (ஆ : 1049) (உ.வி) (அ : 536)

3. பெருமை குன்றுதல். குறைவுபடுதல். எனது பெண்மை மட்குந் தானுய வெள்ள மகளிரின்ருகி வானோர் உட்கும் போர் சேனை சூழ ஒருத்தியே அயோத்தி எய்தின். (யுத் : 4096)

மட்டவிழ்தல் - தேன் பெருகுதல். மட்டவிழ் மலர்க் குழலினள். (யுத் . 65)

மட்டித்தல் - 1. பிசைந்திடுதல். (வை.மு) அழித்தல். (கலா) சேனை யெலாம் மட்டித்து. (யுத் : 1688)

2. தகர்த்தல். மணி கொள் குட்டிமம் மட்டித்து. (சு : 714)

3. அழித்தல். கிட்டிப் பொருது அக்கிளர் சேனை யெல்லாம் மட்டித்து. (யுத் : 1688)

மட்டினம் - தேன் கூட்டம். கீழுகு மட்டின அருவியின் மதத்த. (யுத் : 1768)

மட்டு - தேன். கீழுகும் மட்டின. (யுத் : 1768)

2. அளவு. மட்டற உறங்குவான். (யுத் : 1271)

3. கள். மட்டுண்டார். (யுத் 1616)

மட்டுண்டார் – கட்குடியர். (யுத் : 1616)

மட்படி – மண்ணின் கூருகிய பூவுலகம், மண்ணுலகு, பூமி. மட்படி செய்த தவத்தின் வந்த கோதை. (ஆ : 1071)

மடக்குதல் – ஒழித்தல். எழுமுனே வயிரத் தண்டு தருக்கின் வாங்கி மடக்குவாய் உயிரைஎன்னு வீசினன். (யுத் : 1407)

மடக்கொடி – 1. இளைய நங்கை. பகைஞரோடொரு மடக்கொடி திறத்திடை வைத்த சிந்தையர். (யுத் : 388)

2. மென்மைத் தன்மை வாய்ந்த கொடி போன்றவளாகிய சீதை. (யுத் : 3642)

மடங்கல் – 1. ஆண்சிங்கம். மடங்கல் பேரல் மொய்ம்பினுன். (பா : 230)

2. சிங்கராசி. சிங்கவடிவம். மடங்கலும் மகமுமே வாழ்வின் ஓங்கிட. (பா : 287) (யுத் : 264).

3. வடவைத் தீ. இடியொடு மடங்கலும் வளியு மேங்கிட. (பா : 378) கொழுந்து விட்டெரி மடங்கல் கூட்டற. (யுத் : 1697)

4. மடங்குதல். மடங்கலரியேறு. (சு : 160)

5. நெருப்பு தாமடங்களும் கடலும் ஒத்து. (யுத் : 3786)

மடங்கல் அரியேறு – மடங்கு அல் அரி ஏறு. பிற விலங்குகளால் மடங்குதல் இல்லாத ஆண் சிங்கம். (சு : 160)

மடங்கல்ஆளி – ஆண் சிங்கம். ஆழி நெடுங்கை மடங்கலாளி யன்னுன். (அ : 186)

மடங்கல் எரி – ஊழித்தீ. கொழுந்து விட்டழன்றெரி மடங்கல் கூட்டற எழுந்தெரி வெகுளியான். (யுத் 1677)

மடங்கல் வீரன் – ஆண் சிங்கம் போன்ற வீரன். மடங்கல் வீரன் நன்மாற்றம் விளம்புவான். (கி : 587).

மடங்கலன்ன அவ்வானர மாப்படை - சிங்கங்களே ஒத்த அந்த வானரப் பெருஞ் சேனே. மடங்கலன்ன அவ்வானர மாப்படை... வேலையகழியைத் தூர்த்ததால். (யுத் : 966)

மடங்கலாதனம் - சிங்காசனம். ஓர் மடங்கலாதனத்திடை முனியை வைத்தனன். (பா : 233)

மடங்கலாளி - சிங்க ஏறு. ஆழி நெடுங்கை மடங்கலாளி யன்னுன். (அ : 186)

மடங்குதல் - 1. முற்றுப் பெறுதல். மண்டமர் இன்றொடு மடங்கும். (யுத் : 1486)
2. கீழ்ப்படிதல். கா ரொலி மடங்க. (யுத் : 2243)
3. ஒழிந்திடுதல். மடங்கினவாம் உயிர்ப் பென்னும் பண்பினர். (யுத் : 1488)

மடத்தோகையர் வலி வென்றவன் - மடமைக் குணமுள்ள மகளிரின் வலிமையை வென்ற (பெண்ணாசையை நீக்கின) வணகிய அனுமான். (யுத் : 1846)

மடந்தை - பெண். மடந்தை நின் சேவடி வந்து நோக்கினேன். (சு : 512)

மடந்தை மார்களில் திலதமே - பெண்களில் திலதமாக விளங்குப வளே. (அ : 763)

மடந்தையர் - பெண்கள். கற்புடை மடந்தையர். (சு : 501)

மடநலார் - மகளிர். மடநலார் குழலும். (யுத் : 108)

மடப் பிள்ளைகள் - சிறுவர் சிறுமியர். அறையுமாடரங்கும் மடப் பிள்ளைகள் தறையிற் கீறிடில் தச்சரும் காய்வரோ. (பா : 9)

மடம் - 1. கணவன் கற்பித்தபடி ஒழுகுங்குணம். மடம் படு சிந் தையள். (பா : 1335)
2. அழகு. மட மங்கை. (ஆ : 703)
3. இளமை. மடமான். (அ : 695)

மட மங்கையர் - இளமங்கையர். இவர் மெல்ல மெல்ல மடங்கைய ராய் என் மனத் தவராயினரே. (ஆ : 703)

மடமயில் - இளமயில். மயில் போன்ற பெண். வடங்கொள் பூண் முலை மட மயிலே. (அ : 740)

மடமான் - இளமான். விரி சாயல் கண்டு நின் விழிகண்டு மஞ்ஞை யும் மடமானும் வருவன இவை காணாய். (அ : 695)

மடர் - மடல். பூவிதழ். மடருடை நறுமென் சேக்கை. (கி : 376) [பா : பே]

மடல் - 1. பூவிதழ். மடலுடை நறு மென் சேக்கை. (கி : 376) மடல் கொளு மலங்கன் மார்பன். (யுத் : 2543) (ஆ : 991)
2. வாழைப் பட்டை. வாழை மடல் சூழ் ஈரத்தண்டு. (யுத் : 227)
3. மடப்பம். (அண்) (யுத் : 1846)

மடல் கொளும் அலங்கல் - இதழுடன் கூடிய பூமாலே. (யுத் : 2543)

மடல் தோகையர் வலிவென்றவன் - மடப்பம் பொருந்திய மயில் போலும் சாயலே யுடையராகிய மகளிர் ஏதுவாக உண்டாகும் காமமாகிய அகப் பகையை வென்றவனுகிய அனுமான். (யுத்:1846)

மடலுடையலங்கல் - இதழ்களே யுடைய மலர் மாலே. மடலுடை யலங்கல் மார்ப. (யுத் : 1364)

மடலுள் நாட்டிய தார் - பூவிதழ்கள் தன்னிடத்திலே அமைய வைக் கப்பட்டுள்ள மாலே. மடலுள் நாட்டிய தார் இளேயோன். (ஆ : 991)

மடவரல் – பெண். மண்மகளாதியென்று மடவரல் தன்னே ஏவி. (பா : 678)

மடவன்னம் – இளம் பெடையன்னம். களியன்னமும் மடவன்ன மும் நடமாடுவ கண்டான். (அ : 619)

மடவார் – மகளிர். மடவார் படிநெடு நாடு. (அ : 625)

மடவாள் – பெண். மனேவி. (சீதாபிராட்டி) என்று நன் மடவா ளோடு இனிதினின் விளேயாடி. (அ : 708)

மடன் – அறியாமை. அமிழ் தொக்கு மின்சொலார் தம் மடனெக் கும் மடனுமுண்டே. (பா . 1056)

மடனெக்கும் மடன் – அறியாமையை ஒக்கும் அறியாமை. (பா:1056)

மடி – 1. மடங்கு. இற்ற தானேயின் இருமடி இகற்படை ஏவ. (யுத் : 1465)

2. சோம்பல். மடியிலா அரசன் மார்புளாளோ. (பா : 1121) [பா : பே]

3. பால் உள்ள மடி. மடி வெண்திங்களா. (சு : 151)

மடிஞ்சபின் – உடலழிந்த பின். (மடிந்த பின்) வேறு வேறு ஏற்றிச் சென்ற மடிஞ்சபின் உடம்பு கூட்டும் விளேயென வயிரத் தேர் கள். (அ : 1044)

மடித்தல் – அழித்தல். வானவர்கள் நந்தன வனத்தையுமடித்த. (சு : 701)

மடிதல் – 1. மனம் மடங்குதல். மடியான் உடன் வந்து வனம் புகுதும் கொடியான். (சு : 497)

2. நுனி மடங்குதல். வள்ளுகிர் மடியக்கீளா. (யுத் : 1401)

3. முடிதல் மடியா நெறிவந்து. (சு : 497) [பா : பே]
4. இறத்தல். அவுணராயின ரெலாம் மடியவாளுரு வினுனும். (யுத் : 95) மடிதா. (கி : 670)
5. மடித்தல். மடங்கின வாமுயிர்ப்பெனும் பண்பினுல். (யுத் : 1488)

மடியா நெறி - போகப் போகத் தொலையாத நெடு வழி. (சு : 497 ) [பா . பே]

மடியிலா வரசினுன் - சோம்பலில்லாத அரசாட்சி முறைமையினை யுடைய சக்கரவர்த்தி. மடியிலா அரசினுன் மார்புளாளோ. (பா : 1121) [பா : பே]

மடு - 1. மறு. (அண்) பாற் கடல். (கலா) கடல். (வை,மு) மடுவில் இன்ன முதத்தொடும் வந்தனை. (பா : 640)
2. ஆழ்ந்து சிறிதான நீர் நிலை. தடங்களும் மடுவுஞ் சூழ்ந்த தண்ணறுஞ் சோலை. (பா : 977) வேலை மடு ஒத்தது. (யுத்:231)

மடுத்தல் - 1. தாக்குதல். மோதுதல். நீர் வேலை கால் மடுத்து ஊடு பேரினும். (பா : 92)
2. சேர்த்தல். பொற் கலப்பை வயிரத்தின் கொழு மடுத்திட்டு (பா : 765)
3. உண்ணுதல். உட்கொள்ளுதல். கடலேழு மடுத்திஞ் ஞாலம். முடிவிற் குமுறும் மழை மும்மையின் மேன் முழங்க. (அ : 412 )
4. செறிதல். அயில் வேல் வீர வாட் கொழுவென மடுத்து முதிரோ. (ஆ : 514)
5. பருத்தல். எங்கும் வெள்ளிடை மடுத்தலின். (யுத் . 563)
6. உட் புகுதல். (உ.வி) (ஆ : 514)
7. ஊன்ற வைத்தல். (உ. வி) (ஆ : 514)
8. பாய்தல். நிறைத்தல். பிணக்குவை கொண்டோடித் துன்று திரைக்கடல் கங்கை மடுத்திவை தூராதோ. (அ : 1013)
9. பற்ற வைத்தல். கரங்களால் வயங்கெரி மடுத்தலின். (யுத் : 216)
10. நுழைதல். செவிதொறும் மடுத்ததன்றே. (யுத் : 2789)

மடை - 1. மதகு, நீர் மடை. மடையெலாம் பணிலம். (பா : 33)
2. மூட்டு. மடை பேராச் சூலம். (யுத் : 1273)

மடை பேராச் சூலம் - மூட்டுக் குலையாத சூலப் படை. (யுத் : 1273.

மடைமாற்றல் – மடையை மறித்தல். தேனுகு மடையை மாற்றி. (பா : 931)

மண் – 1. அணு. மட்படி செய்தவம். (ஆ : -1070)

2. மார்ச்சனை. மண்ணுறு முரசு. (பா : 916)

3. புழுதி மண்ணுற விழுந்து. (பா : 916)

4. பூமி மண்ணியல் மனிதர். (யுத் : 46) மண்பிடர் வைத்த பாம்பு (ஆ : 693)

5. அழகு. (வை.மு) மண்ணுறு வேந்தன் செல்வம். (பா : 798. (பா ; பே)

மண் கடந்தமரர் வைகும் வான் கடந்தான்-(முன் திரி விக்கிரமனாக) மண்ணுலகை அளந்து மேலும் தேவர்கள் தங்கும் விண்ணுலகத்தையும் அளந்தவனான திருமால், அவன் அமிசமான இராமபிரான். மண் கடந்தமரர் வைகும் வான்கடந்தானைத் தான் தன் கண் கடவாது காத்த காரிகை பெரியளே காண். (பா : 1154)

மண்கணை - மார்ச்சனையுடைய திரண்ட முரசு. (கணை - திரட்சி; ஆகு பெயராய் முரசத்தை உணர்த்திற்று) கொற்ற மண்கணை குமுற. (அ : 916)

மண்கிழிதர வீழ்தல் - தரை பிளக்குமாறு திடீரென விழுதல். மீண்டு மண் கிழிதர வீழ்ந்து. (அ : 881)

மண் குடை தூளி - நிலத்தில் மிதித்தலால் உண்டாகிய துகள். ஆடன்மா மண் தூளி குடை விண் மறைப்ப ஏகினன். (பா : 1284).

மண் கொடுவருதல் - இராச்சியத்தைப் பெற்றுக் கொண்டு வருதல்; மண் கொடு வருமென வழியிருந்தது. (அ : 482)

மண் செய்த பாவம் - மண் மகள் செய்த பாவம். மண் செய்த பாவமுளதென்பார். (அ : 398)

மண்டபம் - மண்டபங்கள். பன்னருங்கலைதெரி பட்டிமண்டபம். (பா : 154) ஒரு வரை பொரு மண்டப மருங்கு போயினர். (அ : 86)

மண்டமர் - நெருங்கிய போர். மண்டமர் புரிந்தனன் வலியின். (யுத் : 2727)

மண்டல் - 1. விரைதல். மலையினுள்ள வெலாங் கொண்டு மண்டலால். (பா : 17)
2. நெருங்குதல். அண்டமும் பொடிபட வந்தெதிர் விளித்து மண்டவே. (பா : 378)

மண்டலச் சடைமுடி – வட்டமாகக் கட்டியுள்ள சடைமுடி. (யுத்: 357)

மண்டலச்சுடர் - சூரியன். ஓர் மண்டலச் சுடராமெனக் கேடகம் வாங்கினன் வாளோடும். (யுத் : 1554)

மண்டலந்தரு கதிரவன் – மண்டல வடிவமைந்த சூரியன். மண்டலந்தரு கதிரவன் வந்து போய் மறையும் எண்டலந் தொடற்கரியன தடவரை இரண்டும். (யுத் : 142)

மண்டலந் தருமதி – மண் தலம் தருமதி. மண்ணுலகம் தந்த சந்திரன். மண்டலந் தருமதி கெழுமழை முகிலனைய அண்டர் நாயகன். (அ : 55)

மண்டலந்திரிதல் – வட்டமாகச் சுழலுதல். வளைந்த சேனையை மண்டலந் திரிந்ததொர் மரத்தினுல் உயிர் உண்டது. (சு : 811)

மண்டலப் பிறை – வான மண்டலத்தில் தோன்றும் பிறை. வளையும் மண்டலப் பிறையென நின்றதவ் வரிவில். (யுத் : 2462)

மண்டலம் – 1. பகுதிகள். அக்கினி அமைத்தற்குரிய வட்டமான இடம். மண்டலம் விதிமுறை வகுத்து மென்மலர் கொண்டு நெய் சொரிந்தெரி குழும மூட்டினன். (பா : 1329)
2. நாடு. மனையின்மாட்சி குலாமலை மண்டலம் மேயினர். (கி : 943)
3. வட்டம். வட்டவடிவம். மண்டலமதிலும் கொற்ற வாயிலும். (சு : 3) வளையும் மண்டலப் பிறையென நின்றதவ் வரிவில். (யுத் : 2462)
4. பூமி. மண்தலம். பூமண்டலம். மண்டலம் கடலாகி மறைந்ததே. (யுத் : 645) மாதலிப் பேரவன் கடவ மண்டலத்தினப் பொழுதே வருதலோடும். (யுத் : 3869)
5. துறக்கநாடு (அண்) மண்டல மகரவேலை அமுதொடும் வந்ததென்ன. (ஆ 721)

மண்டலம் விதிமுறை வகுத்தல் - வட்டமான இடத்தை வேத முறைப்படி வகுத்தல். மண்டலம் விதிமுறை வகுத்து மென்மலர் கொண்டுநெய் சொரிந்து. (பா : 1329)

மண்டல மகர வேலை - சுறு மீன்கள் வாழும் வட்டமான பாற்கடல். (வை மு) மண்டல மகர வேலை அமுதொடும் வந்த தென்ன. (ஆ : 721)

மண்டல மதி - சந்திர மண்டலம். மண்டல மதியின் நாப்பண் மானிருந்தென்ன. (யுத் : 3967)

மண்டல வரிசிலை - மண்டலமாக வளைத்த கட்டமைந்த வில். (யுத் : 3744)

மண்டல வேந்தர் - மண்டலாதிபர்கள். மண்டல வேந்தர் வந்து நெருங்கினர் மயங்கி மாதோ. (பா : 890)

மண்டவுதரத்தவள் - மண்டோதரி. மண்டவுதரத்தவள் மலர்க்குழல் பிடித்து. (சு : 694)

மண்டனம் - அலங்காரம். அணிகலன் என்ற பொருளில் வந்தது. மகுட குண்டலமே முதன் மண்டனத்துத நெடுஞ்சுடர்க் கற்றை. (கி : 586)

மண்டிய - தாக்கிய. அடர்த்துச் செய்த. மண்டிய செரு. (சு : 306)

மண்டிலச் சடை முடி - வட்ட வடிவமான சடாபாரம். மண்டிலச் சடைமுடி துளக்கி. (யுத் : 357)

மண்டிலம் - வட்டம். மாறில் மண்டிலம் நிரம்பிய மாணிக்க மணிக் கற்பாறை. (அ : 751)

மண்டிலமதில் - வட்டமான மதில். மண்டிலமதிலும் கொற்ற வாயிலும். (சு . 3) [பா : பே]

மண்டுதல் - 1. நெருங்குதல். மலையினுள்ள வெலாங் கொண்டு மண்டலால். (பா : 17) எதிர்மண்டி. (யுத் : 1919) (யுத் : 2430)

2. விரைதல். அணுகல். (உ.வி) வெடிபட அதிர்ந்து மண்டவே. (பா : 378)

3. நிறைந்திருத்தல் வண்டுளர் நறுமத மழையும் மண்டலால். (கி : 13)

4. மிகுதல். தூம் புறழ் குருதி மண்ட. (யுத் : 2009)

5. கிளர்தல். மண்டுங் கடல்களும் வற்ற. (யுத் : 3685)

6. மிக்குச் செல்லுதல். மண்டுகின்ற செருவின் வழக் கெலாங் கண்டு. (யுத் : 1056) மண்டப்படு சோரி. (யுத் : 3462)

மண்டும் நாள் - சிருஷ்டிக் காலம். மண்டு நாள் மறித்துங் காட்ட. (யுத் : 3489)

மண்டோதரி - இராவணன் மனைவி. (யுத் : 1947)

மண்டோதரி மகன் - இந்திரசித்து. மக்களின் இன்றுளான் மண்டோதரி மகனே. (யுத் : 1947)

மண்ணகம் - மண்ணிடம். மண்ணகத்தன மலைகளும். (கி : 286)

மண்ணரசாய் - நாட்டிற்கு அரசனாய். வரிவில் எம்பி இம் மண்ணரசாய் அவற்குரிமை மாநில முற்றபின். (அ : 316)

மண்ணல் - கழுவுதல். மண்ணும் நீராய் வந்த புனலை. (அ : 351)

மண்ணவர் - மண்ணாட்டிலுள்ளவர். பூமியிலுள்ளவர். விண்ணாட்டவர் மண்ணவர்.(அ : 415) மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன். (பா : 419)

மண்ணாட்டுநர் காட்டுநர் வீட்டுநர்-முத்தொழிற்குரிய மூவர். உலகத்தைக் காக்கும் அரியும் அதைப் படைக்கும் அயனும் அதை அழிக்கும் அரனும். ஓர் மூவராகி மண் நாட்டுநர் காட்டுநர் வீட்டுநர் வந்த போதும். (அ : 415)

மண்ணாள்கின்றார் - மண்ணுலகப் பகுதிகளை ஆட்சிபுரிபவர். மண்ணாள்கின்றாராகி வலத்தால் மதியால்வைத் தெண்ணா நின்றார். (அ : 225)

மண்ணிடை - பூமியினின்று. மண்ணிடை மணியின் வந்த வஞ்சியே போல்வாள். (ஆ : 281)

மண்ணிறை வேந்தன் செல்வம் - இம்மையில் அறநெறியில் ஈட்டிய பெரும் பொருள் நிரம்பப்பெற்ற அரசனது உலகச் செல்வங்கள். மண்ணிறை வேந்தன் செல்வம் வறியவர் முகந்து கொண்டார். (பா : 788)

மண்ணின் மார்புற வணங்கல் - தரையிலே மார்பு நன்கு பதியும்படி சேவித்தல். சாஷ்டாங்கமாக வணங்குதல். வழிந்த கண்ணீரின் மண்ணின் மார்புற வணங்கினானை. (யுத் : 447)

மண்ணினீத்தம் - மண்ணின் நீத்தம். ஸ்நானஞ் செய்தலான நீர்ப் பெருக்கு. மண்ணின் பெருவெள்ளம். (அண்) கண்ணினீர்ப் பெருந்தாரை மற்றவன் சடைக் கற்றை மண்ணினீத்த மொத்திழிதர. (யுத் : 4046) (யுத் : 4050).

மண்ணுதல் - 1. மார்ச்சனைபூசுதல் மண்ணுமணி முழவதிர.(பா:716)
2. கழுவுதல். கழுவித் தூய்மை செய்தல். மண்ணிய மணிநிற வண்ண. (பா : 1388)
3. நீராடுதல். மண்ணின் நீத்தம். (யுத் : 4071)

மண்ணு நீர் - 1. தருப்பண நீர். போய் மண்ணு நீர் உகுத்தி நீ மலர்க்கையால் என்றான். (அ : 1144)
2. மஞ்சன நீர். மண்ணு நீராய் வந்த புனலை மகனே வினை யேற் குண்ணு நீராய் உதவி. (அ : 351)

மண்ணு நீராய் வந்த புனலை உண்ணு நீராயுதவல் - முடிபுனை விழாவில் நீராட்டுதற்கு வந்த மங்கலப் புனலை நீர்க்கடன் செய் தற்குதவல். (அ : 351)

மண்ணு மணி முழவு - மார்ச்சனை பூசிய அழகிய மத்தளம். வேலை யென்னும் மண்ணு மணி முழவதிர. (பா : 716)

மண்ணுருத்தெடுப்பினும் - மண்ணுலக முழுதையுங் கோபங் கொண் டெடுக்க வேண்டினும். மண்ணுருத் தெடுப்பினும் கடலை வாரி னும். (பா : 363)

மண்ணுலகாள்பவர் - மண்ணுலகை ஆளும் அரசர். பாவமும் நின்ற பெரும்பழியும் பகை நண்போடும் ஏவமும் என்பவை மண்ணுல காள்பவர் எண்ணாரோ. (அ : 1009)

மண்ணுளார் - மண்ணுலகத்தவரான மனிதர். (கி : 81)

மண்ணுளோர் - மண்ணுலகத்தவரான மனிதர். (கி : 239)

மண்ணுற்றயர்ந்து மறுகிற்றுடம் பெல்லாம் - உடம்பெல்லாம் சோர்ந்து மண் மேல் விழுந்து புரளலாயிற்று. (அ : 390)

மண்ணுறப் பணிதல் - படியுற வணங்கல். சென்னி மண்ணுறப் பணிந்து. (அ : 6)7)

மண்ணுற வணங்கல் - தரையிற் பொருந்த வணங்கல். சென்னி மண்ணுற வணங்கி. (அ : 289)

மண்ணுறு செல்வம் - நியாய வழியிற் சம்பாதித்த செல்வம். மண்ணுறு வேந்தன் செல்வம் வறியவர் முகந்து கொண்டார். (பா : 788) [பா : பே]

மண்ணுறுத்தல் - 1. அலங்கரித்தல். இந்திரன் முடிசூடும் மண்ணுறு திருநாளே ஒத்ததம் மணநாளே. (பா : 1282)

2. சாணைபிடித்தல். மண்ணுறு சுடர் மணி, (பா : 1307)

மண்ணுறு திருநாள் - அபிடேகத் திருநாள். (பா : 1282)

மண்ணுறு முரசினம் - மார்ச்சனை பொருந்திய பேரிகையின் கூட்டம். (தொகுதி) மண்ணுறு முரசினம் வயங்குதானையான். (பா:1394) மண்ணுறு முரசினம் மழைபினுர்ப்புற. (அ : 2)

மண்ணுறு முரசு - மண்ணுதல் பொருந்திய முரசு. மண்ணுறு முரசுடை மன்னர் மாலையில் எண்ணுறப் பிறந்திலன். (அ:155)

மண்ணெனும் செவிலி - பூமி யென்னுஞ் செவிலித்தாய் மண்ணெனும் செவிலி மேல் வைத்த கையினுள். (அ : 1151)

மண்ணெறிந்து - குழைத்த மண்ணை எறிந்து. மண்ணைப் பிசைந்து எறிந்து நிறுத்தி. சுவரும் சுற்றுறப் போக்கி மண் எறிந்து அவை புனலில் திற்றியே. (அ : 781)

மண்ணை மண்ணு நீராட்டுங் கண்ணன் - நிலத்தை மாசு நீங்க நீராட்டுகின்ற கண்களையுடையவன். வார் மணிப்புனலான் மண்ணை மண்ணு நீராட்டாடுங் கண்ணுன். (அ : 1031)

மண்ணை முயங்குதல் - கீழே விழுந்து தரையைத் தழுவுதல். மற்றையோர் முற்றும் மண்ணை முயங்கினுர். (யுத் . 2155)

மண்ணுே டுன்னுே டென்னும் - இம் மண்ணுேடும் உன்னுேடும் என்ன உறவுண்டாம். பெண்ணுே டியோ மாயாப் பேயோ கொடியாய் நீ இம் மண்ணுேடு உன்னுேடு என்னும் வசையோ வலிதே. (அ : 340)

மண்திறப்பெய்தல் - பூமி பிளத்தல். மண் திறப்பெய்த வீழ்ந்தாள். (யுத் : 1414)

மண் துயின்றன - நிலமிசை உயிர்கள் துயின்றன. மண் துயின்றன நிலைய மால்வரை துயின்றன. (கி : 41)

பண்பக - தரை பிளக்கும்படி. நெடு மழைக்கை மண்பக அடித்தன ஒன்றெ டொன்றசனி யஞ்சவே. (அ : 859)

மண்படைத்த முனி - உலகைப் படைத்தவனுகிய விசுவாமித்திர முனிவன். என்றனன் என்றலும் முனி வோடெழுந்தனன் மண் படைத்த முனி. (பா : 330)

மண் பாரம் - பூபாரம். அரசாட்சி. மன்னுயிர்க்கு நல் குரிமை மண்பாரம் நான் சுமக்கப் பொன்னுயிர்க்குந் தாரோய் பொறை யுயிர்த்த வாறிதுவோ. (அ : 1127)

மண்பாலவர் - மானுடர். மண் பாலவரே கொல் விளைப்பவர் மாயை. (ஆ : 709)

மண் பிடர் வைத்த பாம்பு - இந்தப் பூமியைத் தன் பிடரி மீது வைத்துத் தாங்கியுள்ள பாம்பாகிய ஆதிசேஷன். மண் பிடர் வைத்த பாம்பின் விட வாளெயிறு. (ஆ : 693)

மண்மகள் - பூமிதேவி. (யுத் : 1091)

மண்மகள் வயிறுகீறுதல் - பூமி தேவியின் வயிறு பிளவுபடுதல். மண் மகள் வயிறு கீற மரமொன்று வாங்கிக் கொண்டான். (யுத் : 1091)

மண்முதற் பூதங்கள் - மண் முதலாக எண்ணப்படும் ஐந்து பூதங் களும். மண் முதற் பூதங்கள் மாயும் என்றபோது. (அ : 1139)

மண் முதுகாற்றல் - நிலவுலகம் முதுகில் பாரம் நீங்கி இளைப்பாறுதல். விண் முது குளுக்கவும் வேலையாடையின் மண்முது காற்றவுங் காண்டி வள்ளல் நீ. (அ : 1099)

மணங் கிளர் மலர் - மணம் மிக்க பூக்கள். மணங்கிளர் மலர் வாரும் மாருதம் வர. (அ : 704)

மணஞ் செய்தல் - திருமணம் புரிதல். வரம்பில் பேரழகினனை மணஞ் செய்வான் வருகின்றான் என்று. (பா : 565)

மணத்தல் - 1. மணம் வீசுதல். வந்து சேர்தல். மந்த மந்த மணந் தது வாடையே. (அ : 1079) [பா : பே]

2. கூடியிருத்தல். கலந்திருத்தல். மந்தார முந்து மகரந்த மணந்த வாடை: (சு : 75)

3. தழுவுதல். வன்றொடிற் கொற்றப் பொற்றோள் மணந்திடும் மடந்தை மார்க்கு. (சு : 310) (பா : 427)

4. விவாகஞ் செய்து கொள்ளல். அரக்கர் தம்மின் மானுயர் மணத்தல் பொருத்தமன்று. (ஆ : 275)

மணத்தவிசு - திருமணத்துக் குரிய ஆசனம். மன்றலின் வந்து மணத் தவி சேறி. (பா : 1330)

மணத்திர் - அணைவீர்களாக. குளி சிலைச்சரத்தால் நொந்தேன் வடித்தடங் கண்ணீர் என்னை மணத்திர் என்றுரைப்ப. (பா:427)

மணத்தொழில் புரிதல் - மணந்துவாழும் வாழ்க்கையை விரும்புதல். (அண்) கலியாணம் பண்ணும் செயலை விரும்புதல். சனகன் தன்னைக் கட்டினன் கொணர்ந்து காட்ட மணத்தொழில் புரியுமன்றே. (யுத் : 1584)

மணநாள் - திரு மணவிழா நாள். இந்திரன் முடிசூடும் மண்ணுறு திருநாளே ஒத்ததம் மணநாளே. (பா : 1282)

மண நாறுதல் - வாசனை வீசுதல். தூவிய மலர்த் தொகை சுமந்து திசைதோறும் பூவின் மணம் நாறுவ. (சு : 707)

மணம் - 1. கூடுகை. சேர்தல். மங்கை மண முன்னு வருங்கடகம் அங்கையினில் வள்ளல் இணைகின்றான். (யுத் : 702)
2. திருமணம்-கலியாணம். மணத்தவிசு. (பா : 1330) (பா:1326)

மணம் படு திரு - திருக்கலியாண வைபவம். மலிதரு மணம்படு திருவை வாயினால் மெலிதரு முணர்வினேன் என் விளம்புகேன். (பா : 1326).

மணமுரசு - மணம் முதலிய மங்கல நிகழ்ச்சிகளை அறிவிக்கும் முரசு. ஆனை மேல் மணமுரசு அறைகென்றேவினான். (பா:822)

மண மொழிதல் - மணம் பற்றிப் பேசுதல். களிற்றரசர் ஒலித்தாழி என வந்து மணமொழிந்தார்க்கு (பா : 769).

மணல் - மணற் கூட்டம். பூணுதற்கினிய முத்தின் பொலி மணல் பரந்த வைப்பில். (யுத் : 440).

மணல்தடம் - மணற்கேணி. புது மணற்றடங்கள்தோறும். (பா:31)

மணலிற் பல வெங்கணை - மணலினும் பலவாய வெங்கணைகள். கண்ணின் நுண் மணியூடு கழிந்தன எண்ணின் நுண் மணலிற் பல வெங்கணை. (யுத் : 3858)

மணலின் வேதிதிர்தர இயற்றல் - மணலினால் மேடையை அமைத்தல். மணலின் வேதி திர்தர இயற்றி. (ஆ : 1033)

மணவாளன் - கணவன். சீதை மணவாளன். (அ : 400)

மணவினை நிரப்பு மண்டபம் - திருக்கல்யாண மண்டபம். திருமண விழாவிற்கு ஏற்ற பொருள் நிரம்பிய மண்டபம். நிரைவளை மண

வினை திரப்பும் மண்டபம் அரசர் தம் மரசனும் அணுகல் மேயி னன். (பா : 1283)

மணாளர் - மணவாளப்பிள்ளைகள். வெம் பாவத்தை மணம்புணர் மணாளர். (யுத் : 3263)

மணி - 1. தெளிவு. ஒரு மணித்தடத்திற் சந்தி நோக்கினன் இருந்தது கண்டனள் (ஆ : 315)
2. மாணிக்கம். இரத்தினம். செந்நிற அரதனம். விடவரா வாய் பிளந்துக்க செம் மணியுமே வன மெலாம். (பா:349) (அ:130)
3. முத்து. எல்லென்னும் மணி முறுவல் இந்துமதி. (பா : 732)
4 அழகு. மணியாழி. (யுத் : 9) மணிபழுத் தமைந்த வாய். (யுத் : 472) குன்று போல் மணிவாயில். (யுத் : 211)
5. கிண்கிணி மாலை. பன் மணிப்புரவிகள். (பா:830) [பா : பே]
6. ரசகுளிகை. மோதிரம் அடுத்த பொருளெல்லாம் திண்டளவில் வேதிகை செய் தெய்வ மணி கொல்லோ. (சு : 557)
7. பளிங்கு. வேறுரேர் புனைமணி இருக்கை புக்கான். (யுத்:900)
8. நவரத்தினம். இழைந்த நூலிணை மணிக் குடஞ்சுமக்கின்ற தென்ன. (அ : 745)
9. கைப்பிடி. சுற்றுார் மணியின் வடிவாள் புடை தோன்ற ஆர்த்து. (உ.வி) (அ : 411) [பா : பே]

மணி அகலம்-அழகிய மார்பு. இகலோன் மணி அகலம். (யுத்:1137)

மணிக்கடல் - இரத்திஞகார மானகடல். சொற்கலை முனிவனுண்ட சுடர்மணிக் கடல். (பா : 569)

மணிக்கந்து - நீலரத்தினக் கல்லாகிய தூண். கார் மழை தோன்றி னும் மா மணிக் கந்து காணினும் கைத்தலங் கூப்புமால். (ஆ : 304)

மணிக்கரம் - அழகிய திருக்கைகள். உயர்திசை ஒம்புமானையின் கரங்களே இவன் மணிக்கரம் என்றுன்னுவாள். (ஆ : 238)

மணிக் கலசம் - பூரணகலசம். இருபிறப்பாளர் எண்ணுயிரவர் மணிக் கலச மேந்தி. (பா : 889)

மணிக் கற்பாறை-அழகிய கருங்கற்பாறை. நீலமணி போன்ற கருங் கற்பாறை. (வை.மு) (அண்) மலைகளும் மரங்களும் மணிக் கற் பாறையும். (ஆ : 119)

மணிக் கால் ஊசல் - மணிகள் பதித்த கம்பங்களில் தொங்கும் ஊசல்கள். மணியன் கால் ஊசல் வறிதான. (கி : 520)

மணிக்குடர் - சிறந்த குடல்கள். துடித்தன மணிக்குடர். (ஆ: 532)

மணிக்குப்பை - இரத்தினக் குவியல். தரங்க மீட்டிய திரண் மணிக் குப்பையும். (யுத் . 333)

மணிக்குலம் - அரதனத் தொகுதிகள். பணிக்குலமும் மணிக்குலமும் தகர்ந்து சிந்த. (யுத் : 3867)

மணிக்குறு நகை - முத்துப் போன்ற சிறிய பற்கள். மணிக்குறு நகை இள நங்கைமார்கள் முன். (அ : 907)

மணிகண்டர் - சிவபிரான். கறுத்த மணி கண்டர் கடவுட்சிலே. (ஆ : 538)

மணிகள் அட்டிய பேழை - நவமணிகள் நிரப்பிவைத்த நகைப் பெட்டி. ஆழியிற் புனலற மணிகளட்டிய பேழையிற் பொலிந்தன பரவை. (யுத் : 586)

மணிகள் ஈன்ற சுடர் - செம்மணிகளினுல் தோன்றிய செந்நிறச் சுடர். (யுத் : 799)

மணிச் சதங்கை - மணிகள் பதித்துச் செய்த சதங்கை. பொன் மணிச்சதங்கையுஞ் சாத்தி. (யுத் : 3612)

மணிச் சாளரம் - மணிகள் பதித்த சாளரம். அருமணிச் சாளரமதனினூடுபுக்கு. (ஆ : 687)

மணிச்சுடர் - 1. அழகிய ஒளி. நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள். (பா : 1225)

2. பதுமராகக் கற்களின் ஒளி. மாணிக்க மணிகள் புறப்பட விட்ட கதிர்க்கற்றை. (அண்) நீண்ட மால்வரை மதியுறு நிவந்த தூண்டு மாமணிச் சுடர் சடைக் கற்றையிற்ருேன்ற. (அ : 743)

மணி த்தசும்பு - மாணிக்கக் கலசம். சூழ்சுடர்ச் சிரத்து நன்மணித் தசும்பு தோன்றலால். (பா : 118)

மணித்தடங்கள் - இரத்தினங்களையுடைய மணிக்குன்றுகள். நேரிழை நெடிய நம்பி தோளின்கண் மனம் வைத்தன்ன சுடர் மணித் தடங்கள் கண்டாள். (ஆ : 228)

மணித்தடந்தோள் - அழகிய விசாலமான தோள்கள். மணித்தடந் தோளினுற்குக் கொடுத்தியோ. (பா : 660)

மணித்தடம்-தெளிந்த நீர்த்துறை. வள்ளல்போய் ஒரு மணித்தடத் திற் சந்தி நோக்கினன் இருந்தது கண்டாள். (ஆ:315)

மணித்தடன் - மணிகளையுடைய தாழ்வரைகள். மாதவத்தோர் உறைவிடனும் மழையுறங்கு மணித்தடனும். (கி : 771)

மணித்தரு - இரத்தின மயமான மரங்கள் (சு : 711)

மணித்தாம்பு - முறுக்கேறிய கடை கயிறு. வரை நிறுவிப் பிணித்த பாம்பின் மணித்தாம்பின் விரிந்த திவலே. (பா : 633)

மணித்திரள்கள் - இரத்தினத் தொகுதிகள். திடல் திறந்துகு மணித்திரள்கள். (யுத் : 585)

மணித் தேர் - அழகிய தேர். உயிரனைய கொழுநர் வரமணித்தே ரோடுங் கண்டு. (பா : 715

மணித்தோள் - இரத்தினுபரணங்களை யணிந்த தோள். மணித் தோள் நிரை அலைகிடந்தென ஆழிகிடந்தன. (யுத் : 3938)

மணி நகை - முத்துப் போன்ற பற்கள். மணி நகைத்திணி வேய் மென்ருேள். (கி : 641)

மணிநாசி - அழகிய மூக்கு, மருந்தனைய தங்கை மணி நாசி. (ஆ : 617)

மணி நிரை மாடம் - நவமணிகள் நிரலே பதிப்பிக்கப்பட்ட மேல் நிலைகள். இந்திர தனு நாணும் எரிமணி நிரைமாடம். (பா:1268)

மணிநிற இதழ் - செந்நிறமான உதடு. வள்ளத்தை மறித்து வாங்கி மணிநிற இதழின் வைத்தாள். (பா : 1064)

மணி நிறக் கோபம் - மாணிக்க நிறம் வாய்ந்த இந்திர கோபங்கள். வயின் ருெறும் வயின் ருெறும் மணிநிறக் கோபங்கள் மலர்ந்த. (அ : 734)

மணி நீர் - முத்துப்போல அல்லது நீலமணி போலத் தெளிந்த நீர். மணி நீர் யாறு. (கி : 918)

மணி நெடுந் தெரு - அழகிய பெருவீதி. புலவியில் பரிந்த கோதை வண்டொடு கிடந்து தேன்சோர் மணி நெடுந் தெருவிற் போனுர். (பா : 571)

மணி நெடுந்தேர் - மணிகள் கட்டிய பெரிய தேர். மற்ளெரு கதிரோன் என்ன மணி நெடுந் தேரிற் போனுன். (பா : 891)

மணிப்பணி - இரத்திஞபரணம். மற்றுமொரு நிதின் மணிப்பணி தந்து. (யுத் : 1720)

மணிப்பத்தி - மணிவடம். (வை.மு) இரத்திஞபரணங்களின் வரிசை (அண்) மொய்ம் மணிப்பத்தியால் இளவெயில் பரப்பும். (பா : 832)

மணிப்புதல்வன் - நீல மணி போன்ற நிறத்தையுடைய புதல்வனுகிய இராமன். நின் முதன் மணிப் புதல்வனை முறையால் அரசனுக்கி. (அ : 47)

மணி பிரியரவு – இரத்தினத்தை இழந்த பாம்பு மணி பிரி அர வின் மாழ்கி அருந்துணை பிரிந்த அன்றிற் பெடையென அரற்ற லுற்ருள். (அ : 593)

மணி மண்டபம் – இரத்தின மண்டபம். தெய்வத் தச்சன் புல னெலாந் தெரிப்பதொரு புனை மணி மண்டபம். (ஆ : 561) அந்தாம நெடுந்தறி ஆயிரத்தாலமைந்த சந்தார் மணிமண்டபம். (ஆ : 715)

மணி மதில் – அழகிய மதில். மணிமதிற் கிடக்கை கண்டார். (பா : 563)

மணிமதிற் கிடக்கை – அழகிய மதிலின் நிலைமை (வை. மு) அழ கிய மிதிலை நகரின் புறமதில். (அண்) (பா : 563)

மணி மலர்ச் சோலை – அழகிய பூந்தோட்டம். மாடு நின்ற அம் மணிமலர்ச் சோலையை மருவி. (சு : 330)

மணிமாட அயோத்தி - மணி பதித்த மாளிகைகளையுடைய அயோத்தி. மணிமாட அயோத்தி என்னும் பொன்னகர். (பா : 324)

மணி மார்பு – அழகிய மார்பு பொருவருமணி மார்பா போதுவென் உடன் என்ருன். (அ : 684)

மணிமிடற்றிறைவன் – நீல ரத்தினம் போன்ற கறுத்த கண்டத்தை யுடைய சிவபிரான். மணிமிடற்றிறைவனும் இனி நீர் ஒன்றும் அஞ்சலிர் ...... எனப் புகன்ருன். (யுத் ; 3283)

மணிமுகம் - அழகியமுகம். வாழி வெங்கதிர் மணிமுகம் வருடவும். (யுத் : 540)

மணிமுரசு - அழகியமுரசு. மணிமுரசின் கண்ணூர்த்தது.(யுத்:3050) (யுத் : 360)

மணிமுறுவல் - முத்தையொத்த பல்வரிசை. எல்லென்னும் மணி முறுவல் இந்து மதி. (பா : 732)

மணி முன்கை - அழகிய முன்கை. நின் மணி முன்கை ஏந்தின எனலாகும் இயல்பின இவை காணுய். (அ : 694)

மணிமேகலை - எண் கோவை யுடையதாய் இடையில் அணிதற் குரிய அணி. விரி மணி மேகலை விரவி ஆர்க்கில. (அ : 973)

மணி மேனி - அழகிய வடிவம். மன்மதனை ஒப்பர் மணி மேனி. (ஆ : 611)

மணியகலம் - அழகிய மார்பு. எற் சிந்திய எரி சிந்தின இகலோன் மணியகலம். (யுத் : 1137)

மணியணி - மணிகளால் இயன்ற அணிகலன்கள்: இரத்தினங்கள் பதித்த கலன்கள். மணியணி புனைவாரும். (பா : 1267) (அ : 487)

மணியணி முனிதல் - இரத்தின அணிகளை வெறுத்து நீக்குதல். முத்தணி யணிவாரும் மணியணி முனிவாரும். (பா : 1280)

மணியணியுதரம் - மணிபோன்ற அழகிய திரு வயிறு. வையமும் வானமும் வாய் மடுத்துண்டவன் மணியணி யுதரம். (பா:1290) (யுத் . 4068)

மணியணி வலயம் – மணிகள் பதித்துச் செய்யப்பட்ட அழகிய தோள் வலயங்கள். செங்கேழ் மணியணி வலயம் மின்ன. (பா : 927)

மணியணி விதானம் – நவ மணிகளால் அணி செய்யப் பெற்ற மேற்கட்டி. மணியணி விதான நீழல் இந்துவின் கொழுந்து விண்மீன் இனத்தொடும் வருவதென்ன. (பா : 1224)

மணியரங்கு – மணிகள் பதிக்கப் பெற்ற ஆடரங்கு. (யுத் : 1666)

மணியாரக் கோவை - முத்து மணிகளாலியன்ற வடங்கள். கோளோடு தாரகைகள் கோத்தமைத்த மணியாரக் கோவை போன்ற. (யுத் : 2586)

மணியாலியன்ற மலை - செம் மணிகளால் இழைக்கப் பெற்ற குன்றம். அணியார் ஒளிவந்து நிரம்பலின் அங்கமெங்கும் மணியாலியன்ற மலையொத்தது அம்மாசில் குன்றம். (பா : 964)

மணியாழி - 1. அழகிய மோதிரம். வியுமுயிர் மீளும் மருந்துமென லாகியது வாழிமணியாழி. (சு : 558)

2 அழகிய கடல். திரைக்கரத்தால் அரைப்பதேய்க்கும் மணியாழி. (யுத் : 10)

மணியின் அணி - இரத்தின அணிகள். மணியின் அணி நீக்கி வயங்கொளி முத்தம் வாங்கி. (பா : 972)

மணியீட்டம் - இரத்தினக் குவியல். வயங்கு தோற்றத்து எல்லார் மணியீட்டம் முகந்து. (சு : 49)

மணியுடைக் கொடி - அழகிய கொடிகள். மணியுடைக் கொடி வந்து முந்தூன்றலால் புணரி மேற்பொரப் போவது போன்றதே. (பா : 22)

மணியுந்தி - கரு மணி போன்ற திருநாபி. மாலின் மாமணியுந்தியின் அயனொடு வந்த மூல தாமரை முழுமலர். (பா : 508)

மணிவடம் - முத்தாரம். புல்கிய மணிவடம் பூண்கிலாமையால். (அ : 974) [பா : பே]

மணிவண்ணன் - நீல மணி போன்ற நிறத்தினனான திருமால். பரு மணிவண்ணன் மார்பிற் செம்மணி பறித்திட்டாலும். (யுத்:886)

மணி வயிறு - அழகிய வயிறு. (கருப்பம்) வார் காத்த வனமுலையார் மணிவயிறு வாய்த்திலரால். (பா : 736)

மணிவரைத் தோள் - 1. நீல மணி மலைகள் போன்ற தோள்கள். சுந்தர மணிவரைத் தோளுமேயல. (பா : 619)

2. அழகிய திரிகூட மலையின் தாழ்வரை. மணிவரைத் தோளின் வைகும் நெறிப்புண்டரீக மன்ன முகத்தியர். (யுத் : 955)

மணிவாய் - அழகிய வாய். படியேமுந் தலைமேற் கொண்ட கற்பினாள் மணிவாயென்ன. (யுத் : 7)

மணிவிரல் - மணிபதித்த மோதிர விரல். மின்தரு மணிவிரல் தேய. (யுத் : 334)

மணி விளக்கம் - மாணிக்கமான தீபங்கள். ஆயிரவாய் மணி விளக்கம் அழலுஞ் சேக்கை. (பா : 717)

மணி விளக்கு - இரத்தின தீபம். தூண்டல் செய்யா மணிவிளக்கின் சுடர். (பா : 632) பன்னக மணிவிளக்கு அழலும் பாயல். (பா : 1312)

மத்தக்கரி - மதங்கொண்ட வேழம். (யுத் : 2509)

மத்தகம் - நெற்றி மத்தகம் பிளந்து மாடுருவ வார்சிலை வித்தகன் சரந்தொட. (யுத் : 1512) (யுத் : 2509)

மத்தகமணி - சூடாமணி. மத்தகமணிக் குறுநகைச் சனகன் மான். (கி : 527)

மத்தகரி - மதங்கொண்ட யானை. மத்தகரி வயமாவின் வாணிருதர் பெருங்கடலின். (யுத் : 3569)

மத்தகரி வயமா - மதத்தையுடைய வலிய யானை. (யுத் : 3569)

மத்தச் சினமால் களிறு - மதத்தினையும் வெகுளியையுமுடைய பெரிய யானை. மத்தச் சினமால் களிறென்ன மலைந்தார். (யுத் : 1921)

மத்த நெடுங்கிரி - மதச் செருக்கும் உயர்ச்சியும் வாய்ந்த யானை. (யுத் : 1694)

மத்தப் பூட்கை - மதத்தையுடைய யானை. புகர் மத்தப் பூட்கை மேலோன். (யுத் : 1891)

மத்தம் - 1. ஊமத்தம்பூ. நன்மத்தம் நாகம் தலைசூடிய நம்பனே போல். (சு : 573)
2. கொழுப்பு, திமிர். காலன் மேனிமிர் மத்தன். (யுத் : 1283)
3. மதம். மத்த நெடுங்கிரி. (யுத் : 1694)

மத்த மது. புகர் மத்தப் பூட்கை. (யுத் : 1891)

மத்தமா - மதம் பிடித்த யானை. மழையெனப் பொருத வேலை மகரமும் மத்தமாவும். (யுத் : 640)

மத்தயானை - மதங் கொண்ட யானை. மனமெனும் மத்தயானையின் நிறையெனும் அங்குசம் நிமிர்ந்து போயதே. (பா : 603) (சு : 547)

மத்த வாரணம் - மதங்கொண்ட யானை. மத்த வாரணமென்ன மயங்கினான். (கி : 585)

மத்தளம் - ஓர் இசைக்கருவி. மத்தளம் முதலிய வயங்கு பல் இயம். (அ : 982)

மத்தன் - 1. உடற் கொழுப்பை யுடையவன், திமிரையுடையவன். காலன் மேனிமிர் மத்தன். (யுத் : 1283)
2. போர்மத்தன். குத்தினன் மத்தன் மாண்டான். (யுத் : 1903)
3. காம மயக்கங் கொண்டவன்; இராவணன். மத்தன் மெய் மயங்க வந்து. (யுத் : 2789)

மத்திகை - சம்மட்டி. குதிரைச் சம்மட்டி. கட்டார் கடு மத்திகை. (யுத் : 245)

மத்து - கடையும் மத்து. நீரின் மத்தன்ன பெருமையர். (யுத்:506)

மத்துறு தயிர் - மத்தினாலே கடையப்படுகின்ற தயிர். மத்துறு தயிரென வந்து சென்றிடை தத்துறு முயிரொடும். (சு : 675) மத்துறு தயிரின் உள்ளம் மறுகினன். (யுந் : 2160)

மத்தை - ஊமத்தம் பூ. நன் மத்தை நாகத் தயல் சூடிய நம்பன். (சு : 573) [பா : பே]

மத - வலி. வலிய மத வியல் களிற்றினைய். (அ : 1188)

மத அருவி - மத நீர் அருவி. இழி மத அருவி. (யுத் : 2493)

மதக்கதமா - மதத்தையும் சினத்தையுமுடைய யானை. சீயத்தால் தனி மதக் கதமா உலந்து விழ்தலின். (அ : 742)

மதக்கரி - மதங் கொண்ட யானை. மதக்கரியை யுற்றரி நெரித்தென (யுத் : 850)

மதக்கலுழி - மத ஆறு. விரவு செஞ்சாந்தமும் செறி மதத் கலுழி பாய் சேறுமே சேறெலாம். (பா : 1127)

மதக்களி யானை - மதக்களிப்புக் கொண்ட யானை. (யுத் : 1699)

மதக் களிறு - மத யானை. மத யானை போன்றவன். மதக்களிறே வந்தேனல். (யுத் : 1667)

மதக்கிரி - மதங்கொண்ட யானை. (யுத் : 1539)

மதகரி - மதம் படு கரி. படு மதகரி பரிசிந்தின. (யுத் ; 3473) (யுத் : 1539)

மதகரி மகரம் முழங்குகின்றது - மதம் பொருந்திய யானையாகிய மகரமீன் முழங்குகின்றது. (யுத் : 3277)

மதகிரி - மதயானை. ஈண்டின மதகிரி ஏழெண்ணுயிரம். (யுத்:1802)

மதகு - நீர் நிலையிலுள்ள மடைவகை. வரம்பில் வான் சிறை மதகுகள் முழவொலி வழங்க. (பா : 541)

மதங்கன் - ஒரு முனிவன். மதங்கன திருக்கையாய வெள்ளவான் குடுமிக்குன்றம். (கி : 443) (ஆ : 1196)

மதங்கன திருக்கையாய வெள்ளவான் குடுமிக் குன்றம் - மதங்க முனிவன் இருப்பிடமாயுள்ளதும் நீர்ப் பெருக்கையுடையதும் உயர்ந்த சிகரத்தையுடையது மான ருசியமுக மலை. (கி : 443)

மதங்கியர் - நடனமகளிர். கூத்தாடும் மகளிர். விதங்களின் நடித்திடு விகற்ப வழி மேவும் மதங்கியரை ஒத்த மயில். (கி : 522)

மதஞ் செய்தல் - மதத்தை யுண்டாக்கல். பதினலாண்டு பாடுறு மதஞ் செய்யாத பணைமுகப் பரும யானை. (யுத் : 4287)

மதத்த யானை - செருக்குற்ற யானை. தெருண்டிலா மதத்த யானை. (கி : 233)

மதத்தருவி - மத அருவி. அண்ணல் வெங்கரி மதத் தருவி பாய்தலால். (அ : 994)

மதத்திண் குன்று - யானை. (ஐராவதம்) மதத்திண் குன்றின் நின்றவன். (யுத் : 3312)

மதத்தின் குன்று - யானை. ஐராவதம். மதத்தின் குன்றின் நின்றவன். (யுத் : 3312) [பா : பே]

மதம் - 1. எக்களிப்பு. பொருமத யானை. (கி : 827)
2. யானை மதம். மதந்தாழ் வேழம். (யுத் : 220)
3. செருக்கு. உலகேழின் நன் மதமழிப்பர். (ஆ : 614) [பா : பே]

மதம் நாறல் - மதநீரின் மணம் போன்று நாற்றம் வீசுதல். பாத்த யானையிற் பதங்களிற் படுமத நாற. (பா : 903)

மதம் பாடு - மதம் ஒழுகுதல். இழந்தன மதம் பாடு. (சு : 837)

மதம் புலர் களிறு - மதம் வற்றிச் செருக்கடங்கிய யானை. மதம் புலர் களிறெனச் சீற்றம் மாற்றினர். (யுத் : 2957) மாறினர். [பா : பே]

மதமத்த மலை - மதங் கொண்ட மத்தமலை. யானை மாண்ட மதமத்த மலையைப் பார்த்தும். (யுத் : 1904)

மதமலை - 1. யானை. (யுத் : 1534) ஏழுறு மதமலை ஈரைஞூறு. (யுத் : 4214) (பா : 370) மத மலைக்குழுவும் ஈந்து. (யுத் : 43 39.) 2. ஐராவதம். சுரபி, வெம்பரி, மத மலை முதலிய. (பா : 4950).

மதமழை - மத நீராகிய மழை. விடா மத மழையன வேழம். (அ : 744)

மதமழை தாழ்குன்று - மத நீராகிய மழை பொழிகின்ற மலை போலும் யானை. உயர் மத மழை தாழ் குன்றினுங் கடை யுகத்துரு மெனக் குதித்தான். (சு : 845)

மத மழை யானை - மழை போலப் பெருகும் மத நீரையுடைய யானை. மத மழை யானை யென்ன மருதஞ் சென்றடைந்த தன்றே. (பா : 27)

மதமா - யானை. குழறு கோப மதமா. (ஆ : 11)

மதமாகரி - மதங்கொண்ட பெரிய யானை. தேரு மதமாகரி தேர் பரிமா நூருயிர கோடி. (யுத் : 2921) (ஆ : 466)

மதமால்கரி - மதமயக்கங் கொண்ட யானைகள். (யுத் : 1822)

மதமுங்நீர் - மூன்று வகை மதஜலம். எண்ணில் யானை வண்ணவார் மதமுந்நீரும். (யுத் : 4260)

மதயாறு - மதநீர் பெருகி ஓடும் ஆறுகள். (யுத் : 1829)

மத யானை - மதங் கொண்ட யானை. வளைத்தார் மதயானையை வன்றெழிலில் தளைத்தாரென. (யுத் : 3450) பாய் மதயானை. (யுத் : 979)

மதர்த்தல் - களிப்பு மிகுதல். செருக்கித்திரிதல். கொல்லும் வேலும் கூற்றமும் என்னும் இவை யெல்லாம் வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழி கொண்டாள். (பா : 595) பிணமதர்த்தனைய நோக்கம் பாழ்படப் பிடியுண்டு. (யுத் : 802) மதர் நெடுங்கண்கள். (அ : 465)

மதர்ப்பு - செழிப்பினுலுண்டாகும் செருக்கு களிப்பேறிய நிலை. களிப்பன மதர்ப்ப. (பா : 1163)

மதலை - மகன். கதிரோன் மதலை கண்ணுற்று. (யுத் : 846) என் மதலையும். (யுத்: 1166)

மதலையர் - புத்திரர். கேட்ட வேந்தனும் மதலையர்க் கம்மொழி கிளத்த. (பா : 514)

மதவரை - யானை. (சார்வ பௌமம்) வடாது திக்கின் மதவரையின் வழி. (யுத் : 3573)

மதவலிச் சைலம் - மதத்தையும் வலிமையையு முடைய மலை போன்ற யானை. பணைத் திண்கோட்டு மதவலிச் சைலம். (யுத் : 4345)

மத வாறு - மதநீர்ப் பெருக்கு. ஆறு போற் பெருகும் மதநீர். ஆனைமா மத வாற்ருெடளாவியும். (பா : 19)

மதவிலங்கல் - யானை. ஆசைநின்ற விடாமத விலங்கலேயால். (அ : 256)

மதவியல் குரக்குச் செய்கை - அறியாமையாற் செருக்குறும். இயல் பாகிய குரங்கின் செய்கை. மதவியல் குரக்குச் செய்கை மயர் வொடு மாற்றி. (கி : 372)

மதவிலங்கல் - யானை. ஆசை நின்ற விடாமத விலங்கலேயால். (அ : 256)

மதவு - மடமை. மதவியல் குரக்குச் செய்கை. (கி : 372)

மதவெங்கரி - மதஞ் செறிந்த கொடிய யானை. வருகைத்தல மத வெங்கரி வலிகெட்டன வருவாய். (யுத் : 1132)

மதவெங்கார் - மதஞ் செறிந்த கொடிய யானை (யுத் : 1823)

மதவெற்பு - யானை. கடையிட்ட கணிதப் பாதலக்க மத வெற்பவை படைத்த வலியான். (ஆ ; 18)

மதன் - 1. செருக்கு. வேனில் மதனை மதன் அழித்தான். (அ:613) (ஆ : 1077)

2. மன்மதன். வேனில் மதன். (அ : 613)

3. வலிமை. உலகேழின் நன் மதனழிப்பர். (ஆ : 611)

4. ஒரு வானரப் படைத் தலைவன். விந்தன் துவிந்தன் மதன் என்பான். (க : 605) [பா : பே]

மதனச் சோலை - மன்மதனுக் கிருப்பிடமான சோலை. மாசறு மரங்க ளாகக் குயிற்றிய மதனச் சோலை. (சு : 731)

மதனம் - மதக்களிப்பு. (சு : 731)

மதனவாளி - மன்மதனுடைய அம்புகள். மயிர்ப் புறந்தோறும் வந்து பொடித்தன மதனவாளி. (யுத் : 2786)

மதனன் - களிப்பை ச்செய்பவன்; மன்மதன். வாரணத் துரிவையான் மதனனைச் சினவு நாள். (பா : 343) மதனற்கும் எழுத வொண்ணுச் சீதை. (பா : 508) (கி : 51)

மதனை மதனழித்தல் - மன்மதனை அவனினும் மிக்க அழகுடையவனும் அவன் செருக்கை யழித்தல். பொருவரிய வேனில் மதனை மதனழித்தான் மீண்டான் என்ன. (அ : 613)

மதி - 1. மதிப்பு. மதிதெரி குலிசியும். (பா : 196)
2. மதி நுட்பம் மதிக்கவியினு மரபின் நாடி. (ஆ : 158)
3. இயல்பா யமைந்த நன்மதி. மதி நெறியறிவு சான்ற மாலிய வான். (யுத் : 762) மதிமிகு மயன். (பா : 318)
4. யானை. [மதீ] மதத்தையுடையது. கோண் மதித்திடர் கிடந்தன. 2039)
5 கல்வி கேள்விகளினாலாய அறிவோடு இயற்கையறிவு. மறு விலன் மதியின் கூர்மையன். (ஆ : 181)
6. சந்திரன். மதியெனும் பண்பதாகி. (கி : 799)
7. மாதம். இரு மதி இறந்ததன்றே. (யுத் : 4333)
8. காசிபன் மனைவி. மதியென்பாள் மனிதர் தம்மோடு ஆன வருடங்களவை அடைவே பயந்தனளால். (ஆ : 202)
9. சூழ்ச்சி. கோளிழைத்தாள் மதிக்கும் மதியாய். (அ : 427)

மதிக்கவி - மதிநுட்பத்தாற் செய்யப்பட்ட செய்யுள். உலக மோதும் வழக்கினும் மதிக்கவியினும் மரபினுடி. (ஆ : 158)

மதிக்கு மேனி சுடுவித்தீர் - சந்திரனால் என் உடம்பு சுடுமாறு செய்திட்டீர். (யுத் : 1592)

மதிக்குழவி - பிறைக்குழவி. ஒளிறு வான்மதிக் குழவி தன் சூல் வயிற்றுதைப்பப் பிளிறு மேகம். (அ : 736)

மதி தனக்கு மாமறுத்தந்த முகத்தினாள் - பூர்ண சந்திர மண்டலத்துக்குப் பெரிய களங்கததை யுண்டாக்கிய திருமுக மண்டலத்தின் அழகுடைய சீதாபிராட்டி. (யுத் : 3956)

மதிக் கொழுந்து - சந்திரன். மூனைக்கலா மதிக்கொழுந்து போலும் வாண் முகத்தினன். (பா : 799)

மதி கெடுந்தகையோர் - புத்தி கெட்ட எண்ணத்தை யுடையோர். மதி கெடுந்தகையோர் வந்து நாமுறை பதிபுகுந்தனர். (யுத்:743)

மதிகெழு மழை முகில் - சந்திரனைத் தன்பாற் கொண்ட கார மேகம். மண்டலந்தரு மதிகெழு மழை முகிலனைய அண்டர் நாயகன். (அ : 55)

மதிகொடு வகுத்த வாணுதல் - சந்திரனைக் கொண்டு படைத்த ஒள்ளிய நெற்றி. பகுத்தவான் மதிகொடு பதுமத் தண்ணலே வகுத்த வாணுதலியர். (அ : 535)

மதித்தல் - 1. நினைத்தல். வந்து காண்பதுன் மாற்றவள் செல்வமோ மதியாய். (அ : 710)

2. துணிதல். விரிஞ்சன் மாறிலாப் பெரும்படைக்கலம் தொடுப்பதா மதித்தான். (சு : 1033) (யுத் : 3776)

3. குறிப்பிடல். (வை.மு) கருதுதல். (அண்) மனையின் வந்து அவன் எய்த மதித்த நாள். (யுத் : 4130)

4. எண்ணுதல். புகல் மதித்துணர்கிலாமையின். (யுத் : 105)

5. பாராட்டுதல். மதித்தனர் இராமனை வானுளோ ரெலாம். (யுத் : 3818)

6. குறிபார்த்தல். மருமத்தினை மதியாக் குறித்து. (யுத் : 3017)

மதித்து - மதங்கொண்டு. (அண்) குழைய நசுக்கி. (கலா). வெவ் வழி இருள் தரமதித்து மீச்செல்வார். (சு : 142)

மதித்தோற்றம் - சந்திரனது தோற்றம். மதியின் எழுச்சி. நிறை மதித் தோற்றங் கண்ட நீல் நெடுங் கடலிற்ருகி. (பா : 878)

மதி தொடநிவத்தல் - சந்திரனைத் தொடுமாறு உயர்ந்திருத்தல். மதி தொடநிவந்தன மகர தோரணம். (அ : 128)

மதி தொடுங்கோயில் - சந்திரனையளாவுமாறு ஓங்கியுள்ள மாளிகை. வாயில் வல்லை நுழைந்து மதி தொடுங்கோயிலெய்தினன். (யுத் : 1288)

மதி நீங்கிய கங்குல் - சந்திரன் நீங்கிய இரவு. கதிர் மதி நீங்கிய கங்குல் போன்றதே. (அ : 968)

மதிநெறியறிவு - இயற்கையறிவும் நல்ல நெறியினை அறியவல்ல நூலறிவும். (அண்) ஆராயவேண்டிய முறைமையாலே ஆராய்ந் தறிந்த உணர்வு. மதி நெறியறிவு சான்ற மாலியவான். (யுத் : 762)

மதி பிதிர்த்தல் - சந்திரனை உதிர்த்தல். வானவார் மழை நுழைதரு மதி பிதிர்ப்பாள் போல். (அ : 182)

மதி மண்டலம் - மதிக்கத்தக்க வான மண்டலம். (வை.மு) ஒளி மிக்க சந்திர மண்டலம். (அண்) மீன் குலந்தழுவிக் கோண்மதி மண்டலம் விழுந்தன போன்ற மண்ணினே. (யுத் : 1784)

மதி முகம் - சந்திரன் போன்ற அழகிய முகம். வள்ளல் தன்னை மதி முகம் நோக்கியே. (பா : 653) (யுத் : 540) [பா : பே]

மதியம் - 1. சந்திரன். செய்ய பவளத்தைப் பஞ்சியூட்டி மேற்பட மதியஞ்சூட்டி. (கி : 776)
2. மாதம். இயலு மாமதிய மீராறும் வந்தெய்தவே. (கி: 188)

மதியவன் - சந்திரன். மதியவன் கதிரின் குளிர் வாய்ந்தன. (யுத் : 680)

மதியாற் பிடித்தல் - அறிவாற் கைப்பற்றுதல். மதியாலே பிடித்தாய் வையம் பெற்றனை பேராவரம். (அ : 597)

மதியிலா இரவு - சந்திரனில்லாத இரவு. நாளொடும் தெள்ளுறு மதியிலா இரவும். (அ : 940)

மதியிலா மனம் - புத்தியில்லாத மனம் வந்து ஊழ்வினை தூண்ட மனக்கு நல்லன சொல்லினை மதியிலா மனத்தோய். (அ : 162)

மதியின் நாப்பண் - சந்திரன் நடுவில். மண்டல மதியின் நாப்பண் மானிருந் தென்ன. (யுத் : 3967)

மதியின் பாகம் - 1. பிறை மதி. (அண்)
2. அஷ்டமிச் சந்திரன். (வை.மு) மதியின் பாகந்தரு நுதலாள். (அ : 621)

மதியின் மேல் வருங் கோள் - (நிறை) மதியின் மேல் வருகின்ற இராகு. உவா மதியின் மேல் வருங் கோளென வந்ததே. (பா : 410)

மதியினின் மறுத்துடைத்தல் - சந்திரனிடத்தில் இருக்கும் களங் கத்தைத் துடைத்தல். மதியினின் மறுத்துடைப்பாள் போல். (அ : 183)

மதியுறுதல் - சந்திரன் தங்குதல், தவழுதல். நீண்ட மால்வரை மதியுற. (அ : 743)

மதியேன் மதியேன் - ஒரு பொருட்டாக மதிக்கமாட்டேன். மதியேன் மதியேன் உனை வாய்மை இலா விதியே. (யுத் : 2634)

மதில் - நகரைச் சூழ்ந்துள்ள பெருஞ் சுவர். அன்னமா மதிலுக்கு ஆழிமால் வரையை அலைகடல் சூழ்ந்தன அகழி. (பா : 106)

மதிலாடை இலங்கையாள் - மதிலாகிய ஆடையையுடைய இலங்கை என்னும் பெண். மதிலாடை இலங்கையாள் மடுத்த மாக்கடல். (யுத் : 1001)

மதிலொரு மூன்று - மதில்கள் மூன்று. இப்படி மதிலொரு மூன்று. (யுத் : 487)

மதிவலி – அறிவின் வலிமை. மதிவலியான் விதிவெல்ல வல்லமோ. (ஆ : 1005)

மதிவளர் சடைமுடி – மழுவலாளன் பிறைச்சந்திரன் வளர்தற் கிடமாயுள்ள சடை முடியையுடைய மழு என்னும் ஆயுதத்தைக் கொண்ட சிவன். (பா : 196) [பா : பே]

மதிள் – மதில். கைம் மதிட் குளாயினர். (ஆ : 1145) (யுத்:977)

மதிள் கிடக்கை – மதிள் எல்லை. அறம் புகாது இந்த அணி மதிட் கிடக்கை நின்று அகத்தின். (சு : 118)

மதிள் நெற்றி – மதிளின் உச்சி. நின்று மேரு நெடுமதிள் நெற்றியின் வென்றிவானர வீரர் விசைத்த கல். (யுத் : 985)

மதிற் கிடக்கை – மதிளின் நிலை. (பா : 563)

மதிற்குடுமித் தலை – மதிளின்சிகரம். இப்பொழுதே கதிர் மீச் செலாக் கொடுமதிற் குடுமித்தலை கொள்கென்றான். (யுத் : 965)

மதிற் புறத்தகம் – அகழி. அந்தமா மதிற் புறத்தகத் தெழுந்த. (பா : 108)

மது – 1. இனிமை. மதுப் பொழி மழலைச் செவ்வாய். (பா : 42)
2. ஓர் அசுரன். மதுவினை அனுசனோடும் வேலையைக் கலக்கக் கண்டேன். (யுத் : 3309) (யுத் : 1751)

மதுகரம் – வண்டு. மதுகரங் கடியுமாறெனக் கைகளின் மதர் நெடுங்கண்கள் எற்றினார். (அ : 465)

மதுகை – 1. வலிமை. வீரம் புலிபடு மதுகை மைந்தர். (சு : 205
2. வெற்றி. மதுகைத் தடந்தோள் வலி காட்டிய வான வேந்தன். (யுத் : 1974)

மது கைடவர் - மது, கைடவன் என்னும் இரு அசுரர்கள். கருங் கடல் கலக்கும் மது கைடவரை ஒத்த. (பா : 922)

மதுகையான் - ஆற்றலுடையவன். உரங்கிளர் மதுகையான் தன் ஆணையால். (சு : 1266)

மதுப் பொதி மழலை - இனிமை மிகுந்த மழலைச் சொற்கள். மதுப் பொதி மழலைச் செவ்வாய் வாட்கடைக் கண்ணின் மைந்தர். (பா : 42)

மதுபம் - வண்டு. மதுப மூசுந் தேனொடு கிழங்கும் கனியும் பிறவும். (யுத் : 4230)

மதுரம் - இனிமை. செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளில்.(பா:93)

மதுர மாற்றம் - இனிய பேச்சுக்கள். இனிமை பயக்கும் மொழிகள். (அண்) சொல்லுவ மதுர மாற்றம். (யுத் : 1638)

மதுரவாரி - இனிய (பாற்) கடல். மதுரவாரி யமுதென மாந்துவார். (அ : 629)

மதுரித்து - இனித்து. விளைகட்டியின் மதுரித்து. (அ : 622)

மதுவனம் - சுக்கிரீவனுக்குரிய ஒரு வனம். மதுவனமதில் இறுத் தார். (சு : 1258)

மந்தணம் - ஆலோசனை. மந்தண முற்றுழி. (யுத் : 342)

மந்தம் - தென்றல். (அண்) அந்தர் வந்தென அந்தி தன் கைதர மந்த முந்த நடந்தது வாடையே. (அ : 1079)

மந்த மந்த - மெல்ல மெல்ல. மந்த மந்த நடந்தது வாடையே. (அ : 1079) [பா : பே]

மந்த மாருதம் - 1. தென்றற் காற்று மந்த மாருதம் போய் மலர் தொறும் வாரி வயங்கு நீர். (சு : 420)
2. இளங்காற்று. கந்த மாமலர்க் காடுகள் தாவிய மந்த மாரு தம். (கி : 584)

மந்தரக்கிரி - மந்தர மலை. மந்தரக்கிரி யென மருந்து மாருதி தந்த வப் பொருப்பென. (யுத் : 3725) மந்தரக் கிரி யெனப் பெரிய வன். (கி : 181)

மந்தர கிரி - மந்தர மலை. அந்தமில் கனைகடல் அமரர் நாட்டிய மந்தரகிரி. (அ : 179)

மந்தர கீதம் - 1. மெலிவுத் தானத்து ஓசையோடு கூடிய பாடல். மந்தர கீதத்திசைப் பதம் தொடர்ந்த வகையுறு கட்டளை வழாமல். (சு : 419)

2. படுத்த லோசையோடு கூடிய பாடல். (உ-வி) (சு : 419)

3. சாமகானம். மந்தர கீத ஓசை. (பா : 894)

மந்தரத்தடந் தோள்வீரர் - மந்தர மலை போன்ற பெரிய தோள்களை யுடையவீரர். (இலக்குவன் சுக்கிரீவன்) (யுத்:518)

மந்தரப் பொருப்பு - மந்தர மலை. மந்தரப் பொருப்பால் வேலை கலக்கினுன் மைந்தன். (யுத் : 943)

மந்தரம் - மந்தரமலை. மந்தரத்திஞெடும் வாசுகியோடும். (யுத்:828) (ஆ : 1097) (யுத் : 558)

மந்தர மணிமாடம் - மந்தர மலை போற் சிறந்த வீடுகள். மந்தர மணிமாட முன்றிலின் வயினெங்கும். (பா : 1270)

மந்தர மணிப்புயம் – மந்தரமலை போன்ற அழகியதோள். போன மந்தர மணிப்புய நெடும் புகழினுன். (கி : 79)

மந்தர மேரு – மந்தரமலை. மாலைச் சிகரத் தனி மந்தர மேரு முந்தை வேலைத் திரிகின்றது போல் திரிகின்ற வேலை. (அ:416)

மந்தரை – கூனி. மந்தரை பின்னரும் வகைந்து கூறுவாள். (அ : 157)

மந்தரைக் கூற்றம் – மந்தரையாகிய யமன். மந்தரைக் கூற்றமும் வழிச் செல்வாரொடும் உந்தியே போதல் கண்டு. (அ : 987)

மந்தாகினி – கங்கை. நரைத்த கூந்தலின் நங்கை மந்தாகினி. (அ : 639)

மந்தாரம் – பஞ்சதருக்களில் ஒன்று. மந்தார முந்து மகரந்தம் மணந்த வாடை. (சு : 75)

மந்தி – பெண்குரங்கு. அவிர் மணிக்கோவையயர்ரம் மரம்பயில் கடுவன் பூண மந்தி கண்டுவக்கு மாதோ. (பா : 940) (கி:519)

மந்திர அம்பு – மந்திர சக்தியோடு கூடிய அம்பு. இந்திரன் பகைஞனும் இராமன் தம்பிகை மந்திர அம்பினல் மடிதல் வாய்மையால். (யுத் : 1313)

மந்திர அயில் – மந்திர சக்தியுள்ள சூலப்படை. ஈசன் கை இலை மூன்றென்னும் மந்திர அயிலும். (யுத் : 1241)

மந்திரக் கிழவர் - மந்திரிமார். இந்திரற்கிமையவர் குருவை ஏய்ந்த தன் மந்திரக் கிழவரை வருகென்றேவினன். (அ : 4)

மந்திர கீதம் - சாமகானம். (பா : 894) [பா : பே]

மந்திரச்சாலை - ஆலோசனை மண்டபம். தென்றலும் சார்கிலா நெடு மந்திரச் சாலையே. (யுத் : 731)

மந்திரச் சுற்றத்தார் - ஆலோசனைத் துணையாளர். மந்திரச் சுற்றத் தாரும் வானுதற் சுற்றத்தாரும். (யுத் : 1223)

மந்திரச் சுற்றத்துள்ளார் - ஆலோசனைக்குஉரிய இனமாகவுள்ளவர் களான மந்திரிகள். (யுத் : 4272)

மந்திரசித்தி - மந்திர உருவேற்றிப் பெற்ற பேறு. ஐயன் மந்திர சித்தியன்ன சிலைத்தொழில். (யுத் : 1884)

மந்திரத் தலைவர் - மந்திரிமார்கள். தண்டலின் மந்திரத்தலைவர் வருகென. (யுத் : 20)

மந்திரத்தறிஞன் - ஆலோசனையால் அறிபவன். ஆய்மையின் மந் திரத் தறிஞனுமெனச் சேய்மையின் நோக்குறுஞ் சிறுகணன் தனை. (ஆ : 181)

மந்திரத்திசையர் - மந்திரன்களின் உதவியால் பலதிசைகளிலும் செல்லத்தக்கவர். (கலா) செவ்வழி மந்திரத் திசையராகையால் வெவ்வழி இருள் தர மதித்து மிச்செல்வார். (சு : 142) [பா : பே]

மந்திரத்திருக்கை - மந்திராலோசனை மண்டபம். போதுகு பந்தர் நின்று மந்திரத் திருக்கை புக்கான். (யுத் : 2793)

மந்திரத்தை ஆய்தல் - மந்திரத்தை ஜெபித்தல். பங்கயச் செல்வியை மனத்துப் பாவியா அங்கையினுய மந்திரத்தை ஆய்ந்தனள். (ஆ : 254)

மந்திரத் தொழில் - ஆலோசனை. மந்திரத் தொழில் நிரம்பிய முதி யரும். (யுத் : 18)

மந்திர நாமச் சொல் - அச்சத்தைத் தருமபடியான மந்திரங்கள். (வை.மு) மந்திரப் பெயர்கள் அடங்கிய சொற்கள். (கலா) மறை மொழிகளாகிய புகழமைந்த சொற்கள் (அண்) நன்மதியோர் புகல் மந்திர நாமச் சொன்மதியா அரவில் தொடர்கிற்பாள். (ஆ : 1077)

மந்திரப் பெருந்தலைவர் – ஆலோசனைக்குரிய சிறந்த தலைவர். பெருமை பெற்ற மந்திரிமார்கள். (அ : 917a)

மந்திரம் – 1. சூழ்ச்சி. முடித்தாயன்றே மந்திரமென்றாள். (அ:597)
2. ஆலோசனை. மந்திரத் திளையோன் சொன்ன வாய்மொழி. (ஆ : 800)
3. மாளிகை. வீடு. மந்திரம் பல கடந்து தன் மனத்தின் முன் செல்வான். (சு : 233)
4. உச்சரிக்கும் மந்திரம். கடிக்கும் நல்ல ரவங்கேட்கும் மந் திரம். (சு : 465)
5. மந்திர சக்தி. மந்திர அம்பு. (யுத் 1313)
6. ஆலோசனை சபை. மன்னவன் தனக்கு நாயேன் மந்திரத் துள்ளேன். (சு : 520)
7. மறை மொழிகள். அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடும் ஆற்றலுடைய மறைமொழி. மந்திர நாமச் சொன்மதியா அரவு. (ஆ 1077)

மந்திரம் இயம்புதல் – மந்திரத்தை உச்சரித்தல். எய்து கொன்ற னனே நெடு மந்திரம் இயம்பி வைது கொன்றனனே. (யுத் : 1462)

மந்திரம் கருத்துட் கொள்ளல் - மந்திரத்தை மனத்தால் உருவேற்று தல். கள்ளரே காண்டி யென்னு மந்திரங் கருத்துட் கொண் டான். (யுத் : 721)

மந்திர மரபு - வேத மந்திர முறைமை. மணமுடித் தென்கையை மந்திர மரபில் தொட்ட கணவனை. (யுத் : 1624)

மந்திர மாந்தர் - அமைச்சர். வாய்மைசால் அறிவின் வாய்த்த மந்திர மாந்தர். (கி : 417)

மந்திரர் - ஆலோசனைக்குரியவர். தமுவத்தக்க மந்திரர் எவரும் வந்து மருங்குறப் படர்ந்தார். (யுத் : 2794)

மந்திர வம்பு - மந்திர அம்பு பார்க்க.

மந்திர விதியினர் - மந்திர விதிகளில் வல்லுநர். (யுத் : 4303)

மந்திர விருக்கை - ஆலோசனை மண்டபம். மாதிரங் கடந்த தோளான் மந்திர விருக்கை வந்த மோதரன் என்னும் நாமத் தொருவனை. (யுத் : 1583)

மந்திர வேள்வி - மந்திர விதிப்படி செய்யப்படும் வேள்வி- மந்திர வேள்வி போய் மடிந்ததாமென. (யுத் . 2955)

மந்திரியர் - மந்திரிமார்கள். மந்திரியர் தந்திரியர். (யுத் : 4147)

மம்மர் - மயக்கம். வரங் கொள இத்துணைமம்மர் அல்லல் எய்தி இரங்கிட வேண்டுவதில்லை. (அ : 194) [பா : பே] ஒன்றுந் தெரிகின்ற தில்லா மம்மர்ச் சிந்தைய னெனினும். (யுத் : 2672) (கி : 555)

மம்மருள்ளம் - மயக்கம் மிக்க மனம். ஒன்றுந் தெரியா மம்மருள்ளத் தரசன். (அ : 366)

மய் - மை. குற்றம். மய்யற நெறியினோக்கி மாமறை நெறியினின்ற மெய்யினைப் பொய்யென்றுனும். (யுத் : 423)

மயக்கப் பேது - மயக்குறுதலால் உண்டான வருத்தம். (அண்) மயக்க அதனாலுண்டான மாறுபாடு. (கலா) மயக்கமாகிய வேறு பாடு. (வை.மு) பெண்ணெனும் பேதைமை மயக்கப் பேதினால் உள்நிறை சோரும். (ஆ : 962)

மயக்கிலான் - உள்ளத் தெளிவோடுகூடிய விபீடணன். (யுத்:4064)

மயக்கின்மேல் மயக்கும் வைத்தாம் - இயல்பாகிய மதிமயக்கதின் மேலும் மிக்க மயக்கத்திற்குக் காரணமாகிய கள்ளிடத்தே மோகத் தையும் கொண்டுள்ளோம். அன்றியுந் திருக்கு நீங்கா மாயை யின் மயங்குகின்றும் மயக்கின்மேல் மயக்கும் வைத்தாம். (கி : 654)

மயக்கு - 1. மயக்கம். அறிவு மாறுபாடு. மருளொடு வந்த மயக்கோ மதி மற்று முண்டோ. (ஆ : 702)

2. அறிவை மயக்குகின்ற மதுபானம். மயக்கின்மேல் மயக்கும் வைத்தாம். (கி : 654)

3. மோகம். மயக்கின் மேல். (கி : 654)

4. களிப்பு. மயக்கின் மதந்தாழ் வேழத்துக் கிடுமின். (யுத்:220)

மயக்குதல் - 1. கெடுத்தல். நிகழவொட்டாது கெடுத்தல். வேதமும் வேள்வியும் மயக்கி. (யுத் : 1381)

2. மூர்ச்சையுறச் செய்தல். மதக் கரியை யுற்றரி நெரித் தென மயக்கி. (யுத் : 850)

மயங்கல் (மயங்குதல்) - 1. கலத்தல். வண்டொடு கெண்டைகள் மயங்க. (அ : 54; மயங்குவரால். (யுத் : 239)
2. கலங்குதல். மங்கை கொழுந்தி எனச் சொன்ன வாழி நண்பிணையுன்னி மயங்குவாள். (சு - 352)
3. அறிவு சோர்தல். மயங்கினன் வள்ளல் தம்பி. (யுத் : 2155)
4. திகைத்தல் மரணம் தோற்றம் என்று இவற்றிடை மயங்குப. (யுத் : 4026)

மயங்கிருள் – மயக்கத்தைத் தரும் இருள். மயங்கிருள் துரக்க வானம் கைவிளக் கெடுத்ததென்ன உதித்தது கடவுட்டிங்கள். (அ : 579) [பா : பே]

மயங்குபு – மயங்கி. மயங்குபுரிந்து நின்று மறுகுறும் உணர்வு. (பா : 582)

மயங்கு மாலை – மயக்கந்தரும் மாலைக் காலம். மயங்கு மாலைவரல் நோக்கி இதுவோ கூற்றின் வடிவென்றாள். (பா : 627) [பா:பே]

மயம் – அழகு. சொரூபம். பொன் மயமான நங்கை. (ஆ : 646)

மயர் – மயக்கம். மதக்களிப்பு. மயர் வறந்து மதமறவாதன. (யுத் : 3572)

மயர் சிந்தனை – மயங்கத்தக்க மனம். மயர் சிந்தனைக்குரிய பொருள். (கி : 49)

மயர்தல் – 1. பிரமித்தல். திகைத்தல். நெடுமந்திரமியம்பி வைது கொன்றனனே என வானவர் மயர்ந்தார். (யுத் : 1462)
2. மயக்க மடைதல். மனம் மயங்குதல். மாண்டறாராமென அன்னார் மயர்வுற்றார். (சு : 489) தளர்ந்து மயர்ந்தனள். (சு : 1078) மயரும். (யுத் : 149)

மயர்வறு மனத்து வீரர் – என்றும் மயக்கமில்லாத மனமுள்ள வீரர். (விபீடணன் முதலானவர்) மயர்வறு மனத்து வீரர் இமைப்பிலர் மயங்கி நின்றார். (யுத் : 4296)

மயர்வு – 1. மயக்கம். மயர்வற. (கி : 790) மயர்வுற்றார். (சு : 489) மயர்வுற்ற. (சு : 587) கன்று பிடியுறத் திங்குறு தாயைப் போலத் தளர்ந்து மயர்ந்தனள். (சு : 1078) (கி : 372)
2. மதமயக்கம். தம் மயர்வறந்து. (யுத் : 3572)

3. அறிவு மாருட்டம். அயனுடை அண்டத்தின் அப்புறத்தையும் மயர்வற நாடி. (கி : 206)

மயல் - 1. மயக்கம். இவ்வண்ணம் மயலுழந்து தளரு மேல்வை. (பா : 713)

2. அறியாமை. மயலுடைத் துலகமென்பார். (பா : 791)

3. மாயை. மாயா விலாசம். மயலாரும் யானு மறியேம். (யுத் : 2210)

மயன் - அசுரத்தச்சன் சிற்பமும் மயன் மனம் வருந்திச் செய்தது. (கி : 850) [பா : பே]

மயன் படைக்கலம் - மயன் அளித்த மாயாஸ்திரம். மயன் படைக் கலந் துரந்தனன் தயரதன் மகன்மேல். (யுத் : 3770)

மயன் பயந்த நெடுங்கட் பாவை. (யுத் : 3894)

மயன் மகள் - மண்டோதரி. அன்றி தென்றிடின் மயன் மகள் அத் தொழிலுறுதல். (யுத் : 3631) மாயநந்திய வாண் முகத் தொரு தனி மயன் மகள் மணிமாடம். (சு : 290) (சு : 978) (யுத்:3730)

மயன் மடந்தை - மண்டோதரி. மன்னவன் தேவி அம் மயன் மடந்தை. (சு : 378)

மயானத்திடை ஏகல் - சுடுகாட்டிற்குச் செல்லல். இறந்து படுதல். சுடு மயானத்திடை தன் துணை ஏகத் தோன்றல் துயர்க் கடலினேக. (அ : 1060)

மயானம் - நன் காடு. எரி யமைக்கும் மயானத்தை எய்துகின்ற காதலனை. (யுத் : 4148) சுடு மயானம். (அ : 1060)

மயிடம் - மகிஷம். எருமை. தென்புலக் கிழவனூர் மயிடமோ (கி : 180)

மயிடன்-அதிகாயன் அனுப்பிய தூதன். வாநீ மயிடன் ஒரு வல்விசையிற் போ. (யுத் : 1708)

மயிந்தன் - ஒரு வானர வீரன். மயிந்தனும் இளவல் தானும் (யுத் : 2011) மயிந்தனும் துமிந்தனும் என்னும் மாண்பினர். (யுத் : 348) (யுத் : 428

மயிர் - ரோமம். பம்பு செக்கரொக்கு மயிர் பக்கம் எரிய. (ஆ:13) மயிர்கள் புகைந்தார். (சு : 777)

மயிர்க்குந்தளம் - மயிர்ச்செறிவு. தோல் மயிர்க் குந்தளம் சிலிர்ப்ப. (யுத் : 687)

மயிர்ச்சுருள் - சுருட்டை மயிர். செஞ்சுடர்ச் செறிமயிர்ச் சுருள் செறிந்த செனியன். (ஆ : 7)

மயிர்சிலிர்த்தல் - மயிர்ப்புளகம் ஏறல். வீரனை நோக்கி அங்கம் மென் மயிர் சிலிர்ப்ப. (யுத் : 443)

மயிர்த்தலம் - மயிர். புறமயிர்த்தலம் பொடித்தன போன்றன. (கி : 486)

மயிர் நாலுதல் - உரோமம் தொங்குதல். மயிர்நாலும் உருவினன். (அ : 710)

மயிர்ப்பங்கி - மயிர். மயிர் பங்கி ஒரு பொருளன. பங்கி - ஆண் மயிர். கதழ்படுங் கனல் போன் மயிர்ப்பங்கியான். (யுத்:1285)

மயிர்ப்புறம் பூணல்-மயிர்க் கூச்சுத் தோன்றல். மயிர்க்கூச் செறிதல். வாணிலா நகைதோன்ற மயிர்ப்புறம் பூண மீதுயர் காதலிற் பொங்கினன். (அ : 799)

மயிர்ப்புறம் பொடித்தல் - மயிர்க் கால்களில் நிரம்புதல். மயிர்ப்புறந் தோறும் வந்து பொடித்தன மதனவாளி. (யுத் : 2786) மயிர்ப் புறம் பொடிக்கின்றனை. (சு : 309)

மயிர்ப்புறம் பொறியில் துள்ளல் – ரோமத் துவாரங்கள் அனற் பொறிகளை வெளியிடல். நெஞ்சம் புழுங்கினன் வடவை தீய மயிர்ப் புறம் பொறியிற்றுள்ள. (பா : 689)

மயிர் புளகுதித்தல் – மயிர் சிலிர்க்கப் பெறுதல். உதைக்குந் தோறும் மயிர் புளகுதிக்கின்றுரை. (சு : 205)

மயிர் புளகுறுதல் – மயிர் சிலிர்ப்பு உண்டாதல். மயிர் புளகுறு கின்றுரை. (சு : 205) [பா : பே]

மயிர் வினைக் கருவி – மயிர்களையுங் கருவி. வள்ளை கத்தரிகை வாம மயிர்வினைக் கருவியென்னப் பிள்ளைகள் உரைத்த ஒப்பை. (கி : 796)

மயிர்வினை முற்றுதல் – மயிர் கழிக்குஞ் செயலை முடித்தல். வம் பலர் சடையை மாற்றி மயிர்வினை முற்றி. (யுத் : 4279)

மயிரின் கால் – மயிர்க்கால். மயிரின் கால்தொறும் வார் கணை மாரி புக்கு. (யுத் : 3837)

மயிரொழுக்கு – மயிரின் ஒழுங்கு. மயிர் ஒழுக்கு என்று ஒன்றுண்டால் வல்லி சேர் வயிற்றின். (கி : 784)

மயில் – 1. மயில் என்னும் பறவை. காட்டின மயில்கள். (பா:906) 2. (ஆகு) பெண். உலகமும் உயிரும் பற்றறக் கட்ட போதன்றி மயிலைக் காண்குமோ. (கி : 537)

மயில் அகவுதல் – மயில்கள் ஆடுதல். அகவும் இளமயில்கள் உயிர்கள் அலசியன அனையர். (அ : 544)

மயில் தொடர் இயலியாய் – மயிலின் சாயலையொத்த சாயலுள்ள ஓர் அழகிய மங்கை வடிவங் கொண்டு. குயில் தொடர்குதலை ஓர் கொவ்வைச் செவ்விவாய் மயில் தொடர் இயலியாய் வருதல் நன்றெனா. (ஆ : 253)

மயில் நடம் பயிலல் – மயில் போன்ற நடனத்தைப் பழகுதல். பங்கய முகத்தினார்கள் மயில்நடம் பயில மாதோ. (யுத் : 4325)

மயிலடித் தொழுக்கு - மயிலின் காலிலுள்ள விரலின் செலவு. மயிலடித் தொழுக்கின் அனைய மாமதத்த மாதிரக் காவல் மால் யானை. (சு : 415)

மயிலியல் - மயில்போன்ற சாயலையுடைய சீதாபிராட்டி. மயிலியல் பிரிந்தபின் மான நோயினால் அயில்விலன் ஒரு பொருள். (ஆ : 1132)

மயிலியன் மடமான் - மயிலின் சாயலைப் பெற்றுள்ள இளமான் போன்றவள். மன்றலின் மலிகோதை மயிலியன் மடமானே. (அ : 692)

மயிலின் குழாம்-மயிலின் கூட்டம். மற்றெழுந்த மாழையொண்கண் தேவியரும் மயிலின் குழாத்தின் வந்திரைத்தார். (அ : 600)

மயிலுடைச் சாயலாள் - மயிலின் சாயல் போன்ற சாயலையுடைய சீதை. மயிலுடைச் சாயலாளை வஞ்சியா முன்னம். (ஆ : 644)

மயிலூர் கந்தன் - மயிலை வாகனமாகச் செலுத்துகின்ற முருகன். மயிலூர் கந்தனையனைவர் கலைதெரி கழகம். (பா : 79)

மயிலெனுஞ் சாயலார் - மயில் போன்ற சாயலையுடையவர். மாழையுண்கண் மயிலெனுஞ் சாயலார். (அ : 826)

மயிற்குலம் - மயிற்கூட்டங்கள். இரியல் போயின மயிற் பெருங் குலமென இரிந்தார். (யுத் : 845)

மயிற்குல மனைய நங்கை - குலம் மயில் அனைய நங்கை. சிறந்த மயில் போலும் சாயலையுடைய பெண்டிருள் உயர்ந்தவளான கோசலை. (அ : 592)

மயிற்பீலி - மயிற் றேகை ஆய்மயிற் பீலி யார்த்த முகிழுடை முரண் மாத்தண்டு. (அ : 1050)

மயிற் றழைப் பீலி - மயில் தோகையாகிய பீலி. (தழை – இறகு. பீலி - கலாபம்). மணியும் பொன்னும் மயிற்றழைப் பீலியும். (பா : 18)

மயின் முறைக்குலம் – மயிலின் முறைமையைத் தன்பாற் கொண்ட குலம். மயிலின் முதற்பிறந்த குஞ்சுக்கே பொன்னிறப் பீலி முளைக்கும்; ஏனையவற்றிற்கு இல்லையாகும். அதுபோல மூத்த மகனுக்கே அரசுரிமை உண்டு; ஏனையோர்க்கு இல்லையாகும். மயின் முறைக் குலத்துரிமையை மனுமுதன் மரபைச் செயிருறப் புலைச் சிந்தையால் என் சொனாய் தீயோய். (அ : 161)

மயின்டம் – மயில் நடம் பார்க்க.

மயேந்திரம் – ஒருமலை. மயேந்திர மா நெடுவரையுங் கடலுங் காண்டிர். (கி : 774) மயேந்திரக் குன்று. (கி : 945) [பா : பே] (கி : 945)

மர்க்கடம் – குரங்கு. மார்க்கடம் என்பதன் விகாரம். (கலா) மாசறுதானை மர்க்கட வெள்ளம். (யுத் . 2815)

மர்க்கட வெள்ளம் – வெள்ளக் கணக்காகவுள்ள மர்க்கடங்கள். (யுத் : 2815)

மரக்கடல் – மரக்கலங்களோடு கூடிய கடல். காமரக் கடல் பூக் கடல் கண்டவே. (சு : 713)

மரக்கண் - மரப்பாவையின் கண். மரத்தினாகிய கண், மரக்கண் வன் கள்வனேன் வஞ்சனேன். (யுத் : 2733)

மரக்கலம் – கப்பல். மரக்கல முதலவும் உய்ந்து வாழ்ந்தன. (யுத் : 2757) (யுத் : 4091)

மரகதக்கிரியனுன் – மரகதமலை போன்ற இராமன். (கி : 95)

மரகதச் சயிலம் – மரகதமலை. மரகதச் சயிலம் செந்தாமரை மலர்க்காடு பூத்து. (யுத் : 4314)

மரகதச் சிகரம் - மரகத மலைச்சிகரம். சேவகன் மரகதச் சிகரத்து இரண்டு தோளினும் இரண்டு புக்கழுந்திட எய்தான். (யுத் : 1203)

மரகதச் சயிலம் - மரகத மலை. (யுத் : 4314)

மரகதத்தலம்-மரகதத் தலம். மாசடை பரந்தமான மரகதத் தலத்து வைத்த காசடை சமைந்த மாடம். (யுத் : 790)

மரகதத்தின் மலை - மரகத மலை போன்ற இராமன். வன்றிண்கைச் சிலை நெடுந்தோள் மரகதத்தின் மலை வந்தான். (ஆ : 338)

மரகதப் பாறை - மரகதப் பாறை. மஞ்சளாவிய மாணிக்கப் பாறையின் மறைவ செஞ்செவே நெடு மரகதப் பாறையில் தெரிவ. (அ : 756)

மரகதப் பெருங் குன்று - மரகத மலை யென்னும் பெரிய மலை. பெருந்ததிக் கருந் தேன் மாறும் மரகதப் பெருங்குன்றெய்தி. (கி : 923)

மரகதப் பொருப்பு - மரகத மலை. எஞ்சின் மரகதப் பொருப்பை இறைஞ்சி அதன் புறஞ்சார ஏகிர் மாதோ. (கி : 768)

மரகதம் - 1. பச்சை. மையோ மரகதமோ மறிகடலோ. (அ : 618) பொற்றலை மரகதப்பூகம். (ஆ : 598)

2. பச்சைரத்தினம். வாழை மரகதம் வயிரம் தேமா. (ஆ:655)

மரகத மலை - 1. மரகத மயமான மலை. மரகத மலையென வளர்ந்த தோளினன். (அ : 885)

2. ஒரு மலையின் பெயர். மரகதப் பொருப்பை இறைஞ்சி. (கி : 768) (கி : 923)

மரங்குடைந்த தும்பி - பட்டுப் போன மரத்தைக்குடைந்து துவாரஞ் செய்த வண்டு. மரங்குடைந்த தும்பிபோல் அனங்கபாணம் வந்து வந்துரங் குடைந்து. (ஆ : 652)

மரணந் தோற்றம் - இறத்தலும் மீளப் பிறத்தலும். இவை கடந்தறிவரிதாக மரணந் தோற்ற மென்றிவற்றிடை மயங்குப. (யுத் : 4026)

மரணம் - இறப்பு. மரணமென்ருெரு பொருள் மாற்றும் வன்மையோய். (யுத் : 308)

மரண மெய்தல் - மரணத்தையடைதல். புலையுறு மரண மெய்தல் எனக்கிது புகழதேயால். (யுத் : 1374)

மரந்தா னென்னும் நெஞ்சினள் - மரம் போன்று உருகாத நெஞ்சுடையவள்; கைகேசி மரந்தா னென்னும் நெஞ்சினள் நாணாள் வசைபாராள். (அ : 219)

மர நாரின் உடை - மர நாரினாலாகிய உடை. உரிமானின் சருமனன் நல் மர நாரின் உடையினன். (அ : 710)

மரபில் கொட்பு - முறைமைக்கு மாறாகிய கலக்கம். மயக்கும் மரபில் கொட்பும் தஞ்சமென்றுரை நீக்குந்தன்மையும் களிப்பும். (கி : 659)

மரபிற் சுற்றுதல் - முறையாகச் சுற்றியமர்தல். அறிஞர் யாவரும் சுந்தரக் குரிசிலை மரபிற் சுற்றினார். (அ : 935)

மரபின் வாழ்வு - அரச மரபின்படி மேற்கொள்ளும் அரச வாழ்வு. மரபின் வாழ்வினை...... வெஃகலான். (அ : 930)

மரபினோர் - முன்னோரான அரசர். நுங்கள் மரபினோர் புகழ்களெல்லாம் உன் புகழாக்கிக் கொண்டாய். (அ : 1028)

மரபு - 1. முறை. முறைமையாக. சம்பிரதாயம். விதி. இலக்கண மரபிற்கேற்ற எழுவகை நரம்பின் நல் யாழ். (சு : 200) மரபின் வாழ்வு. (அ : 930)

2. வமிசம். குலம். பிறந்த குலப் பெருமை. குடி வரவாகிய நெறி முறை. வாய்மையும் மரபுங் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல் தூயவன். (கி : 313)

3. பழைய சங்கேதம். மன்னர் மன்னவன் செம்மல் மரபினாற் பின்னுறத் தன் பெருங்கரம் நீட்டினான். (ஆ : 544)

மரபுக்குமோர் தொன் மறு - குலத்திற்கும் தொன்மையுடையதாய்த் தொடரும் ஒரு பெரிய களங்கம். சூரியன் மரபிற்கு மோர் தொன்மறு ஆரியன் பிறந் தாக்கினையாமரோ. (கி : 321)

மரபுளி - முறைமைப்படி. செய்யும் கிரமப்படி. முறையில். (உளி - மூன்றனுருபு) மாலைவாய் நியமஞ் செய்து மரபுளி இயற்றி. (அ : 665) வரிசையின் வழாமை நோக்கி மரபுளி வகையின் ஏற்ற. (அ : 1040)

மரம் - 1. மரக்கலம். மரக்கடல் பூக்கடல் கண்டவே. (சு : 731)

2. இயமரம் என்னும் போர்ப்பறை. (சு : 940)
3. கோட்டையைத் தகர்க்கவல்ல ஒரு பெருமரக் கருவி. (சு : 940)
4. மரத்துண்டு. மரங் கிடந்தன மரக்குவை கிடந்தன. (யுத் : 1537)
5. மரங்கள். மலை யெடுத்து மரங்கள் பறித்து. (பா : 20)

மரவம் - 1: குங்கும மரம். அகிலும் ஆரமும் மாரவங் கோங்கமே. (பா : 955) மாரவம் என நீட்டல் விகாரம் பெற்றது.
2. தேர். (பழையவுரை. கலா) மரவமும் சிலையொடு மலையும். (யுத் : 1772)

மரவற்கலை - மரவுரி. மாறு மரவற்கலையும் மானின் தோலும். (அ : 361)

மரன் - மரங்கள். மரன் படர் வனம். (யுத் : 66) (யுத் : 1833)

மராடர் - மராட நாட்டரச பரிவாரம். சோழர் மராடரே. (பா:1194)

மரா மரக்குவடு - மராமரத்தின் திரண்ட அடிமரம். காரொடுந் தொடர் மராமரக் குவட்டை வேரொடுங் கொடு கிரியென நடந்ததோர் வேழம். (பா : 899)

மரா மரம் - ஒருவகை மரம். மரா மரம் ஏழ் தொளை எய்த எய்த வற் கெய்திய மாக்கதை. (பா : 5)

மரா மரம் ஏழ் தொளை எய்த எய்தவன் - ஏழு மரா மரங்களும் ஒருங்கே தொளைபடும்படி அம்பு எய்த இராமபிரான். (பா : 5)

மரியுண்ட வுடற் பொறை - மரித்த உடற் பொறை மரியுண்ட உடற் பொறை மானின வால். (யுத் : 2928)

மரு - 1. நறு மணம். மருவாருந் துழாயலங்கல். (ஆ : 58) மருவிரி துளப மோலி. (யுத் : 2705)
2. இயற்கை மணம். மரு வொன்று கூந்தலாள். (ஆ : 283)
3. நீரில்லாத பிரதேசம். மலையு மறிகடலும் வனமு மரு நிலமும். (யுத் : 3415)

மருகர் - மருமக்கள். இகல்வேல் உன் மருகர் உலந்தார். (ஆ:734)

மருகன் - மருமகன். வானவரைப் பணிகொண்ட மருகாவோ மருகாவோ. (ஆ : 335)

மருகாந்தாரம் - அவுணர் வாழ்ந்த ஒரு தீவு. மருகாந்தாரம் என்ப தோர் திவின் வாழ்வார். (யுத் : 612)

மருகி - மருமகள். நின் மருகிக்கும் நாசியிழக்கும் நிலை நேர்ந்தார். (ஆ : 733) மருகியை ஏத்தினர். (அ : 530) (ஆ : 224)

மருங்கற . 1. வேரற. இருந்த இடம் தெரியாதபடி. மற மென நின்ற மூன்றும் மருங்கற மாற்றி. (யுத் : 1352)
2. சுவடு கெட. ஐந் தொடாகிய முப்பகை மருங்கற அகற்றி' (அ : 64)

மருங்கிலாதவள்-இடை இல்லாதவள். ஒன்றும் மருங்கிலாதவளோடு மன்றே நீநெடுங் காலம் வாழ்ந்த தென்பாய்.

மருங்கிலாள் - சீதை. மாலை வந்திறுத்த பின் மருங்கிலாளொடு...... சாலைவந் தெய்தினன். (அ : 779)

மருங்கு - 1. இடம். மருங்குடை வினையமும். (யுத் : 480)
2. பக்கம். சமீபம். பொய்ம் மருங்கினில்லாதாய். (யுத்:2684)
3. இடை. மருங்கிலா நங்கை. (பா : 601)
4. வடிவு. (ஆகு) வடிவின் ஒளி. பெய்கலங்களின் இலங்கொளி மருங்கொடு பிறழ. (கி : 19)

மருங்குல் - 1. உடம்பு. மருங்குல் போற் கண்களும் புருவமும் வலந்துடித்தன. (சு : 299)
2. இடை. வாங்கிய மருங்குலை வருத்துங் கொங்கையர். (அ : 489) நூலொக்கும் மருங்குலாள். (கி : 789)

மருங்குல் போல் நுடங்குதல் - இடையைப் போலத் தளர்தல். மன மும் மெய்யுந்தன் நூலுறு மருங்குல் போல் நுடங்குவாள். (பா : 604)

மருங்குலின் வெளிகளூடே நோக்குதல் - நுண்ணிய இடைகளுக்கு இடையிலுள்ள வெளிகளின் வழியாகப் பார்த்தல். மருங்குலின் வெளிகளூடே வள்ளலை நோக்குகின்றாள். (பா : 1164)

மருட்கை - வியப்பு. மருளுறு காதலின் மயங்கி. (கி : 483)

மருட்டுதல் - மருளச் செய்தல். மருட்டி யெழும் ஒருதலைய புயங்க மெலாம். (ஆ : 204)

மருண்ட புன்மை–அறிவு மயங்கிய இழிகுணம். தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினுமவர் தம் மருண்ட புன்மையை மாற்றுவர் எனுமிது வழக்கே. (பா : 905) [பா : பே]

மருண்ட விழி - மருண்ட பார்வை. மருண்ட விழி இலவச் செவ் வாய்ப் பூங் கொடியீர். (பா : 218)

மருண்டார் - திகைப்புற்ருர். மருண்டார் வானவர் கோனை வாழ்த் தினர். (கி : 997)

மருண்மயங்கு மடந்தையர்-ஆசையால் மயங்குகின்ற மாதர். மருண் மயங்கு மடந்தையர் மாட்டொரு பொருணயந்திலன். (பா:1182)

மருத்தன் - 1. இராவணன் தூதருள் ஒருவன். மனகதி வாயுவேகன் மருத்தன் மா மேகன் என்றிவ் வினையறி தொழிலர். (யுத்:1225)
2. ஓர் அரக்கன். சனகனுக உருமாற்றப்பட்டவன். மருத்தனை உருவமாற்றி. (யுத் : 1583) (யுத் : 262)
3. ஓர் போர் வீரன். (யுத் : 1800)

மருத்தின் காதலன் - வாயு தேவனின் அன்பிற்குரிய மகனுன அனுமன். மருத்தின் காதலன் மார்பிடை அம்பெலாம் வாங்கி. (யுத் : 3532)

மருத்து - 1. சப்த மருத்துக்கள். மருத்தெனும் நாமமும் நவின்ருன். (பா : 506)
2. வாயு. மருத்து மகன் இப்படி இடந்துற நிமிர்ந்தான்.(கி:886)

மருத்து மகன் - அனுமன். (கி : 886)

மருத்துவன் - வைத்தியன். எல்லையின் மருத்துவன் இயல்பின் எண்ணுவார். (அ : 10)

மருதம் - மருதநிலம். மருதமாகிய மன்னன். வண்டுகள் இனிது பாட மருதம் வீற்றிருக்கு மாதோ. (பா : 35) முல்லையைக் குறிஞ்சியாக்கி மருதத்தை முல்லையாக்கி. (பா : 28)

மருத வேலி - மருத நிலம். இன்ன மாறுமாருகித் தம்மின் மயங் குமா மருத வேலி. (பா : 34)

மருத வைப்பு - மருதமாகிய வளமிக்க நிலம். கேடிலா வளப்பரு மருத வைப் பழித்து மாற்றினள். (பா : 384) மருதவைப்பின் வளங் கெழுநாடொரீஇ. (அ : 626)

மருது - மருத மரம். குருந்தொடு மருதமுந்தி. (பா : 26)(பா : 900)

மருந்தரு நெடுங்கடு - மாற்று மருந்தில்லாத பெரிய நஞ்சு. (கி:950)

மருந்தனுன் - தேவாமிர்தம் போன்றவன். வசிட்டன். பிழைப்பில் செய் தவ மருந்தனுன் வருகென வசிட்ட னெய்தினன். (அ:99) [பா : பே]

மருந்தனைய தங்கை - அமிர்தத்தை யொத்த அரிய தங்கை. அமிர்து போல் அரியளாகிய தங்கை. மருந்தனைய தங்கை மணி நாசி. (ஆ : 617)

மருந்தனைய தம்பி - தேவாமிர்தத்தைப் போன்று இனிய தம்பி. மருந்தனைய தம்பியொடும் வன்றுணைவரோடும். (யுத் : 704)

மருந்தினுமினிய கேள்வி - தேவாமிர்தத்தைக் காட்டிலும் இனிமை யான நற்கேள்வி மருந்தினுமினிய கேள்வி செவியுற மாந்து வாரும். (பா : 46)

மருந்தினுமினியனவருக்கை – தேவாமிருதத்தை விட இன்சுவை யுடையனவான பலா. மருந்தினுமினியன வருக்கை வாழை மாத் தருங் கனிபலவொடு. (பா : 222)

மருந்து - 1. அமுது. தேவாமிர்தம். மருந்தனைய தங்கை. (ஆ : 617) மங்கையர்க்கினியதோர் மருந்து மாயவள். (பா : 596)

2 மூலிகைவகை. என்றுமோர் துளிவரக்காணு நன்மருந்து போல். (சு : 332)

3. பரிகாரம். மருந்துமுண்டு கொல் யான்கொண்ட நோய்க் கென்று மயங்கும். (சு : 344)

4. மிருத சஞ்சீவினி. வீயுமுயிர் மீளும் மருந்துமெனலாகியது வாழி மணியாழி. (சு : 558)

5. மாற்றுமருந்து மருந்து அரு நெடுங்கடு. (கி : 950)

மருந்து மாருதி தந்த அப்பொருப்பு - அனுமன் கொண்டுவந்து கொடுத்த சிறப்புற்ற சஞ்சீவி மலை. மந்தரகிரியென மருந்து மாருதி தந்த அப்பொருப்பென. (யுத் : 3725)

மருந்து வைகுங் கார்வரை – மருந்து தங்கியிருக்கப் பெற்ற கரிய மலை. மருந்து வைகுங் கார்வரையைக் காணுதி. (யுத் :2681)

மருநிலம் – மருப்பூமி. நீரில்லாத பிரதேசம். வனமு மருநிலமும். (யுத் : 3415)

மருப்பிணை - இரண்டு கொம்பு. நிமிர்ந்தெழு மருப்பிணையினுன். (கி : 181)

மருப்பு - 1. கொம்பு. துருவை மென்பிணை ஈன்ற துளக்கிலா வரி மருப்பிணை வன்றலையேறு. (பா : 61)
2. தந்தம். மருப்பிரு மதகளிற்றமரர் மன்னன். (ஆ : 411)

மருப்புடைப் பொருப்பு - யானை. மருப்புடைப் பொருப்பேர் மாதிரக் களிறு. (சு : 408)

மருப்பொடிய - கொம்புகள் ஒடிதலால் (ஒடியும்படி). பயிலெயிற் றிரட்டைப் பணை மருப்பொடியப் படியினிற் பரிபவஞ் சுமந்த... மாதிரக் காவன் மால்யானை. (சு : 415) திசையானை மருப் பொடியப் பொருப்பிடியத் தோள் நிமிர்த்த வலியோனே. (ஆ : 329)

மருமக்கள் - மருகியர். தன் மக்களும் மருமக்களும் வயின் மொய்த்திட. (பா : 1351)

மருமதாரை - மருமதானங்கள். உயிர்த் தானங்கள். (தாரை - தாரா : ஒழுங்கு) மரும தாரையின் எரியுண்ட மகரங்கள். (யுத் : 555)

மருமம் - 1. நெஞ்சு. மார்பு. மருமத்தின் எறிவேல் பாய்ந்த புண். (பா : 238)
2. உயிர் நிலை. மருமத்துத் தன்னையூன்றும் மறக்கொடும் பாவம். (அ : 580) மற்றும் வீரர் தம் மருமத்தில் ஆயிலம்பு மடுப்பக் கொற்ற விரமும் ஆண்டொழிற் செய்கையுங் குறைந் தார். (யுத் : 1162) (யுத் : 1808)
3. இரகசியத்தானம். வலிபடர் மருமமும் அழிபட நுழைவன. (யுத் : 1808)

மருமான் - வழித் தோன்றல். புலத்தியன் மருமான். (யுத் : 1446) சூரியன் மருமான். (யுத் : 4109)

மருவல் - 1. அருகிற் செல்லுதல். மயில் தொடர் இயலியாய் மருவல் நன்றெனு. (ஆ : 253)
2. இருத்தல். மாருதி எவ்வழி மருவினுன் என. (கி : 698)

மருவலர் - பகைவர். மருவலர்க் கசனியன்ன வாலி. (பா : 206)

மருவார் - பகைவர். மருவார் வெஞ்சரம் எணையும் வவ்வுமால். (கி : 399)

மருவினர் - பழகினவர். மருவினர்க்கு மயக்க முண்டாங் கொலோ, (கி : 932)

மருவுதல் - 1. நெருங்கிப் பழகுதல். கலத்தல். மருவினிய குணத்தவர். (ஆ : 208) (கி : 932)

2. அணுகுதல். அருகிற் செல்லுதல். வண்டற் றெண்டிரை யாற்றுநீர் சில வென்று மருவான். (யுத் : 134) மருவநின்ற முளரியங் கண்ணன். (யுத் : 3873)

3. மேற் கொள்ளுதல். மள்கலில் பெருங் கொடை மருவி. (கி : 547)

4. பொருந்துதல். மன்னுக கதிரோன் மைந்தன் தன்னொடு மருவி என்முன். (யுத் : 4339)

மரு வொன்று கூந்தலாள் - நறுமணம் பொருந்திய கூந்தலையுடைய மனையாள். மரு வொன்று கூந்தலாளை வனத்திவன் கொண்டு வாரான். (ஆ : 283)

மருள் - 1. மயக்கம். மருள் தரு வனத்தின் மண்ணின் வர்னவராகி வந்தார். (பா : 208)

2. அறிவுத் தெளிவில்லாமல் மருட்சியுற்ற தன்மை. தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும் அவர்தம் மருண்ட தன்மையை மாற்றுவர். (பா : 905)

3. மோகம். மருளொடு வந்த மயக்கோ. (ஆ : 702)

4. அச்சம். மருள் திகழும் ஒருதலைய புயங்கமெலாம் சுதையென்னு மாது தந்தாள். (ஆ : 204)

5. விபரீதச் செயல். விபரீத ஞானம். மடமங்கை ஏவ நிலைதோ வந்த மருளே. (ஆ : 963)

6. மாயை (வை.மு) மருள்தருங் களி வஞ்சனை வளையெயிற்றரக்கர். (ஆ : 455)

7. ஆசை. மருண் மயங்கு மடந்தையர். (பா : 1188)

8. காம மயக்கம். மருளுறு மனத்தினன். (யுத் . 433)

மருள்கொளல் - திகைத்தல். இயற்றினன் கணத்தினின் என்பரால் தேவரும் மருள் கொளத் தெய்வத் தச்சனே. (யுத் : 13)

மருள் தரும் வனம் - காண்போர்க்கு அச்சத்தினுல் மயக்கத்தைத் தரும்படியான காடு. மருடரு வனத்தின் மண்ணின் வானர ராகி வந்தார். (பா : 208)

மருள் முறை - மருளும் நிலைமை. இமைப்பிலோரும் மருள் முறை எய்திற்றென்பர். (யுத் : 2414)

மருள - வியக்க. வானவர் மருளச் சென்ருன்' (சு : 33)

மருளினை - மருள் இனை. மருளின் நை. (உ.வி) மயங்கி வருந்துதற் கிடமான. மருளினை வரவின் வந்த. (யுத் : 2220) [பா:பே]

மருளுதல் - 1. மருட்சியுறுதல். மயிற்குலம் மருள வந்தார். (யுத் : 2774)

2. அஞ்சுதல். மருளும் மென் பொதும்பரும். (யுத் : 333)

மருளுறு காதல் - வியப்படையத் தக்க பெருங் காதல். மருளுறு காதலின் மயங்கி. (கி : 483)

மருளுறு மனத்தினுன் - காம மயக்கம் பொருந்திய மனத்தையுடைய இராவணன். (யுத் : 433)

மரை - 1. மான். கழுதை மரை. (ஆ : 202)

2. தாமரை. முதற் குறை. வாசங் கலந்த மரை நாளநூலின் வகை யென்ப தென்னை. (யுத் : 2215)

மரைமலர்க் கடவுள் - பிரமதேவன்.

மல் - 1. வலிமை. மல் லென்னும் திரள் புயம். (பா : 732)

2. படையின்றி உடல் கொண்டு செய்யும் மற்போர். வானிடை நின்றுயர் மல்லின் மலைந்தார். (சு : 902)

3. மற் போர்த் தொழில். மல்வலான். (பா : 815) மல்லினுற் செய்த தோளவன். (யுத் : 1454)

4. மற் போர்ப் பயிற்சி. மற்காணுந் திருநெடுந் தோள். (அ:1018)

5. மல்லர். மற்பக மலர்ந்த திண்டோள் வானவர். (பா : 949)

மல் இட்ட - வலிமைமிக்க. ஈசனேடும் மல்லிட்ட தோளால் எடுத் தான். (ஆ : 927)

மல்கிய கேகயன் - வளம் மிக்க கேகய நாட்டு மன்னன். மல்கிய கேகயன் மடந்தை வாசகம். (அ : 974)

மல்குதல் - நிறைதல். மிகுதல். மல்கு கேள்வி யவ்வள்ளல். (அ : 102)

மல்குலாவுதல் - வலிமை ஒன்றுதல். மற்குலாவு வயப் புயத்தங்க தன். (யுத் : 1042)

மல்லர் - மற் போர்புரிபவர். ஏறு கொண்டெழு மல்லர் இடிப்பிணை மாறு கொண்டன வந்திகர் ஏத்தரோ. (அ : 809)

மல்லல் - வளப்பம். மல்லற் கிரியின் தலை வந்தனன். (கி : 265) மல்லன் மா ஞாலம். (கி : 822)

மல்லல் ஏறு - வளப்பம் பொருந்திய சிங்க ஏறு. (சு : 547)

மல்லிகை - மல்லிகை மலர். மன்றல் வாய் மல்லிகை எயிறு வண்டினங் கன்றிய நிறத்தது. (யுத் : 469)

மல்லிகைக் கானம் – மல்லிகை மலர்களைக் கொண்ட வனம். மல்லிகைக் கானமும் வானமொத்ததே. (யுத் : 464)

மல்லிகைத் தாமம் - மல்லிகை மாலை. உணியும்மது மல்லிகைத் தாமம் வெறுத்து. (பா : 972)

மல்லிகைத்தென்றல் – மல்லிகை மணங்கமழுந் தென்றல். அனங்கன் வாளிபோல மல்லிகைத் தென்றல் வந்தெதிர்ந்த போது. (ஆ : 653)

மல்லின் வல்லர் – மற்போரில் வல்ல மல்லர். மல்லின் வல்லர் சுரிகையின் வல்லவர். (அ . 805)

மல்லின் மாமாரியன்ன தோள் – மற்போர் பயிற்சியுடையதும் கரிய மேகம்போன்ற நிறத்தினையுடையதுமான தோள். (யுத்:3113)

மல்லினுற் செய்த தோள் – மற்போர் புரிதற்கென்றே வருவிக்கப் பட்ட தோள். மல்லினுற் செய்த தோளினன். (யுத் : 1454)

மல்லினுமுயர் தோளாய் - மற்றொழிலினும் உயர்ந்த தோள்களை யுடையவனே. உன்பால் மற்போர்ப் பயிற்சி எவ்வளவு உயர்வுடையதாய் அமைந்ததோ அதனினும் உயர்ந்த தோள்களையுடையவனே. மல்லினும் உயர் தோளாய் மலரடி பிரியேனுல். (அ : 683)

மல்லுயர் தோளினன் – மற்போர்ப் பயிற்சிபெற்ற உயர்ந்த தோள்களையுடையவன்; குகன். வன்பணை வில்லினன் மல்லுயர் தோளினன் வாள்வீரற்கன்பனு நின்றனன். (அ . 1016)

மல்லுயர் தோளினன் - வலிமையாலுயர்ந்த தோள்களையுடையவன். (தசரதன்) ஆளுடை மல்லுயர் தோளினன் வலியனே என்ருன். (அ : 1121)

மல்லொன்று தோள் - மற்போருக்குப் பொருந்திய தோள். பலம் பொருந்திய தோள். கல்லன்ரே நீராடுங் காலத்துன் கால் தேய்க்கும் மல்லொன்று தோளாய் வடமேரு. (யுத் : 1662)

மல்வலான் - மற்போரில் வலிய சனகராசன். மல்வலான் அவ்வுரை பகர. (பா : 815)

மலக்கம் - 1. மனக் கலக்கம். மலக்கமுண் டுழலுந் தேவர்மலர் மழை தூவ. (யுத் : 4215)

2. மனத்துன்பம். மலக்கமுண்டாகின் ஆக வாகை என் வயத்த தென்ருன். (யுத் : 3596)

மலங்கி - மனங் கலங்கி. மலங்கி வையகம் வருந்தி வைக. (அ : 1178)

மலங்குதல் - 1. கலங்குதல். நாவாய் போக்கி ஞென்ருென்று தாக்க மலங்கினர். (அ : 1047)

2. வருந்துதல். மலங்குழை யென வருந்திச் சோர்தர. (பா : 608)

மலங்கெரி - கலங்குதற்குக் காரணமான தீ. ஒரு குரங்கு வந் திலங்கையை மலங் கெரியூட்டி. (யுத் : 3251)

மலடி - பிள்ளை பெருதவள். பிள்ளை யில்லாதவள். குழந்தையை உயிர்த்த மலடி. (சு : 554)

மலயக் குன்று - மலயம் என்னும் குன்று. வீழ்மலயக் குன்றிற் குலமா முழையில் குடிவாழ் தென்றற் புலியே. (பா : 1251)

மலயம் - பொதிய மலை. மலயமென்பது பொதிய மாமலை. (யுத்:322) வானினெடு மாமலையம் நேரா. (ஆ : 157)

மலர் - 1. பூ. தாமரை மலர். மலர்ச் சரண். (கி : 874) [பா : பே] மலர்க்கண் வந்தாய். (யுத் : 4092)

2. பதுமம் என்னும் எண். ஆயிர மலருடைய ஆழிமாப்படை. (யுத் : 2949)

மலர்க்கடி - பல பூக்களின் நன்மணம். மலர்க்கடி நாறுவ மகளிர் கூந்தலே. (பா : 150)

மலர்க்கண் - தாமரை மலர் போன்ற கண்கள். மலர்க் கண்மிசை ஒற்றினள். (சு : 555)

மலர்க்கரம் - தாமரை மலர் போன்ற கை. வள்ளலும் மலர்க்கரம் விதிர்ப்புற்றுன். (யுத் : 1571) (யுத் : 2632)

மலர்க்கழல் - தாமரை மலர் போன்ற பாதங்கள். மானவன் மலர்க் கழலில் வைத்துமில னென்ருல். (சு : 692)

மலர்க்குப்பை - மலர்க்குவியல். கொய்யுறுங் குல மலர்க்குப்பை நின்றிழிந்தாள். (அ : 182)

மலர்குவை - மலர்க்குவியல். கொய்யுறுங் குல மாமலர்க்குவை நின்றெழுந்தனர். (அ : 241)

மலர்க்கை - தாமரை மலர் போன்ற கை. எழுந்தினி திருத்தி என்னு மலர்க் கையால் இருக்கை ஈந்தான். (யுத் : 447) (யுத் : 3631)

மலர்க் கோயில்கள் - தாமரை மலர்க் கோயில்கள். அறங் கொள் நாண் மலர்க் கோயில்கள் இதழ்க் கதவடைப்ப. (பா : 480)

மலர்ச்ரண் - மலர் போலும் திருவடிகள். மாருதியும் மற்றவள் மலர்ச் சரண் வணங்கா. (கி : 874) (யுத் . 4076)

மலர்ச் சேக்கை - மல்ர்ப்பள்ளி. அணை மலர்ச் சேக்கையுள் ஆடல் தீர்ந்தனர். (ஆ : 680)

மலர் சிந்துதல் - மலர் தூவி அருச்சித்தல். நந்தா நாண்மலர் சிந்தி வந்தாரோ எதிர் வானுளோ ரெலாம். (கி : 400)

மலர்சூழ்கழி - பூக்கள் சுற்றிலுமிருக்கப் பெற்ற கழிக்கரையிடங்கள். கல்லார் மலர் சூழ் கழி வார் பொழிலோடு எல்லா முளவாயினும். (பா : 1262) [பா : பே]

மலர்த் தவிசினுன் - தாமரை மலரை இருப்பிடமாகக் கொண்ட பிரம தேவன். மின்னேயேய் உழையினுலும் விரைமலர்த் தவிசினுனும். (யுத் : 4117)

மலர்த்தவிசு - 1. தாமரை மலர் ஆசனம், இருப்பிடம். தாமரை மலர்த்தவிசிகந்து தகையன்னம். (கி : 524)
2. தாமரை மலர்ப் படுக்கை தளத்தகு மலர்த் தவிசிகந்து நகு சந்தின் தொளைத் துயிலுவந்து துயில்வுற்ற குளிர் தும்பி. (கி : 523)

மலர்த் தவிசோன் - தாமரையாகிய பீடத்திலிருக்கின்ற பிரமன். விரிமலர்த் தவிசோன்பால் விழுத்தவம் செய்து மீண்டான். (பா : 431)

மலர்தல் - 1. பரவுதல். மற்பக மலர்ந்த திண்டோள். (பா : 949)
2. அரும்பாக இருந்தது பூவாக மலர்தல். அன்பரும்பித் தருமம் மலர்ந்து. (பா : 167)
3. விரிந்து தோன்றுதல். மாத்தடந் திசைதொறும் மலர்ந்த வல்லிருள். (யுத் : 463)

மலர்ப்பலி - புஷ்ப மாலை. மலர்களைக் கொண்டு செய்யும் அருச்சனை. மங்கல கீதம் பாட மலர்ப்பலி வகுக்கின்றுரை. (சு : 787)(சு:210)

மலர்ப்பாதம் - தாமரை மலர்போன்ற பாதம் முனிவன் மாமலர்ப் பாதம் முறைமையின் இறைஞ்சி. (அ : 43)

மலர்ப் பெண் - தாமரைப் பூவில் வாழும் திருமகளின் அம்சமான சீதாபிராட்டி. நாண்மலர்ப் பெண்ணை நாடுவார். (கி : 901)

மலர்ப் பேராசனம் - தாமரை மலராகிய பெருமை வாய்ந்த ஆசனம். (யுத் : 98)

மலர்புரையடி - தாமரை மலரை ஒத்த பாதங்கள். உன் மலர் புரையடிமானத்தாள் புரைதளிர் வைகுப்தகை ஞிமிறிவை காணுய். (அ : 706) [பா : பே]

மலர்மழை - பூமாரி. தேவர் மலர்மழை தூவியார்த்து. (யுத் : 4215)

மலர் மிசைச் சிறந்த செல்வி - செந்தாமரை மலரில் சிறப்புற வீற்றிருக்கும் செல்வத்திற்குரிய திருமகள். (அ : 30)

மலர்மிசை மலர் பூத்தல் - ஒரு தாமரை மலரில் மற்றெரு தாமரை பூத்தல். மலர்மிசை மலர்ப்பூத்தென்ன வளைக்கையால் வதனந் தாங்கி. (சு : 208)

மலர்மேல் கமைப் பெருஞ் செல்வக்கடவுள் - உந்தியந் தாமரையில் உதித்த பொறுமையையே பெருஞ் செல்வமாகப் படைத்த பிரமன். (பா : 95)

மலர் மேற் பெண் - தாமரை மலர் மேல் தங்கும் திருமகள். மாமலர் மேற் பெண் செய்த பாவம் அதனிற் பெரிதென்பார். (அ : 398)

மலர்விரி கோங்கு – விரிந்த மலர்களையுடைய கோங்கமரம். அம் மலர் வரி கோங்கின் சுற்றுறு மலர் ஏறித் துயில்வன. (அ : 701)

மலர்வுறுதல் - மகிழ்ச்சி யடைதல். மலர்தல். சஞ்சலம்புரி சக்கர வாக முடன் தாழ் கஞ்சமும் மலர் வுற்றன. (சு : 687)

மலர் வெள்ளம் - பூமாரி. விரிஞ்சனும் வியந்து மலர் வெள்ளம் தூர்த்தான். (சு : 86)

மலரடி - அடித்தாமரை. (அண்) இரு போதும் மல்லினு முயர் தோளாய் மலரடி பிரியேனல். (அ : 683)

மலரம்பு - புஷ்ப பாணங்கள். அவள் துயக்கின் மலரம் புற வெம்பும் சுவடுடைப் பொருவில் தோள் கொடு. (யுத் : 805)

மலரமளி - மலர்கள் பரப்பிய பள்ளி. நாளரு நறுமல ரமளி நண்ணி னுள். (பா : 610)

மலரயன் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன். பூத்த நாண் மலரயனுதிப் புண்ணியர். (அ : 943)

மலரயன் உலகு - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனது உலகம். சத்திய லோகம். மண்ணின் நின்று மேல் மலரயன் உலகுற வாழும் எண்ணில் பூதங்கள். (யுத் : 173)

மலராடை - மலர் போலும் மெல்லிய ஆடை ஊனமில் மலராடை யுடுத்தினர். (அ : 1074)

மலராள் - சீதேவி. மேவி மென் மலராள் நில மாதெனும் தேவிமா ரொடும். (அ : 93)

மலராளி - பிரமன். தாமரை மலரில் உறையும் பிரமன். பைந்துழாய்ச் சோதியானும் அத்தூய் மலராளியும். (பா - 698)

மலரிருந்த அந்தணன் - பிரமன். மலரிருந்த அந்தணனும் தனே வணங்கு மவனும். (அ : 1024)

மலரிறைவன் - தாமரை மலரிலே தங்கியிருக்கும் இறைவனுகிய பிரமன். வாய்மையும் மறையவர்க் கன்பும் என்றினைய மாமலர் இறையவன் தர. (யுத் : 352)

மலரின் மேலான் – மலரின் வீற்றிருப்பவனுகிய பிரமன். வாசவன் மலரின் மேலான். (யுத் : 1602) (யுத் : 2138) [பா : பே]

மலரின் மேலான் பெரும் படைக் கலம். (யுத் : 2965)

மலரின் மேலை வானவன் - (திருமாலினது நாபித்) தாமரையி லுள்ள பிரமதேவன். (யுத் : 2138)

மலரின் விடம் - மலரினிடமுள்ள விடம். (மகரந்தம்) கயங்க ளென்னும் கனல் தோய்ந்து கடிநாண்மலரின் விடம் பூசி இயங்கு தென்றல். (பா : 627)

மலரீட்டம் - மலர்களின் திரள். கொய்யுநர் இன்மையின் உதிர்ந் துலர்ந்தன ஒண்மலரீட்டமே. (அ : 812)

மலருளான் - தாமரை மலரில் வீற்றிருக்கின்ற சிறுவன். மலருளான் சிறுவ. (அ : 1192)

மலரோன் அன்னமுனிவன் - தாமரை மலரில் தோன்றிய பிரமதேவனை ஒத்த முனிவன். கௌதமன். கஞ்சநாண் மலரோன் அன்ன முனிவனும் கருத்துட் கொண்டான். (பா : 562)

மலரோன் உகுபகல் - பிரமன் அழியுங்காலம். எமதுயிருடன் ஏழ் மகிதல முழுதையும் உறுக இ மலரோன் உகுபகலளவு. (பா : 315)

மலி செல்வம் - நிறைந்த ஐசுவரியம். திருக்குவான் மலி செல்வத் துச் செருக்குவேம் திறத்து. (யுத் : 4030)

மலிதரு - நிறைந்த. மகிழ்ச்சிதருகின்ற இவள் மலிதரு மணம் படுதிருவை. (பா : 1326)

மலிதல் - மிகுதல். நிறைதல். பலாண்டொலி மழலை யாழிசையோடு மலிந்தவே. (பா : 1198) மலிந்த நங்கை எழிலால். (யுத் : 806) மைம் மலிகுழலினர். (யுத் : 409)

மலை - 1. குவியல். நென் மலை யல்லன நிரைவரு தரளம். (பா : 78)
2. தொகுதி; கூட்டம். சொன் மலையல்லன தொடு கடலமிர்தம். (பா : 78)

3. மலை. பொன் மலை யல்லன மணிபடு புளினம். (பா : 78)

மலைக்குவடு - மலையுச்சி. மலைக் குவட்டகவுறு மயிலின் மாழ்கினர். (அ : 490)

மலைக்குலம் - மலைக்கூட்டங்கள். அலைக்கு மாழியடங்கிட அங்கை யால் மலைக்குலங்களில் தூர்க்கு மனத்தினுள். (ஆ : 299)

மலைகடந்த புயங்கள் - மலைகளை வென்றுயர்ந்த தோள்கள். (பா:1031)

மலைத் தடங்கள் - மலையிலுள்ள வழிகள். மருண்ட மா மலைத் தடங்கள் செல்லலாவ வல்ல. (கி : 233)

மலைத்தலங்கள் - மலைகள். (யுத் : 2106)

மலைத்தனி நெடுஞ்சிலை - மேருமலையாகிய ஒப்பற்ற பெரியவில். மறைந்தன மலைத்தனி நெடுஞ்சிலையிறத் தவழ்தடங்கிரிகளே. (பா : 1136)

மலைதல் - 1. போர் செய்தல். வில் மலை வல்லவன். (ஆ : 239) மலைந்தார். (யுத் : 2301) மலைய. (யுத் : 1441) மலைந்த வன்றே. (யுத் : 2399)

2. தாக்குதல். மீனம் மலைந்தன. (யுத் : 3841)

3. சென்று பொருந்துதல். தடங்கட் செங்கடை ஈட்டம் மார்பினும் தோளினும் மலைய (அ : 421) [பா : பே]

மலைநாடு - மலை நாடு. மணியா லோங்கற் பிறக்கமுற்ற மலை நாடு நீங்கி. (கி : 773)

மலைப்பாந்தள் - மலைப் பாம்பு. பாய்ந்த பண்டுறையும் மலைப் பாந்தள் போந்த மாமலையின்னுழை புக்கவே. (யுத் : 655)

மலைப்பாம்பு - மலையில் வாழும் பாம்பு. நெடுமலைப் பாம்பென வளையா. (யுத் : 1838)

மலைப்பெருங் கழுதை - மலையை ஒத்த பெரிய உடம்பையுடைய கழுதை. (யுத் : 2515)

மலைமகள் - பார்வதி. மலைமகள் கொழுநன். (பா : 532)

மலைமகள் கொழுநன் - சிவபிரான். (பா : 532) (பா : 942)

மலைமண்டலம் - மலையாள தேசமாகிய சேர நாடு. மனையின் மாட்சிகுலா மலை மண்டலம். (கி : 943)

மலைமாரி - மலைகளை மாரிபோல வீசுதல். கை ஒய்விலர் மலை மாரியின் நிருதக் கடல் கடப்பார். (யுத் : 3053)

மலை முலை - குன்றுகள் போன்ற தனங்கள். வணங்கு நுண்ணிடை மலை முலைச் செக்கர் வார் கூந்தல். (யுத் : 2313)

மலை முழை - மலைக்குகை. மலை முழை திறந்ததென்ன. (யுத்:1419)

மலைய - போர் செய்ய. கரா மலையத்தளர் கைக்கரி. (பா : 299) (யுத் : 1448)

மலய மாருதம் பொதிய மலையி லிருந்து வரும் தென்றற்காற்று. மலய மாருதமா நெடுங்கால வேல் உலைய மார்பிடை யூன்றிட ஓயுமால். (ஆ : 298)

மலையெடுத்த தனி மலையே - (கைலாச கிரியாகிய) மலையை உயர எடுத்த ஒப்பற்ற மலை போன்றவனே. தழலெடுத்தான் மலை யெடுத்த தனி மலையே. (ஆ : 325)

மலையேழு - ஏழு மலைகள். சப்த குலபர்வதங்கள். நங்கை இவ ளென்ருல் இச்சிலை கிடக்க மலை ஏழையும் இருநே. (பா . 1237)

மவுலி - தலை. முடி சூடிய தலை. என் சொல் மவுலியால் ஏற்கின்ரு ரோடு உடனுறை இன்பமால். (சு : 435)

மழ - இளமை மழவிடைப் பாகன். (அ : 749)

மழக்கன்று - இளங்கன்று. போதகத்தின் மழக் கன்று. (கி : 771)

மழலை - 1. பொருள் நிரம்பி எழுத்து நிரம்பா இன்சொல். இளஞ் சொல். குழந்தைகளின் நிரம்பா மென்சொல். நாளும் மழலை வழங்குவாய். (சு : 436)

2. மெல்லிசை. தழை கொண்டு மழலை வண்டோச்சி. (அ:746)

3. இன்மொழி. மழலை மென் மொழி கிளிக் கிருந் தளிக்கின்ற மகளிர். (சு : 101)

4. இளமை. ஓர் மழலை வெண்குருகு. (யுத் : 336)

மழலைத் தீஞ்சொல் . ஒலியினிய குதலைச் சொற்கள்- வரம்பறு மழலைத் தீஞ்சொன் மடந்தையர். (பா : 1223) [பா : பே]

மழலைத் தும்பி - இன்னேசை யுடைய வண்டுகள். மழலைத் தும்பி அதிசய மெய்திப் புக்கு வீழ்ந்தன அலைக்கப் போகா. (பா:983)

மழலைப்பணி மொழி - கொச்சையாகச் சொல்லப்படுகின்ற சொற் களையுடைய சீதாபிராட்டி. மழலைப்பணிமொழி நுனிப்ப தொன் றும் நுவல்வ தொன்ருயினுள். (யுத் : 3943)

மழலைப் பிள்ளை - இளங் குஞ்சு. அன்னம் பாலுண்ட நளினப்பள்ளி வளர்த்திய மழலைப்பிள்ளை. (பா : 44)

மழலையஞ் சதங்கை - நிரம்பா ஒலியையுடைய அழகிய சதங்கை. வானவ மகளிர் போனர் மழலையஞ் சதங்கை மாழ்க. (யுத்:2233)

மழலை யன்னம் - மழலைச் சொற்களையுடைய அன்னப்பறவை. பூவரு மழலை யன்னம். (கி : 807)

மழலை வண்டு - மெல்லிய இசையை எழுப்பும் வண்டு. (அ : 746)

மழலை வாயர் - குதலைச் சொல்லைச் சொல்லும் வாயினையுடையவர். நிரம்பா மென் சொல்லைக் கொண்ட வாயர். மானவன் வாளி வாளி என்கின்ற மழலை வாயர். (யுத் : 2255) (யுத் : 2783)

மழலை வெண்குருகு - இன் குரலையுடைய வெண்ணிறமுள்ள பெண் நாரை. பிரிந்த சேவலை வருந்திசை நோக்கியோர் மழலை வெண் குருகு இருந்தது கண்டு. (யுத் : 336)

மழலை வெவ்வுரை - விருப்பத்தைத் தெரிவிக்கின்ற கொச்சைச் சொற்கள். பவள வாயார் ஊடலும் கடைக்கண் ணோக்கும் மழலை வெவ்வுரையு மெல்லாம். (யுத் : 2790)

மழவர் - இளைஞர். மழவர் தளைமணியமண வொலி. (பா : 81)

மழவிடை - இளமை. பொருந்திய இடபம் மழவிடைப் பாகன். (அ : 743) மழவிடையோன். (யுத் : 2628) (யுத் : 3727)

மழவிடைப் பாகன் - இடபாரூடரான சிவபெருமான். (அ : 743)

மழவிடையோன் - சிவபெருமான். (யுத் : 2628)

மழவிடையோன் பங்கினுறையும் குயில் - சிவபெருமானது பாகத்தில் வசிப்பவளும் குயில் போன்றவளுமான பார்வதி. (யுத் : 2628)

மழவு - இளமை. மழவிடை. (பா : 1267)

மழு - 1. கோடரி வடிவினையுடைய தொரு படைக்கலம். அற்றன சுடர் மழுத்தொகை. (ஆ : 444)

2. கோடரி. சூலம் மழுவாள். (சு : 164) (யுத் : 1730)

3. எறியீட்டி. துன்னுதார் வாயின் வைதன ஒத்தன அத்துணை மழுவாளும். (யுத் : 212)

மழுக்கள் – மழுவாயுதங்கள். நம்முரிநெஞ்சினை மழுக்களிற் பிளத் தும் என்றேடுவார். (அ : 486) மழுக்கள் ஒச்சினர். (பா : 462) [பா : பே]

மழுவலாளன் - மழுவென்னும் ஆயுதத்தைக்கொண்ட சிவன். மதி வளர் சடைமுடி மழுவலாளனும். (பா : 196) [பா : பே]

மழுவலான் – சிவபிரான். (யுத் : 4034)

மழுவலான் மைந்தன் – முருகன். வாசவன் மலரின் மேலான் மழு வலான் மைந்தன். (யுத் : 1602)

மழுவன் – சிவபெருமான். ஆழிக்கையனே மழுவனே என்றிவர் வலிகடந்த கால மொய்யனே. (யுத் : 3192)

மழுவாட்படையினன் – சிவபிரான். (யுத் : 3890)

மழுவாள் – கோடரி. நிலமன்னவர் குலமும் கருவற்றிட மழுவாள் கொடு கவரார். (பா : 1361)

மழுவாள் வீரன் – பரசுராமன். இட்டிய மழுவாள் வீரன். (யுத் : 727) [பா : பே] இட்டுறுமழுவாள் விரன் தாதையைச் செற்றான். (யுத் : 727)

மழுவாளங்கைஈசன் - மழுப்படையை அழகிய கையிற் கொண்ட சிவன். (யுத் : 1249)

மழுவாளவன் – பரசுராமன். எறிமழுவாளவன் இழுக்கமுற்ற அன் றினும். (அ : 42)

மழுவாளன் – சிவபிரான். மின் சென்றறியா மழுவாளன் விடைக் கும். (யுத் : 1972)

மழுவாளி - 1. சிவபிரான். (யுத் : 3039) மழுவாளிக்கன்றளித்த ஐயத்தாற் சிறிதையந் தீர்ந்தாரும். (ஆ : 59)
2. மழுப்படையை ஆள்பவன்; பரசுராமன். பண்டுபோர் மழு வாளியைப் பண்பினுற் கொண்டவில். (ஆ : 545)

மழுவாளுடையான் - பரசுராமன். (அ : 358)

மழுவின் சிகை - மழுவின் தலை. போரின் மிசை எழுகின்ற தொர் மழுவின் சிகை புகைய. (பா : 1358)

மழுவின் வாள் - மழுவாகிய ஆயுதம். மழுவின் வாளினன் மன்னரை மூவெழுபொழுதின் நூறி. (சு : 356) [பா : பே]

மழுவுடையவன் - பரசுராமன். பூண்ட போர் மழுவுடையவன் நெடும்புகழ் குறுக நீண்ட தோள் ஐப. (அ : 61)

மழுவேந்துவான் - மழுப்படையைத் தாங்கியுள்ள பரசுராமன். மான் மறிக்கரத்தான் மழு ஏந்துவான் தான் மறுத்திலன் தாதை சொல். (அ : 321)

மழுவோன் - சிவன். வன்ருள் மழுவோன். (யுத் : 291)

மழை - 1. இடி. மேகத்தின் இடி. மழையென முழங்கும் தாறுபாய் கரி. (பா : 902) (யுத் : 1852)

2. மேகம். மழைக்கை மண்பக அடித்தன. (அ : 859) விற்கொண்ட மழையனுன். (பா : 418) மழையின் மேல் மழை வந்தன்னுர். (யுத் : 2053)
3. கருநிறம். மழை புரையுங் குழல். (ஆ : 203)
4. குளிர்ச்சி. மழை புரை ஒண்கண். (சு : 421)
5. தொகுதி. பல்கணை மழை. (ஆ : )

மழை உரித்துடுத்தல் - மேகங்களை உரித்து உடுத்தல். மூண்டு வான் மழை உரித்துடுத்துலாவு மூர்க்கர். (யுத் : 3264)

மழைக்கண் - 1. மழை போல நீர் பொழியுங் கண். மழைக் கண் என்பது காரணக் குறியென வகுத்தாள். (சு : 335) மழைக் கணீர் அருவிசோர்வாள். (ஆ : 870)
2. மழை போலக் குளிர்ந்த கண். மழைக் கண்ணுள் தொடரு தலுந்துணுக்க மெய்தா. (யுத் : 4148) மழைக் கண்ணீராலியுக. (அ : 394)
3. கரியகண் அயர் வெதுமால் மழைக்கண் ஏழை. (ஆ : 810)

மழைக்கண் ஏழை – கரிய கண்களையுடைய சீதை. (அண்) மழை போலக் குளிர்ந்த கண்களையுடையவளும் மகளிர்க்கு இயல்பான பேதைமையுடையவளுமான சீதை. (வை.மு) மழை போலும் நீரைச் சொரியும் கண்களையுடையவள். (கலா) (ஆ : 810)

மழைக்கண்ணுள் – குளிர்ந்த கண்களையுடையவள். (கௌசலை) சொரிவமைப்ப தரிதாய மழைக் கண்ணுள். (யுத் : 4148)

மழைக்கணுலி – குளிர்ந்த கண்ணிலிருந்து சிந்தும் நீர்த் துளி. வகிர் மதிநெற்றியாள் மழைக்கணுலி வந்துததலும். (பா : 1090)

மழைக்குரல் தேரான் – மழைக்குரல் போன்ற சக்கரத் தொனியை யுடையதேர். மழைக்குரற்றேரின் மேலோன் மாபெரும் பக்கன் மன்னே. (யுத் : 2282)

மழைக் குலம் - மேகக் கூட்டம். மழைக்குல முழங்க. (கி : 522) (அ : 640)

மழைக்குழு - மேகக் கூட்டம். (யுத் : 3650)

மழைக் குன்றம் – மேகம் மொய்த்த குன்று. மழைக்குன்ற மனை யான். (அ : 297)

மழைக்கை – மேகம் போன்று கைம்மாறு கருதாது கொடுக்கும் கை. நெடு மழைக்கை மண்பக அடித்தன ஒன்றொடொன் றசனி அஞ்சவே. (அ : 854)

மழை காணும் மணிநிறம் – மேகம்போற் காணப்படுகின்ற அழகிய கருநிறம். மற்காணுந்திரு நெடுந்தோள் மழைகாணும் மணி நிறத்தாய். (அ : 1018)

மழைகால் வீழ்தல் - மேகங்கள் காலிறங்கிப் பெய்தல். மழை பெய் தற்கு கருமுகில் கால் கொண்டு இறங்குதல் (அண்) கடையூறு கணமழை கால்விழ்ந் தெனக் கடியான். (யுத் : 3716)

மழைகுலாம் ஓதி - மேகத்தை ஒப்பச் சிறந்து விளங்கும் கூந்தல். மழைகுலாம் ஓதி நல்லார் களிமயக்குற்று நின்றார். (பா : 1221)

மழைத்த - மழையை உடைய. (உட்கொண்ட) மேருப்பொற்கிரி மையெடுத்த தொத்தது மழைத்த வான்மே. (கி : 445)

மழைத்த முகில் - மழை பொழியும் முகில். வெங்கதிரின் வெஞ்சுடர் இராமன் மழைத்த முகிலன்ன மணி மேரு வருடாமல். (யுத்:701)

மழைத்த மேகம் - பொழியுந் தன்மை கொண்ட மேகம். மழைத்த மேகம் வீழ்வ வென்ன. (யுத் : 3355)

மழைத்தல் - 1. மழையை உட்கொண்டிருத்தல். (கி : 443)
2. மழை பெய்யும் நிலையுடைய தாதல். (யுத் : 701) (யுத் : 3355)
3. கரிய மேகமுடைமை. (கி : 445)

மழைத்த வானம் - கரிய மேகங்களைத் தன் பாற்கொண்ட ஆகாயம். (கி : 445)

மழைத்த விண்ணகம் -பெய்ய எழுந்த மேகத்தோடு கூடிய ஆகாயம். மழைத்த விண்ணகமென முழங்கி. (கி : 946)

மழைத்தாரை - மழை நீர்ப் பெருக்கு. வான்முகில் சளசள என மழைத் தாரை கான்றன. (பா : 225) கங்குலின் நிறத்தினன் தன் கண் மழைத்தாரை கான்ற. (யுத் : 431)

மழைத் தொங்கல் – மேகம் வீழ்ந்த மழைக்கால். மேகக் கூறுகளின் கீழிறங்கிய வரிசை. தொடையமை நெடுமழைத் தொங்கலா மெனக் கடைகுழன்று இடைநெறி கரிய குஞ்சிபை. (ஆ : 247)

மழை தொடர் மஞ்ஞை - மேகத்தைப் பின்பற்றிச் செல்லும் மயில். (அண்) மேகத்தைக் கண்டு ஆடும் மயில்கள். (கலா) மூரி மழைதொடர் மஞ்ஞையென்ன விழாவொடு வருகின்றாரை. (சு : 211)

மழை புரை தடங்கட் செங்கிடை யீட்டம் - மேகத்தை ஒத்த (குளிர்ச்சி பொருந்திய) ஒள்ளிய சிவந்த கடைக் கண்களின் கூட்டம். (சு : 421)

மழைபொதி செந்தனி ஒரு சுடர் - கரு மேகங்களால் மூடப்பட்ட செந்நிறமுடைய ஒப்பற்ற சூரியன். (யுத் : 1816)

மழைபொரு கண் - மேகத்தை ஒத்த கண். மழைபொரு கண் ணிணை வாரியோடு தன் இழை பொதிந்திட்டனள். (கி : 197)

மழைபொரு கண்ணிணை - 1. மேகத்தை ஒத்த கண்ணிணை; கரு மையுடைய நீர் பொழியுங் கண்கள். (கி : 197)

2. மழையொத்துக் குளிர்ந்த கண்கள். மழைபொரு கண்ணிணை மடந்தைமார். (பா : 597)

மழைமாரி - மழைத்தாரை. மழை மாரி போல் கொற்ற வெங்கணை எய்தனன். (யுத் : 2039)

மழைமுகில் - கார் மேகம். மண்டலந் தருமதி கெழுமழை முகி லனைய அண்டர் நாயகன். (அ : 55)

மழையற வறந்த காலம் - மழையில்லாமற் காய்ந்து போன காலம். மண்ணின் நீர் உலந்து வானம் மழையற வறந்த காலத்து உண்ணுநீர் கண்டு வீழும் உழைக்குலம். (பா : 1150)

மழையனையான் - மழைபோற் கரிய திருமேனியையுடையவன். (இராமபிரான்) காவியின் மலர் காயா கடல் மழையனையானைத் தேவியொடடி தாழா. (அ : 670)

மழையினம் - மேகக்கூட்டம். மழையினமுழங்க. (அ : 772. b)

மழையினீட்டம் - மேகக்கூட்டம். (ஆ : 397)

மழையினீர் வழங்குகண் - மழைபோல நீரைப் பெருக்குகின்ற கண். வந்ததென் தனியே என்றான் மழையினீர் வழங்குகண்ணான். (யுத் : 1848)

மழையுடைக்கடவுள் - வருணன். மழையுடைக் கடவுள் தானும் மாற்றலர் ஈந்த வரத்தினுல் வந்த தென்றான். (யுத் : 2379)

மழையுதிர்ப்பது - மழைநீரைச் சிந்துவது. தான் அப்புறத்தேகிக் கருவிமாமழையுதிர்ப்பதோர் கடுவனைக்காணும். (அ : 750)

மழையுறங்குதல் - மேகங்கள் படிதல். மழையுறங்கும் மணித்தடனும். (கி : 771)

மழையுருமின் - மேகத்தில் தோன்றுமல் பூமியில் தோன்றுவதொரு மின்னல். மழையுரு மின்னின் அன்ன மருங்குல்போல் நுடங்கி நின்றுள். (பா ; 1156)

மழையென்று ஆசங்கை கொண்ட கொடைமீளி அண்ணல் சடையன் - மேகமென்று சந்தேகங் கொள்ளுதற்கிடமான ஈகையை யுடைய வலிமை கொண்ட பெருமையிற்சிறந்த சடையப்பமுதலியார். (யுத் : 2215)

மழையேந்திய குழல் - மேகத்தின் தன்மையைக்கொண்ட கூந்தல். மழையேந்திய குழலாள் கருப்பேந்திர முதலாயின கண்டாள். (அ : 623)

4. மேகத்துடன் கூடிய இடி. மழையேறென ஆர்த்தான். (யுத் : 1842)

மழையேறு - 1. இடியேறு. மழையேறன்ன திண்டிற லரக்கன். (யுத் : 2567)

2. மேகத்தின் முழக்கம். அதிரக்கடல் நெடுந் தேரினன் மழையேறென ஆர்த்தான். (யுத் : 1842)

3. ஏறு மழை. பெரு மழை. களியானைகள் மழையேறென மறிய. (யுத் : 1831)

மள் கல் - பின் வாங்குதல். மள்கலில் பெருங்கொடை மருவி. (கி : 547)

மள்ளர் - 1. உழவர். செய்ய மள்ளர் கமலத்தோடு நெல்லறுக்குந் திருநாடன். (யுத் : 3359)

2. வீரர். கடும் பகடு படி தோய்ந்த கடும் பரம்பின் இன மள்ளர். (யுத் : 3567) பொருசின மள்ளர். (யுத் . 1823)

மற்கச கோமுகன் - ஒரு வானரப்படைத் தலைவன். மயிந்தன் மற்கச கோமுகன் தன்னெடும் வந்தான். (கி : 718)

மற் கடம் - குரங்கு. நம்முயிர் நாயகர் மற் கடந்தெற மாண்டனர். (சு : 1200) (யுத் : 1010)

மற் காக்கும் மணிப்புயம் - வலிமை பெற்ற அழகிய தோள். மல் காக்கும் மணிப் புயத்து மன்னனிவன். (பா : 772)

மற் காணும் திரு நெடுங் தோள் - மற்றெழிற் பயிற்சி பெற்ற கொற்றவை உறையும் நீண்ட தோள், மற் காணுந் திரு நெடுந் தோள் மழை காணும் மணி திறத்தாய். (அ : 1016)

மற்குவடு - வலிய மலைகள். மற்றெழில் வல்ல மலைச்சிகரம். (அண்) மற்குவடணைய திண்டோள் மானவன். (யுத் : 775)

மற்பக மலர்ந்த திண்டோள் – மல்லருந் தோற்றோடும் படியான திண்ணிய தோள். மற்பக மலர்ந்த திண்டோள் வானவர் மணந்த கோல விற்பகை நுதலினர். (பா : 949)

மற்பக மலர்ந்த தோள் – 1. பிறருடைய மற்போர் வலிமை ஒழியுமாறு விரிந்த தோள். மற்பக மலர்ந்த தோள் மன்னர் மன்னனே. (அ : 844)

2. வலி மிகும்படி விரிந்த (பூரித்த) தோள். (அண்) வலிமை மிக விளங்குகின்ற தோள். (வை.மு) மற்பக மலர்ந்த தோள் மைந்தர் சூட்டிய கற்பக மாலை. (சு : 373)

மற்படை – மல்லர்களின் படை. மற்படையுடைத் தென்கேனே (சு : 136)

மற்பொருவு தோள் – மற்போர் செய்வதில் வல்ல தோள். கைதுணித்துமென முந்து கடுகிப் படர் புயத்து எய்வின் மற் பொருவு தோள் இருவர் ஏற. (ஆ : 35)

மற்றடந்தானையான் – மற்போர்ப் பயிற்சியுள்ள பெரிய சேனையை யுடைய அரசன். (தசரதன்) கற்றடங் காணுதியென்னின் கண் ணகன் மற்றடந்தானையான் வாழ்கிலான். (அ : 458)

மற்று - 1. அசைநிலை. மாயாத வானவர்க்கும் மற்றெழிந்த மன்னு யிர்க்கும். (ஆ : 53) (பா : 344)

2. பின்பு. குறுகிநோக்கி மற்று. (சு : 226)

3. வேறு. மற்றினி யுணர்த்துவ தெவனே. (பா:104 (பா:400 (பா : 676)

4. வினைமாற்று. மற்றவன் சிந்தையைத் தேர்குவாய். (கி : 567) பெற்ற ஆர்ப்பு விசும்பு பிளந்ததால் மற்றிவானம் பிறிதொரு வான்கொலோ. (யுத் : 684)

5. பின்னும். மற்றிடையூறு செல்லா ஆயுளையுடையை யாதி. யுத் : 3538)

மற்றுலகு – வேறான உலகம். பரலோகம். சுவர்க்கம். வேள்விமுற்றி மற்றுலகளிப்பென் என்று. (பா : 676)

மற்றுமொன்று – வேறொன்று. மற்றுமொன்று இன்னம் யானுரைக்கின்றது. (பா : 400)

மற்றை – வினைமாற்று. (ஐ – சாரியை) மற்றை நேரிழை நெடிய நம்பி தோளின்கண் மனம் வைத்தன்ன சுடர் மணித்தடங்கள் கண்டாள். (ஆ : 228)

மற்றை வாளரக்கன் – எதிரியாக வந்த கொடிய அரக்கன். மற்றை வாளரக்கன்புரி மாயையால் இற்று விழ்ந்தனன் என்னவும். (ஆ : 816)

மற்றொரு - வேறொரு. மற்றொரு மனத்தனுகி. (யுத் : 2135)

மற்றொருத்தன் – உறவினன் அல்லாத அயலான். மற்றொருத்தன் வலிந்து அறை கூவ- (கி : 325)

மற்றொருமனத்தனுகி – மனம் மாறுபட்டு, (வேறோர் உபாயத்தைக் கருதினவனுகி) மற்றொரு மனத்தனுகி மின்குலாங்கழற்கால் விரன் விண்ணிடை விரைந்ததன்மை என் கொலாம். (யுத் : 2135)

மற்றோர் தேயத்தார் – பிறநாட்டினர். மற்றோர் தேயத்தார் தேயஞ் சேறல் தெறுவிலார் செருவிற்சேறல். (சு : 130)

மற - மறந்துவிடு. மற்றையதொன்றும் மற. (அ : 273)

மறக்ககிற்றிலர் - மறக்க இயலாதவர் ஆயினர். மறக்ககிற்றிலர் அன்னதன் மாண்பெலாம். (பா : 962)

மறக்கண் – 1. கொடியகண். மறக் கண் வெஞ்சின மலையென இந்நின்ற வயவர். (யுத் : 3227)

2. வன் கண்மை. கொடுமை. வன் மறக்கண்ணர் ஆற்றல் வரம்பிலா வயிரத் தோளார். (சு : 822) மறக்கண் வாள் இளைய வீரன். (அ : 665 பி)

மறக் கண்ணில்லாதான் – கொடுமையில்லாதவன். தர்மாத்மா. வீடணனனு மறக் கண்ணிலாதவன். (யுத் : 3939)

மறக்கம் – மறத்தல். தொல்லை மறக்கமுற்றுர் அதனயலே மறைந்துறைவர். (கி : 773)

மறக்க முற்ருதன – மறந்து தவறக் கூடாதவை. மறக்க முற்ருதன தன்வாய்மை. (ஆ : 195)

மறக்குமா நினையல் – மறக்கும்படி நினைக. துறக்கமே முதலவாய தூயன யாவையேனும் மறக்குமா நினையலம்மா. (அ : 617)

மறக்கூற்றம் – கொடுமையுடைய யமன். வானரத் தானையை மறக் கூற்றங் கொள்ளை கொண்டிடப் பண்டையின் மும்மடி குமைக் கின்றபடி நோக்கி. (யுத் : 1560)

மறக்கை – மறந்து விடுதல். கடனென்று பின் பாசத்தை மறக்கை காண் மகனே வலியாவது. (யுத் : 4155)

மறக்கொடும் பாவம் – வலிய கொடிய தீவினை. (அ : 580)

மறங்கிளர் வயிரத் தோளான் – வீரம் விளங்குகின்ற வயிரம் போன்ற தோள்களையுடையவன். (சுக்கிரீவன்) (யுத் : 2867)

மறத்தல் - 1. நீங்குதல். துயர் மறந்தாள். (சு : 551]
2. அயர்த்தல். மறக்குமாயினும் நீ மறவேல். (சு : 639) என்றும் என்னை மருதாய். (யுத் : 2606)
3. இழத்தல். ஒலி மறந்த வேதமே. (அ : 503)

மறத்தார் – கொடுமையுடையவர். பாவிகள். தீவினையாளராகிய அரக்கர். (அண்) மறத்தார் செற்ற போது. (அ : 172) [பா : பே] மறத்தார் குலம். (யுத் : 3032)

மறத்தினுர்கள் – பாவிகளாகிய அரக்கர்கள். மறத்தினுர்கள் வலிந் தனர் வாழ்வரேல். (ஆ : 1061)

மறத்து நீங்கிய ஆதர் – வீரத்தினின்றும் நீங்கிய அறிவில்லாத எளியவர். (யுத் : 404)

மறத்துறை – 1. வீரகுணத்துக்குத்தக்க முறைமை. மறத்துறை யன்று சேமம் மறைந்துறைந் தொதுங்கி வாழ்தல். (யுத் : 931)
2. பாவநெறி. மறத்துறை நமக்கென வலிக்கும் வன்மையோர் (கி : 544)

மறந்தரு சிந்தையன் – பாவச் செயல்களையே கொண்ட நெஞ்சினன். (யுத் : 354)

மறந்திறம்பல் – வீரநெறி மாறுபடல். செயிர்தீர் மறந்திறம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ. (அ : 163) (கி : 337)

மறந்தும் – மறதியுற்றும். எந்தையை மறந்தும் பொய்யிலனுக்கி. (அ : 312)

மறப்படை – வீரத்தைக் கொண்டபடை. வைது கொலினல்லது மறப்படை கொடிப்படை கடக்கும் வலிதான் செய்ய திருமாலி ஞெடுனக்குமரி தென்றனர். (யுத் : 3408)

மறப்பயன் – 1. வீரத்தின் பயனுன வெற்றி. நிறப்பெரும் படைக் கலம் நிறத்தின் நேருற மறப்பயன் விளைக்குறும் வன்மை. (அ : 560)
2. வீரம். (கலா) தீரத்தினுலாம் பயன். தைரியம். (அ : 560)

மறப்பால் – கொடுமைத் தன்மை. தறுகண்மையினை யுண்டாக்கும் தன்மை. மறப்பால் வடிவாள்கொடு மன்னுயிரைத்துறப்பான். (ஆ : 1114)

மறப்பு – மறந்துபோதல். இறப்பெனும் மெய்ம்மையை இம்மை யாவர்க்கும் மறப்பெனும் அதனின்மேற்கேடு மற்றுண்டோ. (அ : 21) மறப்பிலள். (பா:1098) தன்னையே மறப்பிலாத சவரி. (யுத் : 4206)

மறம் - 1. கொடுமை. மறநினைந்துமை வலிகிலராயினும். (அ:167) மறக்கூற்றம். (யுத் : 1560)
2. வலிமை. மறங் கொடு. மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன். (அ : 890)
3. போர். (அண்) மறங்கருதி... மேல்வந்தான். (அ : 1092)
4. வீரம். மறங்கொள் வெஞ்செரு. (யுத் : 177) மறந்திறம் பாத தோலா வலியின ரெனினும். (சு : 461) மறங்கிளர் செரு. (யுத் : 1309)
5. பகைமை. (அண்) மறமுட்கூர. (சு : 26)
6. கோபம். (வெ.ப) மாருதி மறமுட்கூர அண்ணல் வாள ரக்கன் தன்னை யமுக்குவென் இன்னு மென்னு. (சு : 26
7. கொலைத் தொழில். குழை சென்றிறங்கி மறந்தரு செங்கணுய். (சு : 432)
8. பாவம். அதர்மம். மறமென நின்ற மூன்றும் மருங்கற மாற்றி. (யுத் : 1352)
9. கொடிய தொழில். தீய செயல். (கலா) (அ : 1092) மறந் துறந்தனர். (யுத் : 81)

மறம் செய்கை எய்தினர் - பாவஞ் செய்தலையுடையவர்கள். மறஞ் செய்கை எய்தினர் பின் செல்வதில்லாப் பெருஞ்செல்வம் நீ தந்தாய். (ஆ : 1187)

மறமுலா முனி - கோபம் மிக்க முனிவன். துருவாச முனிவன். மறமுலா முனி வெகுளியின் மறைந்தன வரவே. (பா : 501) [பா : பே]

மறமென நின்றமூன்று - பாவத்திற்குக் காரணம் என்னுமாறு உள்ள அறியாமை, திரிபுணர்ச்சி, ஐயவுணர்வு. (யுத் : 1352)

மறலி - யமன். மறலி மறம் புகாது. (சு : 118) மறலியஞ்சுறு விறலர். (கி : 51)

மறலிக் கிரை செய்தல் - யமனுக்கு உணவாக்குதல். வரை செய் மேனியை வள்ளுகிராற் பிளந்து இரை செய்வேன் மறலிக்கினி என்னுமால். (யுத் : 3952)

மறலிக்கோர் கொள்ளைப்பட்டன உயிர் – யமனுக்குப் பெருங்கொள்ளை யிலகப்பட்டன உயிர். (மிகுதியான, அளவுகடந்த) மறலிக்கோர் கொள்ளைப்பட்டன உயிரென்னும்படி கொன்ருன் ஐம்புலன் வென்ருனே. (சு : 957)

மறலி வயிற்றை உயிர்களால் தூர்த்தல் – உயிர்களால் யமனுடைய வயிற்றை நிரப்புதல். ஆசுரப்படைக்கலம் அமரர் வார்த்தை யுண்டது இன்னுயிர்களான் மறலிதன் வயிற்றைத் தூர்த்தது. (யுத் : 3763)

மறவர் - போர் வீரர். வல்லியல் மறவர்தம் வருக்கமாசற. (சு : 506)

மறவன் – வீரன். முடிவில தெறுதொழில் மறவனே. (யுத் : 1815)

மறவெற்றி யரக்கர் – வீரமும் வெற்றியும் வாய்ந்த அரக்கர். (யுத் :3459)

மறவினை – 1. அதர்மகாரியம். மறவினை நீக்கலில்லா மாயமும். (யுத் : 435)

2. போர்த்தொழில். அரக்கனேடு அம்மறவினைமுடித்த பின்னர். (யுத் : 2222)

மறவோர் – 1. வலிமைசான்றவீரர். மாருதி வலித்தகைமை பேசி மறவோரும் பாரிடை நடந்து. (கி : 890)

2. தீவினையாளர் – அரக்கர். மால் பொத்தின மறவோருடல் மழை பொத்தின. (ஆ : 467)

மறவோன் – 1. வீரன், பராக்கிரமசாலி. மகோதரன் என்றொரு மறவோன். (யுத் : 497) (யுத் : 3720)

2. மனவுறுதியுடையவன். மீன்வரு கொடியவன் விறலடு மறவோன். (ஆ : 112)

மறன் - 1. வல்லமை, வலிமை. அன்பு கிடக்க நம்மறன் அறிந்திலன். (கி : 556) (சு : 812)

2. பாபம். மறனிலா முனி. (பா : 501)

3. வீரம். கோபமும் மறனும் மானக்கொதிப்பு மென்றினைய வெல்லாம். (ஆ : 641)

மருதாய் - மறவாதவனே. என்றும் என்னை மருதாய். (யுத் : 2606)

மறி - 1. ஆடு. ஆட்டுக்குட்டி. எருமைகள் மறிந்தன மறியு மீர்ந்தவால். (யுத் : 2937)

2. மான். மறிவிழி ஆயர் மாதர். (பா : 26) (பா:பே)

மறிக்குருள் - ஆட்டுக்குட்டி. சிற்றில மரந்தோ றெள்ளரு மறிக்குரு ளொடண்டர்கள் இருந்தார். (கி : 525)

மறிக்கொள்ளுதல் - (ஆட்டுக் குட்டியை ஒப்ப) காலைக் கட்டி மடக்குதல். மறிக்கொளும் சிறுவர் தம்மை. (யுத் : 2118)

மறிகடல் - அலைகள் தரையில் தாக்கி மடியும்படியான கடல். அலைகள் மறியும் கடல். வாழி வற்று மறிகடலும். (யுத் : 2) மறிகடலோ மழைமுகிலோ. (அ : 618) (யுத் : 2001) (கி : 286)

மறிகுதல் - ஒழிந்திடுதல். அழிதல். ஆற்றல் மறிகுவதன்றி வல்லாய் மாற்றினை யென்னின். (யுத் : 1418) ஆற்றல் மறிகுவது. (யுத் : 1418) [பா:பே]

மறித்தல் - 1. புறங்காட்டி ஓடுதல். (அண்) (ஆ : 361)

2. தோற்றொழிதல். (வை.மு) நிருத ரெதிர் நில்லாதே நெடிய தேவர் மறித்தார். (ஆ : 361)

3. மடக்குதல். மறித்த வாசி துணித்து. (யுத் : 3391)

4. பேர்த்தெடுத்தல். வலங்கொள் பேருலக மேருவோடென மறிக்கு மாருதி. (யுத் . 2033)

5. இறத்தல். மாவாளிகளோடு மறிந்தனரால். (யுத் : 2931)

6 மாற வைத்தல். மறித்த நோக்கியர். (சு : 127)

மறித்தும் – மறுபடி. மீண்டும். வைத்தது தரைமிசை மறித்தும் அவ் வழிதைத்தது பூதம். (பா : 268)

மறித்து வாங்கி – தலைகீழாக வாங்கி. உட்புறத் துண்டென் றெண்ணி வள்ளத்தை மறித்து வாங்கி. (பா : 1064)

மறித்தெறிதல் – மடக்கி யடித்தல். மறித்தெறி வாடை மோத. (யுத் : 2149)

மறிதரல் – மீண்டு போதல். தூவியம் பெடை அரியின மறிதர. (யுத் : 3501)

மறிதல் – 1. மடங்குதல். மரகதமோ மறிகடலோ. (அ : 618)
2. விழுதல். மடங்கிவிழுதல். மறிந்தான் எருவைக் கிறைமால் வரைபோல் மண்மேல். (ஆ : 933) மழையேறென மறிய. (யுத் : 1831)
3. வெட்டப் பெறுதல். வயவர் தங்கணிச்சியின் மறிந்த காரகில். (அ : 754)
4. திரும்பி வருதல். சினத்தால் மறிந்தாரையும் வலிந்தாரையு மடித்தான். (ஆ : 457)
5. தலை கவிழ்ந்து விழுதல். தலை கீழாதல். கண்ணகன் தேர்க் குலம் மறிந்த காட்சிய. (யுத் : 1786) மறிதலோடும். (யுத்:3111)
6. அழிதல். மாளுதல். தேரின் தட்டுவிட்டது மறிதலோடும் அணிநெடும் புரவியெல்லாம் ஆற்றலவாய வன்றே. (யுத் : 3111) நின் ஆற்றல் மறிகுவது (யுத் : 1418)
7. புரளுதல். மழையேறென மறிய. (யுத் : 1831)

மறிதிரைக்கடல் – அலைகள் மறிந்துவருகின்ற கடல். மறிதிரைக் கடலென வந்து சுற்றினர். (அ – 11)

மறிதிரைப்பரவை – அலைகள் கரைகள் மோதி மடங்குகின்ற கடல். மறிதிரைப்பரவை பின்னும் சீறியது. (யுத் : 1100)

மறிந்தார் – மீண்டு வந்தவர். (ஆ : 457)

மறிந்தான் – சாய்ந்தான். (ஆ : 933)

மறிந்திடுதல் – அறுப்புண்டு வீழ்தல். கண்ணகன் தேர்க்குலம் மறிந்த காட்சிய. (யுத் : 1786)

மறிப்பு - மடக்குதல். சிறைவைத்தல். மறிப்புண்ட தேவர்காண. (யுத் : 955)

மறிவிழி ஆயர்மாதர் - மான் குட்டிபோல் மருண்ட பார்வையையுடைய இடைச்சிகள். (பா : 26) [பா : பே]

மறு - 1. குற்றம் காமம் முதலிய ஆறு குற்றம். வாய்மையன் மறு விலன். (ஆ : 181)

2. ஸ்ரீவத்ஸம் என்னும் மறு. திருமறு மார்பன். (பா : 496)

3. பழிச்சொல். ஒப்பரும் பெருமறு உலகம் ஓத. (சு : 503)

4. களங்கம். திங்களோ மறுவில பத்துளவல்ல. (சு : 530)

5. ஊறுபாடு. துன்பம். மல்லன்மா ஞாலம்ஓர் மறுவுருவகையின். (கி. 822)

6. அடையாளம். செச்சை மறுவுற்ற அலங்கன் மார்பர். (யுத் : 4283)

மறுக்கங் கூடுதல் - மனக்கலக்க முறுதல். தாய்கதிர்க் கோல் தலைத் தலையுற மயக்கங் கூடினர். (யுத் - 2939)

மறுக்கங்கொள்ளல் - கலக்கமுறுதல். என்னேடேற்ற செருவிலின் மறுக்கங் கொண்டான். (யுத் : 2249)

மறுக்கம் - மனக்கலக்கம். கடலிடை ஆழ்கின்ருர் ஒரு மரக்கலம் பெற்றென மறுக்க நீங்கினர். (ஆ : 123) வல்லிய மருங்குகண்ட மானென மறுக்க முற்று. (யுத் : 1599) உயிர்க்கொரு மறுக்கந் தோன்ற. (யுத் : 4292)

2. கவலை. எற்பின் வையகம் மறுகுறும் என்பதோர் மறுக்க முண்டரோ. (பா : 182)

3. மனக்குழப்பம். அரக்கர் நாமமே வாய்வெரீஇ அலமரும் மறுக்கம் நீங்கினர். (ஆ : 122) (ஆ : 123)

4. கலவரம் கலக்கம். சண்ட மாருதம் வடதிசை தோன்றிய மறுக்க முற்றதால். (யுத் : 2748)

மறுக்கு - மனக்கலக்கம். பாருளோர் எஞ்சலின் மறுக்கினேடிரியல் போயுற. (அ : 901)

மறுக்குதல் - ஆட்சேபித்தல். நிராகரித்தல். வானிடைப் புகுதி யன்றே யான் பழிமறுக்கி லென்ருன். (யுத் : 3061)

மறுக்குறுதல் - கலங்குதல். மறுக்குறுகின்ற நெஞ்சின் மாதரை வைது நோக்கி. (சு : 928) அஞ்சுற்று மறுக்குறும். (ஆ : 771) மறுக்குற்று மயங்க. (கி : 724)

மறுகா - 1. அழியாத. மறுகா நெறி. (ஆ : 93)
2. கலங்கி. மறந்தான் நினைவும் உயிரும் மன்னன் என்ன மறுகா. (அ : 364)

மறுகா நெறி - அழியாத பதவி; பரமபதம். (ஆ : 93)

மறுகு - 1. வீதி. தெரு. வரைத்தடந் தோளுங் காண மறுகினின் வீழும் மாதர். (பா : 1125)
2. பெருவீதி. மாறுமாருகி வாளா கிடக்கிலா மறுகிற் சென்றுர். (பா : 570)

மறுகுதல் – 1. மனங்கலங்குதல். மலங்கிளர் இரண்டுபாலும் மறுகினர். (அ : 1037)
அவ்விடத்தவர் மறுகியஞ்சி நெஞ்சழிந்து. (கி : 46)
2. வருந்துதல். சில பயமுந்தத் திண்டாடித் திசையறியா மறுகினர். (சு : 968)
3. சுழலுதல் - மறுகு வாட்கண்கள். (சு : 289) மறுகியபொடி. (யுத் : 3092)
4. புரளுதல். உயிர்பதைப்ப மண்ணுற்றயர்ந்து மறுகிற்றுடம்பெல்லாம். (அ : 390)
5. கலங்குதல். மறுகாவகை. (யுத் : 3051)

மறுத்தல் – 1. தடுத்தல். அத்தெய்வக் கற்பினுள் வாயிடை மொழிந்த சொல் மறுக்கவல்லமோ. (யுத் : 93) மறுக்கிலா மழை போல். (யுத் : 1442) மறுக்கு மீட்டதோ. (அ : 1191)
2. பகைமை பாராட்டுதல். மறுத்தெழு மறலிகள் என அதிர்ந்தார். (சு : 849)
3. உடன்படாமை. ஒருத்தன் மனையுற்றுள் தொழத்தொழ மறுத்தல் புகழ்போலாம். (யுத்·62) மன்னனுசி என் சொல்லை மருது. (யுத் : 4140) மறுக்கற் பாலதன்று. (அ : 1197)

மறுப்பட – குற்றம் உண்டானல். களிப்பின் வெம்போர் மதுகைய வீரவாழ்க்கை மறுப்பட ஆவிபேணு வாரணம் பொருத்துவாரும். (பா : 47)

மறுப்பு – மறுக்கப்படுதல். வெறுப்புண்டாய ஒருத்தியை வெண்டினல் மறுப்புண்டாய பின் வாழ்கின்ற வாழ்வு. (சு : 1143)

மறுபடை – பகைவர்படை (அண்) எதிர்த்துப் போர்செய்யும் சேனைகள். மன்னர்கள் மறுபடை. (கி : 460)

மறுமை - 1. மோட்சம். மறுமைகண்ட மெய்ஞ்ஞானியர். (யுத் : 548)
2. இறந்து சென்று மறுமையில் அனுபவிக்கும் இன்பம். இம்மையே மறுமைதானு நல்கினை இசையோடென்ருள். (சு : 560)

மறுமை கண்ட மெய்ஞ்ஞானியர் - மோட்சத்தைப் பெற்ற தத்துவ ஞானிகள். (யுத் : 548)

மறுவதாக்கிய - பழியுண்டாம்படி செய்த. களங்கம் உண்டு பண்ணிய மறுவதாக்கிய எழுபது வெள்ளமும் மாள. (யுத்:2457) அது : பகுதிப்பொருள் விகுதி.

மறுவறு கற்பு 1. குற்றமற்ற கற்பு. அறுபதினுயிரர் அரசன் தேவியர் மறுவறு கற்பினர். (அ : 472)
2. குற்றமில்லாத கல்வி. (வை.மு) குற்றமில்லாத கற்பு. (அண்) மறுவறு கற்பினில் வையம் யாவையும் அறுபதினுயிரமாண்டும் ஆண்டவன். (அ : 1137)

மறுவில் தொல்குலம் - குற்றமற்ற பழைமையான குலங்கள். மறுவில் தொல்குலங்களை மாசிட்டேற்றினேன். (அ : 904)

மறுவிலன்பு - குற்றமற்ற அன்பு செய்தல்: நால்வர்க்கும் மறுவிலன்பினில் வேற்றுமை மாற்றினுள். (அ : 300)

மறுவிலான் - குற்றம் இல்லாதவன். களங்கம் அற்றவன். (சுக்கிரீவன்) மறுவிலானது கூறலும் வானவர்க்கிறைவன் ·முறுவல் செய்து. (கி : 159)

மறுவின் மைந்தன் - குற்றமற்ற மகள். மறுவின் மைந்தனே. (அ : 713)

மறுவேதுமிலாப் பரதா - குற்றம் யாதுமில்லாத பரதனே. மறுவேதுமிலாப் பரதா இளையோய் பழிபூணுதிரோ. (ஆ : 891)

மறை - 1. இரகசியச் செயல். அறை பறையனைய நீரார் அருமறைக் காவரோதான். (பா : 1102)
2. வேதம். மறையின் மாதவத் தருமறை முனிவன். (ஆ:934)
3. வேதவிதி. மறைவேள்வி. (பா : 719)

மறைக்கடையரக்கி - வேத ஒழுக்கங்களுக்குப் புறம்பான ஒழுகலாற்றினையுடைய அரக்கி. மறைக்கடையரக்கி வடவைக்கனல் இரண்டாய் நிறைக்கடல் முளைத்தென நெருப்பெழ விழித்தாள். (பா : 390)

மறைக்கிழவன் - பிரமன். முந்தினன் அருமறைக்கிழவன். (பா : 369)

மறைக்குமெட்டாத பரஞ்சுடர் - வேதத்திற்கும் எட்டாத மேலான சோதி வடிவினனான திருமால். (யுத் : 2683)

மறைக்குலவுநூல் - வேதமாகிய விளங்குகின்ற சாஸ்திரம். (வை.மு) கோதிலா அருமறைக் குலவு நூல்வலாய். (அ : 989) [பா : பே]

மறைக் கொழுந்து - வேதங்களாகிய கொடிகள். முதிய நான் மறைக் கொழுந்து மேற் படர்தரக் கொளு கொம்பாயினன். (பா : 253)

மறைகள் வல்லோர் - வேதம் பயின்றவர்கள். மேரு மாற்றினன் வடபாற்றேன்று மென்பது மறைகள் வல்லோர் சாற்றினர். (யுத் : 2711)

மறைகளின் இறுதி-வேதங்களின்முடிவு வேதாந்தத்தின் பொருள். மறைகளின் இறுதி கண்டான். (யுத் : 4112)

மறைகளின் தலைகள் - வேதங்களின் சிரசுகள்; வேதாந்தமாகிய உபநிடதங்கள். தம் பெருந் தன்மை தாந்தெரி மறைகளின் தலைகள் மன்பெரும் பரமார்த்த மென்றுரைக்கின்ற மாற்றம். (யுத் : 4021)

மறைகளுக் கிறுதி யாவார் - வேதங்களின் முடிவான உபநிடதங் களிற் கூறப்படுகின்ற பொருளாயிருப்பவர். (வை.மு) (கலா) வேதங்களின் முடிபாய் விளங்குபவன். (அண்) (சு : 1)

மறைச்சிரம் - வேதாந்தம். சித்தென அருமறைச் சிரத்தில் தேறிய தத்துவம். (யுத் : 191)

மறை தந்த நா - வேதங்களைப் பயின்ற வாய். வாய் தந்தன கூறுதியோ மறைதந்த நாவால். (அ : 428)

மறை தந்துளான் - நான்கு வேதங்களை வெளியிட் டருளினவ னாகிய திருமால். இருமையே அரசாளுதி ஈறிலாத் தரும சீல வென்றுன் மறை தந்துளான். (யுத் : 3,32)

மறைதர - மறையுமாறு கான்கிடந்தது மறைதர (ஆ : 987)

மறைதல் - 1. அத்தமித்தல் மண்டலந்தரு கதிரவன் வந்துபோய் மறையும். (யுத் : 142)

2. கண்ணுக்குப் புலப்படா திருத்தல். வந்தான் மறைந்து பிரிவால் வருந்தும். (யுத் : 2202)

மறைதுறத்தல் - வேத ஒழுக்கத்திற்கு மாறுதல். வன்றெழிலினைய் மறைதுறந்து சிறைவைத்தாய். (யுத் : 63)

மறைதெறிந்த நூலோர் - வேதம் முதலிய சாஸ்திரங்களை யுணர்ந்தவர்கள். நீதறு குணத்தான் மிக்க செழு மறையுணர்ந்த நூலோர். (பா : 658)

மறைந்துறைந் தொதுங்கி வாழ்தல் - பதுங்கி வசித்து ஒதுங்கி வாழ்தல். ஆண்மையன்று சேமம் மறைந் துறைந் தொதுங்கி வாழ்தல். (யுத் : 931)

மறைநாலும் - வேதங்கள் நான்கும். உயிர்பேணும் நடையினன் மறைநாலு நடநவில்தரு நாவான். (அ : 710)

மறை நாவலர் - வேதங்களில் வல்ல அந்தணர். மறைநாவலர் வேடமேவினர். (கி : 929)

மறை நான்கினேடியைந்தபிற - நான்கு வேதங்களும் அவற்றேடு பொருந்திய ம்மாம்சை புராணம் நியாயம் தருமசாஸ்திரம் முதலிய நூல்களும. இரைத்த மறைநான்கினேடியைந்த பிறயாவும் நிரைத்த நெடுஞானம். (ஆ : 160)

மறைநெறியின் நின்றமெய் - வேத மார்க்கத்திலுள்ள தத்துவப் பொருளாகிய கடவுள். (யுத் : 423)

மறை நெறியினின்ற மெய்பினைப் பொய் யென்றுன் - நாத்திகன். (யுத் : 423)

மறைப்பொருள் - வேத சித்தாந்தம். வேதத்தின் முடிந்த பொருள். திருவிலி மற்றிதெம்மறைப் பொருளெனத் தெரிந்தாய். (யுத் :182)

மறைபிழையாதவன் - வைதிகநெறி தவருத இராமபிரான். வரம் பிழைக்கும் மறைபிழையாதவன் சரம்பிழைக்குமென்றெண்ணுதல் சாலுமோ. (சு : 1145)

மறைமன்னுதல் - வேதவிதிப்படி அமைதல். மறைமன்னு மணிமுடியும் ஆரமும். (பா : 726)

மறைமுடிவு - (நான்கு) வேதங்களின் முடிவு. வேதாந்தம் சொன்ன நான்மறை முடிவினிற்றணிந்த மெய்த்துணிவு நின்னலாதில்லை. (யுத் : 4019)

மறைமுதல் தனிநாயகன் - வேதத்தினுற் பிரதிபாதிக்கப்படுகின்ற ஒப்பற்ற தலைவனுகிய இராமபிரான். (வை. மு.) வேத முதல்வனும் ஒப்பற் றலைவனுமாகிய இராமபிரான். (கலா) வேதங்களில் சிறப்பித்து சொல்லப்பட்ட ஒப்பற்ற தலைவனுகிய இராமன். (யுத் : 3766)

மறை முறைமொழிந்த சொற்கொள் வேள்வி - வேதங்கள் முறையாகக் கூறிய வேத மந்திரங்களைக் கொண்டு செய்யப்பெறும் யாகம். மறை முறை மொழிந்த சொற்கொள் வேள்வி போய்த் தொடங்குவா னமைந்தவன். (யுத் : 2477)

மறையவர்-வேதம்வல்ல முனிவர். பிராமணர். மறையவர் தொடரப் போனுன். (அ : 669)

மறையவன் - 1. பிரமன். மறையவன் வகுத்தன ... நிற்ப செல்வன இறைவனை யில்லன யாவை காண்கிலம். (அ : 942)
2. புரோகிதன்.(வசிட்டன்) தக்க நன்மறையவன் சடங்குகாட்ட. (அ : 1146)

மறையின் கேள்வன் - வேதங்களின் தலைவனுன இராமபிரான். (அண்) வேதங்களுக்கு உரிமையுடைய பரத்துவாசன். (கலா) மறையின் கேள்வற்கு மன்னிளந் தோன்றல். (அ : 1068)

மறையின் தெரிவு - வேதத்தின் தெளிபொருளா யுள்ளவன். இராமபிரான்) மறையின் தெளிவே. (யுத் : 2636)

மறையின் நிலையே - மறைகள் தங்கும் நிலையமாயிருப்பவனே. நெறியார் மலையின் நிலையே. (அ : 238)

மறையின் நிறம் - வேதங்களின் தன்மை. (வை.மு) வேதத்தின் மாறுபட்ட தன்மை. (கலா) வேதத்தின் உயர்நிலையான கருத்து. (அண்) மறையின் நிறத்தைச் சிறுங்கொள் நெடுந்தகையோன் என நடுங்கா. (ஆ : 973)

மறையுழவன் - வேதங்களில் வல்லவன். வரிசிலையுழவனு மறையுழவனை நீ புரிதொழில் எனையது. (ஆ : 111)

மறையெல்லை நோக்கினர் - வேதத்தின் முடிவை (வேதாந்தத்தை) அறிந்தவர். (ஆ : 1051)

மறையெல்லை யுணர்ந்தான் – வேதங்களின் முடிந்த எல்லையாகிய பரம்பொருளை உணர்ந்தவன்; பிரகலாதன். (யுத் : 232)

மறையெனும் நடையினுர் வேதங்கள் நல்லொழுக்கமென்று கூறு வதைத் தமது ஒழுக்கமாகக் கொண்டவர். (இராமன் முதலிய நால்வர்) தாதை தன் மேல் வருந்தன்மையான மிக விளங்கினர் கள் தாம் நால்வரும் பொருவில் நான்மறையெனும் நடையினுர். (பா : 1141)

மறையோதுவித்தல் – வேதங்களைக் கற்பித்தல். மறையோதுவித்தி. வரை வளர்த்தாலும் வசிட்டன் காண். (பா : 744)

மறையோர் – அந்தணர் சூதகற்றுந் திருமறையோர். (கி : 771) [பா : பே] (யுத் : 4147)

மறையோன் – வேதம் வல்லவன். (பரத்துவாசன்) மறையோனும் உய்குவென் இவனெடுயான் உடனுறைதலின் என்பான். (அ : 718)

மறை வரன் முறைத்துணி பொருட்கெல்லாம் எல்லை கண்டான் – வேதங்கள் மரபு வழுவாமல் அறுதியிட்டுச் சொல்லியிருக்கிற எல்லாப் பொருள்கட்கும் முடிவெல்லையாகக் காணப் பட்டவனுகிய நாராயணன். (யுத் : 158)

மறை வல்லோர் – வேதங்களில் வல்ல அந்தணர். மறைவல் லோர்க்கு வரம்பறு மணியும் பொன்னும் ...... நல்கி. (பா : 888) [பா : பே]

மறைவாணர் - வேதவித்துக்களான அந்தணர். பெருந்தேவரு மறைவாணரு மஞ்சி. (யுத் : 3718)

மறைவித்து – முறையச்செய்து. மூடி. மாதிர மனைத்தையும் மறை வித்தளந்த தோளினன். (சு : 467)

மறைவிதி – வேத ஒழுக்கம். மறைவிதியென் மெய்ம்மையென். (யுத் : 2732)

மறைவேள்வி – வேதவிதிப்படிசெய்யும் வேள்வி. மறைவேள்வி முற்றுவித்து. (பா : 719)

மன் – 1. மிகுதி குற்றம். மன்னும் பயக்கும். (அ : 425)
2. நிலைபெற்ற. மன்னுயிர். (அ: 15)
3. தலைசிறந்த. மன்னணிப்புரவி. (பா : 830)

4 அரசன். தாழும் மன்னிலே. (அ : 177) (யுத் : 1714)
5. கணவன். வஞ்சனை மானின்பின் மன்னைப்போக்கி. (சு : 505)
6. பெருமை. தயமுகன் தருகென்றேய மன்னுடைச்சேனை. (சு : 814)

மன்அறவேலி – அரச தர்மமாகிய வேலி. வாலியைப் படுத்தாயலை மன்னற வேலியைப் படுத்தாய். (கி : 326)

மன்புகழ்பெருமை – அரசர் பாராட்டும் பெருமை. மன்புகழ் பெருமை நுங்கள் குலத்தினோர் புகழ்களெல்லாம் உன்புகழ் ஆக்கிக் கொண்டாய். (அ : 1028)

மன்பெரும் பரமார்த்தம் – அழிவின்றி நிலைபெற்ற மேலான பெரும் பொருள். (யுத் : 4021)

மன்மத – ஆயன் மன்மதனாகிய இடையன். தொடைமேவுங் கோலைக் கொண்ட மன்மத ஆயன். (பா : 1008)

மன்மதக் களிறு – மன்மதனது யானை என்று சொல்லப்படுகின்ற இரவையொத்த கரிய மகளிர் கூந்தல். (வை.மு) மன்மதன் ஏறும் யானை என்றது இருளை. கூந்தலுக்கு ஆயிற்று. (கலா) மன்மதக் களிறும் மாதர் கொங்கையும் மாரனம்பும் தென் வரைச் சாந்து நாறுஞ் சேனையும் இறுத்ததன்றே. (பா : 897) [பா : பே]

மன்மதவேள் – மன்மதன். தென்றல் மன்மதவேள் எய்த புண்ணினிடை நுழைய. (பா : 627)

மன்மதன் – காமவேள். (யுத் : 470)

மன்மதன் கொற்றவாளி – மன்மதனது வெற்றியையுடைய மலரம்புகள் ஈசன் வேலும் குழிப்பரிதாய மார்பை மன்மதன் கொற்ற வாளி கிழிப்புற. (யுத் : 2296)

மன்மதன்சரம் – காமதேவனது அம்புகள். தையலாள் நயனவேலும் மன்மதன் சரமும் பாய மையலால் அறிவு நீங்கி. (பா : 552) தொளைத்தவன் மார்பின் மன்மதன் சரத்தொடும் பாய்ந்தது நிலவின் தாரைவாள். (யுத் : 470)

மன்ற – நிச்சயமாக. (அண்) சிறந்த இவனை முடித்தாலே யான் முடிதல் முறைமன்ற என்றுணர்வான். (சு : 328) அதன்றெனின் மாய்வன் மன்ற. (சு : 629)

மன்றல் - 1. மணம் வாசனை. மன்றல் நாறு ஒரு சிறை. (பா:1074) மன்றலந்துளப மாலை மானுட மடங்கல். (யுத் : 261)

2. கல்வி. (அண்) மன்றற் குளிர் வாச வயங்கனல் வாய். (பா : 1251)

3. மணப் பந்தல் மன்றலின் வந்து மணத்தவிசேறி. (பா:1330)

மன்றல் பொருதல் - வாசனை வீசுதல். மன்றல் பொருந் தேனுறு நலஞ் செறி தொங்கலினுன். (ஆ : 85)

மன்றல் மணம் - புது மணம். மன்றன் மண நாறு படமாடம். (பா : 921)

மன்றலங்குழற் சனகி - நறுமணம் பொருந்திய அழகிய கூந்தலை யுடைய சீதாபிராட்டி. (யுத் : 3631)

மன்றலங் கோதையார் - இயற்கை மணஞ் செறிந்த அழகிய கூந்தலை யுடைய பெண்கள். மன்றலங் கோதையார் மணியினும் பொன்னி னும் சென்று வந்துலவுமச் சிதைவிலா நிழலின். (பா : 1127)

மன்றலந்தார் - மணம் மிக்க அழகிய மலர் மாலை. எழுது சாந்தினும் மன்றலந் தாரினும் மறைந்திலா மையால். (அ : 971)

மன்றலந்துளப மாலை - பரிமளமுள்ள அழகிய திருத்துழாய் மாலை. மன்றலந் துளப மாலை மானுட மடங்கல்வானிற் சென்றது. (யுத் : 261)

மன்றன் மணம் - மன்றல் மணம் பார்க்க.

மன்றன்மா மலரான் - பிரமன். (யுத் : 3890)

மன்று - 1. பலர் கூடியிருக்கும் ஊர்ப் பொதுவாகிய அம்பலம். மன்று களல்லன மாடமாளிகை. (பா : 131)

2. மணம். (உ.வி) (பா : 203)

3. தோட்டத்தின்நடு. (அண்) மன்றலர் செழுந்துள வணியுமா யனுர். (பா : 203)

4. நீதிமன்றம். (அண்) மன்றிடை நலிந்து வலியோர்கள் எளி யோரைக் கொன்றனர் நுகர்ந்த பொருள். (ஆ : 535) மன்றி டைப் பிறர் பொருள் மறைத்து வெளவினேன். (அ : 897)

5. வெளியிடம். (உ.வி) (ஆ : 535)
6. நிச்சயம். மற்றினி ஒருவர் மேலோர் மரனெடுங் கற்கள் விசப் பெற்றிலமாதுமன்றே. (யுத் : 1399)

மன்னர் - அரசர். அம்மன்னர் சேனை. (பா : 771)

மன்னர் குலக்காவல் - மன்னர் குலத்திற்குரிய காவற்றொழிதல். உலகேழினோடேழு மன்னர் குலக்காவலும் யான்தரக் கோடி. (அ : 421)

மன்னர் மன்னவன் செம்மல் - அரசர்க்கரசனாகிய தசரத சக்கர வர்த்தியின் குமாரன். மன்னர் மன்னவன் செம்மல் மரபினாற் பின்னுறத் தன் பெருங்கரம் நீட்டினான். (ஆ : 544)

மன்னர் மன்னன் - தசரதன். மன்னர் மன்னனை வற்புறுத்தாது. (அ : 315)

மன்னவர் - அரசர். மன்னவர் உளர்கொலோ மதி கெட்டாரென் பார். (பா : 757)

மன்னவர்க்கரசன் - வேந்தர் வேந்தன். சக்கரவர்த்தி. (இராம பிரான்) போர் மேற்கொண்டு மன்னவர்க்கரசன் வந்தான். (யுத் : 780)

மன்னவர்தம் மன்னன் மகன் - இராமன். (யுத் : 3658)

மன்னவர் பிரான் - அரசர்க்கரசன் தசரதன். தாவின் மன்னவர் பிரான் வர. (பா : 1125)

மன்னவன் - அரசன். மன்னவன் பணியன்றாகின் நும் பணி மறுப்பனோ. (அ : 295)

மன்னவன் தலைமகன் - சக்கரவர்த்தியின் முதல் மகனான இராமன். மன்னவன் தலைமகன் வருத்தமாற்றுவான். (கி : 454)

மன்னவையிருந்த மணி மண்டபம் - அரசரது பேரவை கூடியிருந்த மணிகளிழைக்கப்பெற்ற மண்டபம். மன்னவையிருந்த மணி மண்டபமடைந்தாள். (பா : 1229)

மன்னன் - அரசன். இம்மன்னன் பெருஞ்சேனை. (பா : 771)

மன்னன் இல் - அரச மாளிகை. வீரனைக் குடைகெழு மன்னன் இல் கொண்டு போயினான். (சு : 1067)

மன்னன் மகன் - சக்கரவர்த்தியின் மகன். பின்னும் அருகும் உடனும் பிரியான் மன்னவன் மகன் வீரர் மயங்கினரால். (யுத் : 3472) (ஆ . 917)

மன்னி - பொருந்தி மாமணி மண்டபம் மன்னி. (பா : 257

மன்னிலாத் தண்டலில் பெரும்படை - அரசனில்லாமையாற் கெடுத லில்லாத பெரிய (வானரப்)படை. மன்னிலாத் தண்டலில் பெரும் படை சிந்தும். (யுத் : 1486)

மன்னிளங் குமரன் - அரச குமாரனாகிய இளையோன். (இலக்குவன்) வனை கழல் வயிரத்திண் டோள் மன்னிளங் குமரன் சொல்வான். கி ; 633)

மன்னுதல் - நிலைநிற்றல். மன்னும் நம் பகைஞராம் வானுளோர். (யுத் : 110)

மன்னுயிர் - உலகத்து நிலைபெற்ற உயிர்கள். நான் இந்நாணிலம் மன்னுயிர்ப் பொறை சுமந்திருந்து வாழ்கிலேன். (அ : 950) மென் புறவின் மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாருக வழங்கின னல். (பா : 727) மன்னும் மன்னுயிர். (அ : 33)

மன்னுயிர்கட் கெல்லாம் தாயினு மன்பினன்-இராமபிரான். (யுத்:708)

மன்னுயிர்க்குறுதி - நிலை பேறுடைய உயிர்களுக்கு இதம். (வை.மு) மன்னவன் கருதிய பயனும் பொருந்தும் மன்னுயிர்க் குறுதியும் பொதுவுற நோக்கி. (அ : 34)

மன்னெடுங் காலவன் காற்று - மிகப் பெரிய ஊழிக் காற்று. புகர் முகப் பகழி யென்னும் மன்னெடுங் காலவன் காற்றடித்ததும். (பா : 414)

மன்னெடுங் குமரன் - பெருமைமிக்க அரச குமாரன். மன்னெடுங் குமர. (யுத் : 457)

மன்னெறி - க்ஷத்திரிய தருமமாகிய நெறி. ஈதென்றிற மன்னெறி யாமென. (யுத் : 17(1)

மனக்கடுப்பு - மனக் கொதிப்பு. சினக்கடுந்திறல் சிற்ற வெந்தி யினன் மனக்கடுப்பினன். (அ : 1067)

மனக்களி - மனமகிழ்ச்சி. நின் மனக்களிக்கு மற்றுன்னையம் மானவன் தனக்ககளிக்கும் பணி. (யுத் : 3950)

மனக் கினிய தம்பி - மனத்திற்கு இனிமைதரும் இளவலான இலக்குமணன். மனக்கினிய தம்பி யொடும் சனகன் பெரு வேள்விச் சாலை சார்ந்தான். (பா : 718)

மனக்கினிய துணைவன் - மனதுக்கு இனிய நண்பன். மன் முன்னே தழீஇக்கொண்ட மனக்கினிய துணைவனேல். (அ : 1019)

மனக்கு - மனத்துக்கு. மனக்கு நோய் செயல். (யுத் : 3956)

மனக்கு நோய் - மனத்துன்பம் உள்ளத்தின் கண் உள்ள பிணி. மனக்கு நோய் துடைத்து வந்த மரையையும் விளக்கிய வாழி (யுத் : 1358)

மனக்குறு நெறி - மனத்திற் கேற்ற வழி. மனக்குறும் நெறிசெலும் வள்ளியோய் (அ : 841)

மனக்கொடு - ஆலோசனை கொண்டு மனக்கொடன்றியும் வறியன வழங்கினை. (யுத் : 115)

மனக் கொளல் - 1. நினைத்தல். மற்றொரு வெஞ்சிலை யின்மை மனக் கொளா. (ஆ : 543) மனக் கொண்டா யெனின். (சு : 456)
2. மனதிற் பதியவைத்தல். இதனை மனக் கொள் நீ. (சு : 633)
3. உள்ளத்தே கொள்வது தூய்மைதன்னைக் காட்டுதற் கென்பது மனங்கொளல்தகுதி. (யுத் : 4043)

மனக்கொளா - மனத்திற்கொண்டு. மங்கைத்தியணையாளு மனக் கொளா. (பா : 409)

மனக் கொன்றுதனவரம் - மனத்துக்குப் பொருந்தாதனவாகிய வரங்கள். மனக்கொன்றுதன வரத்தின் நின்னையும் நினக் கொன்று நிலைநிறுவி. (அ : 1163)

மனக்கோள் - நெஞ்சில்மாறுபாடு. விரோதம் யாரொடும் மனக் கோளிலது என்றபின் போரொடுங்கும். (அ : 110) [பா : பே]

மனகதி - இராவணன் ஏவலாளன். மனகதி வாயுவேகன் மருத்தன் மாமேகன் என்றிவ் வினையறி தொழிலர். (யுத் : 1225)

மனங்கழன்றனவாளி - (காமனுடைய) மலர் அம்புகளை நெஞ்சிலே வைத்து ஊடுருவி வெளிவிழுந்தவை. எரிந்த வாள் அனங்கன் வாளி மனங்கழன்றனவும். (பா : 1165)

மனங்கள் - மனங்கள். அற்றந்தான் மனங்கள் போல முகமும் மறைக்குமே. (பா : 1176)

மனங் கொதித்தல் - மனம் வெதும்புதல். கொடிச்சியர்தம் மனங் கொதிப்ப வாடுகின்றனர். (அ : 748)

மனங்கொள்ளுதல் - மனத்திற் பதித்தல். கற்புடையாள்தனே வற் புறுத்தி மனங்கொளத்தேற்றுவான். (அ : 311) மனங்கொளா உவந்தான். (யுத் : 4045)

மனச்சினம் - மனதில் அடக்கிவைத்த சினம். முறிந்துதிர நூறி என் மனச்சின முடிப்பேன். (சு : 610)

மனச்செம்மை - நடுவுநிலைமை. நல்லருளும் மனச்செம்மையும் அருளும் நீத்தபின்னுவதுண்டாகுமோ. (அ : 108)

மனத்தடைத்தல் - மனத்திற் கொள்ளுதல். நின் கற்பினை யுலகுக்கு நாட்ட அங்கிபுக்கி டென்றுணர்த்திய அது மனத்தடையேல். (யுத் : 4041) போய பொருள் மனத்தடைப் பாயல்லை. (கி:639)

மனத்தடையேல் - மனத்திற் கொள்ளாதே. (யுத் : 4041)

மனத்திடை வலித்தல் - உள்ளத்திலே உறுதியாகக் கொள்ளுதல். அருஞ் சமங் கடத்தல் மறத்தினுலரிதென்பது மனத்திடை வலித்தி. (யுத் : 1214)

மனத்திற் செல்லல் - மனத்தைப் போல விரைந்து செல்லுதல். மனத்திற் செல்லும் மொய்விசும் போடமாகத் தேவரின் முனிவர் போனார். (அ : 1053)

மனத்திற் போதல் - மனத்தினைப் போலப் போதல். வண்டின துருவங் கொண்டான் மானவன் மனத்திற் போனான். (யுத் : 2885)

மனத்தில் நோக்குதல் - கருதுதல். வருந்துவர் சிறிதென மனத்தில் நோக்கினான். (பா : 358)

மனத்தின் மாண்பு - நெஞ்சினது பெருங்குணம். கற்பு நெறியில் நிற்றலாகிய பெருங்குணம். வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையோ. (சு : 398)

மனத்தின் முன் செலல் - மனம் செல்வதற்கு முன்னே விரைவாகச் செல்லுதல் மனத்தின் முன் செல்லு மானம். (யுத் : 2881)

மனத்துணர்தல் - உள்ளத்தில் அறிதல். உத்தம நீ மனத்துணர் கிலாமையால். (யுத் : 3994)

மனத் துணுக்கம் - உளநடுக்கம். மனத்துணுக்க மோடெழுந்தாள். (அ : 511)

மனத்து மாசு - மனத்தன்பம். நினைத்திருந்து துயர முழக்கிலேன் மனத்து மாசு என்னுயிரொடும் வாங்குவேன். (யுத் : 4137)

மனத்துமாசு உயிரொடும் வாங்குதல் - உயிருடனே மனத் துன்பத்தையும் நீக்கிக் கொள்ளுதல். (உயிர் நீங்கினாலன்றி மனத் துன்பமும் நீங்காது.) (யுத் : 4137)

மனத்துள் கோடி - மனத்துட் கொள்க. நீயிது கோதறு குணத்தினாய் மனத்துட் கோடியால். (அ : 938)

மனத்தொழில் - மனத்தாற் படைக்குந் தொழில். மயன் முதல் தெய்வத்தச்சரும் தத்தம் மனத்தொழில் நாணினர் மறந்தார். (பா : 96)

மனந்தலை வருங்கனவு - மனத்தினிடத்தே தோன்றிய கனவு. மனந் தலை வருங்கனவின் இன்சுவை மறந்தார். (ஆ : 601)

மனநிலை - உள்ளத்தின் நிலைமை. மங்கையர் மனநிலை யுணர வல்லரோ. (யுத் : 3996)

மனப்பட - மனத்திற் பதியும்படி. மனப்பட எனக்குரை வழங்குவீர். (ஆ : 192)

மனம் - உள்ளம். மனக்கு நல்லன சொல்லினை. (அ : 162)

மனம் உக்கு - மனமுடைந்து. மிதிலைத் தொன் மக்களு மனமுக்கு. (பா : 1351)

மனம் குளிர்தல் - மனம் மகிழ்ச்சியால் குளிர்தல். அங்கமும் மனமதென்னக் குளிர்ந்தது. (யுத் : 431)

மனம் கைகோத்தல் – காதன்மையோடு கலத்தல். கண்டவர் மனங்கள் கைகோப்ப. (பா : 840

மனம் நுடங்குதல் – மனம் தளர்தல். மனமும் மெய்யும் தன்நூலுறு மருங்குல்போல் நுடங்குவாள். (பா : 604)

மனம் பின்செலல் - உள்ளம் தொடர்ந்து வருதல். மிதிலைநன் மாநகர் உறைவார் மனம் நனிபின் செல. (பா : 1352)

மனம் வலித்தல் – மனஉறுதி பூணுதல். வஞ்சமிலா மனத்தானை வானிற்றொடர்வான் மனம் வலித்தார். (அ : 601)

மனம் வெதும்புதல் - உள்ளங் கொதித்தல். இல்லையென்றுளித்த தாமென மனம் வெதும்பி. (யுத் : 542)

மன முதற்கரணங்கள் - மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கு. சனகிபால் மனமுதற்கரணங்கள் கடிதோட. (சு : 305)

மனமெனும் இழுதை - மனம் என்கின்றபேய். மனமெனும் இழுதை ஏறிய அஞ்சுதேர். (அ : 19)

மனமெனும் காலச்செந்தீ - மனமென்கின்ற யுகாந்த காலத்துச் செந்நிறமாகத் தோன்றும் நெருப்பு. வெம்பிக் காய்ந்தது அவ் விலங்கை வேந்தன் மனமெனுங் காலச் செந்தீ. (யுத் : 1117)

மனமெனும் மத்தயானை - மனம் என்கின்ற மதம்பிடித்த யானை. மனமெனும் மத்த யானையின் நிறையெனு மங்குசம் நிமிர்ந்து போயிற்றே. (பா : 603)

மனவு - அரதனம். அரதனங்களின் பொதுப் பெயா. மனவினிற் சுடர் மாமுக மாட்சியான். (யுத் : 3951)

மனன் - மனம். (சு : 517)

மனனகம் - மனத்தினுள். கள்ளம் மனனகத்துடையராய வஞ்சகர் மாற்றம் அல்லன். (சு : 517)

மனனுறு கடவுள் - இஷ்ட தேவதை. வாழியென அவர் மனனுறு கடவுள் தாழ்குவர். (பா : 312)

மனிசர் - மனிதர். போயினி மனிசரைக் குரங்கைப் பூமியில் தேயுமின். (யுத் : 41) [பா : பே] (யுத் : 942)

மனிசன் - மனுஜன். காசிப முனிவரதுமனைவியருள்மனு என்பவளின் சந்ததியாக உண்டானவன். மனிசனுக்காக அஞ்சாது இங்கு வந்து இதனைச் சொன்ன தூதன் நீ யாவன் என்றான். (யுத்:942) (1305)

மனித்தர் - மனிதர். மனித்தர்க்குற்ற செயலெல்லாம் தையல் காணக் காட்டுமின்கள். (யுத் : 2626) (ஆ : 508)

மனித்தன் - மனிதன். மனிதனென இராமன். ஆற்றுமோ என்னை வெல்ல மனித்தன் என்றெண்ணுவான். (யுத் : 3689)

மனித்தனர் - மனிதராயிருப்பவர். மாரனர் தனியிலக்கை மனித்த னர் அழித்தாரே வரத்தினலே. (யுத் : 3911)

மனிதர் - மக்கள். மனிதர் வானவர் மற்றுளோர் அற்றங் காத்தளிப் பார். (அ : 41)

மனிதன் - மானிடன். மனிதன் வடிவங் கொண்ட மனுவுந் தன்னை மறந்தான். (அ : 363)

மனிதன் வடிவங்கொண்ட மனு - தசரதன். (அ : 363)

மனு-தர்ம சாஸ்திரம். வகுத்த அரசன் தெய்வத் தச்சருள் ஒருவன். மனுவின் நூல்நெறி நடக்குஞ் செவ்வையின். (பா : 103)

மனுகுல நாயகன் - மனுகுலத்துப் பிறந்த சிறந்த இராமபிரான். மனுகுல நாயகன் வாயில் முன்னினுன். (அ : 101)

மனுநீதியான் - மனுநீதியில் தவருதவனுகிய இராமன். அனைய தன்மையறிந்தும் அழித்தனை மனையின் மாட்சி என்றுன் மனு நீதியான். (கி : 352)

மனுநெறி - மனுதர்ம நூல் விதித்த நீதிநெறி. மனுநெறி போன தண்குடை வேந்தன் புகழென. (பா : 16)

மனுநெறி முறை - மனுநூல் முறை. மனுதர்ம சாஸ்திர முறை. வையக முழுதுஞ் செங்கோல் மனுநெறி முறையிற் செல்ல. (யுத் - 4356)

மனுமுதல் – மனுதர்ம சாஸ்திரம் முதலான நூல்கள். மனுஸ் மிருதி முதலான சாஸ்திரங்கள் நாமநூல் மனுமுதல் யாவையும் வரம்பு கண்டநீ. (யுத் : 366) வாழிய வேதநான்கும் மனுமுதல் வந்த நூலும். (யுத் . 2131)

மனுமுதல் மரபு – 1. மனுமுதலாக வழிவழிவந்த வழக்கு. மயின் முதற் குலத்துரிமையை மனுமுதன் மரபைச் செயிருறப் புலைச் சிந்தையால் என் சொனுய் தீயோய். (அ : 161)
2. மனுவேந்தனை முதல்வனுகப் பெற்றுவரும் நன்மரபு. (அண்) மனுவை முதலாகக்கொண்ட வம்சத்திற்கேற்ற முறைமை. (வை. மு.) வல்லைநீ மனுமுதன் மரபினேய் எனப் புல்லினன். (ஆ : 1129)

மனுவழக்கு – மனுநூலில் விதிக்கப்பெற்ற நீதிநெறி. (கி : 569)

மனுவின்நூல் – மனுதர்ம சாஸ்திரம். மனிதனுடைய (சிற்பி யினுடைய) எற்று நூல். மனுவின் நூனெறி நடக்குஞ் செவ்வை யின். (பா : 103)

மனுவின்வழி - மனுவின் வமிசம். மனுவின் வழிநின் கணவற்கு உயிரும் உதவி. (அ : 337)

மனுவெனுந்தகையன் - ஆதிமனுப்பேரரசன் என்று போற்றத்தக்க தகுதி சான்ற தயரதன். மனுவெனுந்தகையன் மார்பிடை மறைந்தன மலைத்தனி நெடுஞ்சிலையிறத் தவழ்தடங்கிரிகளே. (பா : 1136)

மனை - வீடு. மாளிகை. வரைப்புயத்தண்ணல் தன் மனையை நோக்கினன். (அ : 249) மனையின் வாழ்வும் உறக்கமும் மாற்றினன். (யுத் : 2105) வினையேன் வந்த மனைபொடிபட்டது. (யுத் : 2872).

2. மனைவி. பிருகு வென்னும் பெருந்தவன் தன்மனைவரு கயற்கட் கியாதி. (பா : 410)

3. உபரிகை. அறை. வள்ளியகன் மனை அன்னமாக. (யுத்:790)

மனைக்குலமணி - வீடுகளாகிய சிறந்த சாதி ரத்தினங்கள். குலமணி மனைக்கெலாம் விண்டுவின் தட மார்பினின் மணியொத்ததிது என வியப்புற்றான். (சு : 291)

மனைக் கொன்றுதவள் - மனைமாட்சி இல்லாதவள். மனைக் கொன்றுதவள் வரத்து நின்னையும் நினக் கொன்று நிலை நிறுவி. (அ:1163)

மனைப்பிறவி - குடிப்பிறப்பு. பேண நோற்றது மனைப்பிறவி. (சு : 402)

மனையாள் - மனைவி. இக்குறியுடைக் கொடி இராமன் மனையாளோ. (கி : 868)

மனையின் மாட்சி - இல்வாழ்க்கையின் மாண்பு. இல்லறத்தின் சிறப்பான கற்பு. அதாவது பிறர் மனைவியின் கற்பு (கலா) பிறர் மனையாளின் கற்பு மாண்பு. (அண்) அனைய தன்மையறிந்தும் அழித்தனை மனையின் மாட்சி. (கி : 352) மனையின் மாட்சி குலாம் மலை மண்டிலம். (கி : 943) (யுத் : 4032) (பா : 547)

மனையும் வாழ்வும் உறக்கமும் மாற்றினன் - மனைவியையும் மனைவியோடு கூடிவாழ்கின்ற இல்லற வாழ்க்கையையும் தூக்கத்தையும் துறந்தவனாகிய இலக்குவன் (யுத் : 2105)

மனையுற்றாள் - மனைவியாக இருப்பவள். ஒருத்தன் மனையுற்றாள் பொன்னடி தொழத்தொழ மறுத்தல் புகழ்போலாம். (யுத் : 62)

மனோலயம் - மனம் லயிக்குமிடம். மனம் இறைவனோடு ஒன்றுபடும் நிலை (அண்) மாயையிற் பிரிந்தோர்க்கெல்லாம் மனோலயம் வந்ததொத்தான். (யுத் : 4257)

## மா

மா - 1. விலங்கு, மிருகம், பறவை, நீர் வாழ்வன முதலியவற்றிற்கு வழங்கும் பெயர். திந்நாகமா. (சு : 40) இடங்கர் மா. (யுத் : 966) மாக்கூடு படர் வேலை. (யுத் : 1581)

2. கவரிமான். வருந்தலில் மானமா அனைய மாட்சியர். (சு : 507)

3. பெருமை. பெரிய. மாவணை நீலக்குன்றம். (யுத் : 900) மாவியல் வடதிசை. (கி : 444) மாமகம். (பா : 263) மாப்படை. (யுத் : 1532) மாகரத் தண்டு. (கி : 713) மா வாளிகள். (யுத் : 2931) மாவியல் தானை. (அ : 532) யாவர் மா மகள். (ஆ : 850)

4. சிறப்பு. நீல மா முகிலனான். (அ : 276)

5. இலக்குமி. மா வியல் நோக்கினாள். (பா : 1202)

6. காட்டுவிலங்கு. கடமா, ஊறுமா. (பா : 957)

7. குதிரை. தும்பியும் மாவும் மிடைந்த பெரும்படை சூழ்வாரும். (அ : 101)

8. மரம். மாவணை நீலக் குன்றம். (யுத் : 960)

9. வண்டு. மாப்பிறழ் நோக்கினார். (யுத் : 2787)

10. அழகு. மாவாளிகள் மா மழை போல் வரலால். (யுத்:2931)

11. ஒரு மரம். (உ.வி) (பா : 1202)

12. யானை. எண்டிசை சுமந்த மாவும் தேவரும் இரியல் போக. (சு : 750) எண்டிசை காக்கும் மாக்கள். (சு : 448)

13. கருமை. மா மழை. (யுத் : 2931) (உ.வி) மாக்கூடு படர் வேலை. (யுத் : 1580)

14. மிகுதி. இன்ன தேர் கேடுசூழ் மாகயத்தியை. (அ:233)

மாக்கதை - மகாகாவியம். மரா மரம் ஏழ் தொளை எய்த எய்தவற்கெய்திய மாக்கதை. (பா : 5)

மாக்கவந்தன் - பெரிய கவந்தன். (யுத் : 1497)

மாக்கள் - 1. கிங்கரர். எல்லையில் ஆற்றல் மாக்கள். (சு : 752)

2. குழந்தைகள். தத்தம் மாக்களைத் தம் படையாற் சிலர் தடிந்தார். (சு : 792)

மாக்கூடு படர்வேலை - கரு நிறம் பொருந்திய பரவிய கடல். (அண்) பல மிருகங்கள் கூடியுள்ள பரவிய கடல். (கலா) (யுத் : 1580)

மாக்கை - பெரிய கை எதிர்த்த வானரம் மாக்கை யொடிற்றன. (யுத் : 986

மாகதர் - இருந்து வாழ்த்துவோர். வானளைந்தது மாகதர் பாடலே (அ : 808)

மாகந்தம் - மிக்க நறுமணம். மிக்க பரிமளம். மாகந்தமும் மகரந்தமும் அள கந்தரு மதியின் பாகந்தரு நுதலாள். (அ : 612)

மாக நெடுவான் - மேலிடத்ததாகிய மிகப்பெரிய ஆகாயம். மாக நெடு வானிடை யிழிந்து புனல்வாரும் மேகம். சு : 712)

மாகம் - 1. மேகம். மாக மணி வேதிகையின். (அ : 545)
2. வான். உயர்ச்சி. மாகமடங்கல். (பா : 781)
3. ஆகாயம். விண். மாகத் தோள் வீர. (ஆ : 635) கெடக் குறியாகி மாகங் கிழக்கெழு வழக்கு நீங்கி. (சு : 29) (கி : 231)
4. விண்ணுலகம். மாகமும் நாகமும் மண்ணும் வென்ற தாளான். (அ : 206)
5. திசை. மாகவரை இற்றுக உதைத்தனள். (பா : 394)
6. பெரியதாம் தன்மை. மாக நெடுவான். (உ.வி) (சு : 712)
7. பேராகாசம். நாகத் தனி ஒரு வில்லியை நளிர் முப்புர முன்னுள் மாகத்திடை வளைவுற்றன ரென்ன. (ஆ : 464)

மாகம் மணி அணி தேர் - பெரிய ஆகாயத்தை அளாவிய அழகிய தேர். (வை.மு) ஆகாயத்தை அண்மி நின்ற அழகிய தேர். (பா : 1353)

மாக மடங்கல் - சீரிய சிங்கம். (மாகம் . வான்; இலக். உயர்வு). மாக மடங்கலும் மால் விடையும். (பா : 781)

மாகமணி வேதிகை - மேகம் தவழும் அழகிய திண்ணை. மாகமணி வேதிகையின் மாதவிசெய் பந்தர். (அ : 545)

மாக மாடம் - வானளாவிய மாளிகை. மாக மாடத்து அணையவர் வைகினர். (பா : 646)

மாகமா நதி - ஆகாய கங்கை. மாகமா நதி புவியிடை நடக்கின். (பா : 526)

மாக மீன் - நட்சத்திரம். மாக மீனெடு மலர்கள் தம்மில் வேற்றுமை தெளிதல் தேற்றும். (ஆ : 656)

மாகயத்தி - மிக்க கீழ்மைக் குணமுடையவள். இன்னதோர் கேடு சூழ்வதோர் மாகயத்தியை. (அ : 233)

மாகயாறு . திக்குகளை அளாவிய பெருநதி. மாக யாறியாவையும் வாரியற்றன. (கி : 551)

மாகராக நிறை வாளொளியோன் - ஆகாயத்திலே நிறைந்த செந்நிற மான மிக்க ஒளியுடையவனான சூரியன். மாகராக நிறை வாளொளிபோனை ஏகராசியின் எய்த எதிர்க்கும் வேக ராத. (யுத் : 823)

மாகவரை-திசையிலுள்ள எட்டு மலை. மாகவரை இற்றுக உதைத் தனள். (பா : 394)

மாகவன் திசைபத்து - ஆகாயம் முதலிய வலிய திசை பத்து. மாகவன்றிசை பத்தொடும் வரம்பிலா உலகிற்கு ஏக நாதனை. (சு : 1021)

மாக வாகாயம் - மாகம் எனப் படுகின்ற ஆகாய வழி.மாகவாகாயஞ் செல்ல வல்லையின்... ஏகுவானு பாய முண்டேல். (யுத் : 2815)

மாகவான் நகரம் - பெரிய மேலான நகரமாகிய அயோத்தி. மாகவான் நகரஞ் செல்ல. (யுத் : 2876)

மாகவெங்கதிர் - விண்ணிலுள்ள சூரியன். மாக வெங்கதிரெனும் வடவைத் தீச்சுட. (பா : 353)

மாக வெங்கனல் - ஆகாயம் முழுவதும் அளாவுகின்ற வெவ்விய அக்கினி. மாகவெங் கனலெனும் வடவைத் தீச்சுட. (பா : 353) [பா.பே]

மாகாயன் - அதிகாயன். எதிர்ந்துளனும் மாகாயன் நெடுந்தலை. (யுத் : 1758)

மாகார் - பெரிய காள மேகம். மா காரின் மின்கொடி மடக்கினர் அடுக்கி. (சு : 98)

மாகால் - 1. ஊழிக் காற்று. மேருவை அனுக்கும் மாகால் வழங்கு சிறு தென்றல் வர நின்ற. (சு : 97)

2. பெரிய காற்று. மாகால் விசைக்க வடம் மண்ணிலுற வாலோடு ஆகாய முற்றகதலி. (சு : 85)

மாகானகம் - பெரிய காடு. மாகானகத்திடை யோடலோடும். (ஆ : 966)

மா கொலை - பெருங்கொலை. பெருமை வாய்ந்த அழித்தற் றொழில். (அண்) செருத்தொழில் வருத்தந் தீர்க்க மாகொலை புரிந்த வள்ளல். (யுத் : 3490)

மாசடைந்த மெய் - அழுக்கடைந்த உடம்பு. வற்கலையினுடையானை மாசடைந்த மெய்யானை. (அ : 1021)

மாசிட்டேற்றுதல் - மாசுடையவனாக ஏற்றிக் கூறுதல். மறுவில் தொல்குலங்களை மாசிட்டேற்றினேன். (அ : 904)

மாசு - 1. குற்றம். மாசறு பிறவி. (பா : 573)
2. பழி. வல்லியன் மறவர் தம் வருக்கம் மாசற வெல்லினும் வெல்க. (சு : 506)
3. மேகம். மாசடை பரந்த மான மரகதத் தலம். (யுத் : 790)
4. புழுதி. அழுக்கு. மாசடைந்த மெய்யானை. (அ : 1021) மாசு புடை பூச. (கி : 863)

மாசுண்ட மணியனாள் - அழுக்குப்படிந்த இரத்தினத்தை ஒத்தவளாகிய சீதாபிராட்டி. (சு : 397)

மாசுண்டல் - 1. களங்க மெய்தல். குற்றப்படுதல். ஆசை நோய் கொன்ற தென்றால் ஆண்மை மாசுணுதோ. (யுத் : 1594)
2. அழுக்குப்படிதல். மாசுண்ட மணி. (சு : 397) [பா : பே]

மாசுண்ணும் - குற்ற முடையதாகும். அச்சொல்லும் மாசுண்ணும். (சு : 102)

மாசுணம் 1. பெரும் பாம்புகள். பேரவாவொடு மாசுணம் பேரவே. (பா : 954)
2. பெரிய புழுதி (சுண்ணம்) பேர ஆவொடு மாசுணம் பேரவே. (பா : 954)
3. ஆதிசேடன். தலையில் மாசுணம் தாங்கிய தாரணி. (ஆ:396)

மாசூணும் - குற்றப்படும். ஆசை நோய் கொன்ற தென்றால் ஆண்மை மாசூணு தன்றே. (யுத் : 1594)

மாட்சி - மேம்பாடு. பெருமை. மேன்மை. மாண்பு. வருந்தலில் மானமா அனைய மாட்சியர். (சு : 507) பொறியின் மாட்சியும். (யுத் : 480) கற்றுறு மாட்சி. (யுத் : 86) வானரஞ்சுட்ட தென் றுணர்தல் மாட்சியோ. (யுத் : 87)

மாட்டாதார் - பகைவர். போரில் எதிர்நிற்க மாட்டாதவர். மாட்டாதார் சிறை வைத்தோயை. (சு : 647)

மாட்டாமனிதன் - வலிமையற்ற மனிதன். என் மகனை மாட்டா மனிதன் தன் உந்து சிலைப் பகழிக் குண்ணக் கொடுத்தேனே. (யுத் : 1946)

மாட்டு - அருகில். அமளி மாட்டோர் தவிசுடைப் பீடம் (யுத்:1230)

மாட்டுதல் - 1. ஏற்றுதல். கொளுத்தல். விளக்கம் மாட்ட. (ஆ:576) வீறு பஞ்சின்றி அமுத நெய் மாட்டிய விளக்கே. (அ : 751)
2. இணைத்தல். ஆயிரந் திரு விளக்கமைய மாட்டிய சேயொளி விளக்கம். (சு : 381)
3. அழித்தல். மாள்வித்தல். தாதையைச் செற்றுன் சுற்றம் மாட்டிய வண்ண மென்ன. (யுத் : 727) மாட்டுவன் ஒருவன் தானே. (யுத் : 3592)
4. கட்டுதல். மாட்டும் புரவி ஆய மெலாம் மருவி வாங்குந் தொடை யழிந்த. (சு : 1161)
5. நிலை நிறுத்திக் காட்டுதல். எம்பி மேல் அன்பு மாட்டலால். (யுத் : 2768)
6. வாய்விட்டுச் சொல்லுதல். மாட்டாது நடுங்கினர் மாற்றம் மறந்து நின்றுர். (யுத் : 1955)
7. ஒடித்தல். அங்கதன் ஏவல் தன்னுல் மாட்டின கவியின் தானை மதுவளர் உலவை ஈட்டம். (சு : 1265)
8. வலியுடைத்தாதல். நில்லடா மாட்டாயாயின். (யுத் : 1420)

மாட்டுவித்தனை - அழிப்பித்தாய். மதுவனந் தன்னை இன்னேமாட்டுவித்தனை. (சு : 1269)

மாடகம் - முறுக்காணி. மாடகம் பற்றி வார்ந்த கள்ளென நரம்பு வீங்கி. (பா : 575)

மாடகூடம் - மண்டபச் சிகரம். மாடகூடங்கள் மாளிகைச் சிகரங்கள். (சு : 228)

மாடத்தும்பர் - மாடத்தின் மேலிடம். அம்மாடத் தும்பரளிக்கும் அமுதன்னுள். (பா : 589)

மாடம் - உபரிகை வீடு. மேல் நிவந்தெழுந்த மாட வெண்ணிலா முன்றில் நண்ணி. (சு : 278)

மாட மாளிகை - உபரிகைகளோடு கூடிய மாளிகை. பூத்தொடர் மன்றுகள் அல்லன மாட மாளிகை. (பா : 131)

மாடவீதி - உபரிகைகளைக் கொண்ட வீடுகளை இருபுறத்திலு முடைய வீதிகள். மணியிற் செய்த வெண்டளக் களப மாட வீதியும் பிறவும். (சு ; 3)

மாடற்கு - மார்தற்கு. இங்குள வெல்லாம் மாடற்கு இனிவரும் இடையூறில்லை. (யுத் : 2798)

மாடு - 1. பக்கம். மாறும் வேழமும் நாகமும் மாடெலாம் (பா:952) மாடே நின்றார். (சு : 958)

2. செல்வம் – பெருஞ்செல்வம். வீடு பெற்றவர் பெற்றதின் விழுமிய தியன்ற மாடு பெற்றனன். (யுத் : 161) திரண்டமாடு. (யுத் : 517)

3. அருகு. மாடு சென்றனர் மங்கையர் நால்வரே. (அ . 88) அலரி தோகையை மாடுறக் கொணர்ந்தனன். (யுத் : 4016) (யுத் : 2643)

4. இடையில். தேயு நெறி மாடு திரை யூடு விசை செல்ல. (யுத் : 699)

மாண் – 1. மாட்சி. அழகு. மொய்ம் மாண் கழலோன். (பா : 168) மாய்ப்பென் இன்றே வில் மாண் கொலை வாளியின். (சு : 576) [பா : பே]

2. பெருமை. மாண்கலந் தமைந்த மாயன் வடிவென முழுதும் வௌவ. (யுத் : 3114)

3. சிறப்பு. வந்தனை நீதியும் பிறவும் மாண்பமைந்து அந்தணரில் லெனப் பொலிந்த தாமரோ. (யுத் : 406)

மாண் கதை – புகழ்பொருந்திய கதை. இம்மாண் கதைக்கோர் இறையாய இராமன். (பா : 168)

மாண் கலந்தளந்த மாயன் – பெருமையோடு பொருந்தி அளந்த திருமால்- (யுத் : 3114)

மாண்ட இல் – மாட்சிமையுள்ள மனைவி. (யுத் : 542)

மாண்ட மாதவத்தோன்-மாட்சிமைப்பட்ட மாதவத்தோன். (வசிட்டன்) மாண்ட மாதவத்தோன் செய்த வலனையே மனத்தின் எண்ணி. (பா : 668)

மாண்டற் குற்ருர் - இறத்தற்குக் காலம் நேர்ந்தவர். மாண்டற் குற்ருராமென எல்லாம் மயர்வுற்ருர். (சு : 489) [பா : பே]

மாண்டனை - மாண்பினையுற்றனை. (கலா) வல்லமையை இழந்தாய். (வை மு) மறங்கிளர் செருவினுக்கு உரிமை மாண்டனை. (யுத் : 1309)

மாண்டார் மாண்டார் - இறந்தவர்கள் இறந்தவர்களே அவர்களை உயிர்ப்பித்தல் இயலாது (ஆ : 745)

மாண்டுறுவது - இறந்துபடுவது. மாண்டுறுவது நலம். (கி : 956)

மாண்மை - விபவம். (வை மு) ஆலமும் வித்தும் ஒத்தடங்கு மாண் மையான். (யுத் : 204)

மாண் வினை - நல்வினை. அறம். மாண்வினைப் பயன்படா மாந்தர். (ஆ : 686)

மாண்வினைப்பயன் - செல்வம். (ஆ : 686)

மாண - நன்கு. மாண ஓச்சி. (சு : 55)

மாண ஓச்சல் - நன்ருக ஓங்கிச் செலுத்துதல். அரிவச்சிரம் மாண ஓச்ச. (சு : 55)

மாணவகன் - பிரமசாரி மாணுக்கன். அருக்கன் மாணவகனுக்கு. (யுத் : 4180)

மாணவப்படிவம் - மாணுக்கன் வடிவம். மஞ்சனைக் குறுகி ஒரு மாணவப் படிவமொடு... அயன் மறைய நின்று. (கி : 47)

மாணுக்கன் - சீடன். அருக்கன் மாணுக்கனுக்கு. (யுத் : 4180) [பா : பே]

மாணுவுரை - மாட்சிமையில்லாத சொல். மாணுவுரையாள் தானே தரும். (சு : 335)

மாணி - பிரமசாரி. மாணியாம் படிவ மன்று மற்றிவன் வடிவம். (கி : 62) மாணியா யுலகளந்த நாள். (யுத் : 1182)

மாணிக்க நெடுவாள் - மாணிக்கத்தின் நீண்ட ஒளி. மரகதக் கொழுங் கதிரொடு மாணிக்க நெடுவாள். (சு : 1083)

மாணிக்கம் - மாணிக்கக் கல். மாணிக்கம் பனசம் வாழை மரகதம் (ஆ : 655)

மாணிக்க மணிக் கற்பாறை - மாணிக்க மணியாலியன்ற கற்பாறை. (வை.மு) பதுமராகப் பாறை. (அண்) மாறில் மண்டிலம் திரம்பிய மாணிக்க மணிக்கற் பாறைமற் றெருபரிதியிற் பொலிவன பராய். (அ : 751)

மாணியாம் படிவம் – பிரமசாரியாகிய வடிவம். மாணியாம் படிவமன்று மற்றிவன் வடிவம் மைந்த. (கி : 62)

மாணியாம் வேடம் – பிரமசாரி உருவம். மாணியாம் வேடந்தாங்கி. (சு : 27)

மாணுதல் – மாட்சிமைப் படுதல். மாண்ட சோதிட வாய்மைப் புலவர். (யுத் : 4131)

மாணை – ஒரு வகைக் கொடி. மாணையின் கொடியால் ஓங்கு தெப்ப மொன்றமைத்து. (அ : 725) மாணையின் கொடியால் விக்கி. (யுத் : 717)

மாணொளி – சீரிய ஒளி. செழுங்கதிர் கோள் நாள் திங்கள் மாணொளி கெடாது தெற்கு வடக்கதாய் வருக. (பா : 680)

மாத்தடஞ் திசை – பெரிய பரந்த திக்குகள். (யுத் : 463)

மாத்தடமேரு – மிகப் பெரிய மேருமலை. (யுத் : 3443)

மாத்திரம் – அளவு. எண்ணமாத்திரமும் மரிதாமிடை. (பா : 863)

மாத்திரி தண்டு – பெருமை பொருந்திய திரிதண்டம். (ஆ : 846)

மாத்திரை – 1. அளவு. வருக தேரெனு மாத்திரை. (ஆ : 377) 2. அளவாக. அளவு. அளவில். அளவாக. தினையின் மாத்திரை பொழுதில். (யுத் : 1511) நினையும் மாத்திரை. (யுத் : 1551)

மாத்திரை அளவு – நொடிப் போது. மாத்திரை யளவிற்றுள் மடுத்து. (பா : 810)

மாத்திரைப்படாது – (அட்சர) காலத்திற்குக் கட்டுப்படாமல். பாணியிற்றள்ளிக் கால மாத்திரைப் படாது. (யுத் : 2782)

மாத்து – பெருமை. மாத்துறு மாடம். (சு : 196)

மாத்துயர் – பெரிய துயர். சூது முந்துறச் சொல்லிய மாத்துயர். (அ : 109)

மாத்துறு மாடம் – பெருமை மிக்க மாளிகைகள். (அண்) தேர்கள் நிற்குமிடம். (வை.மு) (சு : 196)

மாதங்கம் - 1. யானை. மாதங்கம் வருகலம் மறுகிக் கால் பொர. (அ : 860)

2. இனம்பற்றி யானை முதலிய பிராணிகள். மாதங்கம் தின்றுயிர் வாழும் பூதம். (ஆ : 1171)

மாதபோதன - சிறந்த தவச் செல்வனான பெருமுனிவனே. வேத பாரகர் நியலால் வேறிலர் மாதபோதன என்ன வழங்கினர். (பா : 6)8)

மாதயா - மிக்க அருள். மாதயா வுடைய தன் கணவன் வஞ்சன் வினையிற் போதலோடும். (ஆ : 39)

மாதர் . 1. அழகு. (வை.மு) கள்ளவிழ் கோதை மர்தர் காதொடும். (பா : 937)

2. வயது சென்ற மகளிர். மாதர்கள் கற்பின் மிக்கார் கோசலை மனத்தை ஒத்தார். (அ : 255)

மாதர் ஓவியம் - பெண்ணின் சித்திரம். வான்தனில் வரைந்த தோர் மாதர் ஓவியம் போன்றனள். (ஆ : 251)

மாதர் நலம் பேணுமை - மகளிர் இன்பத்தை விரும்பாமை. நினை வானும் மாதர் நலம் பேணுது வளர்ந்திர். (கி : 1023)

மாதரார் - மகளிர். விழித்திமையாது நின்ற மாதரார் கண்களுடே வாவுமான் தேரிற் செல்வோன். (பா : 1153) (சு : 1047)

மாதலிப் பேரவன் - மாதலி என்ற பேரையுடைய அப்பாகன். மாதலிப் பேரவன் கடவ மண்டலத்தி னப்பொழுதே வருத லோடும். (யுத் : 3869)

மாதவக்கிழவன் - வசிட்ட முனிவன். (அ : 261)

மாதவக் குன்று - பெரிய தவ மயமான மலை போன்ற முனிவன். (கலைக் கோட்டு முனிவன்) குழலியர் நடுவண் அம் மாதவக் குன்றினை எதிர்ந்தனன். (பா : 228)

மாதவத் தொருவன் - பெருந் தவத்தையுடைய ஒப்பற்றவன். படைக்கலம் யாவும் செய்த மாதவத் தொருவனைச் சிறுதொழிற் றீயோன் வைத வைவினின் ஒழிந்தன. (யுத் : 3521)

மாதவத் தோங்கல் - மலை போன்ற பெருந் தவத்தையுடைய முனி வன். (வசிட்டன்). (அ : 1067)

மாதவம் - பெருந்தவம். மாதவம் யாவுமோர் செய்கை கொண்டு நடந்தென. (பா : 647)

மாதவர் - பெருந்தவ முனிவர். மாதவர்க்கு வழிபாடிமைத்து. (அ : 319)

மாதவன் - பெருந் தவசி. (வசிட்டன்) பழுதின் மாதவன். (அ : 45) (அ : 59)

மாதவி - குருக் கத்தி செயிர் தீர் மலர்க் காவில் ஓர் மாதவிச் சூழல் சேர. (பா : 989)

மாதவிச் சூழல் - குருக்கத்திக் கொடிகள் படர்ந்த இடம் (கலா) மாதவியின் நிழல். (அண்) (பா : 989) (அ : 759)

மாதவி செய் பந்தல் - குருக்கத்தி பின்னிப் படர்ந்த பந்தல். மாக மணி வேதிகையின் மாதவி செய் பந்தற் கேகய நெடுங்குல மெனச்சிலர் கிடந்தார். (அ : 545)

மாதவி வேலிப் பூகவனம் - குருக்கத்தி வேலியிட்ட கமுகவனம். மாதவி வேலிப் பூகவனந் தொறும் வயல்கள் தோறும். (பா:31)

மாதா - தாய். மாதா உரையின் வழி நின்றனையோ. (யுத் : 2642) மாதா அனையாய். (ஆ : 892) (யுத் : 2604)

மாதா அனையாய் - தாய் போன்றுள்ளாய். (ஆ : 892)

மாதாவுரையின் வழிநின்றனையோ - அன்னையாகிய சுமித்திரையின் ஆணையின் வழியிலே இருந்துவிட்டாயோ. (யுத் : 2641)

மாதானம் - பெரிய தானங்கள். நன்னூல் மன்னு முனிவரை யழைத்து மாதானம் கொடுக்கினும் வான் வழங்காதாக. (பா : 216)

மாதிரக் கருமகன் - திசையாகிய கொல்லன். மாதிரக் கருமகன் மாரிக் கார் மழை. (கி : 451)

மாதிரக்களிறு - திசையானை. மருப்புடைப் பொருப்பேர் மாதிரக் களிற்றின். (சு : 408)

மாதிரக் காவல் மால்யானை - திசைகாவல் மேற் கொண்ட பெரிய யானை. மயிலடித் தொழுக்கின் அனைய மாமதத்த மாதிரக் காவன் மால் யானை. (சு : 415)

மாதிரக் காவலர் - திக்குப் பாலகர். கமந்த மாதிரக் காவலர். (பா : 695)

மாதிரங் கடந்த திண்டோள் - திக்குகளையெல்லாம் வென்ற திண்ணிய தோள். மாதிரங்கடந்த திண்டோள் மைந்தன். (யுத் : 3186)

மாதிரங்கடந்த தோளான் – திக்குகளை யெல்லாம் வென்ற தோள் வலியை யுடையவனான இராவணன். மாதிரங் கடந்த தோளான் மந்திர இருக்கை வந்த மோதரா னென்னுநாமத் தொருவனை முறையின் நோக்கி. (யுத் : 1583)

மாதிரங் கடந்தவன் – திசைகளை வென்றவன். திக்குவிசயஞ் செய்தவன். (இராவணன்) மாதிரங் கடந்தவற்குறுகி. (சு:1068)

மாதிரத்து நின்றயானை – திக்கு எல்லைகளில் நின்ற யானைகள். நிலையுமாதிரத்து நின்றயானையும் நெற்றிக் கண்ணன் மலையுமே எளியவோ நான் பறித்தற்கு. (யுத் : 3179)

மாதிரப் பொருப்பு – திக்குகளின் எல்லையில் சுற்றியமைந்த சக்கர வாளகிரி. மாதிரப் பொருப்போ டோங்கி. (கி : 64) [பா : பே]

மாதிரம் – 1. ஆகாயம். மாதிர வீதி. (பா : 162)
2. மலை. மர்திரம் பொருத திண்டோள் மன்னவ. (பா : 209)
3. திசை. மாதிரந் தொறும் வானர வீரர்கள். (யுத் : 670) மாதிரங் கடந்தவன். (சு : 1068)
4. எட்டுத்திசை. எல்லை. மாதிரந் துடித்தன. (சு : 299)
5. பூமி. (அண்) மாதிரம் சுமந்த பாழியானை. (ஆ : 652)

மாதிரம் பொருத திண்டோள் - மலையை ஒத்த வலிய தோள்கள். மாதிரம் பொருத திண்டோள் மன்னவ. (பா : 209)

மாதிரம் பொருத தோள் – மலைகளை யொத்த தோள்கள். மாதிரம் பொருத தோள் மன்னர் மன்னன். (பா : 248)

மாதிர மனைத்தையு மளக்கின்ற கண் - எல்லாத் திக்கையும் அளாவிப் பார்க்கின்ற கண். சுருதி நாயகன் வரும் வரும் என்பதோர் துணிவால் கருதி மாதிர மனைத்தையும் அளக்கின்ற கண்ணாள். (சு : 338)

மாதிர யானை - திசையானை. மாடு வென்றியொர் மாதிர யானையைப நாடுகின்றது. (கி : 577)

மாதிர வீதி – ஆகாய வீதி நானாவிதமா நளி மாதிர வீதி ஓடி. (பா : 162)

மாது – 1. புதல்வி. கேகயன் மாது. (சு : 684)
2. பெண். மாதை யொறுத்தல். (யுத் : 2826)

மாதுமை - 1. மாதரின் தன்மை. பெண்தன்மை. மங்குலிற் பொலிந்த ஞாலம் மாதுமை யுடைத்து மாதோ. (சு : 1130)
2. பேதைமை. (வை.மு) (சு : 1130)

மாதுயர்ப்படுக - பெருந் துன்பமடைவாயாக. பேதைமைப் பித்தி நிற் பிறந்த சேயொடும் மாதுயர்ப்படுக. (அ : 151) [பா : பே]

மாதுலத்தலைவன் – தாய் மாமன். மாதுலத் தலைவன் பின்னும் அன்பினன் ஓர் மாற்றஞ் சொன்னான். (யுத் : 905)

மாதுலர் - மாமனார். தசமுகன் தனக்கு மாதுலர் இவரெனப் புடைத் தழித்துலக மெங்கணும் பவனனில் திரிகுநர். (பா : 382)

மாதுலன் – மாமன். இராமன் மாதுலன் அவன். (அ : 171) மாதுலனுமாய் மரபின் முந்தையுற வந்தேன். (ஆ : 756)

மாதுலனார் – மாதுலன். மாமன். மாதுலனார் பொன்றவும். (யுத்:1664)

மாதை வதைத்தல்– பெண் கொலை செய்தல். (யுத் : 2827)

மாந்தர் – மானிடர்கள். மாந்தரை விலங்கென் றுன்னும் மனத்தன் (பா : 213) [பா : பே]

மாந்தர்கள் – மானிடர்கள். மாந்தர்கள் விலங் கென்றுன்னும் மனத்தன். (பா : 213)

மாந்தல் (மாந்துதல்) - 1. குடித்தல். பருகுதல். பூவியல் நறவ மாந்தி. (கி : 363) அவர் மாந்து தேறலை அனங்கனும் அருந்தினன் ஆகல் வேண்டுமால். (பா : 1101)
2. வருந்துதல். உள்ளழிதல். நீங்கும் மிடுக்கினன் மாந்துவான். (ஆ : 299)
3. உட்கொள்ளுதல். மாருதி வினைய வார்த்தை செவிமடுத் தமிழ்தின் மாந்தி. (யுத் : 412)
4. கண்டும் கேட்டும் அனுபவித்தல். இன்னுரை மாந்தினர் ஊடற் கூறன் மாந்தினர். (சு : 126)

மாந்தளிர் – 1. மாமரத்தின் தளிர். மாந்தளிர் மேனியாளோர் வாணுதல். (பா : 1158) (அ : 694)
2. மாந்தளிர் போன்ற பாதம். பூந்துகிலோடும் பூசன் மேகலை சிலம்பு பூண்ட மாந்தளிர் எய்த நொய்தின் மயங்கினர். (யுத் : 2780)

மாந்தளிர் நறுமேனி – மாந்தளிர் போலும் நல்ல மேனி. மாந்தளிர் நறு மேனி மங்கை. (அ : 694)

மாந்தா – மாந்தாதா. மாந்தா முதன் மன்னவர் தம் வழியில் வேந்தர். (ஆ : 1110)

மாந்தி மாந்தி – மிகுதியாக உண்டு. ஈண்டு தேன் மாந்தி மாந்தி மறந்து மயங்குமால். (யுத் : 669) மலருந் தேனும் சரதமே மாந்தி மாந்தித் துயின்றதுதானை யெல்லாம். (யுத் : 4229)

மா நகை செய்தல் – பெருஞ் சிரிப்புச் சிரித்தல். சிரித்து ஏளனஞ் செய்தல். இது நன்று நன்றென மாநகை செய்தனன். (சு:1151)

மா நரகம் – கொடிய நரகம். இனி வையம் மா நரகத்திடை வைகுமே. (அ : 642)

மாநிலக்கிழத்தி – பூமிப்பிராட்டி. பெரிய பூமியாகிய பெண். மாநிலக் கிழத்தியோடும் திருவொடு மிருந்த மூலத் தேவையும். (யுத்:2705) (யுத் : 4273) காந்தட் செம்பூ... மாநிலக் கிழத்தி கைகள் மறித்தன போன்ற மன்னோ. (கி : 470)

மாநிலச்சுமை – பெரிய நிலமாகிய சுமை. பியலிடம் பெரும்பரம் விசித்ததொய்யல் மாநிலச்சுமையுறு சிறை துறந்து. (அ : 62)

மாநிலத்தறிஞர் – உலகிலுள்ள அறிவாளிகள். அன்னமாநிலத் தறிஞர் தம்மொடும். (அ : 933)

மாநிலம் – பெரிய நாடு. உனை மாநிலம் தஞ்சமாக நீ தாங்கென்ற வாசகம் நஞ்சமோ. (அ : 305)

மாநிலை – பெரிய அடுக்கு. புரை தீர் குன்ற மொத்துயர் தடநெடு மாநிலைக் கோயில். (சு : 1224)

மாப்படி – பெரியபூமி. மாப்படி கலக்குவன். (யுத் : 503)

மாப்படை – பெரிய படை. (யுத் : 1532)

மாப்பிடி - பெரியபிடி. கரிய பிடி எனலும் ஆகும். (கி : 34)

மாப் பிறழ் நோக்கினர் – 1. மான் போன்று மருண்டு நோக்கும் விழியுடையவர். (வை.மு)

2 மாவடு போன்ற விழியினர். (உ.வி) மாப்பிறழ் நோக்கினர் தம் மணி நெடுங்குவளை வாட்கண் சேப்புற. (யுத் : 2787)

3. வண்டு பிறழ்வது போன்ற நோக்கத்தையுடையவர். (அண்.)

மாப்பெருந் தேர் – மிகப் பெரிய தேர். சில்லி மாப்பெருந்தேர். (யுத் : 503)

மாபக்கன் – பெரும்பக்கன். மகா பாரிசுவான். தொல்லமர் யார்க்குந் தோலா மாபக்கனும். (யுத் : 1977)

மாபுரம் – 1. பெரிய உடல். (யுத் : 3898)
2. பெரிய நகரமாகிய இலங்கை. (யுத் : 860)
3. பெரிய மதில். (யுத் : 3897)

மாபுரம் தவிர்ந்து விண் வழிச் சென்ருர் – பெரிய உடலை விட்டு. உயிர் நீங்கச் சுவர்க்க வழியிற் சென்ருர். (யுத் : 3898)

மாபூதம் – பெருமையாய் விளங்கும் பூதங்கள். வரம்பிகழ்ந்த மா பூதத்தின் வைப் பெங்கும். (அ : 1)

மா பெரும் பக்கன் – மகா பாரிசுவான். மா பெரும் பக்கனேடு வான் புகைக் கண்ணன் வந்து. (யுத் : 2254)

மாமகள் – 1. சிறந்த மகள். யாவர் மாமகள். (ஆ : 850)
2. பெரிய மகள். சனகன் மாமகள். (ஆ : 851)

மாமகன் – மூத்த மகன். மா மகன் மேல் விளைந்ததோர் காதலால். (அ : 244)

மாமகிழ்வு – பெரு மகிழ்ச்சி. மானவன் குணமெலா நினையு மாமகிழ்வினுன். (கி : 79)

மா மணி – சிந்தா மணி என்னும் தெய்வமணி. கானமா மணிக் கற்பகந் தர்ங்கிய ஊனமில் மலராடை. (அ : 1074)

மாமணிக்கந்து – நீல மணியால் ஆகிய தூண். (ஆ : 304)

மா மணிக்கரசு - சூடாமணி. வைத்தபின் துகிலின் வைத்த மாமணிக் கரசை வாங்கிக் கைத்தலத்தினிதின் ஈந்தான். (சு:1327)

மாமதி – 1. பேரறிவு. மானவன் குணமெலாம் நினையு மாமதியினுன். (கி : 79) [பா : பே]
2. பெரிய நிறைமதி. வாம மாமதியும் பனிவாடையும். (ஆ : 305)

மாமதி தனக்கு மாமறுத்தந்த முகத்தினுள் – நிறை மதிக்கும் பெரிய குற்றத்தினைத் தந்த களங்கமற்ற முகத்தினையுடையவள். (யுத் : 3956)

மாமரம் - பெரிய மரம் மாமரத்தார் கையால் வருந்துவானே. (யுத் : 3827) (யுத் : 2099)

மாமர வலயம் - வளைதடி. கால பாசம் மாமர வலயம் வெங்கோல் முதலிய வயங்க. (சு : 817)

மாமலயம் - பெரிய பொதிய மலை. வானின் நெடு மாமலயம் நேரா. (ஆ : 157)

மாமலர் இறையவன் - உந்திக் கமலத்தில் தோன்றிய பிரமன். (யுத் : 352)

மாமழையே யனையான். கரிய மேகம் போன்ற இராமபிரான் மா மழையே யனையான் பூணு தொழி வானென்னில் யாமுளமோ பொன்றேல் என்றான். (அ : 335)

மாமன் - தாய் மாமன். மாமன் முறை யானவன். மருந்தினு மினிய மாமன் மடிந்த நாள். (யுத் : 951)

மா மாயப் புன்பிறவி - பெரிய பொய்ம்மை வாய்ந்த அற்பப் பிறவி. (ஆ : 996)

மாமாயம் - பெரிய வஞ்சனை. மாமாயப் புன்பிறவி. (ஆ : 996)

மாமியர் - மாமிமார். கணவன் அன்றி மனைவியின் தாய்மார் முதலி யோர். நங்கையை மாமியர் தழுவினர் ஏங்கி. (அ : 512) மாமியர் குழுவின் வந்தானு மென மைந்தன் நிற்ப. (கி : 612)

மாமுனிவர் - உயர்ந்த முனிவர். மாமுனிவர்க் குறவாகி. (அ:1015) (யுத் : 103)

மா மேகன் - இராவணன் ஏவலாளருள் ஒருவன். மருத்தன் மா மேகன் என்றிவ்வினையறி தொழிலர். (யுத் : 1225)

மா மேருக்குன்று - மிகப்பெரிய மேருவாகிய மலை. (யுத் : 254)

மாமை - நிறவிசேடம். (அண்) உடம்பின் பளபளப்பு. (வை.மு) மழுங்கிய உள்ளமும் அறிவும் மாமையும் இழந்தவள். (பா : 607)

மாய்க்கும் மாய்க்கும் - கொல்லும் கொல்லும். அடுக்கு உறுதியை உணர்த்தியது. நிச்சயமாகக் கொல்லும். புகழ் கைக் கொண்ட வள்ளல் தனம் என்னுயிரை மாய்க்கும் மாய்க்கும் என்றான். (அ : 357)

மாய்த்தல் - 1. ஒழித்தல். மாய்ப்பென். (சு : 576) வச்சிரப் பகழி கோடி துரந்தவை அனகன் மாய்த்தான். (யுத் : 2064)

2. மறைத்தல். வானகத்தை நெடும் புகை மாய்த்தலால். (சு : 1186)

3. கொல்லுதல். மாய்க்கும் மாய்க்கும். (அ : 357)

4. முறித்தல். தாறு மாய் தறுகட் குன்றம். (பா : 570)

மாய்த்தல் செய்தல் - அழிக்கும் வினையைச் செய்தல். நிருதக்குலம் வேரற மாய்த்தல் செய்வாள். (ஆ : 706)

மாய்தல் - 1. இறத்தல். மாயிர். (அ : 868) மாய்ந்தவர் மாய்ந்த வரல்லர் மாயாது ஏந்திய கை கொடு இறந்தவர். (பா : 441)

2. அழிதல். கள்ளம் மாய... ஞானம் வீசு தாள் வள்ளல். (ஆ : 63) எண்ணருங் கூருய் மாய்தி. (சு : 1311) மாயாவன் பழி. (அ : 868)

மாய்தி - மாய்வாய். (சு : 1311)

மாய்ந்தவர் – இறந்தவர். (பா : 448)

மாய்விப்ப - மாய்த்துவிட. என்னுயிரை மாய்விப்பத் துணிந்தான். (அ : 367)

மாய்வினை - இறத்தலை. மாய்தலை. மாய்வினை இயற்றி முற்றும் வருணன் மேல் வந்த சிற்றம். (யுத் : 614)

மாய்வு - அழிவு. மரணம். மாய்வினை இயற்றி. (யுத் : 614) வரும் நமக்கு உயிர் மாய்வு என. (யுத் : 1342) (யுத் : 3849)

மாயக்கள்வன்-மாயத்தையும் கள்ளத்தையுமுடைய திருமால். இவன் நெடு மாயக் கள்வனுல். (யுத் : 3433)

மாயக் கைகேசி - வஞ்சனையுடைய கைகேசி. வன்மாயக் கைகேசி வாக்கால் என் தன்னுயிரை முன் மாய்விப்பத் துணிந்தாள். (அ : 367)

மாயக்கைகையார் - மாயம் நிறைந்த கைகேசி. வஞ்சனை இயற்றிய மாயக்கைகையார் துஞ்சுவரினி யெனத் தோளைக் கொட்டுமால். (யுத் : 4172)

மாயங்கள் - மாயைகள். மாயங்கள் குறித்தனவே கொள்ளலாம். (ஆ : 362)

மாயச் செய்கை - வஞ்சனைச் செயல். தெய்வ வன் பாசஞ் செய்த செயலிந்த மாயச் செய்கை. (யுத் : 2179)

மாயச் செல்வன் - மாயையே செல்வ மாகவுடைய இந்திரசித்து. திங்கிழைப் பவர்கட் கெல்லாஞ் சிரியன் மாயச் செல்வன். (யுத் : 2136)

மாயத்தவர் - வஞ்சனையுடையவர். (யுத் : 1742)

மாயத்திருள் - மாயைச்செயல் புரிதற்கு ஏற்ற இருள். எல்லி மாயத் திருளுடே ஒளியம் பெய்யும் மன்மதனுர். (பா : 631) [பா : பே]

மாயத்தொழில் - வஞ்சனைச்செயல். (யுத் : 1742)

மாயத்தோன் - மாயம் நிரம்பியவன். இந்திரசித்து. மாயத்தோனைச் சாதம் போர் வென்று மீளும். (யுத் : 3137)

மாய நீங்கிய சிந்தனை - மயக்கம் (திரிபுணர்ச்சி) நீங்கியமனம். (யோகியருள்ளம்) மாய நீங்கிய சிந்தனை மாமறை தூய பாற் கடல் வைகுந்தம் சொல்லலாம் ஆய சாலை. (அ : 785)

மாயப்பயிர் - மாய வினைகளை விளைக்கும் பயிர்கள் போன்ற அரக்கர். வரிசிலை சிலைப்ப மாயப் பயிர்கள் ஆர்ப் பெடுப்ப. (சு : 833)

மாயப்பாசம் - 1. மாயமான உலகப்பற்று. மாண்டதென் பாயப் பாசம். (ஆ : 1199)
2 விசித்திரத் தன்மையுள்ள பாசம் (என்னும் படை) மாயப் பாச முதல் வெம்படை சுமந்து பலர் நின்ருர். (யுத் : 71)

மாயப்புன் சிறை - மாயையின் காரியமான இழிவுபட்ட சிறை. (சம் சார பந்தம்) வன் சிறைப் பறவை யூரும் வானவன் வரம் பின் மாயப்புன் சிறைப் பொறையைத் திர்ப்பான் உளன் எனப் புலவர் நின்ருர். (யுத் : 1619)

மாயப் புன்பிறவி - வஞ்சனைகளுக்கு இடமான இழிவுள்ள பிறவி. (வை.மு) பொய்ம்மை வாய்ந்த அற்பப் பிறவி. (அண்) பயனற்ற அற்ப மானிடப் பிறவி. (கலா) வேண்டேன் இம் மாமாயப் புன்பிறவி வேண்டேனே. (ஆ : 996)

மாயப் பெரும் பிணக்கு - மாயையினுலாகிய பெரிய மாறுபாடு. அவன் செய் மாயப் பெரும் பிணக் கொருங்கு தேர்வார் ஆர். (பா : 435)

மாயப் போராற்றல் - மாயப் போரின் வலிமை. வஞ்சனை பரப்பச் செய்யும் மாயப் போராற்ற லெல்லாம் இன்றொடு முடியுமன்றே. (யுத் : 2964)

மாயப் பொறி - மாயை யாகிய வலை. (வை-மு) மாயமாகிய யந்திரப் பொறி. (கலா) நியப்புற நிற்க நினைக்கிலர் நின் மாயப் பொறி புக்கு மயங்கு வரால். (யுத் : 238)

மாயம் - 1. ஆச்சரியம். வியாத பெருமாய விளையாட்டும் வேண்டுமோ. (ஆ : 54)

2. கபடம். வஞ்சகம். மன்மதனுர் உனக்கிம் மாய முரைத்தாரோ. (பா : 631)

3. மயக்கம். திரிபுணர்ச்சி. மாயம் நீங்கிய சிந்தனை. (அ : 785)

4. உபாயம். இப்பாசம் மாய்க்கும் மாயம் யான் வல்லன் என்ப தோர்ந்தும் (யுத் : 2153)

5. பொய், களவு, வஞ்சம் இம் மாமாயப் புன்பிறவி வேண்டேன். (ஆ : 996) மாயத்தின் வினை. (யுத் : 1104)

6. மறைவு. (மாய் - மறை; பகுதி) கொம்பியல் மாய வாழ்க்கைக் குரங்கு. (சு : 984)

7. மாயப்படை. மிளரு மாயம். (யுத் : 3788)

மாயம் பொத்திய வயப்படை - மாயை நிரம்பியுள்ள வெற்றி பொருந்திய அஸ்திரம். (மாயாஸ்திரம் (யுத் : 3773)

மாய மந்திரம் - மாயத்திற்குரிய மந்திரம். மணிநிறத் தரக்கன் செய்த மாய மந்திரத்தினுனும். (யுத் : 2137)

மாய மாக் கூத்தன் - மாயையில் வல்ல கூத்தனுன திருமாலின் அமிசமான இராமபிரான். கருணனைக் கண்டு மாய மாக் கூத்தனும் வருகெனக் கடிது கூவினுன். (யுத் : 1534)

மாய மான் - வஞ்சனை மான். (மாரீசன்) மாயமானுயினுன் மாய மானுயினுன். (கி : 89)

மாய மானுயினுன் - 1. மாய மானுக வந்தவன்.

2. மாய்ந் தொழியுமாறு மான் (சிங்கம்) ஆயினுன். (கி : 89)

மாயவஞ்சம் - மாயத்தன்மை யோடு கூடிய வஞ்சனைச் செயல். மாயவஞ்சங் குறித்திலென். (யுத் : 3064)

மாயவன் - மாயையில் வல்லதிருமால். ஆகத்தை மாயவன் பிளந்திட. (யுத் : 309)

மாய வாழ்க்கைப் பிறவி - மாயச் செயலைக் கொண்ட வாழ்க்கை யோடு கூடிய அரக்கப்பிறவி. மறவினை நீக்கலில்லா மாயமும் மாய வாழ்க்கைப் பிறவியும் பெயர்த்தேன். (யுத் : 435)

மாய வாழ்வு - பொய்யாகிய வாழ்வு. அரக்கர் இன்பமாய வாழ் வெலாம் சென்று தீய. (யுத் : 1264) (யுத் : 1263)

மாயவில் - மாயத் தன்மையுடைய வில். மாயவிற்கு நாம் தோற்ற வாறெனு மனந் துளங்குகின்றதால். (பா : 750)

மாய விளையாட்டு - மாயையாகிய விளையாட்டு (கலா) ஆச்சரி யத்தை விளக்கும் விளையாட்டு. (அண்) வீயாத பெருமாய விளையாட்டும் வேண்டுமோ. (ஆ : 54)

மாயவினை - மாயையின் சூழ்ச்சி. மாய வினைதன்னால் மயங்கினரோ டெய்தி. (ஆ : 104)

மாய வேடம் - மாயையாற் கொண்டிருந்த (முனி) வேடம். வெகுளி பொங்க விட்டது மாய வேடம். (ஆ : 876)

மாயவேய் - வஞ்சனை ஒற்று. மாய வேய் தெரிந் துரைக்க வந்தோம். (யுத் : 723)

மாயன் - 1. கருநிற முள்ளவன். பிறர் அறியாத மாய விளை யாட்டை யுடையவன்.
2. திருமால். உலகியாவையும் தன் வயிற்றடக்கிய மாயனை. (அ : 94 (சு : 32) (யுத் : 279)

மாயாப் பழியாள் - அழியாப் பழியைத் தேடிக்கொண்ட கைகேசி. நுடங்கிடையார் மாயாப்பழியாள் தர வற்கலை ஏந்திவந்தார். (அ : 439)

மாயா பந்த மாவினையம் - மாயையின் விளைவாகிய பிணிக்கின்ற பெரிய வினைகள். மாயா பந்தமா வினையம் மாளப் பற்றறு பெற்றி யோர்க்கும் உந்தரு நிலையதாகி. (ஆ : 423)

மாயாவன் பழி - அழியாத வலிய பழி. மாயா வன்பழி தந்தீர். (அ : 868)

மாயாவி - ஓர் அசுரன். வாலியோடு போர் செய்து மாண்டவன். மாயாவி அப் பிலத்து இன்ன வாயிலூடெய்துமென்ன. (கி:135)

மாயிரு ஞாலத்தாள்-மிகவும் பெருமைவாய்ந்தபூமி தேவி. (யுத்: 3484)

மாயிரு ஞாலம் - மிகப் பெரிய பூமி. மாயிரு ஞாலத்து வைத்த மாப்படை. (யுத் : 490)

மாயை - 1. அவித்தை. ஆய்வினை மெய் யுணர்வனுக ஆசையின் மாய்ந்தது மாரிப் பேரிருள். (கி : 548)

2. வஞ்சகவழி. வியக்கத்தக்க சூழ்ச்சித்திறம். மாயை யுணர்த் துவன். (யுத் : 1584)

3. பொய்த் தோற்றம். கனவு மாய்ந்தா லொத்தது சூழ்ந்த மாயை. (யுத் : 2384)

மாயைப் புணர்ப்பு - பிரகிருதி சம்பந்தம். மாயைப் புணர்ப்பறக் கல்லி. (சு : 1178)

மாயை புணர்த்தல் - வஞ்சக வழியைச் செய்தல். (கலா) சூழ்ச்சி யைப் பொருந்தச் செய்தல். (அண்) மாயை புணர்த்துவன் சீதை தானே புணர்வதோர் மாயம் போற்றி. (யுத் : 1584)

மாயையின் படை - மாயாஸ்திரம். மாயையின் படை தொடுப்பெ னென்றிராவணன் மதித்தான். (யுத் : 3776)

மாயையின் முதல்வர் - மாயைகள் செய்வதில் முதன்மை பெற்றவர். மாயையின் முதல்வர் மேகத்தைத் தொடு மெய்யினர். (யுத்:3215)

மாயை விளையாட்டு - மாயையாகிய திரு விளையாடல். (ஆ : 54) [பா : பே]

மாயோன் - திருமால். கொண்டதோர் உருவம் மாயோன் குறளி னும் குறுகி நின்ருன். (சு : 313)

மாயோன் குறள் - திருமால் கொண்ட வாமன வடிவம். (சு : 313)

மாயோன் நெடும்படை - நாராயணாஸ்திரம். சக்கராயுதம். (அண்) திருமாலின் நெடியபடை. மாயோன் நெடும்படை வாங்கிய வளை வாளெயிற் றரக்கன். (யுத் : 3036)

மாயோன் நேமி - திருமாலின் சக்கரப்படை. (யுத் : 2965)

மார் - மார்பு. மார்பு என்பதன் மரூஉ. கடைக்குறை. அப்பு மாரின் அணைக்கும் அரற்றுமால். (யுத் : 3175) (யுத் : 2037)

மார்க்கடம் - குரங்குக் கூட்டம். (மார்க்கடம் - குரங்கு) மர்க்கடம் எதுகை நோக்கி நீட்டல் விகாரம். (அண்) மார்க்கடஞ் சூழ்ந்த வைப்பின் அங்கதன் மருங்கு காப்ப. (யுத் : 438) [பா : பே]

மார்க்கம் - 1. வழி. அநேக மார்க்கத்தால். (யுத் : 1185)
2. அணை. சேது வானரர் இயற்றிய மார்க்கம். (யுத் : 3252)

மார்பகஞ் சேர்த்தல் - அணைத்தல். மார்பின்கண் சேர்த்தல். சீதை கொண்கனைத் திருவுறை மார்பகஞ் சேர்த்தான். (அ : 59)

மார் பகலம் - மார்பின் பரப்பு மார் பகலம் போழ்வித்தனள். (யுத் : 2337)

மார்பம் - மார்பு. மார்பம் கிழிபட. (யுத் : 1647)

மார்பு - மார்பு. சிலையுரு அழிதரச் செறிந்த மார்பு. (பா : 1108)

மார்வம் - மார்பு தம்பியை மார்வத் தொடு புல்லி. (யுத் : 2613)

மாரர் - மன்மதர்கள். மாரருளரே இருவர் ஒருலகின் வாழ்வார். (ஆ : 615)

மாரவம் - மரவம். குங்கும மரம். அகிலும் ஆரமும் மாரவம் கோங்குமே. (பா : 955)

மாரவில்லி - மன்மதனாகிய வில்வீரன். (கி : 785)

மாரவேள் - மரண வேதனையைச் செய்யும் மன்மதன். திங்கள் மேவுஞ் சடைத்தேவன் மேல் மாரவேள் இங்கு நின்றெய்யவும். (பா : 432) மாரவேள் கொதிக்கும் அம்பாற் பொன்றல். (ஆ:763)

மாரன் - மன்மதன். மாரன் சரம் பெய் தூணி போல் தளிரடி. (சு : 292)

மாரன் உடைவாள் - தாழம்பூவாகிய உடைவாள். மாரன் என் செய்வான் கையம்பற்று உடைவாளினுங் கைவைத்தான். (பா : 1180)

மாரன் கையம்பு - மாரன் கையிலுள்ள மலரம்பு, (பா : 1180)

மாரன் வாளி - மன்மதனுடைய அம்பு. மாரன் வாளி போல மல்லிகைத் தென்றல் வந்தெதிர்ந்த போது சிறுவானு மாயினான். (ஆ : 653)

மாரனம்பு - முல்லை முதலிய மலர்கள். மாரனம்பும் தென் வரைச் சாந்தும் நாறும் சேனை. (பா : 897)

மாரனார் - மன்மதன். மாரனார் தனியிலக்கை மனித்தனார் அழித்தனரே வரத்தினாலே. (யுத் : 3911) (யுத் : 3891)

மாரனுர் தனியிலக்கு - மன்மதனுடைய தனிப்பட்ட இலக்கு. இராவணன்: இராமன் அழிப்பதற்கு முன் மன்மதன் தவிர வேறு எவராலும் எய்யப்படாதவன். (யுத் : 3911)

மாரி - 1. மழை. மாரியாக்கிய வடிக்கணே. (ஆ : 450) தொல்வன் மாரியிற் ருெடர்வன சுடுசரம். (யுத் : 1158)
2. மேகம். வயங்கு நீர் மாரியின் வருதேன். (சு : 420) (சு : 115)
3. மரித்தல். (வை.மு) அப்பு மாரி அழுந்திய மார்பை.. (யுத் : 3175)

மாரி ஆயம் - மழை பொழிகின்ற மேகம். (யுத் : 1104)

மாரிச் சீகரம் - மழைத் துாி. செப்புருக்கணைய இம் மாரிச் சீகரம். (கி : 534)

மாரிப் பேரிருள் - கூதிர்ப் பருவத்துத் தோன்றிய பெரிய இருள். மெய்யுணர்வனுக ஆசறும் மாயையின் மாய்ந்தது மாரிப் பேரிருள். (கி : 548)

மாரி மேகம் - மழை பொழியும் மேகம். பெட்புறு மாரி மேகம் வரம்பில வந்தெனத் தேரின் சேனை திரண்டது. (ஆ : 391)

மாரியாக்கிய கண் - மழை போன்று பெருகுகின்ற நீரை உண்டு பண்ணும் கண். மழை போல் நீர் வடிகின்ற கண். மாரியாக்கிய கண்ணியர். (யுத் : 2319)

மாரிவானம் - மேகங்களைக் கொண்ட ஆகாயம். நீரும் வையமும் நெருப்பும் மேனிமிர் நெடுங்காலும் மாரி வானமும் வழங்கல வாகும். (சு : 115)

மாரீசன் - மாயையில் வல்லவன். தாடகை மகன். வெற்பணி புயத்து மாரிசனும் விறல் மற்பொரு சுபாகுவும் வந்து தோன்றினுர். (பா : 373)

மாரீசனுர் - மாரீசன். மாரிசனுர் ஓர் ஆடக நவ்வியானுர். (கி:503)

மாருதத்தின் காதல் - மருத்தின் மகனுகிய அனுமன். (யுத் : 166)

மாருதம் - காற்று. மாருதம் நிரைத்த வென வாசிகள் நிரைத்தார். (பா : 911)

மாருத மறைந்த பூளை - காற்றினால் மோதப்பட்ட பூளைப் பூண்டுகள். உனக் கமைந்தன மாருத மறைந்த பூளையாயின கண்டனை. (யுத் : 1218)

மாருத மா நெடுங்கால வேல் - தென்றற் காற்றாகிய நீண்ட யமனது சூலாயுதம். மலைய மாருத மாநெடுங் கால வேல் உலைய மார் பிடை ஊன்றிட ஓயுமால். (ஆ : 298)

மாருதி – அனுமன். வன்றுணை வயிரத் திண்டோள் மாருதி மருங் கின் வந்தான். (கி : 624)

மாருதேயன் - அனுமன். தாரை சேயினைத் தனி வினையினான் மாரு தேயன். (கி : 899)

மால் - 1. அன்பு. திரு நன் மாநகர் மான மாந்தரும். (அ:1158)

2. பெருமை. மால் வரை. (அ : 220) மாலுறு குடகவான். (யுத் : 710)

3. திருமால். இராமன். மாலும் அக்கணம் வாளியைத் தொட் டதும். (பா : 411) (யுத் : 3275)

4. மயக்கம். மால் தரும் பிறவி நோய். (கி : 384) சூழி மால் வாரணம். (சு : 375) மால்கடல். (சு : 581)

5. திக் பிரமை - திகைப்பு. மால் விழுந்துளீர். (யுத் : 3388)

6. கருமை. மால் நிற நெடுங் கடல். (கி : 449) பெருந்திண் நெடுமால் வரை. (பா : 633)

7. காம மயல். மாலுற வருதலும் மனமும் மெய்யும் தன் நூலுறு மருங்குல் போல் நுடங்குவாள். (பா : 604)

8. தாட்சண்யம். பான் முகமுற்ற பெரும்பழி யன்றோ மால் முக மற்றொரு மாதை வதைத்தல். (யுத் : 2827)

9. போர்ப்பித்து. பித்து. மாலொன்று மனத்து வீர மாபெரும் பக்கன். (யுத்:910) கூற்று மால் கொண்ட தென்ன. (யுத்:1118)

10. இந்திரன். மாலினார் கெட வாகையே சூலமே கொடு சூடினான். (யுத் : 1335)

11. ஆசை. வேலையன்ன மாலிழந்தும். (யுத் : 3366)

12. காதல். மாற் கடலன்ன. (பா ; 1343)

13. அசை. நிழலெனப் பொலியுமால் நேமி வான் சுடர். (பா : 133)

14. மேகம். (கலா) (வை.மு) மெய் கலந்த மால் நிகர் வருமுவ மையர். (சு : 877) [பா : பே]

15. பசி மயக்கம். மாலரு அருங்களில் திரிகின்ற தோர் ஆசை யான். (யுத் : 1282)

மால் கடல் - பெரிய கடல். (யுத் : 2276)

மால் கணப்பரி - பெருந் தொகுதியான குதிரைகள். மாற்கணப்பரி இங்கிவை. (யுத் . 3575)

மால் கணம் - பெருங் கூட்டம். மால் கணப்பரி. (யுத் : 3575)

மால்கரி ஒடித்த கொம்பனையாள் - பெரிய யானையினால் ஒடிக்கப்பட்ட கொம்பு போன்றவள். (சிதை) பொடித்த தண்டளிர் பூவொடு மால்கரி ஒடித்த கொம்பனையாள். (ஆ : 1046)

மால் களிறு - 1. ஆண் யானை. இழை யஞ்சன மால் களிறு. (யுத் : 1697)

3. மதமயக்கம் பொருந்திய யானை. திண் கணயத்தொடும் எருத்தின் ஏந்திய மால்களிறு. (பா : 853)

மால் கொள்ளல் - பித்துக் கொள்ளல். கூற்று மால் கொண்ட தென்ன. (யுத் : 1118)

மால் தரும் பிறவிநோய் - மயக்கத்தை விளைக்கும் பிறப்பென்னும் பிணி. மால் தரும் பிறவி நோய்க்கு மருந்தென வணங்கு மைந்த. (கி : 384)

மால்நிற நெடுங் கடல் - கரு நிற முள்ள பெரிய கடல். சூழ்திரை மானிற நெடுங்கடல் வாரி மூரிவான் மேனிரைந் துளதென முழக்கம் மிக்கதே. (கி : 449)

மால் நிறம் - சிறந்த இயல்பு. மானிற மணிகள். (சு : 411)

மால் புணர்த்துதல் - ஆசையை மூட்டுதல் (வை.மு) (கலா) அறிவை மயக்குதல். (அண்) பொன்னின் மானுகிப் புக்குப் பொன்னை மால் புணர்த்துக. (ஆ : 769)

மால்வரை – பெரிய மலைகள் ஏழு. அவை மேரு, கயிலை, மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம் என்பன. வசையின் மேரு முதல் மால் வரைகள் ஏழின் வலிசால் விசைய வார்சிலை. (ஆ : 27) பெரிய மால்வரை ஏழினும் பெருவலி பெற்ற வரிகொள் வெஞ்சிலை. (யுத் : 552)

மால்வரைச் சூன் மழை – கரிய மலைகளிற் படிந்த சூல் கொண்ட மேகங்கள். ஒல்லொலி வெருவி மால்வரைச் சூன் மழை மின்னுமே. (பா : 61)

மால்விழுந்துளீர்–நீவிர் அறிவு மயங்கித் திகைப்பினுள் விழுந்துள்ளீர் போலும். (அண்) திக் பிரமைக்கு உட்பட்டு விட்டீர். (யுத்:3388)

மாலரு வருங்கள் – மயக்கம் நீங்காத அருமையான கள். மால் அரு வருங்களில் திரிகின்றதோர் ஆசையான். (யுத் : 1282)

மாலார் - திருமால். மாலாரொடு மந்தர மாசுணமும் மேலாகிய தேவரும் வேண்டு மெனுது. (யுத் : 1735)

மாலான் – திருமால். மாலான் அஞ்சுமுகத்தவன் அஞ்சுக. (யுத் : 1684)

மாலி - 1. பூர்விக அரக்கர் தலைவருள் ஒருவன். மாலியைக் கண்டேன் மாலியவானைக் கண்டேன். (யுத்:3309) (யுத்:3428)
2. ஓர் அரக்க வீரன். பெய்கழல் மாலி பிசாசனெனும் பேர் வெய்யவன். (யுத் : 2273) (யுத் : 1800) (யுத் : 2287)
3. மாலியவான். மாலி பொய்க்குமோ. (யுத்:3332) (யுத்:808)

மாலியவான் – இராவணன் மூதாதை. தாயைப் பெற்றவன். ஆங்கவன் தன் மூதாதையாகிய மூப்பின் யாக்கை வாங்கிய வரிவில் அன்ன மாலியவான். (யுத் : 1230) (யுத் : 739) மாலியவானைக் கண்டேன். (யுத் : 3309)

மாலிருங் கடல் - கரிய பெரிய கடல். மிகப் பெரிய கடல். (அண்) மாலிருங் கடலின் விழ்ந்து மறைந்தன மழையும் காற்றும். (யுத் : 2380)

மாலினர் – இந்திரன். (வை.மு) திருமால். (அண்) பெருமையுடைய பகைவர்கள். (உ.வி) கரிய நிற முடையவர்கள். மாலினர் கெட வாகையே சூலமே கொடு சூடினன். (யுத் : 1335)

மாலுண்ட - பெருமையுடைய. மாலுண்ட நளினப் பள்ளி. (பா : 44)

மாலுறு குடகவான் – பெருமை பொருந்திய மேற்றிசை வானம். (யுத் : 710)

மாலை – 1. கழுத்திடு மாலை. சூடுவா ரிகழ்ந்த அத்தொங்கன் மாலைகள். (பா : 148)

2. வரிசை. ஒழுங்கு. மேக மாலை மிடைந்தன. (பா : 9) கண்ணின் மாலை... (ஆ : 840)

3. மாலைப்பொழுது. காம விற்குடை கங்குன் மாலை கழிந்தது. (அ : 236) மாலைப் பிறைப்பிள்ளை. (ஆ : 691)

4. திரட்சி. மூடிய கங்குன் மாலை இருளினை. (யுத்:2146)

5. மாலையில் விளங்கும் பூரண சந்திரன். (அத்தகிரி) மாலைக் குண்டலம் அலம்புகின்ற குவவுத் தோள். (கி : 377)

6. சாயங்காலம். சாதகரென்னவுந் தகைத்தம் மாலையே. (பா : 626)

7. தொகுதி. கூட்டம். அடியினும் முகத்தும் வளங்கொள் மாலை வண்டலமர. (பா : 908)

8. பொழுது. வரமுனி வஞ்ச மென்றுணர்ந்த மாலைவாய் வெருவினர் விண்ணவர். (பா : 230)

9. தன்மை. (வை.மு) நீள மாலைய துயில்வன. (அ : 738) மந்திர மாதவ மென்னு மாலைய. (யுத் : 195) மீளு மாலையும் போன்றனர் விரரே. (யுத் : 1002)

10. ஒழுங்கு. மாலைக் காம்பு. (கி : 787)

11. இயல்பு. மந்திரமாதவ மென்னு மாலைய. (யுத் : 195)

மாலைக்காம்பு - ஒழுங்காக வளர்ந்த மூங்கில். (கி : 787)

மாலைக்குன்றம் – ஒழுங்காகிய மலைகள். வானுயர் மாலைக்குன்றம். (யுத் : 638)

மாலைச்சிகரத் தனி மந்தரமேரு – வரிசையான சிகரங்களையுடைய ஒப்பற்றமந்தரமலை. மாலைச் சிகரத் தனி மந்தரமேரு முந்தை வேலைத் திரிகின்றது போல் திரிகின்ற வேலை. (அ : 416)

மாலை மால்வரைத் தோளெனுமந்தரம் – மாலையை யணிந்த பெரிய தோளாகிய மந்தரமலை. அயோத்திய ராண்டகைக் கிளையான் மாலை மால்வரைத் தோளெனும் மந்தரம் திரிய. (அ : 726)

மாலையான கனல் – மாலைக் காலமென்னும் நெருப்பு. மாலையான கனலினும் காமவாளிக் கூற்றினும் வெம்மை காட்டி. (யுத்:711)

மாலை யேய் நெடு முடி – மாலை பொருந்தின நீண்ட முடி. மாலை யேய் நெடு முடி மன்னன் சேனையாம் வேலையே மடுத்தது அக்கங்கை வெள்ளமே. (அ : 996)

மாலைவாய் - சமயத்தில். வஞ்சமென் றுணர்ந்த மாலை வாய். (பா : 230)

மாலைவாய் நியமம் - மாலைக் காலத்திற் செய்ய வேண்டிய கடமைகள். மாலைவாய் நியமஞ் செய்து மரபுளி இயற்றி. (அ : 665)

மாலொன்று மனம் - போர்ப்பித்துக் கொண்ட மனம். மாலொன்று மனத்து வீர மாபெரும் பக்கனேடும். (யுத் : 910)

மாவடுவின் வகிர் - மாவடுவின் பிளப்பு. வடுவின் மாவகிர் இவையெனப் பொலிந்த கண் மயிலே. (அ : 766)

மாவணை நீலக்குன்றம் - பெருமை பொருந்திய நீலமலை. (அண்) மரங்கள் பொருந்திய நீலக்குன்றம். மாவணை நீலக் குன்றத்தின் வெயில் வந்த தென்ன. (யுத் : 900)

மாவதிட்டன் - பெருமை பொருந்திய வசிட்ட முனிவன். மாவதிட்டன் தேற்றினுன். (அ : 1132)

மாவலர் - நல்ல பூக்கள். பிடவு ஈனும் மாவலர் சொரி சூழல். (அ : 696)

மாவலி - 1. மிக்க பலமுள்ளவன். (ஆ : 131b)
2. மகாபலி. ஏன மெனுந் திறல் மாவலி என்பான் வானமும் வையமும் வெளவுதல் செய்தான். (பா : 436)
3. பெரிய வலிமை. மாவலி யவுணர்கள். (அ : 941)

மாவலி யவுணர்கள் - மிக்க வலிமையையுடைய அவுணர்கள். (அ : 941)

மாவாதம் - பெருங்காற்று. மாவாதஞ் சாய்த்த மராமரமே போல்கின்றுர். (அ : 392)

மாவார் திண்டேர் - குதிரைகள் பூட்டப்பட்ட வலிய தேர். (யுத் : 3551)

மாவாளிகள் - 1. பெருமைவாய்ந்த அம்புகள். (யுத் : 2931)
2. குதிரை முதலிய விலங்குகளைப் போரில் ஆளும் வீரம். (யுத் : 2931)
3. மா ஆளிகள். கரிய வண்டுகள். அளி என்பது நீண்டது. (யுத் : 2931)
4. பெரிய சிங்கங்கள். (யுத் : 2931)

மாவாளிகள் போர் தெறுமாமறவோர் - பெரிய சிங்கங்களைப் போரிற் கொல்லவல்ல பெருவீரர்கள். (யுத் : 2931)

மாவான் நின்ற பெரும்பதம் - பரமபதம். மாவான் நின்ற பெரும் பதம் வந்துருவாய் மேனின்றென நின்ளுெளிர் வெண்குடையான். (ஆ : 80)

மாவியல் அயோத்தி - அழகு பொருந்திய அயோத்தி. (யுத் : 4240)

மாவியல் உண் கணர் - மாவடுவின் தன்மையைக் கொண்ட மை யெழுதப்பெற்ற கண்ணர்- மாவியல் உண்கணரும் மைந்தரும். (யுத் : 4259) [பா : பே]

மாவியல் உதயம் - பெருமை பொருந்திய தோற்றம்; அவதாரம். (வை.மு) பெருமை பொருந்திய உதயவரை. (அண்) மாவிய லுதயமாந்துளப வானவன். (அ : 714)

மாவியல் ஒண்கணர் - மாவடுவை ஒத்த அழகிய கண்ணர். மாவிய லொண்கணரும் மைந்தரும். (யுத் - 4259)

மாவியல் தானே - பெருமை பொருந்திய படை, மாவியல் தானே அம் மன்னே. (அ : 532)

மாவியல் நோக்கினள் - திருமகள் போன்று அழகு வாய்ந்த சீதை. மாவியல் நோக்கினளைக் கொணர் கென வசிட்டன் சொன்னன். (பா : 1202)

மாவியல் வடதிசை - பெருமை பொருந்திய வடதிசை. மாவியல் வடதிசை நின்று. (கி : 444)

மாவுலா மலர்ப்பாதம் - வண்டுகள் உலாவுகின்ற தாமரை மலர் போன்ற பாதங்கள். ஆவியும் அறிவும் முதலாயவன் மாவுலா மலர்ப் பாதம் வணங்கினன். (அ : 93) [பா : பே]

மாழ்குதல் - 1. வருந்துதல். மலைக்குவட் டகவுறு மயிலின் மாழ் கினர். (அ : 490)

2. சிறிதே ஒலித்தல். வானவ மகளிர் போனர் மழலையஞ் சதங்கை மாழ்க. (யுத் : 2233)

3. மயங்குதல். மகளிர் மாழ்கிக் குயில் தலத் துக்க வென்னக் குழைக்கின்ற குழைவை நோக்கி. (யுத் : 2423) அமிர்துகு குதலை மாழ்கி. (பா : 428)

மாழை - 1. மா மரம். மாழை இளந்தளிர். (பா : 952)

2. பொன். ஈனும் மாழை இளந்தளிரே யிடை. (பா : 95)

3. மாவடு. (வகிர்) மாழை ஒண் கண் தேவியர். (அ : 600)

மாழை ஒண் கண் தேவியர் - மாவடுவை ஒத்த ஒள்ளிய கண்களை யுடைய மனைவியர். (ஆ : 600)

மாழையுண்கணி - மாவடுப் போன்று மையுண்ட கண்களையுடைய வள். (கைகேசி) மாழையுண்கணி உரைசெயக் கேட்ட மந்தரை. (அ : 177)

மாள்குவென் - இறந்துபடுவேன். முன்னே மாள்குவென். (அ:684)

மாள்வது - இறப்பது. மாள்வது மெய்யெனு இறுத்து. (யுத் : 1343) மாள்வதே பொருளாக வந்தானலன். (ஆ : 811)

மாள்வன - ஒழிவன(வான) முடிந்து மாள்வன தடிந்து போய்க் கழுத்த கைய நிமிர் கால. (யுத் : 2017)

மாள்வார் தொழில் - இறப்பவர்கள் செய்தற்குரிய தொழில். நீ இனி மாள்வார் தொழில் செய்ய வேண்டா வேண்டா. (ஆ : 745)

மாள்விக்கும் - மாளும்படி செய்யும். (யுத் : 2888)

மாளல் - இறத்தல். இறக்கின்ற நிலை, நீர் நசை வருந்தருந்துயரி னுன் மாளலுற்ற மான். (யுத் : 3991)

மாளவர் - மாளவ நாட்டரச பரிவாரம். வங்கர் மாளவர் சோழர் மராடரே. (பா : 1194)

மாளலுற்ற - இறக்கின்ற நிலையை யடைந்த. (யுத் : 3991)

மாளலை - வீரமுடையை யல்லை. அஞ்சினையாதலின் அமர்க்கு மாளலை. (யுத் : 314)

மாளிகை - வீடுகள். பளிக்கு மாளிகைத் தலந்தொறும். (சு : 125)

மாளிகைத் துகிற்கொடி - மாளிகையில் அசையும் துகிற்கொடி. தண்டலை அயோத்தி நுடங்கு மாளிகைத் துகிற்கொடி நிகர்ப்பன நோக்காய். (அ : 740)

மாளிகை வீதி - மாளிகைகள் நிறைந்த வீதி. விலங்கள் மாளிகை விதியில் விரைவொடு சென்ருன். (அ : 49)

மாளுதல் - 1. குறைதல். கவனம் மாண்டவர் எனக் கருத்திலா ரென... சலித்திரோ. (கி : 965)

2. பழுது படல். மாளாத நீதி இகழாமை நின்கண் அபிமானம் இல்லை... கெடுவார்கள். (யுத் : 2208)

3. கூர் மழுங்குதல். மழுங்கி வலியழிதல். மாண்டனவாம் சூலமும் வச்சிரமும். (யுத் : 1663)
4. வற்றுதல். அத்தனை கடலும் மாள. (யுத் : 262)
5. இறத்தல். மாண்டார் மாண்டார் நீ இனி மாள்வார் தொழில் செய்ய வேண்டா வேண்டா. (ஆ : 745) மாள்வார். (யுத்:1422)
6. இல்லாமற் போதல். மறங்கிளர் செருவினுக்குரிமை மாண்டனை. (யுத் : 1309)

மாற்கடம் - குரங்குக் கூட்டங்கள். மாற்கடஞ் சூழ்ந்த வைப்பில். (யுத் : 438) [பா : பே]

மாற்கடல் - 1. கடல் போன்ற காதல். காதற்கடல் மாற் கடலன்ன மனத்தவளோடும். (பா ; 1143)
2. கரிய கடல். மாற்கடல் வண்ணத்தான் வளரும் மாலிரும் பாற்கடல். (யுத் : 1079)

மாற் பெருங்கடல் - திருமாலாகிய பெரிய கடல். (சு : 301)

மாற்றங்கள் வில்லினுற் சொல்லல் - மறு மொழியை வில்லின் செயலால் சொல்லுதல். மாற்றங்கள் நும் பால் வில்லினுற் சொல்லி னல்லது வெந்திறல் வெள்கச் சொல்லினுற் சொலக் கற்றிலம் யாம். (யுத் : 1455)

மாற்றம் - 1. மறு மொழி. விடையாகக் கூறும் சொல். மாற்றம் யாதுரைப்பது. (பா : 750) (யுத் : 164)
2. சொல். வள்ளல் வனம் புகுவான் என்றுரைத்த மாற்றத்தால். (அ : 393) சொல்லு மாற்றங்கள் தெரிந்திலை. (யுத்:116) (யுத் : 4161) மாற்றத்தன். (யுத் : 503)

மாற்றம் ஈத்தல் - பேசுதல். உத்தரங் கூறுதல். உண்டிலை என்னும் மாற்றம் ஈக்கவும் பெற்றிலம். (யுத் : 541)

மாற்றமங்கலம் - மங்கல மாற்றம். மங்கலச் சொல். இனிய மாற்ற மங்கலம் மாதவர் வேதத்தின் வரம்பின் தோற்ற மெய்ப்பொருள் தெரிந்த மற்றிதினில்லை சிறந்த. (யுத் : 175)

மாற்றருங் கூற்று - மாற்றுதற் கரிய யமன். மாற்றருங் கூற்றின் தூது போல்வன சுடுகணை. (யுத் : 3508)

மாற்றருந் தம்பி - விலக்குதற் கரிய (பெருவலி படைத்த) தம்பி மாற்றருந் தம்பி நின்ருன் மற்றையோர் முற்றும் நின்ருர். (யுத் : 1354)

மாற்றலர் - 1. மறுக்க முடியாதவர். மாற்றலர் ஈந்த தெய்வ வாத் திறல். (யுத் : 2379)
2. பகைவர். என்னையுங் கொல்லும் மாற்றலர் உளரெனக் கோடலுங் கோளே. (யுத் : 116)

• மாற்றலன் - 1. இல்லை யென்று மறுத்துக் கூருதவன். ஏற்றவற் கொரு பொருள் உள்ள தின்றென்று மாற்றலன் உதவலன். (அ : 906)
2. பகைவன். யார் இனி மாற்றலற் காகி வந்தெதிரு மாண்பி ஞர். (கி : 256)

மாற்றலாம் ஆற்றல் – பரிகாரிக்கத் தக்க உபாயம். பாலரைப் பாவை மாரை வதை புரிகுநர்க்கு முண்டாம் மாற்றலாம் ஆற்றல். (கி : 626)

மாற்றலார் – பகைவர் (யுத் : 3674)

மாற்றலாற்றுதல் – மாற்றும் வல்லமை. மற்றது வினையின் வந்த தாயினும் மாற்ற லாற்றும் பெற்றியர். (அ : 7)

மாற்றவள் – சக்களத்தி. மாற்றவளைக் கண்டக் கால் அழலாதோ மனம். (ஆ : 346)

மாற்ருர் – பகைவர். மாற்ருர் செல்வங் கண்டழிந்தால் வெற்றியாக வற்ருமோ. (ஆ : 674)

மாற்ருவுயிர் – நீக்கமுடியாத உயிர். மாற்ருவுயிர் எம்பியை மாற்றிய மானுடன். (யுத் : 1962)

மாற்ருன் – பகைவன். வச்சிரத் தெயிற்றுளன் கூற்றுவன் மாற்ருன். (யுத் : 501)

மாற்றுத்தேர் – வெவ்வேறு தேர்கள். மாற்றுத் தேரவை வந்தன வந்தன வாரா. (யுத் : 1206)

மாற்றுதல் – 1. செயலற்ற தாக்குதல். மாடு நின்றவர் படைகளு மாற்ரு. (ஆ : 519)

2. போக்குதல். அடக்குதல். கால மடங்கலின் உயிர்ப்பும் மற்றக் காற்றினை மாற்றும். (யுத் : 264) மாற்றுவுயிர் எம்பியை மாற்றிய மானுடன். (யுத் : 1962) மாற்றுச் சிறை. (சு : 55)

3. தடுத்தல். வல்லையிலகலா வண்ணம் வாளையும் வழியை மாற்றி. (சு : 748)

4. மறுத்தல். ஏற்ற கை மாற்றுன் என்ன. (யுத் : 1109)

5. அழித்தல். வாங்குதல். ஆண்டு பேரர் வாலியாற்றல் மாற்றியது அம்பு ஒன்றுயின் வேண்டுமோ துணைவர். (கி : 623) மாற்றுவுயிர் எம்பியை மாற்றிய மானிடன். (யுத் : 1962)

6. ஒழித்தல். தலனுள் நீடிய அவற்றினத் தலைவரை மாற்றி. (யுத் : 137)

7. அகற்றுதல். அப்புறப் படுத்தல். அறுத்து மாற்றி. (யுத்:1093)

8. தவறுதல். போக்குதல். விலக்குதல். வாளி ஐந்தையும் ஐந்தினுல் விசும் பிடை மாற்றி. (யுத் : 1191) வழங்குவன் யாதும் மாற்றேன். (யுத் : 1632) உறக்கமும் வாழ்வும் மாற்றினுன். (யுத் : 2105)

9. மறுத்துரைத்தல். யாதும் மாற்றேன். (யுத் : 1632)

10. விடுத்தல். போர்த்தொழில் மாற்றி நின்றுர். (யுத் : 2139

மாற்று வெஞ்சிலை – வேறு கொடியவில். மாற்று வெஞ்சிலை வாங்கி னன். (யுத் : 1204)

மாறகல் முழுமணிக்கரசு - ஒப்பில்லாத சிறந்த இரத்தினங்களுக் கெல்லாம் அரசான கௌத்துவமணி. (ஆ : 248)

மாறதிர் கழலினுன் – ஒன்றேடொன்று மாறி மாறி ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்தவன். (தசரதன்) மாறதிர் கழலினுன் வாசி என்றனன். (பா : 818)

மாறுக – ஈடாக. மென்புறவின் மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறுக வழங்கினனுல். (பா : 727)

மாறுடினமாமதம் – ஒன்றேடொன்று மாறுபட்டுப் பெருகுகின்ற மிக்க மதநீர். மால்கரியின் புடைதாழ் மாறுடின மாமத மண்டு தலால். (யுத் : 1700)

மாறுடுதல் – மாறுதல். மாறுபடுதல். மலைக்குவை கிடந்தனவாமென மாறுடிக்கரங்கிடந்தன. (யுத் : 1537) (யுத் : 1700) மாறுடி. (யுத் : 1537)

மாருடுறுதல் – வேறுபடுதல். மற்றங்கது வடிவுற்றது மாருடுறு காலே. (யுத் : 1141)

மாருத்தனிச்சொல் – மாறுபட முடியாத ஒப்பற்ற சொற்கள். மாருத் தனிச்சொல் துளி மாரி வழங்கிவந்தான். (அ : 418)

மாரு மதவாரி – மாருத மதப்பெருக்கு. மாரு மதவாரிய வண்டி ஞெடும் பாருடு முகத்தன. (யுத் : 1717)

மாருய் – வேருய். மாருயாரிலங்கை நிகர்ப்பது. (யுத் : 1971)

• மாறிச்செல்லும் – மாறி மாறி உழலும். (யுத் : 1357)

மாறிப்புக்கு இதயமெய்தல் – காதல்கொண்டு ஒருவர் மனத்தில் ஒருவர் குடிக்கொள்ளல். வரிசிலை யண்ணலும் வாட்கண் நங்கை யும் இருவரும் மாறிபுக்கு இதய மெய்தினுர். (பா : 600)

மாறிமாறி – மாறி மாறி. மாறி மாறி வரிசிலை வாங்கினுன். (யுத் : 3855)

மாறிய பிறப்பு – வேருகிய பிறப்பு. மறுபிறப்பு. மாறிய பிறப்பில் தேடிவருவ போல் வந்தவன்றே. (பா : 420)

மாறில் மண்டிலம் – கோட்டமற்ற முழுவட்டம். மாறில் மண்டிலம் நிரம்பிய மாணிக்க மணிக் கற்பாறை. (அ : 751)

மாறிலாக் காதலன் - மாறுபாடற்ற தலைவன். தன்னுயிர் மாறிலாக் காதலன் செயலை மற்ருெரு நாறு பூங்கோதையாள் நவில நாணுவாள். (பா : 1093)

மாறிலா மதுகையான் – நிகரற்ற வன்மையை யுடைய தயரதன். மாறிலா மதுமையான் வருபெருந் தானை மேல். (பா : 1128)

மாறிலி வார்கணை – தடுத்தற் கரிய இந்த நீண்ட அம்பு. மாறு இல் இவ்வார்கணை இவ்வுரை வாயில் கூறிடின் நின்னுடல் கூறிடும். (ஆ : 1091)

மாறிவந்து பிறத்தல்-முந்தைப் பிறப்பு நீங்கி மண்ணுலகில் வந்து பிறத்தல். தேறி முந்தைத் தம் சிந்தையராயினுர் மாறி வந்து பிறந்தன்ன மாட்சியார். (அ : 1084)

மாறு – 1. பகை. மாறெனத் தடங்களைப் பொருது. (பா : 888)
2. பகைமை. பகைவன். மாறு வானரம். (யுத் : 1561) மாறு மாறு மலையு மரங்களும் நூறு மாயிரமும் கொடு நூறினுர். (யுத் : 2097)

3. ஒப்பு. நிகர். மாறகல் முழு மணிக் கரசை. (ஆ : 248) மாறில் போர் அரக்கன். (யுத் : 1180)

4. மாறுபாடுள்ள. மாறு குன்ெறுடு வேலே மறைந்தனர். (யுத் : 3156) மாறில் குன்ெறுடு. [பா : பே]

5. பிரதியுபகாரம். கைம்மாறு. தேண்டிக் கொடுவந்தனள் செய்வ தோர் மாறுமுண்டோ. (ஆ : 705) உனேயும் மாறே யொரு மன்னென வைக்குவனல். (யுத் : 1714)

6. மற்று. மற்ெறுன்று. மாறுேர் உடல். (ஆ : 720) மாறுகால். (யுத் : 1568)

7. எதிரிடையாக. மாருக. மாறுேர் வாளியுன் மார்பை ஈர்வதோ. (கி : 403) இனி மாறு வேறு விழ்ந்திறப்பினும். (யுத்:3979)

8. எதிரான பொருள். மாறு மாறு மலேயும் மரங்களும். (யுத் : 2097)

9. மாறி மாறி. மாறதிர் கழலினுன். (பா : 818)

10. மாறுபாடு. (யுத் : 596)

11. ஈடு. (பா : 727)

மாறுகால் – மற்ெறுருகால். மாற்றி ஊன்றுதற்குரிய கால் மாறுகால். மாறு காலின்றி வானுற நிமிர்ந்து மாடுள வெலாங்கடி தேந்தி. (யுத் : 1568)

மாறு கொண்டிமைத்தல் – மாறுபாடு கொண்டு விளங்குதல். எல்லவன் கதிர் மண்டிலம் மாறு கொண்டிமைக்குஞ் செல்லுந் தேர் மிசை. (யுத் : 3493)

மாறு கொள்ளல் (மாறு கொள்ளுதல்) – 1. மாருடுதல். மாறு பாடு கொள்ளல். வரக் கருதாது தாழ்த்த வருணனின் மாறு கொண் டார். (யுத் : 596)

2. பகைகொள்ளல். மிக்கு விளங்குதல். குண்டல மிரண்டொடு மாறு கொண்டவே. (சு : 591)

3. மாருகக் கொள்ளல். பரிவர்த்தனே பண்ணல். மாற்றிக் கொள்ளல். மாடுமுத நறுங்கலவை வயக்களிற்றின் சிந்துரத் மாறு கொள்ள. (க : 312)

4. வேருன வடிவம் கொள்ளுதல். மானுயர்த் திருவடிவினள் அவள் இவள் மாறு கொண்டனள். (சு : 296)

5. நிகர்த்தல். இருகிறை வீச்சின் ஏறலால் வானமும் கானமும் மாறுகொள்ளவே. (ஆ : 902)

மாறுகோடல் - மாறுபடுதல். பகைத்துக்கொள்ளுதல். மன்னு நம் பகைஞராம் வானுளோரொடும் மாறுகோடல் கன்மமன்று. (யுத் : 110)

மாறுதல் - 1. மீளுதல். இனி வல்லது மடிதலேயென்னின் மாறுதிர். (யுத் : 1681)

2. அழிதல். மாறிப் பல்பொருள் வகுக்குறுங் காலத்துள் மறுக்கம் ஏறிற்று. (யுத் : 3638)

3. முதுகிடல். மாறு மாறு நிமிர் தோள். (ஆ : 32)

4. உருமாறுதல். அமரர்க்கெல்லாம் தேவராந் தேவர்தாமே மாறி இப்பிறப்பில் வந்தார். (கி : 97)

5. நீங்குதல். மாறு மதவாரிய. (யுத் : 1717)

மாறுதிர் - திரும்பிச்செல்லுங்கள். (யுத் : 1681)

மாறு நிற்றல் - குறுக்காக நிற்றல். மாறுநின்ற மரனும் மலைகளும் நீறு சென்று நெடுநெறி நீங்கிட. (கி : 574)

மாறுபிறப்பு - மறுபிறப்பு. மாறுபிறப்பில் உடம்புயிரைத் தொடர்கின்றதை ஒத்தாள். (பா : 1335)

மாறும் - மற்றும். (வை.மு) மாறுபட்டு (அண்) மாறுமோர் அளவை சால் வாய்மை கூறினன். (அ : 78)

மாறு மாறாகி - பெரிதும் மாறுபட்டு. ஒன்றொடொன்று மாறு மாறாகி வாளாகிடக்கிலா மறுகிற் சென்றார். (பா : 570)

மாறு மாறு - 1. பகைவனுக்கு மாறாக. (எதிராக) (யுத் : 2097)

2. மாற்றி மாற்றி. (வை.மு) முதுகிடும்படி. (அண்) (ஆ : 32)

3. வேறுபட்ட பல. மாறு மாறுலகின் வாழ்வார். (சு : 1001)

மாறுவார்த்தை - மறுமொழி. வார்த்தை மாறு உரைத்திலன். (பா : 461)

மாறு வேறு வீழ்ந்து இறப்பினும் - மாறாக வேறுபட்டு விழுந்து இறந்தாலும். (யுத் : 3979)

மாறுளார் - நாகர். இவ்வுலகிற்கு மாறுபட்டதாகிய பாதலத்தில் உள்ளவராகிய நாகர். மண்ணுளார் விண்ணுளார் மாறுளார் வேறுளார். (கி : 81)

மான் - 1. குதிரை. வாவு மான் தேர். (பா : 1153)

2. பெரியோன். நீ அமான் நேர்தியால். (கி : 89)

3. மான் போன்ற பெண். சொன் மான். (பா : 668) சனகன் மானை நாடி நின்றழைப்பன போன்றன மஞ்ஞை. (கி : 487) என் மான் அகல்வுற்றனள். (சு : 576)

4. மானுதல். ஒத்தல். (அண்) வில் மான் கொலை. (சு : 576)

5. விலங்கு. (பொது) மரனீர்த்து மலையீர்த்து மானீர்த்து வருவது. (கி : 764)

6. ஒரு விலங்கு. நிறை மதியின் களங்கம். (அண்) ஒரு கலைத் தனி வெண்மதி நாளொடும் வரு கலைக்கும் வரு மானுற. (யுத் : 3940)

7. சிங்கம். (அண்) மாய[3] மாரீசனார் மாய மானுயினுன். (கி : 89)

மான் திரள் – மான் கூட்டம். மான் திரள் புலி கண்ட தாமெனப் போனார். (யுத் : 517)

மான் குலம் – சிறந்த மான். மான் கூட்டம். (யுத் : 2749)

மான் மதம் – கஸ்தூரி. மான்மதஞ் செறி நறுஞ் சேலும். (சு : 112)

மான்மறி – மான் குட்டி. மான் மறிக் கரத்து வள்ளல். (யுத்:3130) மான் முக முற்றொரு மாதை வதைத்தல். (யுத் : 2827) [பா:பே)

மான் மறிக் கரத்தான் - மான் கன்றை ஏந்திய கையினனாகிய சிவபிரான். மான்மறிக் கரத்தான் மழுவேந்துவான். (அ : 321)

மான்மறிக் கரத்து வள்ளல் – சிவபிரான். (யுத் : 3130)

மான்முக நலத்தவன் – மானின் முகம்போன்ற இயல்புள்ளவன் மான்முக நலத்தவன் மயன்செய்த தவத்தால் நான்முகனளித்துளது இம்மா நகரம். (கி : 875)

மான் முகம் – 1. முகதாட்சண்யம். பெரும் பழியன்றோ மால் முகமற்றொரு மாதைவதைத்தல். (யுத் : 2827)

2. மானின்முகம். மான் முகத்தொருவன் நன்னாள் மண்டபம் வயங்கக் கண்டான். (யுத் : 4307)

3. மயங்கிய அறிவு. அறிவு கலங்கிய நிலை. (அண்) மான் முகமுற. (யுத் : 2827) [பா : பே].

மான் முகன் - மானின் முகங்கொண்ட மயன். மான் முகன் முதலாயுள்ள வானவர். (யுத் : 4217) (யுத்: 3925)

மான்று - மயக்கங்கொண்டு. [மால்] மான்ற அளிக்குலம் மாமதம் வந்துண. (அ : 1080)

மான்றேர் - குதிரைகள் பூட்டிய தேர். துரித மான்றேரிற் சென்ருன். (அ : 584) வாவுமான் தேரிற் செல்வோன். (பா:1153)

மான - 1. ஒப்ப. நெடுமந்தர வெற்புமான . (சு : 42)

2. நெருங்க. அங்கை பத்திரட்டியான் தன் ஆணையால் அழகு மான. (சு : 737)

3. இலச்சிப்ப. (உ.வி) (கலா) இலச்சையடைய. மின்னி னிழலன்னவள் தன் மேனியொளி மான. (பா : 1229)

4. பெருமையுடைய (கலா) வலிய. (அண்) மானத்தோள்கள் (சு: 306)

5. பெரிய. மானத் தோள்விசைத் துணைகள் பொங்க. (சு:17)

6. மிகுதியாக. உயிர்தந்தியும் மருந்து வைத்தனையோமான. (யுந்: 2971)

மானஅரவு - 1. வலிமைமிக்க அரவு. (அண்)

2. சீறுந்தன்மையுள்ள அரவு. (வெ. ப.) மானஅரவின் வாய்த் திய வளைவான் றெளிவாளெயிற்றின்வழி ஆனகடுவுக்கரு மருந் தாய். (அ: 613)

மானக்கழல் - பெருமை பொருந்திய அடிகள். பொய்யிலான் தன் மானக்கழல் தாழும் வேலையில். (கி: 415)

மானக்குணம் - பேரளவினவான குணங்கள். எண்களால் அளவா மானக்குணந் தொகுத்தியற்றினனை. (யுத் : 1586)

மானக் குன்றம் - பெருமை மிக்க மலைகள். மா முதற் றருவோ டோங்கும் வானுயர் மானக் குன்றம். (யுத் : 637)

மானக் கொதிப்பு - மானத்தா லாகிய மனக் கொதிப்பு. கோபமு மறனு மானக் கொதிப்பு மென்றிணைய வெல்லாம் பாப நின் றிடத்து நில்லாப் பெற்றிபோல். (ஆ : 641)

மானக் கொற்றவன் - பெருமையினையுடைய வெற்றி வீரன். வானினு முயர்ந்த மானக் கொற்றவ. (கி : 362)

மானச மடு - மானச சரஸ் - (சரஸ் - நீர் நிலை) சரசில் தோன்று வது சரயு. மானச மடுவிற்றேன்றி வருதலாற் சரயு வென்றே மேன்முறை அமரர் போற்றும் விழுநதி. (பா : 423)

மானத்தாளுடைக் கோடல் - பெரிய நாளத்தையுடைய வெண் காந்தட் செடிகள். வாளெயிற் றரவம் போல வன்றலை கான்ற மானத் தாளுடைக் கோடல் தம்மை தழீஇயன காதல் தங்க. (கி : 471) [பா : பே]

மானத்தாற் புழுங்குதல் - மானம் போய்விட்டதே யென்று மனம் புழுங்குதல். மாயப் புண்ணுளே கோலிட்டன்ன மானத்தாற் புழுங்குகின்றான். (சு : 997) புண்ணிடை எரிபுக் கென்ன மானத்தாற் புழுங்கி னையும். (யுத் : 1941)

மானத்தானூன்றப்பட்ட மருமத்தான் - மானத்தினால் தாக்கப்பட்ட மருமத்தானத்தையுடையவனான இராவணன். மானத்தானூன்றப் பட்ட மருமத்தானை வதனமெல்லாம் கூனற்றாமரையிற்றேன்ற வான் தொடுங் கோயில்புக்கான். (யுத் : 892)

மானத்தீ - மானமாகிய நெருப்பு தேவியைக் குறித்துச் செற்ற சீற்றமும் மானத்தியும் ஆவியைக் குறித்துநின்ற. (கி ; 634)

மானத் துணைவர் - பெருமையுள்ள துணைவரான அமைச்சர் முதலியோர். சூரியன் மகனும் மானத்துணைவரும் கிளையும் சுற்ற. (கி : 441)

மானத் தேர் - வலிய தேர். (3728)

மானத் தோள்கள் - வலிய கைகள். மானத்தோள்களால் வாரி வாரி உண்டது நெவிட்டி. (சு : 306)

மானநீர் - பெரிய நீர். கடல்நீர். (ஆ : 355)

மான நோய் - தாழ்நிலையாகிய துன்பம். மயிலியல் பிரிந்தபின் மான நோயினால் அயில்விலன். (ஆ : 1132)

மானப் புரவி - செருக்கு மிக்க குதிரைகள். தேரிடைச்செல்லார் மானப் புரவியிற் செல்லார்- (யுத் : 212)

மானப்பேர் கயல் - சிறந்த பெருங்கயல் மீன்கள். மானப்பேர் கயல் அஞ்சப் பிறழ் கண்ணாள்- (பா : 589)

மானம் - 1. அவமானம். பூண்ட மானமும் போக்கரும் காதலும் தூண்ட நின்றிடை தோமுறுமாருயிர். (ஆ : 1050) (ஆ : 957) 2. அபிமானம். ஊனுடை உடம்பினுனு முருகெழு மானமூன்ற. (ஆ : 872)

3. பெருமை. (கலா) கவுரவம். மானக் கலுழன். (யுத் : 937) மானக் கொற்றவ. (கி : 362)
4. ஒப்பு. சமானம். தன்மான மிலாத பொன்மானுருவம். (ஆ : 778)
5. விமானம். முதற்குறை. வான மானம். (யுத் : 3355) ஊரு மானமும் உடுக்கள் தம் முலகும். (யுத் : 2311)
6. எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும் தெய்வத்தால் தாழ்வு வருமிடத்து உயிர் வாழாமையுமாம். (அண்) தமது நிலை மையைக் கருது வதனுலாகிய மனத்தின் ஓங்கிய நிலை. தேவி யைக் குறித்துச் செய்த சீற்றமும் மானத் தீயும் ஆவியைக் குறித்து நின்ற ஐயனை. (கி : 634)
7. விமான வடிவிற் செய்த மண்டபம். புள்ளுறையுமானம். (சு : 329)
8. வலிமை. மான அரவு. (அ : 613) மானத் தோள்கள் (சு : 306)
9. சினம். நதி காய் நெடு மானமு நாணுமுரு. (யுத் : 1683)
10. ரோஷம். உரோடம். தண்டலில் மானமும் நாணுந் தாங்கி னன். (யுத் : 1509)
11. சீறுந்தன்மை. (உ.வி) மான அரவு. (அ : 163)
12. அகங்காரம், மன வைரம். கர்வம். பூண்ட என் மானந் திரத் தண்டகம் புக்க காலை. (ஆ : 764)
13. நாணம். மானமுடைக் குரோதவசை. (ஆ : 202)
14. தணியாக் கோபம். (வை.மு) மான யானை ஓட. (கி:232)
15. அளவு மானமிலாக் கற் குவடடுக்கி. (யுத் : 785) எண் களால் அளவா மானக் குணம். (யுத் : 1586)
16. சிறப்பு. மானப் பாம்பு. (யுத் : 2009)
17. தருக்கு. மான வெங்கண் அரக்கன். (யுத் : 2106)
18. தன்மானம், பேரெழில் மானங் கொல்ல. (யுத் : 1596)
19. பெருமிதம். வீர வில்லின் நெடு மானம் வெல்ல. (யுத்:8)
20. கௌரவப் பேச்சு. பேசுவது மான இடை பேணுவது காமம். (யுத் : 54)
21. பௌருஷம். கொன்றன மானந் தோன்ற. (யுத் : 1606)
22. பெருந்தன்மை. (கு)
23. பெருமைக் குறைவு. தன்னைக் கொன்றன மானந் தோன்ற. (யுத் : 1606)

24. வீரத்தில் தாழ்வின்மை. மானவெங்கண் அரக்கர். (யுத் : 2106)

மானம் ஊன்றுதல் - அபிமானம் மேலிடுதல். (வை.மு) மான உணர்ச்சி மனதிற் பதிதல். (அண்) அபிமானம் பதிதல். (கலா) உரு கெழு மானம் ஊன்ற மானிடர் வலியர் என்ற மாற்றத்தாற் சீற்றம் வைத்தான். (ஆ : 872)

மான மங்கையர் - மானவ மங்கையர். மனுஷ்ய ஸ்திரீகள். அருங் கற்புடை மான மங்கையர் தாமும் வழுத்தினர். (யுத் : 3914)

மான மந்திரத்தவர் - பெருமையையுடைய மந்திரிகள். மான மந்திரத்தவர் மன்னர் மாதவர். (அ : 1147)

மானமர் நோக்கினர் - மான்களும் விரும்பத்தக்க பார்வையினர். மானமர் நோக்கினரை மைந்தரைக் காட்டி. (யுத் : 2784)

மானமா - 1. மானத்தைப் பெரிதாக எண்ணும் கவரிமா. வருந்தலில் மானமா அனைய மாட்சியர். (சு : 507)
2. வீரத்திற் குறையாத பெருமையுடைய குதிரைகள். மானமா வந்த வெல்லாம் மறைந் தொழிந்தன வோ என்றார் (யுத்:2471)

மானமாதரார் - பெருமையோடு கூடிய பெண்கள். நீள் கந்த நாறு பங்கயத்த கானமான மாதரார். (பா : 108)

மான மாந்தர் - மகா சனங்கள். திரு நன் மா நகர் மானமாந்தரும் மற்றுளோர்களும். (அ : 1153) [பா : பே]

மானமா மணி - 1. மானமாகிய பெரிய ரத்தினம். மானமா மணியிழந்து அஞ்சினர் நெஞ்சு போல். (பா : 348)
2. பேரளவுள்ள சிறந்த ரத்தினம். ஆரத்தோடு மானமா மணியும் பொன்னும். (யுத் : 2537)

மானமுதியர் - பெருமை மிக்க பெரியோர். மானமுதியரும் இளையோரும் விரைசெறி குழலாரும் விரவினர் விரைகின்றார். (பா : 1264)

மானயானை - பெருமை மிக்க யானைகள். மான யானைஓட ஆளி போம். (கி : 460)

மானவ-பெருமை மிக்கோய்- மானவ மற்றுங்கேளாய். (பா : 1380)

மானவக்குமரர் - மனுவம்சத்திற் பிறந்த குமாரர்களாகிய இராம லக்குமணர். மானவக்குமரர் தாமும் அத்திசை வழிக்கொண் டேகி. (ஆ : 1196)

மானவள் – 1. மானுடமகள். மான் போன்றவள். (அண்)ஏனையர் இறக்கிற்ருனும் தமியளாய் இறக்குமன்றே மானவள். (ஆ : 767)

2. பெருமையுடையவள். மானவள் உரைத்தலோடும். (ஆ:864) மானவன் என்பதன் பெண்பாற் சொல் (அண்)

3. மான் போலும் எழிலுடைய சீதை. மானவள் மெய்யிறை மறக்கலாமையின். (ஆ : 1133)

மானவன் – பெருமையுடையவன். இராமன். வை வ சுவ மனு குலத்திற் பிறந்தவன். மானவன் செங்கை கூப்பி. (அ : 299)

மான வெஞ்சிலே பெருமையும் கொடுமையுமுடைய வில். வருணனே மான வெஞ்சிலே சேமியென்றுதவி. (பா : 1393)

மான வேந்தர் – குதிரையை ஊர்தியாகவுடைய வேந்தர். (மான் – குதிரை. அ. குறிப்பு வினையெச்ச விகுதி) மானவேந்தர் குழுமினர். அ : 801

மாஞ – ஒவ்வாத. மாஞ உலகம். (ஆ : 85)

மாஞயினுன் – மாரீசன். முந்த மாஞயினுன். (யுத் : 109) மாய மாஞயினுன். (கி : 89)

மானிடப் பசுக்கள் - மனிதர்களாகிய பசுக்கள். ஈங்கு மானிடப் பசுக்களுக் கிலேவர மென்ருய். (யுத் : 114) [பா : பே]

மானிடம் - மானுடம். வேறுள குழுவை யெல்லாம் மானிடம் வென்றதன்றே. (கி : 97) [பா : பே]

மானிட மடங்கல் - நரசிங்கம். மன்றலந் துளப மாலே மானிட மடங்கல். (யுத் : 261) [பா : பே]

மானிடர் - மானுடர். மானிடர் பொருத போர்க்கு வெருவுதி போலும். (யுத் : 1254)

மானிடவர் - மனிதர். இராம லக்குமணர். பேதை மானிடவரோடு. (யுத் : 774) (யுத் : 1672)

மானிடவன் - 1. மான் இடவன். மானை இடக்கரத்தில் ஏந்திய சிவபிரான். அந்த மானிடவனோடு ஆழியவலவனும். (யுத் : 109)
2. மனிதன். மானிடவன் மெல்லம்பு மெய்யுருவ நீண்டன வாம். (யுத் : 1663)

மானிட வேடம் - மானிட உருவம். மானிட வேடமாகி. (சு : 54)

மானிடன் - 1. சிவன் மான் இடன். மாலயன் மானிடன் யாவருங் கொல்ல ஆவி தீர்கிலன். (யுத் : 145)
2. மனிதன். இங்கோர் மானிடற்கு இத்தனை வீரர்கள் இடைந்தீர். (ஆ : 511)

மானிற மணிகள் - மால் நிற மணிகள். சிறந்த இயல்புள்ள ரத்தினங்கள். பசும் பொனு ரத்தின் மானிற மணிகள் இடையுறப் பிறழ்ந்து. (சு : 411)

மானின் இனம் - மானின் கூட்டங்கள். மானின் இனங்களும் பல என் செயும் அரியினை. (யுத் : 839)

மானின் சருமனன் - மான் தோலுடையான். உரிமானின் சருமனன் மரநாரின் உடையினன். (அ : 710)

மானின் விழி - மான் பார்வை போன்ற பார்வை. ஓர் மானின் விழிபெற்று மயில் வந்ததென வந்தாள். (ஆ : 257)

மானினம் — மான் கூட்டங்கள். மானினம் வருவ போன்றும் மயிலினம் திரிவபோன்றும். (பா : 1148)

மானுடச் சிறுதன்மை — சிறுமைப்பட்ட மானுடத் தன்மை. (வை.வமு) சிறுமைப்பட்ட என் மனிதத் தன்மையின் பெருமை. (கலா) மீனுடைக்கடற் பெருமையும் வில்லொடு நின்ற மானுடச் சிறுமையும் காண்பரால் வானோர். (யுத் : 546)

மானுடச் செல்வி — மனித உருவம். மானுடச் செல்வி வீரம் பெருகுற்ற அன்பர். (யுத் : 4283) மானுடப்பசுக்கள் — மனிதப் பசுக்கள். (யுத் : 114)

மானுட மடங்கல் — மனித வடிவங்கலந்த சிங்க வடிவம்; முகமும் நகங்களும் சிங்கத்தினுடையது போல்வது; நரசிங்கம். மன்றலந் துளபமாலை மானுட மடங்கல் வானிற் சென்றது தெரிதல் தேற்றும். (யுத் : 261)

மானுடவன் - மனிதன். மானுடவன் வில் லொன்று உன்னை விளிவித்துள தென்னும் சொல். (யுத் : 1662) (யுத் : 3907)

மானுடன் - மனிதன். மானுடன் தோளென்னுங் கல்லை நோக்கி. (யுத் : 750)

மானுதல் - ஒத்தல். வில் மான் கொலை (சு : 576) மானு. (ஆ : 85)

மானும் - ஒக்கும். எக்காலொ டெக்கால வெந்தீ வெவ்வே றுலகத் திவர் மேனியை மானும். (கி : 268) வெரு வரு தோற்றத்திவள் மேனி மானுமே. (பா : 364)

மானுயர் - மானுடர் மானுயர் இவரென மனக்கொண்டா யெனின். (சு : 456) மானுயர்த் திருவடிவினள். (சு : 296) (ஆ : 275) [பா பே]

மானுரி - மான்தோல். மான்வரு தலியுரி மார்பினை. (ஆ : 112)

மானுறுதல் - ஒத்தல். அலை மானுறும் ஆசை (ஆ : 774)

மானென வந்தவன் - மாரீசன். மானென வந்தவன் வரவை மானும் இவ் வேணையன் வரவும். (யுத் : 383)

மானை மாந்தர் - மால் நை மாந்தர். அன்பினுல் பெரிதும் வருந்து கின்ற மாந்தர். (உ.வி) பெரிய மனிதர். திரு நன் மாநகர் மானை மாந்தரும் மற்றுளோர்களும். (அ : 1158)

## மி

மிக்கது - மிஞ்சி நிற்பது. மேம்பட்டது; (அறம்) மிக்கது நலனேயாகி வீடு பேறளிக்கு மன்றே. (யுத் : 1361)

மிக்கன -மிகப் பெரியன. மிக்கன போன்று தோன்று முலகங்கள் விளியுமாறும். (ஆ : 1018)

மிக்கிடும் - தலைசிறந் தோங்கும். (கலா) மிகுதியாகக் கொண்டுள்ள. (வை.மு) அரசரின் வண்மை மிக்கிடும் சனகர் தம் குலம். (சு : 398)

மிக்கு இறுக்கின - மிகுதியாகக் கூடி நின்றன. புக் குறுக்கிப் புடைத்தும் மெனப்புறம் மிக்கிறுக்கின வெற்புமிறுத்தன. (கி : 598)

மிகுத்தல் - வரம்பு கடத்தல். நல்லுணர் உம்பரை வென்று வீங்கிய விக்கம் மிகுத்ததால். (சு : 1136)

மிகுதல் - 1. உயிருடன் நிற்றல். (செல்லல்) விறல் கொண்டு மிகுதிர் போலாம். (யுத் : 1101)

2. மேன் மேல் வளர்தல். மிகுந்தகை நினைப்புமுற்ற உருவெளிப் பட்ட வேலை. (சு : 309)

3. மிகைப்படுதல். மிகுந்திறம் வெறுஎன்றில்லா இருவர் நாஞ்ஞெலி.

4. செருக்குதல். அரக்கன் ஆர்த்துமிக்கான். (ஆ : 942)

மிகுதி - 1. மேன்மை. வென்றி மாருதி தனிமை நோக்கின் எவ் வணம் விளம்புந் தன்மை. (யுத் : 1184)

2. பிரபஞ்சத் தோற்றம். இம் மிகுதி உன் பெரு மாயையினால் வந்த விக்கம். (யுத் : 4020)

3. அதிக் கிரமம். (வை.மு) தீமை. (கலா) ஏதலன் மிகுதி யெல்லாம் இயற்றிய பின்றை என்தன் சோதனை நோக்கிச் செய்தி. (யுத் : 3673)

மிகுந்தகை நினைப்பு - மேன் மேல் வளருந் தன்மையுடைய சிந்தனை. (சு : 309)

மிகுந்த வான் - பரந்த வானம். மிகுந்த வான் மிசை மீன மலைந்தன. (யுத் : 3831)

மிகு பொருள் - பரம் பொருள். வேதமும் அறிவரு மிகு பொருள். (ஆ : 115)

மிகு போர் - பெரும் போர். பொலிந்த தாங்கு மிகு போரென லோடும். (யுத் : 806)

மிகை - 1. செருக்கு. மிகை யெழுந்திடு சதமககேள். (பா : 492) மிகை பிறக்கின்ற நெஞ்சன். (யுத் : 3605)

2. தவறு. நினைந்தது மிகையென்றான். (சு : 296)

3. புறம்பு - அயலானது. மிகையல் லேன் போதுவெனுடன். (அ : 684)

4. அதிகம். வேண்டு மளவிற்கு மிகுந்தது. விண்ணிடை மதியினை மிகை யிதென்னவே. (பா : 176) மேக்குயரு நெடு மூக்கும் மடந்தையர்க்கு மிகையன்றோ. (ஆ : 354)

5 மிக்க அறிவு. சிறப்பறிவு. புகையுடைத் தென்னின் உண்டு பொங்கனல் அங் கென்றுன்னும் மிகையுடைத் துலகம். (கி:418)

6. மேம்பாடு. மிகையுறு குரவர். (யுத் : 369)
7. குற்றம். (உ.வி) (பா : 492) (உ வி) (ஆ : 354) மிகை ஆருயிர் உண்ணென விசிய வெந்தகை யாழி தகைந்த தனுத் தொழிலான். (யுத் : 1738)
8. துன்பம். மிகை செய்வார் வினைகட் கெல்லாம் மேற் செயும் வினையம் வல்லான். (யுத் : 277)
9. எஞ்சி நின்ற. வேண்டாத. மிகை உயிரோடுங் காம விம்மலின் வெதும்புவாரும். (சு : 276) (அ : 615)
10. மேன்மேல் வளர்தல். மிகை ஒடுங்காத காமவிம்மலின் வெதும்புவாரும். (சு : 276)

மிகை செய்வார் - மிக்க துன்பஞ் செய்கின்ற துஷ்டர்கள். மிக்க கொடுந்தொழில் செய்பவர். (யுத் : 277)

மிகை செய்வார் வினைகட் கெல்லாம் மேற்செயும் வினையம்வல்லான்- மிக்க கொடுந் தொழிலைச் செய்பவர்களான அசுரர் முதலிய துஷ்டர்களுடைய வஞ்சனைகளுக் கெல்லாம் மேலாகச் செய்யும் தந்திரச் செய்கையில் வல்லவனான திருமால். (யுத் : 277)

மிகை சென்றிலர் - மேற் செல்லவில்லை. மாருதியும் புகையின்பொரு கண்ணவனும் பொருவார் மிகை சென்றிலர் பின்றிலர் வென்றில ரால். (யுத் : 2320)

மிகைப் புலம் - 1. மேம்பட்ட அறிவு. மிகைப் புலம் தருமமே வேட்ட போது. (யுத் : 371)
2. மேம்பாட்டுக்கு விஷயமாய் உள்ளது. (வை.மு) மேலான நிலம். (கலா) மேல் பயன் தருகின்றதாகிய ஒரு பொருள் (அண்) மிகைப் புலத்து விளைகின்ற தொரு பொருளைக் காதலிக் கின். (யுத் : 410)

மிகைப்புலன் - கோபமாகிய உணர்ச்சி. பற்றூர் மிகைப்புலன் அடக்கி. (சு : 1156)

மிகையாவி - மிகையான உயிர். வேண்டாத உயிர். மிகையாவி அக்காலத்தே அகலுமோ அவதி யென்றென்றுள தானால். (அ:615)

மிகை யெழுஞ் சினம் - பொங்கி எழும் சினம். மிகை யெழுஞ்சினத் தனுமன் மேல் விட்டன. (சு : 1013)

மிச்சில் - உண்டு மிகுந்த சேடம். எஞ்சியுள்ளது. பரமன் நுங்கிய மிச்சிலே நுகர்வது வேறு நானென்றும் நச்சிலேன். (கி : 678)

மிசை - மேலே. மீது. அசனி நாவென விரிந்தன திசை தொறும் மிசையின் மின்னெலாம் (கி : 453) (யுத் : 806) மிசையாளர்கள் தலை மெய்தொறு முருவக் கோலேறின. (யுத் : 1831) ஒரு குன்றெடுத்து மிசை ஏவினன். (யுத் : 2024)

மிசை கொள்ள - மேலே தங்க. சுவண வண்ணனொடு கண்ணன் மிசை கொள்ள. (ஆ : 38)

மிசைத்தடம் - மேலிடம் சிகரம். மலை மிசைத் தடத்துகு மழைக் கண் ஆலி போல். (பா : 611)

மிசையாளர்கள் - (யானை முதலியவற்றின்) மேலே இருப்பவர்கள். (யுத் : 1831)

மிஞிறு - 1. நல்ல காற்றில் மட்டும் செல்லும் வண்டு. தேனீ. (அண்) விழைவன தென்றலும் மிஞிறும் மெல்லென நுழைவன. (பா:139) (சு : 706)

2. வரிவண்டு. பம்பு தேன் மிஞிறு தும்பி பரந்திசை பாடியாட. (பா : 929)

மிடல் - வலிமை. பலம். மிடலுறு புலன்கள் வென்ற மெய்த்தவர். (சு : 11)

மிடல் மார்பு - வலிமையுடைய மார்பு. உன் மிடல் மார்பு அரிதிற் பெற்ற செய்யாள் என்னும் பொன்னும். (அ : 360)

மிடலோர் - வலிமை வாய்ந்தவர். (அரக்கர்) மிடலோர் பல்லுந் தலையும் முடலும் படியிற் செல்லும்படி சிந்தின. (யுத் : 2915)

மிடறு - 1- கழுத்து. கடற்படு பணிலமும் கன்னிப் பூகமும் மிடற் றினுக் குவமை யென்றுரைக்கும் வெள்ளியோர். (சு : 539)

2. கழுத்துப் பக்கம். தாழையின் மிடறு தாங்கும் விருப்புடைத் திங்கனி. (கி : 938)

மிடுக்கு - 1. வன்மை. வலிமை. நீங்கும் மிடுக்கினர். (அ : 299) வில்லாளரை வெல்லும் மிடுக்குளரோ. (ஆ : 910) (யுத் : 3309) (யுத் : 1089)

2. மனவுறுதி. வானுயர்ந்த உரத்தினன் மேனிமிர்ந்த மிடுக்கினன். (யுத் : 1338)

மிடை - நெருங்குகின்ற. செறிந்த. மிடையும் வெள்வளை. (பா:546)

மிடைதரு - செறிந்த. விலங்கல் நாணமிடைதரு தோளினுய். (யுத் ; 3930)

மிடைதல் - 1. நெருங்குதல் அலங்கரித் தெதிர் மிடைந்திட முனி யொடும் வேந்தன் கோயில் புக்கு. (பா : 233)
2. செறிதல். யானை கோடுகள் மிடைந்த என்ன. (அ:1046)
3. நிறைதல். (வை.மு) கொடிவன மிடைந்தன. (கி : 685)
4. கிட்டி நின்று போர் செய்தல். வச்சிரத் தெயிற்றனும் இட பனும் மிடைந்தார். (யுத் : 2302)

மிடைந்தவர் - நெருங்கிச் சென்றவர். மிடைந்தவர் உலப்பிலர். (சு : 512

மித்திரர் - நண்பர்கள் மித்திரர் அடைந்துளோர் மெலியர். (யுத் : 317) (யுத் : 2853)

மிதத்தல் - 1. மிகுதி யாகக் கிளர்தல். அலை மிதந்தன. (ஆ : 451)
2 நீர் முதலியவற்றின் மேற் பரப்பில் தங்குதல். அரக்கர் தலை மிதந்தன. (ஆ : 451)

மிதந்தன - மிதக்கலாயின. நெடுந்தடி மிதந்தன. (ஆ : 451)

மிதி - மிதித்த மிதி. மிதியாற் பல விசையாற் பல. (யுத் : 1834)

மிதித்தல் - அடி. (பாதம்) வைத்தல். சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாமிதித் தேறப் படிகள் தாமென. (அ : 771)

மிதித் தேறல் - அடி வைத் தேறல். (அ : 771)

மிதிலை - மிதிலா நகர். மிதிலைத் தொன் மக்களும் மனமுக்கிட. (பா : 1351)

மிதிலை சூழ்ந்த செந் நெலங் கழனி நாடு - சுற்றிலும் சூழ்ந்தமைந்த செந் நெற்பயிர் நிறைந்த வயல்களையுடைய விதேக நாடு. மிதிலை சூழ்ந்த செந் நெலங் கழனி நாடன் திருமகள். (ஆ : 669)

மிதிலை நாட்டன்னம் - மிதிலை நாட்டிற் பிறந்த சீதை. மாமயில் எஞ்சின மிதிலை நாட்டன்னம் என்னவே. (கி:555) (யுத்:5285)

மிதிலை நாடி - மிதிலை நாடன் மகளான சீதாபிராட்டி. மிதிலை நாடிக்கும் கூறின நெறி முறை குயிற்றி. (அ: 782) (சு : 1063)

மிதிலை நாடு - விதேக நாடு. அகன் பணை மிதிலை நாடடைந்தார். (பா : 540)

மிதிலைப் பொன் - சீதை. வேயுபர் கானம் தானும் தம்பியும் மிதிலைப் பொன்னும் போயினன் என்ருன். (அ : 590)

மிதிலையர் கோமான் - மிதிலா நகர சனங்களுக்கு அரசனுகிய சனகராசன். மிதிலையர் கோமான் புரியும் வேள்வியுங் காண்டும். (பா : 477)

மிதிலையர் கோன் மகள் - மிதிலையார் மன்னன் மகளாகிய சீதை. மேவு கான மிதிலையர் கோன் மகள் பூவின் மெல்லிய பாதமும் போந்தன. (அ : 786)

மிதிலையூர் - மிதிலை நகர். மிதிலையூர் அறிவு முற்றிய பித்தன் வெஞ்சிலையின் இறுத்த பேரொலி. (யுத் : 1479)

மிதிலையோர் - மிதிலையிலிருப்பவர். மிதிலையோரை விளிகிலேன் (யுத் : 1630)

மிதிலை வேந்தன் - சனகன். (ஆ : 1164)

மிதிலை வேந்தன் பொன் - மிதிலா நகரத் தரசனுன சனகனது திருமகள் வடிவான மகளாகிய சீதாபிராட்டி. மின்னெடு நடந்து செல்லும் மேகம்போல் மிதிலை வேந்தன் பொன்னெடும் புனிதன் போய்ப் பூம்பொழிற் சாலை புக்கான். (ஆ : 293)

மிம் மினி - மின் மினி. தம் முன் எய்தும் மிம் மினி யல்லனே அவ் வெயிற் கதிர் வேந்தன் அம்மா. (சு : 193)

மிலேச்சர் . மிலேச்ச நாட்டரச பரிவாரங்கள். மான மாகதர் மச்சர் மிலேச்சர்கள். (பா : 1195)

மிலைச்சுதல் - 1. சூட்டுதல் மௌலி மிலைச்சுவாய். (கி : 412) கணிச் சிவானவன் வார் சடைப் புடையினேர் மதிமிலைச்ச. (பா:1298) 2. தரித்தல், தெய்வ நன்னூல் வித்தகன் ஒருவன் சென்னி மிலைச்சிய தெனினும். (யுத் - 4318)

மிலைதல் - சூடுதல். கொடிப்பூ மிலைந்து செல்க. (கி : 289)

மிழற்றுதல் - 1. காமக் குறிப்புத் தோன்றச் சொல்லுதல். மதுக் கொண்ட மாந்தர் மடவாரின் மிழற்று மோசை. (பா : 973) 2. பேசுதல். கிள்ளையும் குயிலும் வண்டும் இனியன மிழற்று கின்ற யாவையும். (ஆ : 657)

மிளிர் சங்கம் - (ஒலியினுலே விரோதிகளை யழிக்க வல்ல) ஒளிர் கின்ற சங்கம். மிளிர் சங்கம் அங்கையுடையாய். (யுத் : 2209)

மிளிர்தல் - 1. விளங்குதல். ஒளிர்தல். மீனினம் மிளிர்வ போன்றும். (பா : 1148) மிளிர் சங்கம். (யுத் : 2209)
2. பிறழ்தல். மிளிர் வேற்கண். (பா : 591)

மிளிர்பூண் நாகம் - விளங்குகின்ற கிம்புரிகளையுடைய களிற்றி யானை. மிளிர்பூண் நாகந்தனி வருகின்றது பிடியோடெனை நடவா. (அ : 621)

மிளிர் வேற்கண் - பிறழ்கின்ற வேற் படை போலும் கண். மேனகை யாதி மிளிர் வேற்கண் இனையோர். (பா : 591)

மிளி ரொளி - விளங்குகின்ற(தேக)காந்தி. மின்னைத் தொழுவளைத்த தென்ன மிளி ரொளியாய். (யுத் : 301)

மிறைத்து - விரைந்து. துடித்து குறைத்தலை மிறைத்துக் கூத்து நின்ருடின. (பா : 472)

மின் - 1. ஒளி. மின்னின்ற சிலையன். (அ : 426) மின்னின்ற வயிர வாளி. (யுத் : 1800)
2. மின்னல். பொன்றிணி மணிப்பரு மரன்திசை போவ மின் திரிவ ஒத்தன. (சு : 705)
3. மின்னுதல். மின் பிறை. (ஆ : 695)
4. மின்னற் கொடி. ஆழிமின் னெனவிளங்கும் பைம்பூண் வீடணன். (யுத் : 883)

மின் கண்டவர் - மின்னலே அருகில் வரக்கண்டவர். மின் கண்டவர் எங்கறிவார் வினையே. (பா : 1257)

மின் கரிதென்ன மின்னும் எயிற்றினன் - மின்னலும் நிறத்தால் கரியது என்னுமாறு ஒளிவிடுகின்ற பற்களையுடையவன். (போர் மத்தன்) மின் கரி தென்னமின்னும் எயிற்றினன் வெகுளி நோக்கிப் பொன்கரி தென்னுங் கண்கள் பொறியுக நீலன் புக்கான். (யுத் : 1903)

மின் கன்றும் எயிற்றுக் கோண்மா - மின்னலைப் போலும் பற்களை யுடைய சிங்கம். கன்றும் உவம உருபு. (உ.வி) மின்னலும் வருந்துதற்குக் காரணமான எயிற்றையுடைய சிங்கம். தறுகட் பேழ்வாய் மின் கன்று மெயிற்றுக் கோள்மா வேங்கை என்றினைய வேயும். (கி : 53)

மின் குற்றெளிரும் வெயில்தீக் கொடமைந்த வேலோய் - மின்னலைக் கீழ்ப்படுத்தி ஒளிவீசுகின்றதாய் வெயிலின் தன்மையும் தீயின் தன்மையும் தன்பால் கொண்டு அமைந்துள்ள வேலையுடையவனே. (அ . 425)

மின் சென்றறியா மழுவாளன் - மின்னலும் ஒப்பாகமாட்டாத மழு வென்னும் ஆயுதத்தை ஏந்திய சிவபிரான். (யுத் : 1971)

மின் சேவிக்கும் மின்னரசு - மின்னல்கள் சூழ்ந்து குற்றேவல் செய்யும் மின்னரசு. சதகோடி மின் சேவிக்கும் மின்னர சென் னும்படி நின்ருள். (பா : 594)

மின்தடி - மின்னல். பின்புற மின் தடியோடு துடக்கிய தாரைய. (யுத் : 1699) [பா : பே]

மின் தளிர்த்தனைய பன்மா மணி - மின்னல் தளிர்விட்டாற் போன்ற பல சிறந்த மணிகள். மின்றளிர்த்தனைய பன்மா மணியினை வெளியிற் கண்டான். (யுத் : 889)

மின்திசைத் திடுமிடைக் கொடி - மின்னலும் திகைக்கும்படியான இடையையுடைய கொடி போன்றவளாகிய சீதை. மின்றிசைத் திடுமிடைக் கொடியை நாடினர் விராய். (கி ; 819)

மின் துடித்தல் - மின்னல் துவளுதல். மின் துடித்தா லென்ன மன்னவன் மார்பில் துவள்கின்ருள். (அ : 597)

மின் தொத்து நிலா - ஒளி திரண்ட நிலவு. மின்ருெத்து நிலா நகைவிழ் மலயக் குன்று. (பா : 1251)

மின் பொருவு தேர் - மின்னலை யொத்த ஒளியும் விரைவு முடைய தேர். (அ : 279)

மின்மின் என்னும் சூலம் - பளிச்சுப் பளிச்சென்று ஒளி வீசுகின்ற சூலம். மின் மின் என்னும் சூலமும் வாளும் மிசை யோச்சி. (சு : 482)

மிள் மின் கொள் கவசம் - மின்னலை யொத்த ஒளியைக் கொண்ட கவசம். (யுத் : 2970)

மின் மினி - மின் மினிப்பூச்சி. எரியும் மின்மினி மணி விளக்கின் துணைக் குரிஇயினம் பெடையொடுந் துயில்வ கூட்டினுள். (கி ; 530) மின் மினிக்குலம். (சு : 590)

மின்வந்த எயிற்றவன் - மின்னலைப் போன்று ஒளிவீசும் பற்களை யுடையவன் மயிடன். (யுத் : 1723)

மின்வயின் - மின்னலினிடத்து. மின் வயின் மேனி கொண்டாள். (ஆ : 626)

மின்றெரி எயிறு - மின்னல் போல் விளங்குகின்ற பற்கள். மின்றெரி எயிற்றினொரு மேகம் விழுமென்ன. (யுத் : 861)

மின்றோய் மாடம் - ஒளி பொருந்திய மாளிகை. நாளவாம் மின் தோய் மாடத்தும்பர் ஓர் நாகர் பாவை. (யுத் . 798)

மின்னகுகிரிகள் - ஒளி விளங்குகின்ற மலைகள். மின் நகுகிரிகள் யாவும் மேருவின் விளங்கித் தோன்ற. (சு : 820)

மின்னடு வரிவிற் செங்கை இராமன். (யுத் : 3670)

மின்னஞ்சு வேலோய் - மின்னலும் அஞ்சுகின்ற (மின்னலைக் காட்டி லும் ஒளி வீசுகின்ற) வேற்படையை யுடையவனே. மின்னஞ்சு வேலோய் விழியஞ்சி வாழ்கின்றார் தன்னெஞ்சம் தாமே தடவாரோ தானவர்கள். (யுத் : 1661)

மின்னணி - மின்னுகின்ற அணி. மேகலை. விளக்கொரு விளக்கந் தாங்கி மின்னணி யரவிற் சுற்றி. (யுத் : 1587)

மின்னர் - மின்னலை யுடையவர். வெய்துறு படையின் மின்னர். (சு : 760)

மின்னரசு - மின்னல்களுக்கு அரசு. மின் சேவிக்கும் மின்னரசு. (பா : 594)

மின்னுது இடியாது - மின்னலின்றி இடியிடித்தல் இல்லை. (ஆ:1111)

மின்னி யெழுமுகில் - மின்னல் மின்னிக் கொண்டு மேலெழுகின்ற மேகங்கள் மின்னி யெழு முகிலின்றி வெந்துயரம் பெருகு தலும். (பா . 216)

மின்னிலைய வேலோனே - ஒளியைக் கொண்ட இலைத்தொழிலை யுடைய வேற்படையை யுடையோனே. மின்னிலைய வேலோனே யானுன் விழிகாணேன். (யுத் : 1660)

மின்னிலை வில்லினன் - மின்னலைப் போன்று மிளிரும் ஒளி நிலை பெற்ற விற்படையினன். (இலக்குவன்) மின் நிலை வில்லினனை வழியெதிர் விலக்கிநின்றாள். (கி : 648)

மின்னிவர்தல் - ஒளி விடுதல். மின்னிவர் வரிவிற் செங்கை இராமன். (யுத் : 3670)

மின்னிளங்கொடி - மின்னலினது இளங் கொடி. ஓர் வாழிவான் மின்னிளங் கொடியின் வந்தாளை. (கி : 812)

மின்னின் மின்னிய மேனி - மின்னலைப் போல் மின்னிய திருமேனி. மின்னின் மின்னிய மேனி கண்டானெனச் சொன்ன அண்ணல். (பா : 645)

மின்னின் மின்னும் வரிவிற் குமரா - மின்னலைப் போல் மின்னுகின்ற கட்டமைந்த வில்லையுடைய மைந்தனே. (அ : 354)

மின்னின்ற சிலை - மின்னலைப் போல ஒளிவிடுகின்ற வில். மின்னின்ற சிலையன். (ஆ : 427)

மின்னின்றபடை - ஒளி விளங்குகின்ற ஆயுதம். மின்னின்ற படையுங் கண்ணும் வெயில் விரிக்கின்ற மெய்யர். (சு : 759)

மின்னின்றனைய மேனி - மின்னல் நின்றாற் போன்ற ஒரிவாய்ந்த மேனி. மின் நின்று அனைய மேனி வெறிதாய்விட நின்றது போல. (அ : 329)

மின்னினம் - மின்னல்கள். மின்னல் கூட்டம். விண்டொடர் புரஞ் சுட விடு சரம் புரையும் மின்னினம். (கி : 464)

மின்னினிழல் - மின்னலின் கண் உள்ள பளபளப்பு. பொன்னின் ஒளி பூவின் வெறிசாந்து பொதிகிதம் மின்னின் நிழல் அன்னவள் தன் மேனியொளிமான. (பா : 1222)

மின்னுடன் பிறந்தவாள் - ஒளியோடு தோன்றியவாள். மின்னுடன் பிறந்த வாட்பரத வேந்தற்கு. (அ : 575)

மின்னுதல் - பிரகாசித்தல். மின்னின் மின்னியமேனி. (பா : 645)

மின்னுமிழ்கணை - ஒளியை வெளிவீசுகின்ற அம்பு. மின்னுமிழ் கணையை வெய்யோர் மேற் செலவிடுதி என்றான். (யுத் : 612)

மின்னுயிர்த்தல் - ஒளி விடல். மின்னுயிர்க்கு நெடுவேலோய் (பா:727) மின்னுயிர்க்கும் தீவாய் வெயில் உயிர்க்கும் வெள்வேலோய். (அ : 1127)

மின்னுருக்கொண்ட வில்லோர் - ஒளியுடைமையால் மின்னலின் உருவைத் தன்பாற் கொண்டாற்போன்ற வில்லையுடைய இராமலக்குமணர். (கி : 74)

மின்னுரைத்தாலுமொவ்வா விளங்கொளி யலங்கல் வேலோய் - மின்னலை உரையிட்டாலும் ஒப்பாகாத விளங்குகின்ற ஒளியைக் கொண்ட வெற்றிமாலை சூடிய வேற்படையையுடையோனே. (யுத்:1250)

மின்னுறு பதாகை - ஒளிபொருந்திய கொடி. மின்னுறு பதாகை யோடு சாரதி வீழ்ந்தபோதும். (யுத் : 2071)

மின்னெனக் கண்குடை இனமணி - மின்னல் போன்று பார்ப்பவர் விழி கூசச் செய்யும் அணிகளின் மணியினங்கள். மின்னெனக் கண்குடை யினமணி வெயிலுங் கான்றிட. (பா : 1284)

மின்னென மின்னென விளங்கும் மெய் - மின்னல்களைப் போல விளங்கும் உடம்பு. மின்னென மின்னென விளங்கு மெய்விலைப் பன்னிறத் துகிலினைப் பறித்து நீக்கிலர். (அ : 48)

மின்னென விளங்கும் பைம்பூண் வீடணன் - மின்னல் போல் விளங்கு கின்ற பைம்பூணணிந்த விபீடணன். (யுத் : 883)

மின்னென வெளுத்தல் - மின்னலைப் போல வெளுத்தல். மின்னெனக் கருமை போய் வெளுத்த தோர் மயிர். (அ : 2. (a)

மின்னைத் தொழுவளைத்த தென்ன - மின்னலைத் தொழுமரத்திலே பிடித்து அகப்படுத்தி வைத்தாற் போல. மின்னைத் தொழு வளைத்த தென்ன மிளிரொளியாய். (யுத் : 301)

மின்னையேய் உழையினன் - மின்னலைப் போன்ற உமாதேவியை அழகிய இடப்பாகத்திலுடையவனான சிவபெருமான். மின்னையேய் உழையினனும் விரைமலர்த் தவிசினனும். (யுத் : 4117)

மின்னையேர்மவுலி - மின்னை யொத்த (பேரொளிபடைத்த) கிரீடம். மின்னையேர் மவுலிச் செங்கண் வீடணப் புலவர் கோமான். (யுத் : 4349)

மின்னொடும் பிறங்கிய மேகம் - மின்னலோடு விளங்கிய மேகங்கள். மின்னொடும் பிறங்கிய மேகம் படிபுக்காலெனப்படிதர. (பா:909)

மின்னொத்த இடை - மின்னலையொத்த இடை. மின்னொத்த இடை யினரும் வேலொத்த விழியினரும். (பா : 1019)

மின்னொத்த சீற்றக்கனல் - மின்னலை ஒத்த கோபக்கனல். மின்னொத்த மேனிப் புயலொத்த தடக்கையானை. (அ : 419)

மின்னொளிர் கானம் – மின்னல் போன்று வெயில் ஒளி விளங்கும் காடு. (அண்) பாலைவனம். (கலா) மின்னொளிர் கானம் இன்றே போகின்றேன் விடையுங் கொண்டேன். (அ : 295)

மினல்-மின்னுதல். மினன் மணிக்குலம். (கி : 234)மினல் பரந்தெழு கொழுஞ்சுடர். (சு : 1212) [பா.பே]

மினை மின்னை. மினைப்பரந்தெழு கொழுஞ்சுடர். (சு : 1212)

மினைப் பரந்தெழு கொழுஞ்சுடர் – மின்னை ஒத்து விளங்குகின்ற செழுமையான அனற் கொழுந்து. (சு : 1212)

## மீ

மீ - 1. மேலே. மேலிடம். மீ யோங்கு செம்பொன் முடி. (சு : 41) மீ உயர் விசும்பு. (சு : 891) மீ யெடுத்து (யுத் : 1036)
2. மேன்மை மீத்தருஞ் செல்வம். (அ : 166)
3. ஆகாயம். கதிரின் நாயகன் ...... மீமிசை நடக்கின்றான். (ஆ : 244) மீப் பாவிய இமையோர் குலம். (யுத் : 3041)

மீக்கூர்தல் – அதிகமாகக் கொள்ளுதல். கலாப மஞ்ஞை வேட்கை மீக்கூருமேனும். (சு : 310)

மீக் கொள்ளுதல். (மீக் கொளல்) - 1. மேலே பொங்கி எழுதல். ஆழியான் முனிவெனும் ஆழி மீக்கொள. (சு : 400) வெம்மை மீக்கொள. (கி : 204) கொழும்புகைப் பிழம்பு மீக்கொள. (யுத் : 556) ஓதம் கிளர்ந்து மீக் கொண்ட தென்ன. (யுத்:1425)
2. மிகுதல். நிரம்பி மேலோங்கல். வசையும் கீழ்மையும் மீக் கொள. (யுத் : 111) வெம்மை மீக் கொள. (கி : 204) வருத்தமும் பழியுமே வயிறு மீக்கொள. (கி : 676)
3. மிகக் கொள்ளுதல். ஊற்ற மீக் கொண்ட வேலையான். (யுத் : 541)
4. வெல்லுதல். கைப்பற்றுதல். விண்ணை மீக் கொளும் சூலமொன்றுடையவன். (யுத் : 2285) மேருவிற் கும்பர்ச் சேர்ந்து விண்ணினை மீக் கொண்டாலும். (யுத் : 1626)
5. உயரத் தூக்குதல். தன்னிரு கரங்கள் மடுத்து மீக் கொண்ட வாலி. (கி : 293)
6 புனைதல். சூடுதல். வாகை மீக் கொள. (அ : 901)

மீக்கோள். உடலின் மீது அணிந்து கொள்ளப்படுவது; போர்வை. (அண்) இரத்தின ஆரம். (வை.மு) வடக மீக் கோள். (கி : 919)

மீகாமன் - கப்பலோட்டி. தனி நாய்கன் நைந்து நீங்கச் செயலோரா மீகாமனைப் போல் நைவுற்றான். (அ : 605)

மீகாரம் - மேல் மாடம். மீகாரமெங்கணும் நறுந்துகள் விளக்கி. (சு : 98)

மீச்செல்லல் - மேற்செல்லுதல். கதிர் மீச்செலாக் கொடிமதிற் குடுமித் தலைக்கொள்க. (யுத் : 965) விசும்பெனும் பதத்தை மீச்செல்வான். (சு : 597)

மீச்சென்ற - 1. கடந்துசென்ற. எண்ணின் மீச்சென்ற. (சு:1031
2. மேலிடமெல்லாம் பரந்த. மீச்சென்ற புண். (சு : 1031)
3. மேலே சென்ற. மீச்சென்றதேர். (சு : 1031)

மீசை - மீசைமயிர். மீசைசுறுக்கொள் உயிர்க்கும். (யுத் : 1940)

மீசைகள் - மீசைமயிர்கள். துடித்த தொடர் மீசைகள் சுறுக்கொள உயிர்ப்ப. (ஆ : 608)

மீசைகள் சுறுக்கொள உயிர்ப்ப - மீசைகள் தீப் பற்றும்படி பெரு மூச்சு வெளிப்பட. (ஆ : 608)

மீட்குறும் - திரும்பும்படி செய்யும். அருந்தவ முனிவர்க்கும் வீடு மீட்குறும் மேனகை. (சு : 1090)

மீட்சி - 1. பிரதியுபகாரம். மீட்சி செய்திறமில்லையால். (யுத்:2219)
2. மீட்கப்படுதல். மீட்சியென்பதில்லையேல். (யுத் : 1650)

மீட்டல் - 1. தன்வசமாக்கல். கிளர் ஞாலம் வரத்தினாலே மீட்டாள். (அ : 408)
2. ஒழித்தல். அகற்றுதல். உன் மனத்துயர் மீட்பன் என்றான். (யுத் : 2252) என்னை மீட்பான் பொருட்டிலங்கை யெய்தினேன் (யுத் : 3983) மீட்கிலும் மீட்போமால். (ஆ : 982)
3. விடுவித்தல். மீட்டான். (சு : 1160) மீட்கிலேன். (ஆ : 957) மாட்டாதார்சிறை வைத்தோயை மீட்டாமென்கிலம் மீள்வாமேல். (சு:651) மீட்டிலாதது. (யுத் : 531) உன்னை மீட்பான் பொருட்டு என்னை மீட்பான் பொருட்டிலங்கை யெய்தினேன். (யுத்:3983) மீட்கினும் மீட்குமால். (982)

4. திரும்பக் கூட்டிக்கொள்ளுதல். என்மெய்யுறு கட்டுரை கேட்டு மீட்டியோ. (யுத் : 4013) மீட்ட பின். (யுத் : 1606)
5. கருத்தை மாற்றிக்கொள்ளுதல். வேண்டரும் விண்ணுடென்னும் மெய்ம்மை கண்டு உள்ளம் மீட்டான். (சு : 2)

மீட்டாயோ – வெளிப்படுத்தாது மீட்டுக்கொண்டாயோ. (அண்) மீட்கப்பட்டாயோ. மீளப்பெற்ருயோ. மீட்டாயோ வீரம். (யுத் : 1945)

மீட்டு – 1. திரும்பவும். மீண்டும். மீட்டினி உரைப்ப தென்னே. (கி : 660)
2. புறங் கொடுத்தோடச் செய்து.மின்னைமீட்டுறு படையரக்கர். (யுத் : 3983)
3. மேன் மேலும். மின்னை மீட்டுறுபகை கடந்திலேன். (யுத் : 3983)
4. சிறைபினின்றும் விடுவித்து. மீட்டு மீள்துமால். (கி : 212)

மீட்டும் – மீண்டும். மேலும். மீட்டு மினி எண்ணும் வினைவேறு முளதன்ருல். (சு : 695)

மீட்டுறு – புறங்காட்டி ஓடச்செய்து (யுத் : 3983)

மீட்பித்தல் – மீட்கும்படி உதவி செய்தல். நின்னை மீட்பிக்க அன்று வெய்தின் கொல்விக்க வந்தேன் உன்னை. (யுத் : 2843)

மீடல் - மீளுதல். மீள்க. அயோத்தி நகரடைந் திவண் நீ மீடல் என்ருன். (பா : 244) தி தின்றி மீடல் வல்லான். (யுத் : 928) மீச்சென்று மீடலால். (யுத் : 634)

மீடி – மீள்தி. அடா மீடி எங்ககறி. (ஆ : 21)

மீடிர் - 1. மீளுங்கள் திரும்புங்கள். தோகையைத் தெருட்டி மீடிர். (கி : 1011)
2. மீள்வீர். யானேர் விற் கொண்டு நின்ற போது விறல் கொண்டு மீடிர் போலாம். (யுத் : 1101)

மீடுதல்–மீளுதல். யாரையும் படுத்திவண் மீடு மென்றுரைத்த பண்பினிர். (யுத் } 1679)

மீடும் – மீள்வோம். பேதுறும் மின்னிடைச் சனகியை மீட்டு மீடுமால்...... விரைந்து போய். (கி : 212)

மீண்டனே போதல் – மீண்டு போதல். இனி மீண்டனே போதல் காரியம். (சு : 631)

மீண்டு - மறுபடியும். மீண்டுற்று உரையாடலை மேயினனுல். (அ : 903)

மீண்டு மீண்டு – மறுபடியும் மறுபடியும். மீண்டு மீண்டு புக்கெரி நுழைந்தா லென மெலிவாள். (சு : 342) [பா : பே]

மீண்டும் மீண்டும் – மீட்டும் மீட்டும். மீண்டும் மீண்டும் புக்கெரி நுழைந்தா லென மெலிவாள். (சு : 342)

மீண்டு மீண்டு மெலிந்தனே – திரும்பித் திரும்பிவந்தும் உடல் மெலிந்தாய். நீண்ட மாலை மதியினை நித்தமும் மீண்டு மீண்டு மெலிந்தனே வெள்குவாய்...... என்னுமால். (ஆ : 1057)

மீண்டு மீண்டுவெதுப்ப – மாறி மாறி வருத்துதலால். மீண்டு மீண்டு வெதுப்ப வெதும்பினுன். (ஆ : 1050)

மீண்டு வருந்தரமல்லா வீட்டுலகம் – திரும்பிவருந்தரமல்லா மோட்ச லோகம். மீண்டு வருந்தரமல்லா வீட்டுலகம் புகுமென்ருர் மேன்மேலுள்ளார். (யுத் : 2693)

மீண்டேயுந் தம்முருவே யருளுவதோர் மெய்ம் மருந்து – உருவம் மாறிவிட்டாலும் மீண்டும் தம் முருவையேயடையச் செய்யவல்ல மெய்ம்மை மருந்து; ஸாவர்ணகரணி. (யுத் : 2682)

மீத்தருஞ் செல்வம் - மேன்மைபொருந்திய அரசச் செல்வம். மீத் தருஞ் செல்வம் பரதனே விலக்குமாறெவனே. (அ : 166)

மீத்து – மேற்பக்கத்திலுள்ளது. மீத்தா நிமிர்சுடர் வைரக்கை கொடுபிடியா. (சு : 967)

மீதிட்டு – அடங்காமல் மேலிட்டு. கருத்தினை நிறைத்து மீதிட்டு. (பா : 12051)

மீதிட – வழியுமாறு புரண்டு. மீதிடப் பொங்கிய உவகையர். (அ : 32)

மீது – மேலே. வெருவி மீதிற்குதித்தது. (ஆ:801) மீதெழுமொக்குள் அன்னயாக்கை. (யுத் : 3082))

மீதுபோதல் – அப்பாற்போதல். பொன்மலை மீதுபோய் (யுத்:2747)

மீதுமீது - மேன்மேலும். மீதுமீது தன்னகத்தெழு காற்றினல் விசைகொடு திசைசெல்ல ஊத. (யுத்1570)

மீதுயர் காதல் - மிகவும் அதிகமாகிய அன்பு. வாணிலா நகை தோன்ற மயிர்ப்புறம் பூண மீதுயர் காதலிற் பொங்கினன். (அ : 799) [பா : பே]

மீதுயர்ந்த தடம் பெரிய தோளான் - மேல் உயர்ந்து வளர்ந்து நீண்ட பெரிய தோள்களையுடைய இராமபிரான். (யுத் : 3358)

மீதுலகு - வானுலகு. தூதனிட்ட மலையின் துவலையான் மீது விட்டுலகுற்றன மீன்களும். (யுத் : 656)

மீதெழு மொக்குளன்ன யாக்கை - மேலே எழுகின்ற நீர்க்குமிழி போன்ற நிலையில்லாத உடம்பு (யுத் : 3082)

மீப்பாவிய - வானத்திலே பரவியிருந்த. (யுத் : 3041)

மீபுரம் - உடலின் மேலிடம். வன்ருள் மீபுர மடங்கலென வெங் கதிரவன் சேய் கோபுரமடங்க இடியத் தனிகுதித்தான். (யுத் : 860)

மீமிசை - 1. மிகவும் மேலாக. (மேம் மட்டு) பரிதி யாமென ஒன் றென உலகிடை உலாவி மீமிசை நின்று நின்றுயிர் தொறு நெடிது காக்குமே. (பா : 178)

2. மேலிடம். படியுறு பதாகை மீ விதானம் பல்வகை இடை யிலா தெங்கணும் இசைய மீமிசை மிடைதலின். (ஆ : 415)

3. ஆகாயத்தில். முடுகி மீமிசை வழங்கு வெங்கதிர் சுட மறைவு தேடியே. (பா : 352)

4. மீது கணை மீமிசை. (யுத் : 3029)

மிய - மேலே யுள்ள. மீய கற்பகத் தேன்றுளி. (சு : 303)

மியவர் - தம்மீது மேலேயிருப்பவர். மீதிருப்பவர். மீயவர் யாவரும் விளிய. (யுத் : 2298)

மீயுயர் விசும்பு - மேலே உயர்ந்துள்ள ஆகாயம். மீயுயர் விசும்பை யும் கடக்க விங்கினன். (சு : 891)

மியெடுத்து - மேலே தூக்கி. தாய் அடுத்தவன் தன் கையிற் றண்டொடும் மீயெடுத்து விசும்புற வீசினன். (யுத் : 1036)

மீவலிப்ப - மேலே அழுத்தும்படி கடைய. விறல்கொள் ஆயிரந் தடக்கைகள் பரப்பி மீவலிப்ப. (பா : 501)

மீவாய் – மேலிடம். மீவா யெங்கும் வெள்ளிடை யின்றி. (யுத்:3806)

மீவிதானம் – மேற்கட்டி. படியுறு பதாகை மீவிதானம். (ஆ : 415)

மீள் (தல்) – திரும்புதல். தோகையைத் தெருட்டி மீடிர். (கி:1007) விறல் கொண்டு மீடிர் போலாம். (யுத்:1101) மீடும். (யுத்:1679)

மீள்கிலா உலகம் – பரமபதம். வள்ளல் உந்தியான் உலகினும்பர் மீள் கிலா உலகத்துய்த்தார். (அ : 591)

மீள்கிலீர் – மீளும் ஆற்றல் இல்லாதவரானீர். அவர் வேகவெஞ் சிலைத் தொழில் விலக்கி மீள்கிலிர். (யுத் : 1678)

மீள்குவன் – மீண்டு வருவேன். இன்னுயிர் குடித்தொல்லை மீள்குவன். (கி : 251)

மீள்கு வென் – மீண்டு வருவேன். (யுத் : 2930)

மீள்வில் இன்னுலகு – மீட்டிங்கு வாரா முத்தியுலகு. கங்கையைத் தந்து தந்தையரை மீள்வில் இன்னுல கேற்றினன் ஒரு மகன் மேனுள். (அ : 67) (யுத் : 3610)

மீள்வு – மீளுதல். (யுத் : 3610)

மீளகில்லா – மீளுதலும் செய்ய வில்லை. போகிலா மீளகில்லா பொன்னகர் வீதி யெல்லாம். (அ : 253)

மீளருநரகு – மீளுதற்கரிய நரகு. மீளரு நரகிடைக்கடிது வீழ்க யான். (அ : 894)

மீளா அடைக்கலம் – கைவிடாத அடைக்கலம். மீளா அடைக்கலம் உதவினனே. (யுத் : 435)

மீளாக் கவசம் – அபேத்தியக் கவசம்; நிலை பெயர்க்கப்படாத கவசம். தள்ளா உரம் படர் தோளின் மீளாக் கவசமிட் டுடை வாளார்த்தான். (ஆ : 429)

மீளாக்குறி – மீண்டு வருதலில்லாத முத்திநிலை. நீ ணெறி சென்று மீளாக் குறி சேரச் சேர்த்திடு தன் திரு நாமம். (பா : 1293)

மீளாத் துறக்கம் – மீளுதற் கரிய முத்தியுலகம். மீளாத் துறக்கம் போய்வந்த தொல்லைத் தயரதன். (யுத் : 3559)

மீளாத வேதம் – பொய்படாத வேதம். கூறுவதில் மாருத வேதம். மீளாத வேதமுடிவின் கண் நின்னை மெய்யாக மெய்யின் நினையும். (யுத் : 2208)

மீளா நரகம் – மீள அரிய நரகலோகத் தீ. மீளா நரகமுங் குளிர்ந்த மாதோ. (சு : 1172)

மீளா நிறத்து ஆயிரங் கண்ணவன் – பின்னிடாத மார்பையுடைய இந்திரன். (ஆ : 928)

மீளா நெறி – மீண்டு வருதலில்லாத மோட்ச மார்க்கம். தென் புலத் தன்றி மீளா நெறி யுய்க்குந் தேவரோ தாம். (கி :56)

மீளாப்படை – பகைவரைக் கொன்றன்றி மீளாத படை. (அண்) மீட்க முடியாத அஸ்திரம். (வை.மு) பங்கயத் தண்ணல் மீளாப் படை. (யுத் : 2795)

மீளாவினை – போக்குதற் கரிய வினைகள். (யுத் : 2234)

மீளி – 1. வலிமை. மீளி மொய்ம்பினர். (ஆ : 43) மீளி கூளி. (யுத் : 3352)
2. கூற்றுவன். (உ.வி) (ஆ : 43)
3. பேய். மீளிகள் பூண்டன. வேங்கை பூண்டன. (ஆ:398)
4. வீரன். பூங்கழல் வார் சிலை மீளி. (ஆ : 1098)
5. வலிமையுடையவன். கொடை மீளி அண்ணல் சடையன். யுத் : 2215)
6. பராக்கிரமம். (வை.மு) வெங்கணுளி ஏறுமீளிமாவும். (கி : 229)

மீளி அண்ணல் – பெருமையிற் சிறந்த வள்ளல். (யுத் : 2215)

மீளிகள் – பேய்கள். (ஆ : 398)

மீளி – கூளி; வலிமை மிக்க பேய்.

மீளிமா – பராக்கிரமம் மிக்க புலி. (வை.மு) வலிமை மிக்க புலிப் போத்து. (அண்) (கி : 225)

மீளி மொய்ம்பு - வலியதோள். மீளி மொய்ம்பினர். (ஆ : 43) (ஆ : 426)

மீளுதல் – 1. நிலைபெயர்தல். நீங்குதல் மீளருந்தருமம். (ஆ . 871) மீளாக்கவசம். (ஆ : 421)
2. பிழைத்தல். வியுமுயிர் மீளும் மருந்து. (சு : 558)
3. தணிவு பெறுதல். கோளாளுருயிர் கோளோடும் . மீளா வேல். (சு : 655)

4- திரும்பி வருதல். மீடும். (யுத்:1678) மீள்கிலிர். (யுத்:1617) மீளருஞ் செருவின். (ஆ:430) மீட்கின் மீளுதும் மீட்சியென் பதில்லையேல் இறந்துதீர்தும். (யுத்:1650) மீட்டாம் என்கிலம் மீள்வாமேல். (சு : 651) வந்தவர்கள் மீள்கிலர் மடிந்தால். (சு : 697) மீளுதிர் மெல்லியலோடு. (ஆ : 380)

5. பின்னிடுதல். மீளா நிறத்து ஆயிரங் கண்ணவன். (ஆ : 928)

மீன் – 1. நட்சத்திரம். சுடர் வெண்மதி வந்து மீன்கள் சூழ. (பா : 969)

2. மின்னல் என்பதன் நீட்டல் விகாரம். (வை.மு) மீன்படி மேகமும் படிந்து. (கி : 2)

3. மச்சம். மீனுடைக் கருங்கடல் புரை இராக்கதர். (யுத்:1193)

4. மீன் உருவம். மீனுடைய நெடுங்கொடியினேன். (ஆ : 609)

மீன்குலம் – நட்சத்திரக் குழாங்கள். மீன்குலந்தழுவி. (யுத்:1784)

மீன்கொண்ட கொடியினன் – மீனைக்கொடியிலேயுடையவனை காமன். (கலர்) மீன்கொண்ட கொடியினற்கு விழாவயர்ந்துலக மேத்த. (ஆ : 638)

மீன் சூழ்வருமக் முழுமதி – நட்சத்திரங்களாற் சூழப்பட்ட இப் பூரண சந்திரன். (சு : 48)

மீன்பரந்தரும்புதல் – நட்சத்திரங்கள் பரவித் தோன்றுதல். பரத்து மீன் அரும்பிய பசலை வானகம். (537)

மீன்வரு கொடியவன் – மன்மதன். மீன் வருகொடியவன் விறலடு மறவோன். ( ஆ : 112)

மீன குமை - மீன் கூட்டம். வளைப்புனலுள் வாழ் மீன குல மொத்தன. (யுத் : 3399)

மீனகுவான் – நட்சத்திரங்கள் ஒளிரும் ஆகாயம். மீனகு வானின் விளங்கியதிப்பார். (பா : 1333)

மீனநிலயம் - மீன்கள் வாழுமிடமாகிய கடல் எயின் மூதூர் மீன நிலயத்தினுற வீசி. (சு : 962)

மீனம் – 1. பன்னிரண்டாவது ராசி; மீன லக்கினம். பூசமும் மீனமும் பொலிய நல்கினள். (பா : 285)

2. நட்சத்திரம். மிகுந்த வான் மிசை மீனம் மலைந்தன (யுத் : 3831)

3. மீன்கள். அவர் மீன மெனலாயினர்களால். (யுத் : 3491) (சு : 594)

மீனரசு – மீன்கள் அரசு. மகரமீன். படர் வேலை முழுகித் தோன்றும் மீனர சொக்கும் முறை நோக்கிர். (யுந் : 3552)

மீனரல் வேலை – மீன்கள் ஒலிக்கின்ற கடல். மீனரல் வேலையும் வெற்புமார்த்தன. (யுத் ; 1510)

மீனரும்பிய வானம் - நட்சத்திரங்கள் தோன்றிய ஆகாயம். அற்கலந் திலங்கு பன் மீனரும்பிய வானம். (பா : 569)

மீன வேலை – மீன்கள் நிறைந்த கடல். மீன வேலையை வெய்யவன் எய்தினன். (பா : 1045)

மீனுறு வேலை – மீன் நாறு வேலை. மீன்கள் தோன்றுகின்ற கடல். மீனுறு வேலைப்புனல். (பா : 152)

மீனின் வேந்தன் – சந்திரன். கால மீனின் வேந்தன் ஒளியன்றியும் மேலொடு கீழ் விரித்தான். (ஆ : 716)

மீனினம் – நட்சத்திரக் கூட்டம். மீனினம் மிளிர்வ போன்றும். (பா : 1148) மீனினம் விசும்பினின்றும் இருளுக விழுவ போல. (யுத் : 2539) (யுத் : 4283)

மீனீர் வேலை – மீனையும் நீரையுமுடைய கடல். மீனீர் வேலை முரசியம்ப. (அ : 609)

மீனுடை – மின்னுகின்ற உடை. மீனுடை வானின்றும் விழுவ. (அ : 256)

மீனுடை நெடுங் கொடியினேன் – மீனுருவமைந்த நீண்ட கொடியினையுடைய மன்மதன். (ஆ : 609)

மீனுடை அகழி வேலை இலங்கையர் கோன் - மீன்களைத் தன்னகத்தே கொண்ட கடலை அகழியாகக் கொண்ட இலங்கைத் தலைவனான விபீடணன். (யுத் : 4082)

மீனுயர்த்தவன் – மீனக் கொடி பிடித்தவனான மன்மதன். இராமன் மேல் நோக்கிய காதல் காரிகையார்க்கு மீனுயர்ந்தவன் மருங்குதான் மீளுமோ. (சு : 296)

மீனோடு கடுத்து – மீன் வகைகளோடு ஒத்து. மீனோடு கடுத்துயர் வெற்றிய வாம் வானுடியர் கண்ணெனும் வாளுடையர்ன். (ஆ : 85)

# மு

முக்கட்டேவன் – மூன்றுகண்களையுடைய மகாதேவன். முக்கட்டே வனும் நான்முகத்தொருவனும். (யுத் : 174)

முக்கணன் – சிவபிரான். முக்கணனையுற் றடிவணங்கி. (யுத்:3408)

முக்கணனனைய ஆற்றன் முனிவன் – முக்கண்ணனான சிவபிரானை ஒத்த பேராற்றலுடைய முனிவன். (கௌதமன்) முக்கணனனை வாற்றன் முனிவனு முடுகிவந்தான். (பா : 553)

முக்கணுன் – சிவன். முக்கணுன் ஊர்தி. (சு : 931) (யுத் : 284) முக்கணுன் படை. (யுத் : 2549)

முக்கணுன் ஊர்தி – மூன்று கண்களையுடைய சிவபிரான் ஊரும் ஏறு. (சு : 931)

முக்கணுன் தடவரை – சிவபெருமானுடைய பெரியமலை. முக்கணுன் தடவரை எடுத்த மொய்ம்பின். (யுத் : 3815)

முக்கணுனனைய ஆற்றன் முனிவன்–கௌதமன். (பா:533) [பா:பே]

முக்கணெண்டோளவன் – மூன்று கண்களும் எண்டோள்களுமுடைய சிவபிரான். முக்கண் எண்டோளவன் முனிவு மாறினுன். (பா : 762)

முக்கணேக்கினன் முறைமகன் – மூன்று கண்களாற் பார்க்கும் இயல்பினனுன சிவபெருமானுக்கு மகனுகப் பிறந்த ஆறுமுகக் கடவுள். முக்கண் நோக்கினன் முறை மகன் அறுவகை முகமும் திக்கு நோக்கிய புயங்களும் சில கரந்தனையான். (சு : 235)

முக்கரக்கையர் – மூன்று கைகளையுடையவர். கரக்கை – மீமிசைச் சொல். முக்கரக்கையர் மூவிலை வேலினர். (யுத் :3222)

முக்கனி – வாழை, மா, பலா என்னும் மூன்று கனிவகைகள். முந்து முக்கனியில். (பா : 50)

முக்கால் – மூன்று முறை. முக்கால் உலகம் ஒரு மூன்றையும் வென்று. (சு : 1007)

முக்கால் வலங்கொளல் – மும்முறை வலமாகச் சுற்றிவருதல். ஆரியனை முக்காலும் வலங்கொடு. (யுத் : 1763)

முக்காலம் – இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலச்செய்திகள். முக்காலமும் மொய்ம் மதியான் முறையின் னுணர்வான். (யுத் : 832)

முக்காலின் – மூன்றும் முறையில். முக்காலின் முடிந்திடுவான் முயல்வான் புக்கான் அவிராகவன் வைகு புனம். (ஆ : 772)

முக்குறும்பு – காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்று குற்றம். முக்குறும் பறவெறிந்த வினை வான்முனிவன். (ஆ : 3)

முக்கைப் புனலு குத்தல் - மூன்று முறை கையால் இறைப்பதாகிய தருப்பணஞ் செய்தல். மானிடவர் ஈரக்குருதியால் முக்கைப் புனலுகுப்பன் எம்பிக் கெனமுனியா. (யுத் : 1672)

முக்கையினீர் விதிமுறையின் ஈந்தான் – ஒழுங்குப்படி கைகளால் மூன்று முறை தருப்பண நீரை எடுத்துக் கொடுத்தான். (அ : 1146)

முக்கோடி வாணுள் – மூன்று கோடி ஆயுள். முக்கோடி வாணுளும் முயன்றுடைய பெருந்தவமும். (யுத் : 3865)

முக்கோல் – திரிதண்டம். முக்கோல் தாபத வடிவம். (யுத் : 4204)

முக்கோல் தாபத வடிவம் – திரிதண்டமேந்திய தவஞ்செய்தலையுடைய முனிவர் வடிவம். (யுத் : 4204)

முகக் கமலம் – முகங்களாகிய தாமரை. அஞ்சு கதிர்முகக் கமலங் காட்டி. (யுத் : 2706)

முகக்குழு – முகங்களின் கூட்டம். குளிர் முகங்குழுவால் முளரிக் கானமும் ஒத்தது. (சு : 128)

முகக்குன்றம் – முகமாகிய மலை. மூழ்கியது அம்முகக்குன்றம் (யுத் : 1580)

முகங்கடாங்குதல் – முன்னிற்றல். (எதிர்க்கும் முகங்களையுடையராதல்) தடுத்தனர் முகங்கடாங்கித் தனித்தனி தலைவர். (யுத் : 2005)

முகங்கள் - முகங்கள். விளம்பும் மெள்ளத்தம் முகங்களே. (யுத்:39)

முகங்கெடுதல் – முகம் பொலிவழிதல். முந்தனந்த வசந்தன் முகங் கெட. (சு : 716)

முகஞ் செலல் – முன்னணியாகச் செல்லல்; தானை வீரப்பேராழி முகஞ் செலச் சென்றனன். (யுத் : 1978)

முகஞ் சொல்லுதல் – முகக்குறிப்பால் உணர்த்தல். நல்லவன் முகமே நம்பி நடந்தனன் என்றும் மாற்றம் சொல்லலும். (அ : 589)

முகட்டு முன்றில் – உச்சியிடம். முந்தொரு கருமலை முகட்டு முன்றிலில். (ஆ : 179)

முகடு – 1. உச்சி. சிகரம். ஏழுலகின் மேலை வெளிகாறு முகடேறி. (சு ; 157)

2. கபாலம். வான்முகடு. சினையும் மூலமும் முகடும் வெந்திரு நிலந் தீய்ந்து. (அ : 727)

3. மேலிடம். மேன்மாடம். அறத்தின் விளைவொத்து முகடுந்தி. அருகுய்க்கும் நிறத்துவரிதழ்க் குயில். (பா : 1232)

முகடுந்தி – மேபிருந்து கொணர்ந்து. (பா : 1232)

முகடொழுக்குதல் - முகட்டொடு பொருத்தல் ஒடுங்கலில் நெடுமுக டொழுக்கி. (அ : 780)

முகத்தல் - 1. எடுத்தல். முகக்கும் மூழை. (யுத் : 1436) அன்ன மணியாளை ஒரு கைச் செல்லும் எல்லையின் முகந்துபர் விசும்பு தொடர. (ஆ : 20) முகக்க. (ஆ : 1082)

2. பிடுங்குதல். முடக்கு நெடு வேரொடு முகந்துலக முற்றும் கடக்கும் வகைவீசின. (சு : 703)

3. பெறுதல். முகந்தனர் திருவருள் முறையின் எய்தினர். (பா : 817)

முகத்திற் றேக்குதல் - முகத்தில் நிறைவித்தல். சிந்தனை முகத்திற் றேக்கிப் போயினை என்ற போழ்து. (அ : 1027)

முகத்தினால் அகத்தை நோக்கல் – முகக் குறிப்பினால் மனநிலையை ஓர்தல். முறையுறு சிய மன்னன் முகத்தினால் அகத்தை நோக்கி. (யுத் : 895)

முகத்தினில் விழித்தல் - முகத்திலே விழித்தல். காணும் பேறு. அற்றதால் முகத்தினில் விழித்தல் ஆரிய பெற்றனன் விடை. (யுத் : 1320)

முகத்து - முன்பு. திருவின் முதத்துத் திருவானுள். (சு : 602)

முகத்து விழித்தல் - முகத்தில் விழித்தல். விழித்துமோ இராவணன் முகத்து மீண்டியாம். (யுத் : 3435)

முகத் தெதிர் விழித்து நிற்றல் – முகத்துக் கெதிரே (இழிவோடு) விழித்து நிற்றல். இரும்பலர் நெடுந்தனை ஈர்த்த காலொடும் விரும்பலர் முகத்தெதிர் விழித்து நிற்க யான். (அ : 908)

முகந்து - 1. மொண்டு. நெய் கொளோதியின் நீர் முகந் தெற்றினான். (பா : 1038)

2. கொண்டு. ஒரு கைச் செல்லு மெல்லையின் முகந்து. (ஆ : 20)

3. எடுத்து. கோன் முகந்து அள்ளி யள்ளிக் கொடுஞ் சிலை நாணிற் கோத்து. (யுத் : 1881) முந்தி வந்திறைஞ்சினானை முகந் துயிர் மூழ்கிப் புல்லி. (யுத் : 1348) [பா : பே]

முகந் தோன்ற நிற்றல் – பிரத்தியட்சமாதல். காளை வீரன் பால் முகந் தோன்ற நின்று காற்றினுக் கரசன் பண்டை நான்முகன் படையா லன்றிச் சாகிலன் நம்ப என்றான். (யுத் : 1881)

முக நலாள் – அழகிய முகத்தை யுடையவள். முக நலாள் தனை இருக்கொடு விதிமுறை இலிதின் ஈந்தனன். (பா : 234)

முக நோக்கி – முகம் பார்த்து. அன்பனை முக நோக்கிச் சித்திர கூடத்திற் செல்நெறி பகரென்ன. (அ : 680)

முகம் – 1. முகப்பு. இலை முகப்படத்து அவர் எழுதிக் காட்டிய தலை மகன் சிலைத் தொழில். (பா. 819)

2. இடம். பேய் முகப்பிணி. (ஆ : 26) நிலை முகவலயங்கள். (பா : 819)

3. எதிராக. முன்னாக பூமுக நெடு நிலம் புல்லி. (ஆ : 826)

4. வாய். மொழிகின்ற முகத்தான் முன்னர். (கி : 311) போரிடை வன் முகங் காண்பதோர் வாள். (யுத் : 1517)

5. சேனைமுகம். சேனையின் முன். முகத்தேயுளன் அகத்தே யுளன். (யுத் : 3372)

6. முன்னணி முன்பு. தானை வீரப் பேராழி முகஞ்செல. (யுத் : 1978)

7. முகம். முறுவல் பூக்கு மன்றே நின்ற மூவர்க்கும் முகங்கள். (சு : 866) மான்முகம். (யுத் : 2827)

8. நுனி. தீ முகங்கதுவ. (யுத் : 3125) பூமுக நெடு நிலம் புல்லி. (ஆ : 826)

9. முன்புறம். பாருடு முகத்தன. (யுத் : 1717)

10. சிறந்த பகுதி. நூன் முகம் பான் முகம். (யுத் : 2827)
11. போர் முனை. இலக்குவன் முகந்தொறுந் திரிந்தான். (யுத் : 2504)

முகம் பயில் கலினப் பாய்மா – முகத்திற் பொருந்திய கடிவாளம் பூண்ட பாயுந் தன்மையுள்ள குதிரைகள். (யுத் : 2520)

முகம் மலர்தல் – முகம் மகிழ்ச்சியால் மலரப்பெறுதல். வானோர் முகம் மலர்ந்தார். (யுத் : 1846)

முகம் முன்னுதல் – முகம் நோக்குதல். முன்னே அணுகுதல். செல்வனை முகமுன்னு. (அ : 718)

முகமதி – முகமாகிய திங்கள். முகமதி காண்கிலாதோ. (ஆ:1041)

முகமன் – முகமன்மொழி. உபசார வார்த்தை. கணிதமாக்களை முடிவுற நோக்கி ஓர் முகமன் கூறி. (அ : 98)

முகமால் – முகதாட்சணியம். பெரும்பழியன்றோ மான் முகமற்றொரு மாதை வதைத்தல். (யுத் : 2827)

முகமெதிர் வைத்தல் – எதிர்முகமாதல். அபிமுகமாதல். பலருயிருண்ணக் கற்றுனும் முகமெதிர் வைத்தான். (சு : 961)

முகரப் பாய்மா – கனைக்குந் தன்மையுள்ள குதிரை. முகரப் பாய்மா முழங்கின. (யுத் : 1862)

முகரம் – 1. தொடர்ந்த கரடான ஒலி. முகர யானை மறிந்தன. (சு : 954)
2. கனைத்தல். முகரப் பாய்மா. (யுத் : 1862)

முகில் – மேகம். நீரணைந்த முகில். (யுத் : 821)

முகில் துளி துறத்தல் – மேகக் கூட்டங்கள் நீர்த்துளி சொரிதலைத் துறத்தல். துளி துறந்தன முகில். (அ : 498)

முகில் வாய் - மேகத்தில். முகில் வாய் மின் துடித்தா லென்ன மன்னவன் மார்பில் துவள்கின்றாள். (அ : 596)

முகில் விண் – மேகங்கள் படிந்துள்ள ஆகாயம். முகில் விண் தொடு மெய்யான். (யுத் ; 2509)

முகிலென – மேகம் போல. முறையின் மொய்ம் முகிலென முரசார்த்திட. (அ : 62)

முகிழ் - அரும்பு. மலர். பீலியார்த்த முகிழுடை முரண் மாத்தண்டு. (அ : 1050) (யுத் : 200)

முகிழ்த்தல் - 1. தோன்றுதல். ஓர் செம் பொற் கொம்பர் முலையிடை முகிழ்ப்ப. (பா : 1324)

2. குவிதல். மூடுதல். ஆனனம் மகளிருக் களித்த தாமரைப்பூ நாணி முகிழ்த்தன. (அ : 776) கண்கள் முகிழா. (யுத் : 2196)

3. குவித்தல். கண் முகிழ்த்துறங்கு மேகம். (கி : 231)

4. அரும்புதல். மெய்ம் முகிழ்த்த தொத்தின் தொகை கொல். (சு : 542)

முகிழ்முலை - தாமரை மொட்டுப் போன்ற முலை. முகிழிள முலையாரின் மூழ்குவ பல காணாய். (அ : 700)

முகிழுடை முரண்மாத்தண்டு - உச்சியில் அரும்பின் வடிவினையுடைய வலிய பெரிய துடுப்புகள் (அ : 1050)

முகிழேறுகை - கூப்பிய கை. குவிதலைக் கொண்ட கரம். முடிமேல் நிமிர்ந்த முகிழேறு கையன். (யுத் : 2201)

முகிற் கணம் - மேகக் கூட்டம். விண் முகிற் கணங்கள். (கி : 54)

முகிற் கரசு - மேக ராசன். கருமுகிற் கரசு செந்தாமரை மலர்க் காடு பூத்து. யுத் : 4322)

முகிற் குலம் - மேகக்கூட்டம். முகிற் குலமலறி யோடின. (யுத்:629)

முகுர்த்தம் - முகூர்த்தம். மங்கல முகுர்த்த நன்னாள். (பா : 888)

குழ்த்த நன்னாள் - மங்கலமான முகூர்த்தம். (பா:888) [பா:பே]

முகுளித்தல் - அரும்புதல். அரும்புபோலத் தோன்றுதல். நீரில் முளைத்தெழுந்த மொக்குளே போல முகுளித்த அண்டங்கள். (ஆ : 1186) [பா : பே]

முகை - அரும்பு. முகைவிரி சுடரொளி. (பா : 1309) (சு : 425) (யுத் : 1467)

முகைத்தல் - அரும்புதல். முகைவிரி சுடரொளி. (பா : 1309)

முச்சடை - திரிசடை. முச்சடை பென்பாள் அது சொல்ல. (சு : 488)

முச்சற்றார் - மூச்சற்றார். முச் சற்றார் போற் பின்னுமிருந்தே மொழிகின்றான். (அ : 216)

முச்சற்ருன் – மூச்சற்ருன். இத்தனை காலம் முச்சற்ருன் கொல்லம் முழுமுதலோன். (யுத் : 124)

முச்சறுதல் – மூச்சற்றிருத்தல். (யுத் : 124)

முச்சிகைக்கழு – முத்தலைச் சூலம். மழுவும் வாளும் வயங்கொளி முச்சிகைக் கழுவும். (ஆ : 386)

முச்சிகைத் தாய் – மூன்று கிளையை யுடையதாய். முச்சிகைத் தாய்த் தோன்றும் வெஞ்சுடர்ச் சூல வெங்கூற்றினைத் தொட்டான். (யுத் : 1463)

முச்சிரத் தயில் - மூவிலைச் சூலம். முத்தலைச் சூலம். முச்சிரத் தயிலின் மூரித்தேரினன். (யுத் : 2284)

முச்சிரத்தயில் தலைவன் – மூன்று சிலையினையுடைய சூலப்படை தாங்கிய சிவபிரான். முச்சிரத்தயில் தலைவற்கும் வெலற்கரு மொய்ம்பன். (யுத் : 501)

முச்சிரப் பகழி – மூன்று கிளைகளையுடையதொரு பாணம். திரிசிரஸ் என்னும் பாணம். முச்சிரப் பகழி கோடி இலக்குவன் முடுக விட்டான். (யுத் : 2064)

முச் சிறு வாழ்க்கை – மூச்சு அற்றுப் போகும் துன்ப வாழ்க்கை. (அண்) மூச்சு இறுகின்ற உலக வாழ்க்கை. (மூச்சு முச்சு என விகாரம்) ஈத்துணு முச்சிறு வாழ்க்கையின் மூண்டுளோரென. (யுத் : 2297)

முச்சு – மூச்சு. (யுத் : 124)

முச்சூற் கழு – சூலப்படை. திரி சூலமாகிய கழு. (சூல் - சூலமென் பதன் விகாரம்) யாரும் மழுமுதல் மாள்வரின்றே இவன் வலத் தமைந்த முச்சூற் கழுவினில் என்று வானேர் கலங்கினர். (யுத் : 1422)

முசலம் – உலக்கை. முளையொடு துணிந்தன முசலம். (ஆ : 1445) நெடு முசலம். (யுத் : 1274)

முசித்தல் – சிதற அடித்தல். அன்னவன் முடித்தலை முசித்து. (சு : 697)

முசு – குரங்கு. வேல்பிடித் தெறிவர் அம்முசுவை வெங்கணர். (யுத் : 2295) சூர் முசு. (யுத் : 2295)

முசுண்டி - ஒரு போர்க்கருவி. காலவரிவிற் பகழி கப்பண முசுண்டி. (சு : 164) (ஆ : 401)

முஞ்சி - தருப்பையாற் செய்த அரைஞாண். முப்புரி நூலினன் முஞ்சியன். (பா : 440)

முட்டப் பயிற்றிய பருவம் - அணைத்து அடைகாக்கின்ற காலம். குஞ்சை இட்டிலா முட்டை முட்டப் பயிற்றிய பருவ மொத்த காலத்துள். (யுத் : 265)

முட்டல் – முட்டுதல் பார்க்க.

முட்டி – தாக்கி. பல்லொடு பல்லு மென்று பட்டன குரங்கு முட்டி. (யுத் : 1400)

முட்டிய - 1. தாக்கிய. பொன்ரு மூவரோடு தான் முட்டிய முனையில். (ஆ : 510)

2. தாக்கி எழுப்பிய. தொளை கட்டிய கிளை முட்டிய சுருதிச் சுவையமுது. (அ : 622)

3. நிரம்பிய. நெருங்கிய. முட்டிய செரு. (யுத் : 3078)

முட்டிய செரு – நெருங்கச் செய்த போர். (யுத் : 3078)

முட்டில்வீடு - முட்டுப்பாடில்லாத எல்லா வளமும் நிரம்பிய வீட்டுலகம். முட்டில் வீடுகாண் குறுந் தேவர். (சு : 120)

முட்டின - முட்டியனவானவை. (அம்புகள்) முட்டின முட்டற முரணுறு திசை நிலை எட்டினு மெட்டரு நிலையன. (யுத் : 1813)

முட்டு - 1. குறைபாடு. முட்டில் அட்டில். (பா : 57)

2. கடிவாளம். (வை மு)

3. தடை. (அண்) முட்டமைந்த நெடுமுடக் கோனெடு. (அ : 1059)

4. தாக்குகை. முட்டற முரணுறு திசைநிலை எட்டினும் எட்டரு நிலையன எவை. (யுத் : 1813)

5. இடைக்குக் கீழமைந்த கால் முதலான பொருத்துவாய். முட்டிமுந்த நெடுமுடக் கோன். (ஆ : 1059) [பா : பே]

முட்டுதல் – 1. பரவி நிற்றல். ஏழொத்துடனுந் திசை எட்டொடிரண்டு முட்டும் ஆழிக் கிளர் ஆர்கலி. (கி : 280)

2. தாக்குதல் பொருதுதாக்குதல். முப்புறத் துலகையுந் துருவி முட்டலால். (கி : 671) நீலனிட்ட நெடுவரை நீணிலம் மூல முட்டலின். (யுத் : 657) குரங்கு முட்டி. (யுத் : 1400) முட்டிய வெம்மையான். (யுத் : 1742)

3. அணைத்தல் – அடைகாத்தல். குஞ்சையிட்டிலா முட்டைப் முட்டப் பயிற்றிய பருவம். (யுத் : 265)

4. தாக்கி எழுப்பல். கிளை முட்டிய சுருதிச்சுவை. (அ : 622)

5. பாய்தல். அகல் வானின் மொய்ச்சுச் சென்றூர் மொய் குருதித் தாரைகள் முட்ட. (யுத் : 3562)

6. நெருங்குதல்- மூண்டெழு வெகுளியோடு மகோதரன் முனிந்து முட்ட. (யுத் . 3067) முட்டிய செரு. (யுத் : 3087)

7. தொடுதல். மதிமுட்டுவன மாடம். (சு : 96)

8. தாக்கி எழுப்புதல். தொளைகட்டிய கிளைமுட்டிய சுருதிச்சுவை. (அ : 622)

9. மோதிப் பொருதல். மூரித்திசையானை இரண்டென முட்டினரே. (கி : 273)

முட்டை - 1. அண்டம். அண்டகோளம். ஆண்ட ஓடு. கிளர்ந்தது ககன முட்டை கிழிந்தது கீழும் மேலும். (யுத் : 260)

2. பறவையின் முட்டை. குஞ்சை இட்டிலா முட்டை. (யுத்:265)

முடக்கோன் - அருணன். முட்டமைந்த நெடு முடக்கோனெடு கட்டி. (ஆ . 1059) முட்டிழந்த நெடுமுடக்கோன். (ஆ : 1059) [பா:பே]

முடங்கல் – 1. ஓலை. ஏவினுன் மன்னவனுணை எழுது முடங்கல் எடுத்தோரை. (அ : 607)

2. வளைதல். முடங்கல் வரிச்சு. (அ : 780)

முடங்கல் நிமிர்த்தல் – ஓலையின் சுருளை அவிழ்த்து நிமிர்த்தல் சாதனந் தோய்த்துடைச் சுற்றுமண் மூடுதோட்டின் முடங்கல் நிமிர்த்தனன். (அ : 798)

முடங்கலெடுத்தோர் – ஓலையைத் தாங்கிய தூதர் ஏவினுன் மன்னவன் ஆணை எழுதும் முடங்கல் எடுத்தோரை. (அ:607)

முடங்குதல் – மடங்குதல். வளைதல். முடங்கு வாருளை. (யுத் : 264)

முடங்கு வாருளை - மடங்கி நீண்ட பிடரிமயிர் (யுத் : 264)

முடங்குளையாளி - முடங்கிய பிடரிமயிரையுடைய யாளி. தாமடங்கலும் முடங்குளையாளியுந்தகுவர். (யுத் : 3786)

முடவெண்டாழை – வளைந்த வெண்ணிறத் தாழை. முடவெண்டாழை மேற்பாதியஞ்சிறையிடைப் பேடையைப் பாடணைத்து ஓதிமந் துயில்வ கண்டு. (யுத் : 335)

முடி- 1. கிரீடம். அவனி நெடு முடியொன்றொடொன்றறைதலின். (பா : 1276) முடியொடு முடிபொருவாயில். (பா : 816)
2. முடிந்துபோ. அதன்றேல் முன்னம் முடி. (அ : 1044)

முடிக்குவன் - அழிப்பேன். முற்றுற முடிக்குவன் முனியை என்றெழா. (பா : 377)

முடிக்குவென் - முடித்துவிடுவேன். கண்ணிய கருமம் இன்றே முடிக்குவென் கடிதின். (சு : 949) உன்பகை முடிக்குவென்யான். (யுத் : 39)

முடிசூட்டல் - கிரீடத்தைச்சூட்டுதல். நம்பியை நளிமுடிசூட்டி நின்று நின்றது செய்வது. (அ : 48)

முடி சூடுதல் - கிரீடத்தைத் தரித்தல். எடுத்தமாமுடி சூடிநின் பாலியைந்தடுத்த பேரர சாண்டிலை. (ஆ : 1066)

முடித்தல் - 1. கொன்று முடித்தல். அழித்தல். கொல்லுதல். முடிப்பெனின்றொரு மொய்கணையால். (ஆ : 542) முடிக்குநர் என்ற போது. (சு : 465)
2. தரித்தல். மூவுலகினுக்கு மொரு நாயகமுடித்தேன். (ஆ:759)
3. நிறைவேற்றுதல். செய்தல். முற்றுவித்தல். முடித்தா யன்றே மந்திரம். (அ : 597) என் வேள்வியும்... முடித்து. (பா : 651) முடிக்குவென். (சு : 948) யாரது முடித்துளோர். (சு : 1283) மூளுமுளதாய பழி என்வயின் முடித்தோர். (ஆ : 619) முடிக்குவன் யான் (யுத் : 39) யான் முடியாதே முடிகின்றேன். (யுத் : 2612) முடித்து இவ்வூர் முடித்தால் மேல் முடிவதெலாம் முடிந்தொழிக (சு : 315)
4. தீர்த்து வைத்தல். நின் அன்னை சாபமும் முடித்து. (பா:651)
5. போக்குதல். என் நெஞ்சத்திடர் முடித்தான். (பா : 651)
6. ஒழியச்செய்தல். மூரன் முறுவற்குறி காட்டி முத்தே உயிரை முடிப்பாயோ. (யுத் :8)
7.அழித்தல். கிரிகள் முற்ற முடிக்குவான் முடிவு காலத்து அழிவுறக் கடுக்கும் வேகத் தாதை (சு : 28) [பா : பே]

முடித்தலம் - தலை. முடித்தலத்தினிற் கவ்வுற. (யுத் : 1029)

முடித்தலை - கிரீட மணிந்ததலை. முடித்தலை பூழியன. (யுத் : 2924) முடித்தலைகள் பத்தினும் முகத்தினு முதைத்தான். (யுத் : 849)

முடித்தொகை - முடிகளின் கூட்டம். (யுத் : 3905)

முடிதல் - 1. இறத்தல். எல்லாரும் முடிந்தாரோ. (ஆ : 60) யான் முடியாதே முடிகின்றேன். (யுத் : 2612)

2. தீர்தல். உலக மெல்லாம் மொய்கணைக் கானமாகி முடிந்தது. (யுத் : 2066)

3. அமைதல். முற்று முடிந்த நெடுவான். (சு : 88)

4. இயலுதல். ஒருவனால் முடிகலது. (யுத் : 2473) முடியுமோ. (யுத் : 1547)

5. அழிதல். முடியாதாய். (யுத் : 1547)

6. விளைதல். அது முடியா முன்னம் மீள்வதே கடன். (ஆ:812)

முடிதுறத்தல் - கிரீடத்தைத் துறத்தல். சுடர் முடி துறந்து தூய மண்ணெனுந் திருவை நீங்கி. (அ : 260)

முடிதுன்று பொலங்கழலான் - கிரீடங்கள் நெருங்குகின்ற பொன்னு லாகிய வீரக் கழலையுடையவன். முதுதேவரின் மூவரலார் புனை யும் முடிதுன்று பொலங் கழலான். (ஆ : 78)

முடிந்திடுதல் - அடங்கிவிடுதல். இற்றைப் போர்ப் பெருஞ் சிற்றம் என்னோடு முடிந்திடுக. (சு : 318)

முடிநாட்டிய கோட்டுதபம் - மலையின் முடியாக நிலைபெற்ற சிகரத் தினையுடைய உதயகிரி முடி நாட்டிய கோட்டுதயத்தின் முற்ற முற்றுன். (ஆ : 1067)

முடி படி வைத்தல் - நமஸ்கரித்தல் முடிபடி நெடிதின் வைத்தான். (யுத் : 1598)

முடி படியிற் றேய்தல் - முடி பூமியிற் படிதல். (சாஷ்டாங்கமாக வணங்குதல்) தும்பியந் தொடையன் மாலைச் சுடர்முடி படியிற் றேயப் பம்பு பொற்கழல்கள் கையாற் பற்றினன் புலம்பும் பொற்றேள் தம்பி. (யுத் : 1372)

முடிபுனை கடிகை நாள் - முடி புனைதற்குரிய நாழிகையும் நாளும். முடிபுனைவைக் கடிதல் செய்தற்குரிய நாள். வடி மழுவாளவற் கடந்த மைந்தற்கு முடிபுனை கடிகை நாள் மொழிமின் என் றனன். (அ : 98)

முடி புனைதல் - முடி சூடுதல். அக்காலை நாளையே புவியமை மணி முடி புனையும் என்ற சொல். (அ : 123)

முடி மணக் கோலம் - முடி புனைந்து கொள்ளுகின்ற மணக்கோலம். முறையின் எய்திய கொற்றவன் முடிமணக் கோலம் காணவும் பெற்றிலே போலும் நின் பெரிய கண்களால். (அ : 848)

முடிமணம் - முடிபுனை விழா. முடி மணக் கோலம். (அ : 848)

முடிமணி - கிரீடங்களிலிருக்கும் இரத்தினம். முடிமணி பறித் திட்டாயோ. (யுத் : 887)

முடிமிசை முகிழ்த்தல் - தலைமேற் கைகுவித்தல். மூவர்க்கும் இளைய வள்ளல் முடிமிசை முகிழ்த்த கையன். (யுத் : 4269)

முடிய - 1. முழுவதும். அந்நெடுஞ் சேனையைமுடிய நோக்க லுற்றேம். (யுத் : 748) எங்குரவர் முடிய நீணிரயத்திலிலமுந் திடுமுறைமை கடியுமாறு. (பா : 522)

2. முடிவாக. முடிய வொன்றுணர்த்துவென் உனக்கு நான். (யுத் : 2435)

3. விளங்க. (வை.மு) முன் பிறந்தேனென முடியக் கூறினான். (கி : 976)

4. தீர்மானமாக. பற்றுதல் பழுதெனப் பழுதுரு ஒரு பெற்றியின் உணர்வினர் முடியப் பேசினர். (யுத் : 391)

முடியாதே - பூர்த்திசெய்யாமலே. கொடுத்தேனன்றே வீடண னுக்குக் குலமாள முடித்தோர் செல்வமியான் முடியாதே முடி கின்றேன். (யுத் : 2612)

முடியா முடிமன்னன் - அழிதலில்லாத பொன்முடி தரித்த மன்னன். தசரத சக்கரவர்த்தி. முடியா முடிமன்னன் முடிந்திடவும். (சு : 497)

முடியுநாள் - அழியுங்காலம். (யுத் : 2858)

முடியுழுத தழும்பு - கிரீடங்கள் உராய்தலினாலாகிய வடுக்கள். தாள் தொழுத பகை வேந்தர் முடியுழுத தழும்பிருந்த சரணத் தானை. (சு : 312)

முடியைமோத்தல் - உச்சிமோத்தல். முடியை மோயினன் நின்றுழி. (யுத் : 4106)

முடிவது - நடப்பது. முடித் திவ்வூர் முடித்தால் மேல் முடிவ தெலாம் முடிந்தொழிக. (சு : 315)

முடிவில்லவர் – மிகப்பலர். எண்ணிறந்தவர். வெய்யார் முடிவில் லவர். வீசிய போது. (யுத் : 246)

முடிவின் கனல் - ஊழித்தீ. நெடு முடிவின் கனல் பார்க்க. (பா:1365)

முடிவு – 1. விமோசனம். முடிவிதற் கருளுக. (பா : 557)
2. யுகாந்தம். நீரோ ரேமு முடிவில் நெருக்கு நாள் மேரு மால் வரை என்ன விளங்கினான். (யுத் : 1062)
3. அழிவு. முந்த மானுயினான் வாலியே முதலினோர் முடிவு கண்டால். (யுத் : 109) முடிவன்றி முடிவ துண்டோ. (சு : 455) முடியாதாய். (யுத் : 1547)
4. எல்லை. துன்ப மொரு முடிவில்லை. (அ : 1022)
5. உபாயம். முடிவான உபாயம். தோன்றலை யறிதற்கு முடிவு என் னென் றியம்ப. (கி : 155)
6. நிகழ்வது. முடிவன்றி முடிவதுண்டோ. (சு : 465)

முடிவு காலம் – கற்பாந்த காலம். (சு : 28)

முடிவு முற்றுதல் – முடிவடைதல். சாதல். முன்பு நின்றிசை நிறீஇ முடிவு முற்றிய பின்பு நின்று றுதியைப் பயக்கும் பேறறம். (அ : 559)

முடிவுற நோக்கி – நன்கு பார்த்து. முடிவுற நோக்கி ஓர் முகமன் கூறி. (பா : 98)

முடி வெண்ணுதல் – எண்ணி முடிவு காணுதல். (கலா) முடிவைக் கணக்கிடுதல்; வரையறை செய்தல். (வை.மு) அறிவைப் பேசும் பேச்சினைச் சமயங்கள் பிணக்குறும் பிணக்கை யாவரே முடி வெண்ணவல்லார். (கி : 723)

முடுக்கம் – விசை. மூசெரி பிறக்க மீக்கொண்டிறக்கிய முடுக்கந் தன்னால். (யுத் : 644)

முடுக்கிக் கூறுதல் – தீர்மானமாகக்கூறுதல். முடுகுவன் உடனென முடுக்கிக் கூறலும். (யுத் : 2736)

முடுக்கிடுதல் – விரைவாகச் செலுத்துதல். நீ போய் அந்த அரக்க ருடல் முழுதுங்கடலில் முடுக்கிடு. (யுத் : 2625)

முடுக்கிவிட்ட – விசையாகச் சுழற்றிவிட்ட. குலான் மகன் முடுக்கி விட்ட மட்கலத்திகிரிபோல. (பா : 576)

முடுக்குதல் (முடுக்கல்)-1. விரைந்து தொழிற்படச் செய்தல். தூண்டுதல். முடுக்குவன் வருணனை. (யுத் : 593) முடுக்கினன் இராமனைச் சாம்பன் முன்பினுன். (யுத் : 1529)

2. விரையச் செலுத்துதல். முடுக்கினன் தருகென. (யுத் . 627)

முடுக்குற – செலுத்த. மூடுக்குறக் கடலிற் செல்லும் முத்தலைக்கிரி. (சு : 24)

முடுக – வேகமாக. முனிவனும் மூடுகவந்தான். (பா:553) [பா:பே]

முடுகவிடுதல் – விரையுமாறு ஏவுதல். முச்சிரப் பகழிகோடி இலக்குவன் முடுகவிட்டான். (யுத் : 2064)

முடுகு – நெருங்கு. இனி அவன் பிழைப்புருமே முடுகு என்ருன். (யுத் : 2991)

முடுகுதல் – 1. கிட்டுதல். வளர்த்தல் முழங்கழல் மும்மையும் முடுகி ஆகுதி வழங்கியே. (பா : 265)

2. விரைந்து செல்லுதல்- விரைதல். பெருகு வெள்ளம் போய் மொய் கொள் வேலைவாய் முடுகுமாறு போல். (பா : 332) முடுகிக் கூறினர். (யுத் : 347) முடுகுக. (அ : 957) முடுக்கிடு (யுத் : 2625) முடுகிப் பொங்கினுன். (யுத் : 307)

3. மிகுதல். துயர் முடுக. (அ : 544)

முடுகுறுதல் – விரைதல். முன் முன் நின்ருர் கண்கனல் சிந்த முடுகுற்ருர் மின்மின் என்னுஞ் சூலமும் வாளும் மிவையோச்சி. (சு : 482)

முடை – புலால் நாற்றம். துர்க்கந்தம். நீண்ட நாள் உடல் கழுவாத நிலையிலும் தயிர் முதலிய பதனழிந்த நிலையிலும் எழும் தீய நாற்றம். பிணக்குறு முடையுடல் பேணி. (அ : 307) (ஆ:584)

முடைத்த – துர்க்கந்தமுள்ள. முடைத்த வெங்குருதியின் கடலின் மூழ்கினர். (ஆ : 470)

முடைநாறுதல் – கெட்ட நாற்றம் வீசுதல். முடியின் மாலைகள் புலாலோடு முழுமுடை நாறும். (ஆ : 439)

முடை மிடைவாய் - முடைநாற்றம் மிகுந்தவாய். முடை மிடை வாயின் முறையிட்டு. (ஆ : 584) [பா : பே]

முடையுடல் - முடைநாற்ற முள்ள உடல். முடையுடல் மறிய முறிந் தார். (சு : 776)

முடையுடைவாய் - புலால் நாற்ற முடையவாய். முடையுடை வாயி னன் முறையிட்டு. (ஆ : 584)

முண்டகத்துறை - தண்டகாரணியத்திலுள்ள ஒரு பொழில். முண்டகத்துறையென்றொரு மொய் பொழில். (கி : 760)

முண்டகந்தழுவுகான் - தாமரைமலர்கள் நெருங்கியுள்ள காடு. (அ : 928)

முண்டகம் - தாமரை. தழையின் முண்டகந் தழுவுகான். (அ:928)

முண்டம் - 1 முண்டகம். தாமரை. முண்டக்கிளர் தண்டன முட் டொகுவன் துண்டச்சுற வொத்தன. (யுத் : 3462)
2. உடல். கைம்மா முண்டத் துரித்த உரியாள். (சு : 78)

முண்டர் - தலையை மழித்துள்ளவர். பாலகில்லரும் முண்டரும் மோனரும். (ஆ : 120)

முண்டித்தல் - தலையை மொட்டையடித்தல். முண்டித்தும் நீண்டித் தும் முறையால் வீடு பெற்றவர். (யுத் : 161)

முத்தக்குடை - முத்துக்கள் கட்டிய (சந்திர) வட்டக் குடை. முத்தக் குடை இமைப்ப. (யுத் : 3617)

முத்தணி வயிரப்பூணன் - முத்துக்களாலும் அழகிய வயிர மணிகளா லும் இயன்ற ஆபரணங்களையுடையவன். (தசரதன்) (பா : 888)

முத்தம் - 1. முத்துப்போன்ற நீர். கண்ணீர் கண்ணென்று முத்தம் முறை முறைவாயுக. (ஆ : 209) (ஆ : 797)
2. முத்து. குல மருப்புகுத்த முத்தமே. (யுத் : 1770)

முத்தமா முடி - முத்துப் பதித்த பெரிய கிரீடம். முத்த மாமுடி அரசர் தங் கோமகன். (பா : 184)

முத்தமிழ் - இயலிசை நாடகம் என்னும் மூன்று தமிழ். ஏழுலகும் புகழ் முத்தும் முத்தமிழுந் தந்து முற்றுமோ. (கி : 943)

முத்தமிழ்த்துறை - இயலிசை நாடகம் என்னும் முத்தமிழ்க் கடல். (அண்) முத்தமிழ் நூல்கள். (வை.மு) முத்தமிழின் பொருட் கூறுகள். (கலா) முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமக் கவிஞர். (பா : 8)

முத்த முரன் முறுவலார் – முத்துப் போன்ற பற்களையும் புன்முறுவலையுமுடைய மகளிர் (அ : 260)

முத்தர் – பாச பந்தங்களினின்றும் விடுபட்டவர். முத்தரானவர் இதனிலை மொழிகுவதல்லால். (யுத் : 4079)

முத்தலை அயில் – சூலம். கூர்த்த நுதி முத்தலை அயிற் கொடிய கூற்றைப் பார்த்து. (பா : 392)

முத்தலை அயில் தொலைகமிடற்கழு – மூன்று தலைகளையும் மிக்க கூர்மையையும் வலிமையையுமுடைய சூலாயுதம். (வை.மு) (ஆ : 6) [பா : பே]

முத்தலை அயில் தொழின் மிடற்கழு – கூர்மையும் வேலைப்பாடும் அமைந்த மூன்று தலைகளையுடைய வலிய சூலப்படை. (அண்) (ஆ : 6)

முத்தலை எஃகம் - மூன்று தலைகளையுடைய சூலம். ஏற்றுன் எருவைக் கிறை முத்தலை எஃகம் மார்பின். (ஆ : 930)

முத்தலை எஃகன் – மூன்று தலைகளைக் கொண்ட சூலாயுதங் கொண்ட சிவன். (சு : 1157)

முத்தலை எஃகினுன் – மூன்று தலைகளையுடைய சூலாயுதத்தையுடையவனுன சிவபெருமான். முத்தலை எஃகினுற்கும் முடிப்பருங் கருமம் முற்றி. (சு : 1273)

முத்தலை எஃகு - சூலாயுதம். திரிசூலம். (சு : 1273)

முத்தலைக்கழு – முத்தலைச் சூலம் தண்டும் முத்தலைக் கழுக்களும். (ஆ : 401)

முத்தலைக்கிரி – திரி கூட மலை. முடுக்குறக் கடலிற் செல்லும் முத்தலைக் கிரியு மொத்தான். (சு : 24)

முத்தலைக் குரிசில் – திரிசிரா. முத்தலைக் குரிசில் பொன் முடியன் முக்கணுன் கைத்தலைச் சூலமே யனைய கார்ட்சியான். (அ:480)

முத்தலைச் சூலம் – மூன்று தலைகளையுடைய சூலப்படை. (யுத்.1424)

முத்த வெண்குடை – முத்துக்களால் இயன்ற வெண்குடை. முத்த வெண்குடை மன்னனை முறை முறை தொழுதார். (அ ; 76)

முத்தன் - 1. பிரமன். பற்றற்றேன். (கலா) முத்தனை வினவினேற்கு. (சு : 189)

2. திருமால். திருமாலின் அமிசமான இலக்குவன். முத்தன் முக நோக்கி. (யுத் : 3019)

முத்தனார் – எல்லா வினைகளினின்றும் விடுபட்டவர் (கலா) இராமபிரான். முத்தியுலகத்திற்குரிய திருமால். (வை மு) முத்தனார் மிதிலையூர் அறிவு முற்றிய பித்தன் வெஞ்சிலையினை இறுத்த பேரொலி. (யுத் : 1479)

முத்தாரம் – முத்து மாலை கார் எனும் பெயர்க் கரியவன் மார்பினிற் கதிர் முத்தாரமா மெனப் பொலிந்தன. (கி : 484) முத்தார மார்பு. (ஆ : 925)

முத்தி – வீட்டுலகு. முத்தியிற் போவது புரிபவர். (பா : 356)

முத்தி அமரர் - நித்திய சூரிகள். முனைவர்க்கும் முத்தி அமரர்க்கும்... அனைவர்க்கும் ஒத்தி. (யுத் : 2211)

முத்தி நாட்டின் முகடு – வான நாட்டின் உச்சி. முத்தி நாட்டின் முகட்டினை முற்றுற. (யுத் : 1003)

முத்தியிற் போவது புரிபவர் – வீட்டுலகை யடைய விரும்புகின்றவர்கள். முமுக்ஷுக்கள். (பா : 356)

முத்திவித்து – முத்திக்கு வித்தாகும். சலந்தீர்ந் துன்னைத் தாதை யென்றுணர்குவ முத்திவித்து. (யுத் : 4023)

முத்திறத்தவர் – மும்மூர்த்திகள். முத்திறத் தவருளே யொருவன் மூர்த்தி வேறு ஒத்திருந்தா யென உணர்கின்றேன் என்றான் (யுத் : 4174)

முத்திறத்துலகத்தார் - சுவர்க்கம் பூமி, பாதலம் என்னும் மூன்று வகை உலகப் பெரியோர். (சு : 14)

முத்திறத் துலகு – மூன்று வகையான உலகங்கள். முத்திறத் துலகும் வெந்து சாம்பராய் முடியுமன்றே. (யுத் : 2883) முத்திறத் துலகத்தார். (சு : 14)

முந்திறத் தேவர் - மும்மூர்த்திகள். முத்திறத் தேவருள் ஒருவன். (யுத் : 4174) [பா : பே]

முத்தின் கவிகை – முத்துக் கவிகை. முத்த வெண்குடை. உவா மதிக் கீழுயர் காரும் ஒத்தனன் முத்தின் கவிகையான். (யுத் : 1060)

முத்தினம் – முத்துக் கூட்டங்கள். சிந்துவ முத்தினம். (பா : 137) பனிக்கடை முத்தினம் படைப்ப. (அ : 56)

முத்தினிறத்தரிசிக்குவை – முத்துப் போன்ற நிறத்தையுடைய அரிசிக் குவியல். பருப்பொடு நிறை வெண் முத்தின் நிறத்து அரிசிக்குவை உறைவ கோட்டமில் ஊட்டிடந் தோறெலாம். (பா : 68)

முத்தீ – மூன்று தீ. ஆகவனீயம். காருக பத்தியம், தாக்ஷிணுக்கினி என்பன. ஒன்று வேதத்தை வழங்கவும், ஒன்று தேவர்கட்கு தட்சிணை கொடுக்கவும், ஒன்று பூலோகத்தை ரட்சை பண்ண வும் என்ப, நாற்சதுரமும் முச்சதுரமும் வில் வடிவமும் ஆகிய மூன்று வகையைக் கருதுவன. முழங்கழல் மும்மையும் முடுகி ஆகுதி வழங்கியே. (பா : 265)

முத்தீ ஓம்புதல் – முத்தீயை வளர்த்தல். ஆய கங்கையரும் புனலாடி முத் தியும் ஓம்பினை செய்யமு தென்றனர். (அ : 632) [பா : பே]

முத்தீயின் நாப்பண் ஆகுதி ஈதல் – மூன்று பகுப்பினையுடைய அக்கினியின் நடுவில் ஆகுதியை ஈதல். விளங்கு முத்தீயின் நாப்பண் புரிந்தொராகுதியை ஈந்து புறப்படு மளவில்.(யுத்:4120)

முத்து – 1. முத்துக்கள். முத்திருத்தி யவ்விருந்தனைய. (ஆ : 2) முத்தின் பொலி மணல் பரந்த வைப்பின். (யுத் : 440)
2. சிறந்த. முத்தரம்பையர் முதலினர். (சு : 233)

முத்துவாணகைமூரல் முகத்தியர் – முத்துக்களைப் போன்ற பற்களைக் காட்டிச் சிரிக்கும் நகை முகத்தினையுடைய பெண்டிர். (யுத்:2772)

முத்தேவர்கள் – மும்மூர்த்திகள். முத்தேவர்கள் முதலாயினர் முழு மூன்றுல கிடையே. (யுத் : 1131)

முதல் – 1. அடிமரம். விரிதளிர் முகைபூக் கொம்படை முதல் வேர் பழமிவை மணி பொனுல் வேய்ந்த தரு. (சு : 425)
2. வேர். அடி. மூலம். மூண் டெழு வெகுளியை முதலின் நீக்கி னுர். (ஆ : 125) தாமுதலோடுங் கெட்டால். (யுத் : 637)
3. விதை. ஏகம் முதற் கல்வி முளைத் தெழுந்து. (பா : 167)
4. முன்னிருந்தவர். வெய்யவன் குல முதல் வேந்தர். (அ:14)
5. வமிசம். மூலம். நின் முதல் மாயும் பிணி செய்தாய். (சு : 484)
6. முதன்மை. நனி முதல் வேதங்கள் நான்கும். (யுத் : 366)

7. முன்பு. முதலையம். (பா : 1238)

8. ஏழனுருபு. தாள் முதல் வணங்கிய. (அ : 569)

9. ஆதி. முதல்தர மானது. ஆள் முதற்கமைந்த கேண்மையன் பன். (அ : 669)

10. மூலப்ரகிருதி. (வை.மு) உலகுக்குத் தலைவனாகிய முதல் வன். (அண்) பரம் பொருள். (கலா) தோன்றுரு எவையுமம் முதல. (கி : 1)

11. பிரமன். வரந்தரும் முதல். (யுத் : 4056)

12. ஏது: வான் பிழைக்கு இது முதல் எனுது. (யுத் : 4051)

13. இடம். தே முதற் கனி. (யுத் : 639)

முதல் பகுதி – மூலப் பிரகிருதி. நின்கணே தோற்றும் ஆற்றல் சால் முதற் பகுதி மற்றதனுளாம் பண்பால். (யுத் : 4027)

முதல் முன்னவன் – உலக காரணனுன முழுமுதற் கடவுள். விரிஞ்ச னென ஓர் முட்டை தந்த முதல் முன்னவன். (ஆ : 46)

முதல் மூவர் – மும் மூர்த்தி உருவங்கள். தேவரும் முனிவரும் தெரிக்கலா முதல் மூவருந் தானென முடித்தது ஒத்ததே. (பா : 1305)

முதல்வர் – முதற்றேவர்- விழிபட முதல்வரெல்லாம் ஒதுங்கினர். (யுத் . 3055)

முதல்வரான மூவர்க்கும் நால்வரான தம்பி – சத்துருக்கன். (யுத் : 2963)

முதல்வன் – 1. பிரமன். முதல்வன் முன்னுள்... கொடுத்த வரமும். (யுத் : 3865)

2. காரணன். மும்மையா முலகந்தந்த முதல்வற்கும் முதல்வன். (இராமபிரான்) (சு : 560)

முதல் வாழ்வு –.வாழ்வு முதல் முதன்மையாகிய வாழ்க்கை. வாழ் விற்குக் காரணமானவன். (அண்) (வை.மு) பிடித்து நல்கு இவ்வுழை யெனப் பேதையேன் முடித்தனென் முதல் வாழ் வென. (ஆ : 815)

முதல் வேந்தர் – (தனக்கு) முன்னிருந்த வேந்தர். வெய்யவன்குல முதல் வேந்தர். (ஆ : 14)

முதலந்தணன் – பிரமன். அந்நீரில் வந்த முதலந்தணன். (சு : 45)

முதலரி – நர சிங்கம். முதன்மைப் பொருளான நாசிங்கப் பெருமான். முதலரி போல் வருதிறலான். (யுத் : 1833)

முதலவன் – ஆதியானவன். மனு. (முதலாகவுள்ளவன்). முதலவன் முதலிய முந்தையோர் பழங்கதையையும் புதுக்கிய தலைவன். (அ : 842)

முதலற முடித்தல் – அடியோடு அறும்படி அழித்தல். முருங்கழல் வேள்வி முற்றி முதலற முடிக்க மூண்டான். (யுத் : 2889)

முதலறிவின் மூவர் - முதல்வராகக் கருதப்பட்ட மூவர் (உ.வி). முதன்மையான அறிவினையுடைய மூவர். (யுத் : 3424)

முதலறுத்தல் – வேரோடறுத்தல். சல முதலறுத் தருந் தருமந் தாங்கினர். (அ : 6)

முதலி – முற்பட்டுச் செய்பவன். முற்பட்டு. இதுவென முதலி எதிர்ந்தார். (சு : 772)

முதலிட்டு - முதலாக. முதலாகக்கொண்டு. இமைப்பிலாதோர் தம்மையே முதலிட்டு. (கி : 67)

முதலினர் – முதலானவர்கள். இமையவர் முதலினர். (யுத் : 1607)

முதலைக் குலம் – முதலைகளின் கூட்டம். வீரக்கரி முதலைக்குல மிதக்கின்றன. (ஆ : 461)

முதலையம்-முன்பு தான் கொண்டிருந்த ஐயம். மெய்வினை விடத்து முதலையம் விடலுற்றாள். (பா : 1238)

முதலொடு முடித்தல் – வேரோடு அழித்தல். எல்லாம் நீட்டிய பகழியொன்றால் முதலொடு நீக்க நின்றான். (சு : 1118)

முதலோர் - 1. தொன்று தொட்டிருப்பவர். நல்லிலங்கை முதலோர். (யுத் : 815)
2. மும்மூர்த்தியார். முதலோர் அனைவர்க்கும் ஒத்தி. யுத்:2211) (யுத் : 2819)

முதலோன் – பிரமன். முன்னதாக்கி மூவுலகாக்கிய முதலோன். (யுத் : 553)

முதலோன் மொழி – வேதம். கடவுளின் வாக்கான வேதமந்திரம். நன்றாக உலகுக்கென முதலோன் மொழி நவின்றான்.(யுத்:3026)

முதற்கேள்வி - சிறந்தகேள்வி. கலையின் குப்பையும் பல முதற் கேள்வியும் பயனுமெய்தினர். (அ : 6)

முதற்பகுதி-மூலப்பிரகிருதி. ஆற்றல்சால் முதற்பகுதி. (யுத்:4027)

முதற்பொருள் - முதலாகிய பொருள். உயிர் முதற்பொருள் திறம் பினும் உரை திறம்பாதோர். (அ : 161)

முதற்றாதை - முதலாகிய தந்தை. வானவர்க்கும் மற்றொழிந்த மன்னுயிர்க்கும் நீயாகின் முதற்றாதை. (ஆ . 53)

முதற்றேவர் - தலைவராகிய தேவர்கள். இனி நின்ற முதல்தேவர் என்கொண்டென் செய்வாரே. (ஆ : 52) (கி : 48)

முதன்மை - உபசாரவார்த்தை. அருக்க ருக்கரசை வெவ்வேறடை வினின் முதன்மைகூறி. (யுத் : 4271) கணிதமாக்களை முடிவுற நோக்கியோர் முதன்மைகூறி. (அ : 98) [பா:பே] சூழ்ந்ததும் பொறுக்கென முதன்மை சொல்லினன். (சு : 1296)

முதிஞர் - முதியவர். நகர மூதூர் முதிஞரும். (அ:272) [பா:பே]

முதியர் - முதியவர். நகர மூதூர் முதியரும். (சு : 272)

முதிர்தல் - 1. நிறைதல். முதிர் புகைகதுவ. (சு : 773)
2. மிகுதல். எவ்வுலகங்களும் அஞ்ச முதிரும் வெங்கதம் மூண்டது. (யுத் : 209)
3. பழைமையாதல். இலங்கையர் மன்னன் தங்கை என்றலும் முதிர்ந்த சலத்தால். (யுத் : 825)

முதிர் பகை - முற்றின பகை. முனிவரோடுடையர் முன்னே முதிர் பகை. (ஆ : 279)

முதிர்வு - மிகுதி. மான் மதம் முதிர் வுறக் கமழ்வன. (பா : 152)

முதிர - மிகுதியாக. திருகு சினத்தார் முதிரமலைந்தார். (ஆ : 734)

முதிர மலைதல் - மிகுதியாகப் பொருதல். (ஆ : 774)

முதிரை - பருப்பு வகை, (அவரை, துவரை, கடலை, சிறு பயறு) புன் செய் தானியம். முந்து முக்கனியின் நானா முதிரையின். (பா : 50)

முதுகடற்கடு - தொன்மையுடையதாய்க் கடலிடத்தே தோன்றிய ஆல்கால நஞ்சு. (யுத் : 209)

முதுகாற்றல் (முதுகாற்றுதல்) - முதுகு வலியை (நோவை) ஆற்றிக் கொள்ளுதல். பாரம் நீங்கி இளைப்பாறுதல். நீண்ட தோர் நெடுந்திண் குன்றம் நில முதுகாற்ற வாங்கி. (யுத் : 1405) நெடு நில மகள் முதுகாற்ற. (பா : 753) வேலை யாடையின் மண் முது காற்றவும் காண்டி. (ஆ : 1099)

முதுகிட்டு ஓடுதல் – முதுகில் அடிவைத்து விரைந்து செல்லுதல். ஓடும் என் முதுகிட்டு என்ன ஓங்கிய சேடன். (யுத் : 685)

முதுகில் தைத்த வாளிகள் - புறங்காட்டி ஓடும்போது முதுகிலே பொத்திய அம்புகள். கைத்த ஏற்றினும் கடவிய புள்ளினும் முதுகில் தைத்த வாளிகள். இன்றுள. (யுத் : 1431)

முதுகின் பின்பு – பின்புறத்திடம். பின்புறமாக. பின்பு – ஏழனுருபு முதுகின் பின்பு நின்றவர் பிடர்க்கும் இவ்விசை ஒக்கும். (யுத் : 1431)

முதுகு – 1. நடுவிடம். மேதினியை முதுகு நொய்தெனச் செய் தவன். (யுத் : 837)
2. பின்புறம். நும் முதுகொடும் போம்பழி முயன்றீர். (ஆ : 513) முது கைத்தழும் பாக்கிய. (யுத் : 1974)

முதுகுகாண்டல் – முதுகு காணுமாறு செய்தல். (போரிற் புறங் (கொடுத்தோடும்படி செய்தல்) இந்திரன் முதுகுகண்ட இராவணற்கு. (யுத் : 761)

முதுகுளுக்கல் – பாரம் தாங்காமல் நெளிதல். விண் முதுகுளுக்கவும் வேலையாடையின் மண் முதுகாற்றவும். (அ : 1099) நிலமுது குளுக்கிக்கீழுற வைத்தனர். (பா : 759)

முதுகைத் தழும்பாக்குதல் – முதுகைப் புண்செய்து தழும்புறச் செய்தல். வானவேந்தன் முதுகை தழும்பாக்கிய மொய்யொளி மொட்டதம்மா. (யுத் : 1974)

முதுகை நெளித்தல் – பாரந்தாங்காது முதுகை நெளித்துக் கொடுத் தல், நீருடை யாடையாளும் நெளிந்தனள் முதுகை என்றான். (பா . 896)

முதுதாதை – பாட்டன். நின்தன் முதுதாதை ஐய நிற்காணிய விழைவதோர் கருத்தன். (பா : 1395)

முதுநகர் – பழைமையான நகரம். வெள்ளெயிற்றுடவர் முறிந்து தம்தம் முதுநகர் நோக்கினுர். (யுத் : 104)

முது நிலம் – தொன்று தொட்டுவந்த நாடு. முறையின் நீங்கி முது நிலங் கோள்கிலேன்... (அ : 1068)

முது பார் – பழமையான நிலவுலகம். மொய்யார் கலி சூழ் முது பாரின். (பா : 170)

முதுமகன் – வயது சென்றவன். முதியவன். கிழமகன். மூதுணர்ந்த இம் முதுமகன். (யுத் : 3255)

முதுமரம் – முதிய மரம். முயிறலைத் தெழு முதுமரத்தின் மொய்ம்பு தோள். (சு : 1050)

முதுமாப் படை - பழமையாகிய பெரிய படை. திசை முகத்தான் முதுமாப் படை துரந்தான். (யுத் : 3022)

முதுமேதி - பெரிய எருமை. முது மேதியின் முலை வழி பாலும். (பா : 544) கால் பாய்வன முது மேதிகள். (அ : 625)

முதுமை – பழமை. முதுவாயில். (கி : 601)

முதுமொழிப் பதம் – முதுவோர் மொழிதற்குரிய சொல். (அண்) பழமையான மொழிகளாலான வரலாறு; கிழப்பேச்சு. முதுமொழிப் பதஞ் சொல்லினென் என்றுரை முடித்தான். (யுத் : 3253)

முதுவாயில் – பழமை வாய்ந்த (கோட்டை) வாயில். கவ்வை முது வாயில். (சு : 167) (கி : 601)

முது வேதம் - பழைமையான வேதங்கள். கொய்யுளைப் புரவி மொழிந்த முது வேதம். (யுத் : 3664)

முதுவேலை - பழைய கடல். முது வேலையின் படியை நோக்கி. (யுத் : 748)

முதைப் புனம் - பழங்கொல்லை. முதைப் புனம் நிணைந்திட வளர்ந்த வேயெனப் பதைத்தனள். (பா : 1082)

முந்தல் – முற்படல். தூண்டுதல். ஓர் துணுக்கம் முந்த. (யுத்:1610)

முந்தா . முதலாக. ஆதியில். முந்தா உலகும் உயிரும் முறை முறையே தந்தானை. (யுத் : 293)

முந்தி – 1. முன்னர். முறைமையின் எய்தினர் முந்தி அந்தமில் அறிவனை வணங்கி. (அ : 12) முந்திவந்து. (அ : 789)

2. முற்பட்டு. முந்திக் கொண்டு. முந்தி என்னுயிரை அம் முறுவல் உண்டதே. (பா : 620) முந்தி நெருங்கினர். (அ : 806)

முந்திய – சிறந்த. (வை.மு) முற்பட்ட. (அண்) முந்திய சங்கம் முழங்கின மாதோ. (பா : 1332) (பா : 10)

முந்திய நாவினர் – காலத்தால் முற்பட்ட நாவீறுடைய வான்மீகி முனிவர். இக்கதை செய்தவர் மூவரானவர் தம்முளும் முந்திய நாவினர் உரையின்படி. (பா : 10)

முந்திவந்துலகீன்ற முதற் பெயரந்தணன் – பிரமன். (யுத் : 3860)

முந்தினன் - தோன்றினன். மூல தாமரை முழுமுதற் கிழவன் முந்தினனே. (பா : 524)

முந்தினை - விரைந்து. (முந்தினையாகி) முந்தினை முனிவனைக் குறுகி. (அ : 563)

முந்து – 1. சிறந்த. முந்த ரம்பையர் முதலினர். (சு : 233)
2. எதிர்ப்பட்ட. முனியொடு மிதிலையின் முதல்வன் முந்து நாள். (சு : 362)
3. முன்பு. முற்பக்கம். சேனையும் அரசரும் செல்க முந்தென. (பா : 822) முந்து இயம்பல கறங்கிட. (சு : 878)
4. முதற்காரணம். முந்தாய் நின்ற முதற் பொருளே. (யுத்:223)
5. முற்பட்டது. முந்து நீர் முளைத்த சினையின் பந்தம். (யுத் : 4032)

முந்தாய் - மூலமாய். (யுத் : 223)

முந்துதல் - 1. விரைதல். முந்தினை முனிவனைக் குறுகி. (அ : 563) கட்செவி உரகம் முந்தின வென. (யுத் : 2294)
2. மிகுதல். காதல் முந்திக் களிக்கின்ற யான். (அ : 794)
3. மேம்படுதல். சிறத்தல். முந்து வெள்ளி மலை. (ஆ : 17) முந்தரம்பையர். (சு : 233)
4. எதிரிற் காணப்படுதல். முந்தஞ் சுனைகாள். (ஆ : 983)
5. முந்திவெளிப்படுதல். (உ.வி) (ஆ : 893)
6. கடத்தல். மூவகையுலகும் நின் மொழியின் முந்துமோ. (கி : 209)
7. வெளிப்படல். புறப்படுதல். தனிச்சிலையின் முந்துசாயகக் கடுமையும். (யுத் : 4123)

8. முற்படுதல். முறையின் நீங்கிய அரசின் முந்துமோ. (சு : 1165)

முந்துநீர் – முற்பட்ட தன்மையுடைய திருமால். வினைத் தொகை யன்மொழி. (வை.மு) முற்பட்டதாகிய கடல். (அண்) முந்துநீர் முளைத்த சினையின் பந்தமும் பகுதிகளனைத்ஸதயுஞ் செய்தோன். (யுத் : 4032)

முந்து நூலுளோர் – முற்பட்ட அற நூலோர். தந்தை தன் வயிற் றருமம் யாவையும் முந்து நூலுளோர் முறையின் முற்றினன். (அ : 931)

முந்துறுதல் - முற்படுதல். வானமழை வந்ததென முந்துறு மனத் தான். (ஆ : 162) [பா : பே] எழுக முந்துற எனு. (பா : 1131)

முந்தை – முன்னே. பழைமை. முன்பு. மறத்தின் வயிரத் தொருவன் வந்தணுகு முந்தை. (ஆ : 538) முந்தையுற்ற தோர் சாப முண் மையால். (கி : 144) முந்தையே நினைந்து. (யுத்:165) [பா : பே]

முந்தை நாள் - தொடங்கிய நாள். முந்தை நாள் முதல் கடை முறை அளவையும் முடித்த அந்த வாநரம். (யுத் : 4058)

முந்தை நான் மறைமுனி - பழமையான நான்கு வேதங்களும் வல்ல முனிவர். (விசுவாமித்திரன்) வந்த நம்பியைத் தம்பி தன்னொடும் முந்தை நான் மறை முனிக்குக் காட்டி. (பா : 334)

முந்தை நான் முகத்தவற்கு முந்தையான் – எல்லாப் படைப்பிற்கும் முற்பட்டவனுன பிரமனுக்கும் முற்பட்டவனுன இராமன். (அ:1155)

முந்தையான் - முற்பட்டவன். (இராமன்) (அ : 1155)

முந்தையோர் – முன்னோர். முந்தையோர் முறையினின்றும் வழுவி னன். (அ : 1025)

முந்தையோர் எழுத்து – முதலிற்கூறப்படுகின்ற ஏகாக்ஷரமாகிய எழுத்து. பிரணவம். முந்தையோர் எழுத்தெனவந்து மும்முறைச் சந்தியும் பதமுமாய்த் தழைத்த தன்மையான். (யுத் : 202)

முந்தைவானவர் யாவர்க்கும் முதல்வர்க்கும் முதலோன் – பழமை யுடைய தேவர்கள் எல்லோர்க்கும் முதல்வரான மும்மூர்த்திகளுக் கும் முதல்வன். இரணியன். (யுத் : 156)

முந்நாளின் இளம்பிறை – மூன்றுநாள் நிரம்பிய இளம்பிறை. மூன்றும் பிறைச் சந்திரன். அந்நாளில் நிரம்பிய அம்மதி ஆண் டொர் வேலை முந்நாளின் இளம்பிறையாகி முளைத்ததென்றுல். ஆ : 692)

முந்நீர் – கடல். முந்நீரின் மூழ்கி. (சு : 45) முந்நீர் ஒல்கிளர்ந்து வாவுற்றென்ன. (பா : 786) முழங்கு முந்நீரென முடுகி. (யுத் : 1465)

முந்நூல் – முப்புரிநூல். தூசொடு முடியும் முந்நூல் தோல்தரும் தோற்றம் போன்றும். (பா : 674)

முப்பகல் – மூன்றும்நாள். முப்பகல் இிர்க்கிலம். (யுத் : 2270)

முப்பகல் திங்கள் – மூன்ருவதான திருதியை திதியிற் காணப்படும் வெள்ளிய பிறைச்சந்திரன். முற்றருமுப்பகற்றிங்கள் வெண்முளை உற்றன. (யுத் : 1783)

முப்பகை – காமம் வெகுளி மயக்கம் என்னும் உட்பகைகள். மொழிந்தனர் ஆசிகள் முப்பகை வென்ருர். (பா : 775)

முப்பகைத்தளை – காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்று உட்பகைகளாகிய பந்தம். முப்பகைத் தளையரிதவத்தவர் வடிவந் தாங்கினுன். (ஆ : 832)

முப்பத்தீராயிரம் – முப்பத்திரண்டாயிரம். எம்மலைக்கும் பெரிதாய வடமலையை அம்மலையின் அகல மெண்ணின் ......முப்பத்தி ராயிரமியோசனையின் முற்றும். (யுத் : 2680)

முப்பதிற்றிரட்டிகொண்ட ஆயிரம் – அறுபதினுயிரம். முப்பதிற்றி ரட்டிகொண்ட ஆயிரமுகிம்மென் கொங்கைச் செப்பருந்திருவின் நல்லார் தேர்மிசை சூழப்போனுர். (பா . 885)

முப்பதினுயிர கோடி – முப்பதினுயிரம்கோடி. முளைத்த முப்பதினுயிர கோடியின் முற்றும் விளைத்த வெஞ்சினத்தரியினம். (கி : 714)

முப்பதுகோடி – முப்பதுகோடி. புவனத்தொகை மூன்றுபோல்வன மூப்பதுகோடிவந்து ஏன்றபோது. (ஆ : 141)

முப்பதுகோடியின் மும்மை – தொண்ணூறுகோடியளவு. மெய்ப் பெருந்திருநகர் காக்கும் வெய்யவர் முப்பதுகோடியின் மும்மை முற்றினுர். (யுத் : 487)

முப்பரம் பொருளுக்கு முதல்வன் - மும்மூர்த்திகளுள் தலைவனான திருமாலின் அமிசமான இராமன். முப்பரம் பொருளுக்கு முதல் வன் முந்துறும். (பா : 316)

முப்புடை மதமலைக்குலம் - மும்மதங்கொண்ட யானைக்கூட்டங்கள். சுற்றிய முப்புடைமதமலைக் குலத்தை முட்டினான். (யுத் : 1805)

முப்புரஞ்சுட முடுகுமீசன் - முபபுரத்தை எரிப்பதற்கு விரையும் ஈசன். மூண்டு முப்புரஞ்சுட முடுகும் ஈசனில்... அனுமன் நோக்கினான். (சு : 1003)

முப்புரஞ்சுடு மொருவன் - முப்புரங்களை எரித்த ஒப்பற்றவனாகிய சிவபெருமான். முப்புரஞ்சுடு மொருவனிற் பொலிவென் யான். (அ : 1106)

முப்புரத்தவர் - திரிபுரத்து அசுரர்கள். சங்கரற் கழி முப்புரத்தவர். (யுத் : 524)

முப்புரம் நெருப்புற உருத் தெய்த அம்பு - திரிபுரத்தை நெருப்புப் பற்றி எரியக் கோபித்து எய்த அம்பு. (யுத் : 99)

முப்புர மெரித்த தனி மொய்கணை - திரிபுரங்களை எரித்தழித்த ஒப்பில்லாத வலிய அம்பு. (வைஷ்ணவ சரம்) மேருவரை வில்லா முப்புர மெரித்த தனி மொய் கணையு நல்கா. (ஆ : 173) [பா : பே]

முப்புரி நூல் - மூன்றுவட மாகிய பூணூல். முப்புரி நூலினன் முஞ்சியன். (பா : 440)

முப்புறத் துலகம் - மூன்று வகையுலகம். முப்புறத் துலகமு மடங்க மூடிய. (ஆ : 588) (யுத் : 272)

மும்மடங்கு - மூன்று மடங்கு. மும்மடங்கு பொலிந்தன. (யுத்:3868) (சு : 348)

மும்மடி - மூன்று மடங்கு. எரியின் மும்மடி கொடியனசுடு சரம். (யுத் : 552) (பா : 1101)

மும்மத ஓங்கல் - மும்மதங்களையுடைய யானைகள். ஓங்கல் - ஓங்கி நிற்ப தெனக் காரணக்குறி; தொழிற் பெயர். (வை.மு) தொடுத்த தண்டுன்றிய ஓடிய வூன்றிய மும் மத ஓங்கலே. (யுத் : 999)

மும்மதக் களிறு - மூன்று மதம் அமைந்த யானை. இட்டான் மும் மதக் களிற்றின் முன்னர். (யுத் : 1901)

மும்மதம் - கன்னம், கை, குறி என்ற மூன்றிலும் வடிகின்ற மதம். மும் மத யானை. (யுத் : 677)

மும் மத வேழம் – மூன்று மதங்களையுடைய யானைகள். ஓங்கிப் பாயும் மும்மத வேழம். (யுத் : 3552)

மும்முடி - மூன்று சிகரங்கள். (யுத் : 471)

மும்முறை - மூன்று. மூன்றுமுறை மும்முறைச் சந்தியும் பதமுமாய்த் தழைத்த தன்மையான். (யுத் : 202) மும்முறை தொழுதான். (அ : 712)

மும்முறைச் சந்தியும் பதமுமாய்த் தழைத்த தன்மையான் - (அகரம் உகரம் மகார மென்னும் ஓரெழுத்துச் சொற்கள் மூன்றும் அவற்றின் சேர்க்கை யமைந்த இரண்டு சந்தியுமாகி (ப்பொருளினுற்) செழித்த இயல்பினன். மும்முறைப் பதமும் சந்தியுமாய் என்க. (வை.மு) மும்முறைச் சந்தி என்றது ஓம் + நம + நாராயண + ஆய என நான்கு பதங்கள் புணருங்கால் உளவாம் மூன்று புணர்ச்சியினை. பதம் என்றது மேற்குறித்த மூன்று புணர்ச்சிகளும் அமைந்த நான்கு பதங்களை. தழைத்தல் – செறிதல்; யாண்டும் நீக்கமற நிறைதல். தன்மை யாவது அந்தர் யாமித்துவம் எனப்படும் உயிர்க் குயிராந் தன்மை. (அண்) (யுத் : 202)

மும் முறை நீர் – கடல். மும்மை நீர் குழையஞ்ச முழங்கின நாணொலி .(யுத் : 1697)

மும்முனை நெடு வேலண்ணல்–மூன்று முனையைக் கொண்ட நீண்ட வேலாயுதத்தை ஏந்திய சிவபெருமான் மும்முனை நெடு வேலண்ணல் முளரியஞ் சரணந் தாழ்ந்த வெம்முனை வீரன் மைந்தன். (யுத்: 1410)

மும்மை - 1. மூன்று பங்கு. இஞ்ஞால முடிவிற் குமுறும் மழை மும் மையின் மேன் முழங்க. (அ : 412)
2. மூன்று முறை. மும்மைக் குலையப் பொரும் உம்பரையும் கொம்மைப் புயவட்டணை கொண்டிலனே. (யுத் : 1685) [பா:பே]

மும்மை உலகம் – மூன்றுலகம். மும்மை உலகமுந் தீந்தருவோ. (யுத் : 2876)

மும்மை, சால் உலகு–மூன்றாக நிறைந்த உலகங்கள். கீழ் நடு மேல் என மூன்று அடுக்காக அமைந்த உலகங்கள் (கி : 308)

மும்மைத்தீ – காருகபத்தியம், ஆகவனீயம், தாட்சிணுக்கினி என்பன. முனிவர் காக்கும் முற்றுறு மும்மைச் செந்தீ. (சு : 1171

மும்மைத்தூரியம் – மூன்றுவகை முரசு. (வெற்றிகொடை மணம்) மும்மைத்தூரிய மடங்கியன. (சு : 253)

மும்மைநூல் – முப்புரிநூல். ஏயும் மும்மைநூல் மார்பினர். (யுத் : 3248)

மும்மைநூற் சுற்றம். அந்தணர். மும்மைநூற் சுற்றம் யாவையுந் தொடரத் தோன்றினன். (அ : 232)

மும்மை நூருயிரம் – மூன்று லட்சம். ஒருவனே ஒரு பன்னிரண் டோசனை தெருவு மும்மை நூருயிரமுந் தேடினன். (சு : 252)

மும்மை புரிவன் கயிறு - மண், பெண், பொருள் ஆசையைச் செய்கின்ற வலிய பாசம். முப்புரிகளாகவுள்ள வலிய கயிறு. மும்மை புரிவன் கயிறு கொய்து. (பா : 918)

மும்மையார் - மூன்றுமடங்கு மிக்கவர்கள். மொய்ம்பினில் எறும் வலிக்கருளன் மும்மையார். (சு : 1054)

மும்மையான் – மும்மடங்கு வேகமுடையவன். முடுகினன் இராமன் வெங்காலின் மும்மையான். (ஆ : 1118)

மும்மை பினுலகு - மூன்றுலகம். பொய்ம்மையில் சிறுமையிற் புரிந்த ஆண்டொழில் மும்மையினுலகினுன் முடிக்கலாவதோ.(பா: 1392)

மும்மையேழுலகு – மூன்று வகைப்பட்ட ஏழுலகம். மும்மை யேழுலகங்காக்கும் முதல்வர்நீர். (கி : 67)

மும்மையோர் – மும்மூர்த்திகள். மும்மையோர் பெருமையும் முற்றும் பெற்றியான்: (ஆ : 860)

முயக்கம் – ஆலிங்கனம், திங்கள் முகத்தியர் முழுக நின்னை மயக்கிய முயக்கந்தன்னுல். (யுத் : 3195)

முயக்கியன்முறை – தழுவுகின்ற முறைமை. முயக்கியன் முறைகெட முயங்கினர். (யுத் : 3902)

முயங்குசேர் – குழைசேறு. மூசின முயங்குசேறு உலர. (கி : 553)

முயங்குதல் – 1. கலத்தல். முயங்குசேறு. (கி : 553)
2. தழுவுதல். முதிர்கின்ற பெருங்காதல் தழைத்தோங்க எடுத் திறுக முயங்கலோடும். (பா : 239) முலைவைத்துற முயங்கும். (சு : 556) முயங்கினர். (யுத் : 2155)

முயல்-1. (சிறு பிராணியாகிய) முயல். புயலைப்பற்றும் அப்பொங்கரி போக்கி ஓர் முயலைப்பற்றுவதென்ன முயற்சியோ. (கி . 323)
2. முயற்கறை. வேலைநின்றுயரும் முயலில் வெண்மதியின் வெண்குடை மீதுற விளங்க (சு : 422)
3. மேற்கொள்ளுதல். பூசற்கு முயன்று. (யுத் : 763)

முயலில் வெண்மதி–முயற்கறையிலாத வெள்ளிய பூரண சந்திரன். (சு : 422)

முயலுதல் – 1. ஆலோசித்தல். கடும்போர் மூட்டும் வகையாவது கொல் என்று முயல்கின்றான். (சு : 695)
2. முயற்சிசெய்தல். நீ சொல்லிற்றன்றோ முயன்றது முயற்று காறும். (கி ; 640) [பா:பே]

முயற்கருங்கறை நீங்கிய மொய்ம்மதி – முயல் என்றுரைக்கப்படும் கரிய மறுவில்லாத கலைகள் நிரம்பிய சந்திரன். (சு : 263)

முயற்கறை – முயலாகிய களங்கம். முயற்கறை மதிதவழ் முன்றிற் குன்றுகள்: (யுத் : 629) முயற்கறை பயிலாத்திங்கள் முகத்தியர். (யுத் . 3195)

முயற்கறைமதி – முயற் களங்கமுள்ள சந்திரன். (யுத் 629)

முயற்களங்கமிலாத திங்கள் முகத்தியர் - முயலாகிய களங்கமற்ற சந்திரன்போன்ற முகத்தையுடைய பெண்கள். (யுத் : 3195)

முயற்சி – 1. காரியம். அவன் முன்னிய முயற்சியை முன்னி. (கி : 159)
2. கருத்து. யத்தனம். (வை.மு) ஏற்பாடு. (கலா) நும்முயற்சி பின்பு காணுமாறுரைத்தது. (யுத் : 4075)

முயிறு - முயிறு என்று வழங்கும் ஒருவகை எறும்பு. முயிறலைத் தெழு முதுமரம். (சு : 1050)

முரசக்கொண்டுமு - முரசமாகிய மேகம். குமுறின முரசக்கொண்மூ. (சு : 936)

முரசம் – ஓர் இசைக்கருவி. ஆசைதோறு முரச மறைமின். (யுத் : 963), [பா:பே] முரச மறைந்தன. (யுத் : 963)

முரசம் மதிர் மாநகர் – முரசமானது ஒலிக்கின்ற அயோத்தி நகர். தெள்வார் மழையும் திரை யாழியுமுட்க நாளும் வள்வார் முரசம் மதிர் மாநகர். (பா : 165)

முரசறை செழுங்கடை – முரசு ஒலிக்கின்ற பெரிய அரண்மனை வாயில். முரசறை செழுங்கடை முத்த மாமுடி அரசர்தங் கோமகன். (பா : 184)

முரசறைதல் - முரசொலி செய்தல். முரசறை செழுங்கடை. (பா : 165)

முரசிமிழ் ஓசை – முரசினின்றும் எழும் ஒலி. (அ : 809) [பா:பே]

முரசின் கண் – முரசின் அடிக்குமிடம். முரசின் கண்ணுர்த்தது. யுத் : 3050)

முரட்கரிக்கைக் கோண்மாவ – வலியயானைகளின் துதிக்கைமாகிய முதலைகளையுடைய. (யுத் : 3416)

முரசினம் – பேரிகைகளின் கூட்டம். மண்ணுறு முரசினம் மழை யினுர்ப்புற. (அ : 2) கரம்பயில் முரசினங் கறங்க. (சு : 663)

முரசு – மத்தளம். யானைமேல் மணிமுரசெற்றி. (யுத் : 3261) பழையஞ்ச முழங்கின மாமுரசே. (யுத் : 1697)

முரசுமிழ் ஓதை – முரசு ஒலிக்கும் ஓசை. வீறுகொண்ட முரசுமிழ் ஓதையை வீறுகொண்டன வேதியர் வாழ்த்தொலி. (அ : 809)

முரசேற்றுதல் – முரசைச் சாற்றச்செய்தல். அணி முரசேற்று கென்றுன். யுத் : 3606)

முரஞ்சு – மலைக்குகை. என்முரஞ்சினின் மேவி. (ஆ : 1075)

முரஞ்சுதல் – நிரம்புதல். (கலா) நிறைதல். (அண்) குரும்பைநீர் முரஞ்சும் சோலை. (கி : 922) முரஞ்சு (யுத் : 3500)

முரட்கண் - முரண்பாட்டைத் தெரிவிக்கின்ற கண். முருக்கின் நாண் மலர் முகைவிரிந்தாலன்ன முரட்கண் அரக்கர். (யுத் : 1467)

முரட்கணை மூரி மாரி – வலிய அம்புகளாகிய பெரிய மழைத் தாரைகள். யுத் : 1863)

முரட்சீயம் – 1. வலிமைகொண்ட நரசிங்கம். முழைகொள்மேருவின் முகட்டிடைக் கனகனை முருக்கிய முரட்சீயம். (சு : 302)
2. வலிமையுள்ள சிங்கம். (யுத் : 3377)

முரட்டடந்தண்டு – வலிய பெரிய தண்டாயுதம். முரட்டடத்தண்டு மேந்தி. (யுந் : 3054)

முரட்டிசை - முரண்திசை. தம்முள் மாறுபட்ட திசைகள். மூவகை உலகஞ்சூழ்ந்த முரட்டிசை முறையிற்ருங்கும் காவலர் எண்மர். (யுத் : 2708)

முரட்டொழின் முருகன் – போர்த்தொழில்வல்ல முருகக்கடவுள். மொழியின் மற்றவர்க்கு மேலான் முரட்டொழின் முருகனல்லன் (சு : 949)

முரட்போர் ஒற்றைச்சங்கு – வலிய போரிலே முழங்குதற்குரிய ஒப்பற்றசங்கு. (யுத் : 2469)

முரண் – 1. வலிமை. முரணியன். (யுத் : 307) முரணின்ருயது. (யுத் : 44) அருக்கனே முரறை முறுக்கும். (கி : 710)
2. போர். முரண் தொழில் முருகனல்லன். (சு : 949)
3. மாறுபாடு. முரண்புகு தீவினே முடித்த மன்னவன். (யுத் : 360) அரக்கன் மாமுரண்திண்டோள். (யுத் : 1473)

முரண்திசை – மாறுபட்ட திசைகள். முரட்டிசை முறையிற்ருங்கும் காவலர் எண்மர். (யுத் : 2708)

முரண்புகு - மாறுபாடு பொருந்திய. (யுத் : 360)

முரண்வலி – மிக்கவலிமை. முரண்வலிக்கை. (கி : 143) (சு : 189)

முரணியன் – வலிமையுடையவன். (யுத் : 307)

முரணிலர் – வலியற்றவர். முந்தினர் முரணிலர் சிலவர். (யுத்:51)

முரணிற்ற – மாறுபாடான. முரணிற்ற அண்டங்கள். (ஆ : 1186)

முரணின்ருயது – வலியிலதாயிற்று. (யுத் : 44)

முரணுடையக் கொடியோன் – வலிமைமிக்க கொடியோன். இராவணன். (யுத் : 422)

முரணுதல் – மாறுபடுதல். வெள்ளிமலே பொன்னின் மலேயோடு முரண. (ஆ : 17)

முரபன் – வானரப்படைத்தலேவன். (வை.மு) முரன் என்னும் அசுரன், நரகாசுரன் சேனுதிபதி. (கலா) முரபன் நததோளவன் மூரிமடங்கலென்ன. (யுத் : 835)

முரம்பு - மலேயின் மேட்டு வெளிகள். பாறை. வரம்பகல் நெடும் பிரசம் வைகல் பலவைகும் முரம்பினில் நிரம்பல. (கி : 521)

முரல்தல் — முரலுதல் பார்க்க.

முரல — 1. முழங்க. பணிலங்கள் முரல. (சு : 819)
2. கதற. இரு நிலமடந்தை முதுகுளுக்குற்றனள் முரல. (சு : 423)

முரலுதல் — 1. ஒலித்தல். முரலும் வெள்வளை. (யுத் : 586)
2. மொய்த்தொலித்தல், இசையுண்டாக ஒலித்தல். நூபுரமு மேகலையு நூலு மறலோதிப் பூமுரலும் வண்டுமிவை பூசலிடு மோசை. (ஆ : 258)

முரற்றல் (முரற்றுதல்) — 1. ஒலித்தல். அரக்கர் பல்கழல் முரற்ற. (ஆ : 1116)
2 இடியோசை. மஞ்சினை முரற்றலும். (கி : 832)

முரன் — ஓர் அசுரன். முரன் எனத்தகும் மொய்ம்பினோர். (சு: 347)

முராந்தகன் — திருமால். முரன் என்னும் அசுரனுக்கு அழிவைச் செய்தவன். முத்தலை எஃகன் மற்றை முராந்தகன் முனிவன். (சு : 1157)

முரிதல் — 1. மடங்குதல். முரிதிரை நெடுநீர். (அ : 677)
2. நிலைகெடல். திசை முரிய. (யுத் : 1146)
3. சிதறுதல். மூடு தெண்டிரை முரிதரு கடலென முழங்கி (கி : 305)

முரிதிரை — கரையில் மோதி மறிந்து விழும் அலை. முரிதிரை நெடுநீர். (அ : 677)

முரிந்துகு மணி — பின்னப்பட்டுச் சிதறுகின்ற இரத்தினங்கள். சிந்தி முரிந்துகு மணியும் முத்தும். (ஆ : 574)

முரிபடுதல் — அழிதல். எதிர்ந்த வெல்லாம் முரிபட. (யுத் : 1863)

முரிபுல் — உலர்ந்த புல். புரிபுற் கானிடை எரிபரந் தனவென முனைவார். (கி : 287)

முருக்கிதழ் — பலாச மலர் போன்ற அதரம். முருக்கிதழ் இளமுலை முகநலாள். (பா : 234)

முருக்கி முற்றினன் — அழித்து வெற்றிகொண்டான். கொன்று முடித்தான். அவன்தனை முருக்கி முற்றினன். (யுத் : 308)

முருக்கியிடுதல் — பலவாறு சிதைத்தல். இவர் உடல் முருக்கியிட் டுண்குவென். (யுத் : 3953)

முருக்கின் கானகம் – பலாச வனம். அலர்ந்த முருக்கின் கானகமா மெனக் குருதிநீர் முடுக. (யுத் : 2567)

முருக் – முள் முருங்கை யென்னும் பலாச மரம். பலாசமலர். முருக்கிதழ். (பா : 234) முருக்கின் பூ (கி : 790) மலர் விரிந்த நாள் முருக்கிடை மிடைந்த பமுவம் வெங்கனல் கதுவிய தொப்பது பாராய் (அ : 764) (யுத் : 1467)

முருக்குதல் (முருக்கல்) – அழித்தல். கொல்லுதல். முருக்கி முற்றி னன். (யுத் : 308) இகலரக்கரையு மொன்று முருக்கி. (சு : 614) முருக்கிய முரட்சியம். (சு : 302) முப்புரம் முருக்கச்சுட்ட முரி வெங்கணை. (யுத்:1245) [பःபே] எற்றி முருக்குவர். (யுத்:2366) முரணற முருக்கும். (கி : 710)

முருக – அழக. குமர. (உ.வி) முருக நின்னை மயக்கிய முயக்கந் தன்னால். (யுத் : 3195) [பா : பே]

முருகச் செவ்வி – தெய்வத் தன்மை வாய்ந்த அழகு. (கி : 67) [பா : பே] (யுத் : 4265)

முருகற் செவ்வி – முருகனைப் போன்ற தகுதி. (அண்) முருகக் கடவுளைப் போன்ற அழகு பராக்கிரமம். முருகற் செவ்வி யும் மையே புகல் புக்கேழக்கு. (கி : 67)

முருகற்றந்தவத் தளிரியல் பாகத்தான் – முருகனை உதவிய தளிர் போலும் இயல்புடைய உமா தேவியை ஒரு பக்கத்திலே உடைய வனன அச்சிவபிரான். (கி : 211)

முருகன் – ஆறுமுகக்கடவுள். முரட்டொழின் முருகனல்லன். (சு : 949)

முருகன் தாதை–சிவபிரான். முழுமுதற் கண்ணுதல் முருகன்தாதை. (சு : 908)

முருகின் செவ்வி – 1. முருகனைப் போன்ற அழகு. முருகிற் செவ்வி யான். (அ : 839)
2. இளமையின் எழில். விழுமலர்க் கண்ணீர் வெள்ளத்தால் முருகின் செவ்வி வழுவுற. (யுத் : 4266)

முருகு – 1. இளமை. முருகின் செவ்வி. (யுத் : 4266)
2. முருகன். முருகிற் செவ்வியான். (அ : 839)
3. நறுமணம். முருகு நாறு செந்தேன். (அ : 746)

முருகு காதல் – முதிர்ந்த பக்தி. முப்பதினுயிரம் பருவம் முருகு காதலின் மன்னவன் அருந்தவ முயன்ருன். (பா : 531)

முருகுதல் – முதிர்தல். முருகு காதல். (பா : 531)

முருகு நாறு செந்தேன் – நறுமணங் கமழும் செந்நிறமுள்ள தேன். முருகு நாறு செந்தேனினை முழைநின்றும் வாங்கி. (அ : 746)

முருங்க – 1. அழகிய. உலக மெல்லாம் அருங்கனல் முருங்க உண்ணும் ஊழிநாள். (சு : 31)

2. மிகவும். முற்றிய கோப முருங்க முனிந்தான். (யுத் : 2256)

முருங்க முனிதல் – தன்னிலை யழிய மிகமுனிதல். (யுத் : 2256)

முருங்கழல் – எரித்தழிக்கும் நெருப்பு. சூரியகிரணக்கினி) முந்திய எம்பி மேனி முருங்கழல் முடுகும் வேலை. (கி:1001) (யுத்:2889)

முருங்கிய தணல் – யாவும் அழியும்படியான கொடு நெருப்பு. முருங்கிய தணலின் மூரி விடத்தினை முகக்கும் சீற்றத்து அருங் கதிர் அரக்கன் தன்னை யார் அழைத்தீர்கள். (ஆ : 670)

முருங்குதல் – 1. எரித்தழித்தல். எரிதல். அழுத்தல். முருங்கு தீ. (கி : 677) முருங்கெரி. (பா : 778) முப்புர முருங்கச் சுட்ட மூரி வெஞ்சிலை. (யுத் : 1245)

2. தீந்து போதல். அழிதல். மொய் கொள் தீயிடை வெந்து முருங்கிய வெய்ய பாறை. (ஆ : 302) முருங்கினர். (யுத்:3404)

முருங்கெரி – எரித்தழிக்கும் தீ. (பா : 778)

முருடு – 1 மத்தளம். (அண்) பத்தல். (கலா) முருடு அரு பல்லியம் முழங்கி ஆர்த்தன. (பா : 274) முருட்டொடும் இரட்ட. (யுத் : 2775)

2. ஒருவகைப் பறை. முருடு இரண்டும் முழங்குற. (ஆ:395) (யுத்:816) (யுத்:2775)

3. மரக்கட்டை. தரித்த மரத்தின் அடி. கரடு முரடான பகுதி. (அண்) முருடு ஈர்த்துருட்டற் கெளிதாய். (ஆ : 698)

முருந்தம் - இளந்தளிர். (வை.மு) மயிலிறகின் அடிக்குருத்துப் போலும் அரும்புகள். (அண்) (கலா) குருந்தம் நின்றரும்பின முருந்தம். (அ : 734)

முருந்தன் – மிருத்யுவானவன். வல்லமை யுள்ளவன். பெருந்தகைப் பெரியோரைப் பிணித்த போர் முருந்தன். (சு : 1079)

முருந்து - மயிலிறகின் அடிக் கொழுந்து. முல்லையும் முருந்தும் முத்தும் முறுவ லென்றுரைத்தபோது. (கி : 794) முருந்து நிகர் மூரல் நகையாள். (கி : 878)

முரைசின் குரல் - முரசினது அதிர்வு. முரைசின் குரல்பட வீரன தெதிர் நின்றிவை மொழிவான். (பா : 1365)

முரைசு - பேரிகை. (பா : 326) (பா : 1365)

முரை செய்து கடைத்தலையான் - பேரிகை முழங்கும் தலைவாயிலை யுடையவனான தயரதன். முரைசெய்து கடைத்தலையான் முன் மொழியப் பின் மொழியும் முனிவனுங்கே. (பா : 326)

முல்லை - முல்லைக் கொடி; மலர். மகளிர் மூரன் மென் முறுவல் ஒத்து அரும்பின முல்லை. (கி:479) ஆங்கு நாண் முல்லை நாறின ஆய்ச்சியர் ஓதி. (கி : 491)

முல்லை எயிறு - முல்லை யரும்பொத்த பற்கள். முல்லை யெயிறு வெண்ணிலவை ஈன்ற. (யுத் : 2779)

முலைக்குவடு - முலையாகிய மலைச்சிகரம். மிடைமுலைக்குவ டொரீஇ மேகலைத் தடங் கடலிடைப் புகுந்த கட் கலுழியாறரோ. (அ : 476)

முலைக்குவை - தனங்களின் முகடு. வாங்கினள் முலைக் குவையில் வைத்தனள். (சு : 555)

முலைக் கோட்டு விலங்கு - பெண்கள். (கலா) தனங்களாகிய கொம்புகளையுடைய விலங்கு. (அண்) மின்னுடங்கு மிடையாரை முலைக் கோட்டு விலங்கென் றங்குடனணுகி முன்னின்றகலைக் கோட்டு முனி. (பா : 735)

முலைமகளிர் - விலை மகளிர். வேசையர். தோய்ந்தும் தோய்கிலா வாருடை வனமுலை மகளிர் சிந்தை போல். (பா : 836)

முலைமாதர் - கொங்கைகளுள்ள மங்கையர். ஞானத் துயர்ந்தவ ராயினும் வீறு சேர் முலை மாதரை வெல்வரோ. (பா : 1011)

முலை முகடு - கொங்கையின் நுனியிடம். மழைக்க ணுலிபோல் முலை முகட்டுதிர்ந்திடு நெடுங்கண் முத்தினம். (பா : 611)

முலை முன்றில் - தனங்களின் முன்னிடம். உன் அணி வட முலை முன்றிற் சணங்கின மலை மானத்துறுவன பல காணுய். (அ : 704)

முலையவர் – தனங்களையுடைய பெண்கள். காசலம்பு முலையவர் கண் ணெனும் பூசலம்பு. (பா : 12)

முலை விலைக்கென மதித்தனர் வழங்கும் தெரிவையர் – தனங்களை கணவனுக்கு உரியவாக்காமல் விலைக்குரியன என்று கருதி (எவர்க்கும்) வழங்கும் வேசையர். எவர்க்கும் வருமுலை விலைக் கென மதித்தனர் வழங்கும் தெரிவையர் மனம் எனக் கறங் கெனத் திரிந்தான். (சு : 846)

முழக்கு – ஆரவாரம். நெடுந்திசை யெலாம் போய் எழுந்தது முழக்கு. (கி : 187)

முழக்குதல் – ஒலியெழுப்பல். முழையின் வாளரி யஞ்ச முழக்குவார். (ஆ : 390) [பா : பே]

முழங்கு முந்நீர் – முழங்குகின்ற கடல். முழங்கு முந்நீரென முடுகி. (யுத் : 1465)

முழங்கு மோதை – ஒலித்த முழக்கம். தேரொடு மூளிருஞ் சினக்கரி முழங்கு மோதையும். (அ : 1090)

முழம் – இரு சாணளவு. உம்பர் மந்திரிக்கு மேலா ஒரு முழமுயர்ந்த ஞானத்தம்பி. (யுத் : 771)

முழவம் – மத்தளம். வயிரியர் முழவம் முழக்கும் இன்னிசைவெருவி மோட்டிள மூரி உழக்க வாளைகள் பாளையிற் குதிப்பன ஓடை. (பா : 545)

முழா – முழவு. மோதுகின்றில பேரி முழா. (அ : 816)

முழவு – 1. மத்தளம். முழவிடு தோள். (யுத் : 3727)
2. குடம். பால்மிடா. ஆய்ச்சியர் முழவிற் பிழிந்த பால்வழி நுரை. (கி : 490)

முழவுத் தோள் – மத்தளம் போலத் திரண்டுருண்ட தோள். மொய் பொரு தினவுறு முழவுத் தோளினன். (பா . 179)

முழீஇக் கொள்ளுதல் – முழுகடிக்கப்படுதல். மூக்கிற் சோரி முழீக் கொண்ட கண்ணினள். (ஆ : 370)

முழுக்கண் வேல்–இலக்கணம் முழுமையும் நிரம்பப்பெற்ற கண்களா கிய வேற்படை. (யுத் : 2792)

முழுக் கல் – 1. பெரிய கல். பெரும்பாறை. முழுக்கலின் வலிய நம் மூரி நெஞ்சினை. (அ : 486)
2. முழுக் கற்களாகிய கவண்கல். (வை.மு) சிதைவுறாத (உருண்டையான்) கற்கள். (அண்) முழுக்கலும் முசுண்டியுந் தண்டும். (ஆ : 401)

முழுக்கலும் – முழுக்க அ(ள்)ளும். பகைவருடல் முழுதையுங் கவரும். முழுக்கலும் முசுண்டி. (ஆ : 401) [பா : பே]

முழுக்குதல் – முழுகச் செய்தல். முழுக்க நீரிற் புகா. (யுத் : 651)

முழுகித் தோன்றுதல் – நீராடி எழுந்து தோன்றுதல். வானிற வெள்ளத்து முழுகித் தோன்றுகின்ருள். (அ : 641)

முழுகுதல் – படிதல் ஒருவர் மேல் ஒருவர் புக்கு முழுகுவார். (யுத் : 2785)

முழுஞான நாதர் – நிறைந்த தத்துவஞானத்துக்குத் தலைவர்களான வர். (இராம லட்சுமணர்) முழுஞான நாதரை யறிவினுடி மாருதிமொழியும். (கி : 45(c))

முழுத்த – தன் தன்மை முழுவது முடைய. (கு) முழுகவிடப்பெறும். (அண்) நாறு முதிரையின் முழுத்த நெய். (பா : 50)

முழுத்தம் – 1. முகூர்த்தம். இரண்டு நாழிகை கொண்ட காலம். (வை.மு)
2. கண்ணுடிப் புறத்து உருட்டின உழுந்து விழுந்த நேரம். (கலா) முழுத்த மொன்றி லொரு வெள்ள வானர முடிந்து மாள்வன. (யுத் : 2017)

முழுத்துகில் – முழு ஆடை. முழுத்துகி லொடு நெடுங் கொடிச் சூலம் மின்னுவ. (பா : 128)

முழுதுணர் சிந்தையான் – எல்லாவற்றையு முணர்ந்த திருவுள்ளத்தையுடைய இராமபிரான். முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினன். (அ : 1114)

முழுதுணர் முனி – கோசிகன். மூத்தவன் முழுதுணர் முனியை முன்னி. (பா : 460)

முழுதுணர் முனிவர் – எல்லாவற்றையு முணர்ந்த முனிவர்கள். முழுதுணர் முனிவ ரேவற் செய் தொழின் முறையின் முற்றி. (ஆ : 272)

முழுதுணர் புலவன் – முற்றுமுணர்ந்த அறிஞனாகிய விபீடணன். முழுதுணர் புலவனை முளரிக் கண்ணினான் வினவிய பொருளைப் பண்புற.. ... தெரியச் சொல்லினான். (யுத் : 477)

முழுது நோக்குதல் – நன்றாகப் பார்த்தல். அன்பினில் இறுகுறத் தழுவி முழுது நோக்க. (யுத் : 169)

முழுதும் – 1. ஓரிடமும் மிச்ச மில்லாமல் முழுவதும். நிலனுற முழு தும் கோல மங்கையர் ஒத்தன. (அ : 733)
2. முற்றாக. அடியோடு. முழுதுந் தோற்ற தேவரே பிறரே யாரே. (யுத் : 249)

முழுது மெண்ணுதல் – முற்றாக எண்ணுதல். எல்லாப் படியாலு மெண்ணுதல். குறைவற எண்ணுதல். முழுதும் எண்ணுறு மந்திரக்கிழவர். (அ : 47)

முழு நிலவு – பூரண சந்திரன். முத்தங் கொல்லோ முழு நிலவின் முறியின் திறனோ. (சு : 542)

முழுமுழுப் பெருந்தனி முதல்–பூரணமான பெரிய ஒப்பற்ற முதல்வன். முழுப் பெருந்தனி முதல் உலகின் முந்தையோன். (யுத் : 15)

முழுமணிக்கரசு – கௌத்துவம். மாறகல் முழுமணிக் கரசின் மாட்சிதான் வேறொரு மணியினால் விளங்குமோ. (ஆ : 248)

முழுமதி – பூர்ணசந்திரன். முற்றுறு கலையிற்றுய முழுமதி முகத்தி னாளை. (யுத் : 442)

முழு மலை – பெரிய மலை. மேலாளொடு மிடையும் முழு மலைமேற் செல விலக்கும். (யுத் : 1838)

முழுமுகம் – அழகு நிறைந்த முகம். தாமரை முழுமுகத்திரு கயன் முத்தினாலிகள் பொழிதர. (ஆ : 599)

முழு முதல் – 1. முற்றிலும் முழுமையான கடவுள். முழுமுதல் நான் என நினைந்தான். (யுத் : 3038)
2. வேரோடு. அடியோடு. இறந்தவ ரொழிய யாரும் முழுமுதல் மாள் வரன்றே. (யுத் : 1422)

முழு முதல்வன்–திருமால். இவ்வில்லிதவண் மேனாள் முழுமுதல்வன் வைத்துளது. (ஆ : 172)

முழு முதலோன் – முழு முதற் கடவுள் என்கின்ற விஷ்ணு. முச்சற் றான் கொலோ முழுமுதலோன் என முனிந்தான். (யுத் : 124)

முழு முதற்குலம் – மிகச்சிறந்த சூரிய குலம். சிறந்த முதன்மை யுடைய சூரியகுலம். தாமரைக் கண்ணன் தங்கள் முழுமுதற் குலத்திற் கேற்ற முறைமையால் வழுவலில் அபயம் உன்பால் வழங்கினன். (யுத் : 430)

முழுமுதற் படைகள் – குறைவில்லாத முதன்மை பெற்ற படைக் கலங்கள். வேல்வாள் இலை நெடுஞ் சூலம் என்றிம் முழுமுதற் படைகள் ஏந்தி. (யுத் : 904)

முழமுரசு – பெரிய பறை. எங்கும் முழுமுரசு எற்றி. (சு : 1332)

முழுமுற்றும் – உலகடங்கடலும். முடித்தான் அன்றே வெங்கண் அரக்கன் முழுமுற்றும். (யுத் : 3807)

முழுமுடர் – முழுவதும் முடத்தன்மை யுடையவர். முழு மூடர் என்னும் முதலோர் அனைவர்க்கும். (யுத் : 2211)

முழுமை – சிறப்பு. முழுமுதற் படைகள். (யுத் : 904)

முழுவாய் கொடு புகழ்தல் – வாயாரப் புகழ்தல். கமலம் பூத்தானும் அம் மழுவாளியும் முழுவாய் கொடு புகழ்ந்தார். (யுத் : 3039)

முழுவில் - பழுதுபடாத வில். குறைவற்ற வில். முழுவில் வேடரும் முனிவரின் முனிகிலர். (அ : 730)

முழை – 1. குகை. பிலம். முருகு நாறு செந் தேனினை முழை நின்றும் வாங்கி. (அ : 746) முழைக் குலச் சீயம். (யுத் : 2262
2. துவாரம். முழைத்தலை இருட் கடலின் மூழ்கி. (கி : 884)
3. உள்துளை. முழை தொடர் சங்கு பேரி முகிலென முழங்கி. (சு : 211)
4. குகை போன்ற வாய். எயிறலைத்து முழை திறந்து ஏங்கிய செயிர் தலைக் கொண்ட சொற் செவி சேர்தலும். (ஆ : 814)

முழைஞ்சு – குகை. முரம்பினில் நிரம்பல முழைஞ்சிடை நுழைந்த. (கி : 526)

முழைதிறந்து – மலைக் குகை போன்ற வாயைத்திறந்து (ஆ :. 814)

முழை தொடர் சங்கு - உள்ளே துளை கொண்ட சங்கு. (சு : 211)

முழை நாலரவு – புற்றிலிருந்து வெளிவரும் பாம்பு. முழைநால் அரவு இவர் குடர் நால. (சு ; 966)

முழைநின்றும் வாங்கி – கல் முழைஞ்சினின்றும் எடுத்து. மலை முழையினின்றும் கைக்கொண்டு. செந்தேனினை முழைநின்றும் வாங்கி. (அ : 746)

முழை படிந்த பிறை - குகையிற் படிந்திருக்கின்ற பிறைச் சந்திரன். முழை படிந்த பிறை முள்ளெயிறு ஒள்வாள் இழை படிந்த இள வெண்ணில வின. (யுத் : 812)

முழையின்வாளரி – மலைக்குகையில் வசிக்கின்ற கொடிய சிங்கம். முழையின் வாளரி யஞ்ச முழங்குவார். (ஆ : 390)

முழையுறு சீயம் - குகையில் பொருந்திய சிங்கம். முழையுறு சீய மன்னுன். (யுத் : 895)

முழைவாழ் அரி – மலைக் குகையில் வாழும் சிங்கம். முந்துஞ் சுனை காள் முழை வாழ் அரிகாள். (ஆ : 893)

முழை வாளரி – குகையில் வாழ்கின்ற சிங்கம். முழை வாளரி யனையான். (யுத் : 1852) (ஆ : 893) [பா : பே]

முள் – 1. அம்பு. கூரிய அம்புக்கு இலக்கணை. (வை.மு) மொய்த்த முள் தன துடற்றலை தொளைப்ப. (ஆ : 33)
2. முட்கள். முள் வாய் பொருப்பின் முழை. (சு : 84) முள்ளெயிறு. (சு : 163) (கி : 525)

முள்கிடுதல் – மூழ்கி யழுந்துதல். முள்கிடும் குழியிற் புக்க மூரி வெங்களி நல் யானை. (கி : 310)

முள்ளரை – முள்ளோடு கூடிய தண்டு. முள்ளரை முளரி. (பா : 49)

முள்ளிலா முளரி – தண்டிலே முள்ளில்லாத தாமரை. முள்ளிலா முளரிச் செங்கேழ் மலர் மிசை மலர் பூத் தென்ன வளைக்கை யால் வதனந் தாங்கி (சு : 208)

முள்ளெயிறு – 1. முள் போன்ற கூரிய பற்கள். முள்ளெயிறும் வாளுற மின்ன. (சு : 163) நெடுங் கழு தொடுங்கி முள்ளெயிறு தின்று பசி மூழ்கிட இருந்த. (கி : 525)
2. கூரிய கோரப்பற்கள். முழை படிந்த பிறை முள்ளெயிறு. (யுத் : 812)

முளரி – 1. தாமரை. முளரி மேல் வைகுவான். (கி : 211)
2. பதுமம் என்ற பேரெண். (யுத் : 3573)

முளரி ஆயிரங்கண்ணன் - தாமரை மலர் போன்ற ஆயிரங்கண்களை யுடைய திருமால். இந்திரன். (யுத் : 284)

முளரிக்கண்ணன் – இராமன். முறுவல் வாண் முகத்தினன் முளரிக் கண்ணனும். (யுத் : 2437)

முளரிக் கண்ணினன் – தாமரை மலர் போன்ற கண்களையுடைய இராமன். முளரிக் கண்ணினன் பழுதற வினவிய பொருளை. (யுத் : 477)

முளரிக் கணக்கு – பதுமம் என்னும் பெருந்தொகை. கோடா கோடி. வடாது திக்கின் மதவரையின்வழிக் கடா முகத்த முளரிக் கணக்கவால். (யுத் : 3573)

முளரிக் கானகம் – செந்தாமரைக் காடு. முளரிக் கானகமானது மூரி நீரிலங்கை. (சு : 128) [பா : பே]

முளரிக் கானம் – செந்தாமரைக் காடு. முளரிக் கானமு மொத்தது முழங்கு நீரிலங்கை. (சு : 128)

முளரித்தாள் – தாமரை மலரைப் போன்ற திருவடிகள். முண்டெழு காதலான் முளரித் தாள் தொழ வேண்டினெ னெய்தினென். (அ : 835)

முளரி நீங்கிய தையல் – தாமரையை நீங்கிய திருமகளின் அமிச மான சீதாபிராட்டி. முளரி நீங்கிய தையலை நோக்கிய தலையன். (சு : 1301)

முளரிப்போது – தாமரை மலர். முளரிப்போதினுங் குற்றமில் முகத் தினன். (அ : 463)

முளரி மேல் வைகுவான் – தாமரை மலரில் வசிப்பவனான பிரமன். (கி : 211)

முளரியங் கண்ணன் – தாமரை மலர் போன்ற கண்ணையுடைய இராமபிரான். (யுத் : 1203) (யுத் : 3873) (யுத் : 4106)

முளரியந்தாள் – தாமரை மலர் போன்று அழகிய திருவடிகள். மொய்கொள் வீரன் முளரியந்தாளினுல் மெய்கொள் நங்கையருள் முனி. (பா : 647)

முளரியன்ன முகம் – தாமரை போன்ற முகம். முளரியன்ன நின் முகம் கண்டிலாதேன். (யுத் : 3192)

முளரி யாயிரங்கணுன் – தாமரை மலர் போன்ற ஆயிரங் கண்களை யுடைய இந்திரன். (யுத் : 284)

முளரியாள் – இலக்குமி. வளர் முடியுளாளோ தெரிந்துணர்கிலம் முளரியாள். (பா : 1121)

முளரியீட்டம் – தாமரை மலரின் கூட்டம். முகிழ்த் தழகிழந்தன முளரி யீட்டமே. (அ : 535)

முளரி வந்தான் – திருமால் திரு வுந்தித் தாமரையில் தோன்றிய வனுன பிரமன். முளரி வந்தான் அண்டத்தினுக்குறை யமைத் தனைய பிலவாயாள். (சு : 78)

முளரி வாண் முகங்கள் – தாமரை போன்ற ஒளி கொண்ட முகங் கள். முற் கொண்டான் அரக்கன்என்னு முளரி வாண் முகங்கள் தேவர் பிற் கொண்டார். (யுத் : 2068)

முளிதல் – தீந்து போதல். உலர்தல். முளி நெடுங்கானிலே. (கி:813)

முளை – 1. தண்டாயுதம். இருப்பு முளை. முளையொடு துணிந்தன முசலம். (ஆ : 445)

2. மூங்கில். எருமுளை வயிரத்தண்டர். (யுத் : 2125)

முளை எயிறு – நாணலின் முளை போன்ற பற்கள். (கலா) (அண்) (மகிழ்ச்சியிற்) சிறிது வெளித் தோன்றும் பற்கள். (வை.மு) உளையுறு துயர் முகத்து ஒளி இதா மெனின் முளை எயிறிலங்கிடும் முறுவல் என்படும். (ஆ : 844) (பா : 1075)

முளைக்கலா மதிக்கொழுந்து – உதித்தலில்லாத சந்திரன். (அண்) பிறையாயிருந்து படிப்படியாய் வளராமல் என்றும் ஒருபடித்தா யுள்ள சந்திரன். (கலா) முளைக்கலா மதிக் கொழுந்து போலும் வாண் முகத்தினுன். (பா : 799)

முளைகள் அட்டிவைத் தனபாலிகை–பாலிகையிலே வார்த்திருக்கின்ற விளங்குகின்ற முளைகள். (யுத் : 1437)

முளைத்தல் – 1. உதித்தல். தோன்றுதல். முளைக்கலா மதிக் கொழுந்து போலும் வாண் முகம். (பா : 799)

2. வெளிக் கிளம்பல். வெளிப்பட்டுத் தோன்றுதல். சூழையின் ஊழ் முறை முழுகி நீர்க்கருங் காக்கை முளைக்குமே. (கி : 940) மனிதரோடே முற்றிய தாய வீர முனிவு என் கண் முளையா தேனும். (சு : 476)

முளைப்பிறை நெற்றி – முளைக்கின்ற பிறைச்சந்திரனை யொத்த நெற்றி முளைப்பிறை நெற்றி வான மடந்தையர் (யுத் : 1587)

முளைப் புடைத்தன ஒத்தன – முளையடிக்கப்பட்டன போன்றன. மண்ணொடு திண்ணம் முளைப்புடைத்தன ஒத்தன வானர முடிந்த. (யுத் : 2573)

முளையமை திங்கள் – புதிதாகத் தோன்றிய (பிறை வடிவமான) சந்திரன். மூளயமை திங்கள் சூடும் முக்கணன். (பா : 1234)

முளையான திங்கள் – மூன்றும் நாள் முளைத்ததான சந்திரன். முளை யான திங்கள் உகிரான். (யுத் : 2218)

முளை யினேடுங் களைந்து முடித்தல் – முளையோடும் பேர்த் தொழித் தல். இராவணன் மெய்ப்புகழ் முளையினேடுங் களைந்து முடிப்ப போல். (யுத் : 968)

முளைவயிரத்தண்டு – மூங்கிலால் ஆகிய உறுதியான கதாயுதம். எமு முளைவயிரத் தண்டர். (யுத் : 2125)

முளைவரித்தண்டு ஒரு மூன்று – கட்டமைந்த மூங்கில் தண்டு ஒரு மூன்று. (திரிதண்டம்) முளைவரித் தண்டொரு மூன்று முப்பகைத் தளையரி தவத்தவர் வடிவந் தாங்கினன். (ஆ : 832)

முற்கரம் – ஒரு படை. (கலா) சம்மட்டி. (முத்கரம்) முற்கர முசுண்டி. (சு : 758) முற்கரக்கையர். (யுத் : 3222) முற்கரங் களும் முசலமும். (யுத் : 2500)

முற்குணம் – சாத்வீகம். முற்குணத் தவரே முதலோர். (பா : 2)

முற் கொள்தல் - கை விஞ்சுதல். முன்னேறிவிடுதல். (கலா) முற் கொண்டான் அரக்க னென்னு. (யுத் : 2068)
2. முந்துதல். நான் முகன் படைக்கலம் இவன் என் மேல் விடா முன் முற்கொள்வேன் என்னும் முயற்சியான். (யுத்:2477) முற்கொண்டான். (யுத் : 2068)

முற் சொல் - முதலிற் சொல்ல வேண்டிய சொல். முதற்சொல். உந்தார் துயரோடு முருத் தெரிவான் வந்தானென முற்சொல் வழங்குதியால். (யுத் : 1709)

முற்பயப் பயன் – முன்னே நுகர்தற்குரிய நிலையில் முதிர்ந்த வினைப் பயன். (யுத் : 196)

முற்பயன் - மேலே வரும் பயன். முற் பயனுணர்ந்த தூயோர் மொழியொடும் பழகி. (யுத் : 2778)

முற்ற நோக்குதல் - தீர ஆலோசித்தல். முற்ற நோக்கினன் மொழி தன் மேயினன். (அ : 1169)

முற்ற முனிதல் - முழுக் கோபங்கொள்ளல். முற்ற முனிந்தான் நிருதன். (சு : 857)

முற்றரு - முற்றி நிரம்புதல் இல்லாத. முற்றரு முப்பகல் திங்கள். (யுத் : 1783)

முற்றல் - செய்தல். செய்து நிறை வேற்றுதல். முன் நின்ற முறை யின் நின்றார் முனிந்துள வேட்டம் முற்றல். (ஆ : 794)

முற்றறிவர் - முழுதும் உணர்ந்தவரான பெரியோர். முற்றறிவருக் கழிவு செய்யும் பாவகாரியர். (யுத் : 100)

முற்று - முற்றி, வளைத்து. செய்வினை முற்றி முற்று உடலுறு பாசம் வீசா உம்பர்ச் செல்வாரை ஒத்தார். (சு : 11)

முற்றுதல் - முடிந்திடல். தணிதல். மூளா வெஞ்சின முற்றுகா. (சு : 655) [பா : பே]

முற்றுதன - அடையாதன. (யுத் : 1740)

முற்று மதியம் - இளம் பிறை. முற்று மதியம் மிலைந்தான் முனிந் தானை யன்னான். (அ : 429)

முற்று முடிந்த - முடிவில்லாதனவாய் அமைந்த. முற்று முடிந்த நெடு வானினிடை. (சு : 88)

முற்றுமை - இயலாமை. மறக்க முற்றுத. (ஆ : 197)

முற்றி - 1. அடைந்து. அறம் பொருள் இன்பம் முற்றி. (பா : 431)
2. செய்து முடித்து. வேள்வி முற்றி. (கி : 69) [பா : பே]
3. முற்றுகை செய்து; வள்ளலும் விரைவி னெய்தி வடதிசை வாயின் முற்றி. (யுத் : 920)
4. நிறைந்து. முற்றிப் பொழி காதலின் முந்துறுவாள். (ஆ:778)

முற்றிடினும் - அழிந்தாலும். முன்னுன பூதங்கள் யாவையும் முற்றி டினும் எந்நாளும் உலவாய் நீ. (யுத் : 300)

முற்றிப் பொழிகாதல் - முதிர்ந்து வெளிப்படுகின்ற விருப்பம். நிறைந்து மேல்வழிகின்ற ஆசைப்பெருக்கு. முற்றிப் பொழிகாத லின் முந்துறுவாள் பற்றித் தருகென்பென் எனப் பதையா. (ஆ : 778)

முற்றிய – 1. முதிர்ந்த. முற்றிய தாவில் வீரமுனிவு. (சு : 476) [பா : பே]
2. அழுந்திய. நிரயம் முற்றிய சகரர்கள். (பா : 536)

முற்றிய ஆடல் – மிகுதியான ஆட்டம். ஊசலின் முற்றிய ஆடலின் முனிவுற் றேங்கினர். (ஆ : 598)

முற்றிய சொல்லின் எல்லையான் – முதிர்ந்த நூல்களின் எல்லையைக் கண்டவன். நாயகன் சொன்னான் முற்றிய சொல்லின் எல்லையான். (கி : 419)

முற்றிய தாவில் வீர முனிவு –முதிர்ந்த குற்ற மில்லாத வீரத்தினால் தோன்றுகின்ற சினம். (சு : 476) [பா : பே]

முற்றிய பொருட்கெலாம் முடிவுளான் – உலகத்து நிரம்பியுள்ள பொருட் கெல்லாம் முடிவிலுள்ள பரம் பொருளின் அம்சமான இராமபிரான். தொழுது நோக்கினான் முற்றிய பொருட்கெலாம் முடிவுளான் தனை. (யுத் : 1508)

முற்றியல் – நிறைந்த குணங்கள். முற்றியற் சிலைவலாளன் மொய்கணை துமிப்ப. (யுத் : 3601)

முற்றில் – சிறுசுளகு. முறம். முற்றிலார முகந்து. (பா : 60)

முற்றின வீரன் – சிறந்த வீரன். (வை.மு) சூழ்ந்து கொள்ளப்பட்ட வீரன். (அண்) (தன்னை) மேலெழாதபடி முற்றிக் கொண்ட வீரன். (கலா) முற்றின வீரனை வானின் முனிந்தான். (சு : 912)

முற்றினன் முற்றினன் – முடித்துவிட்டேன் முடித்துவிட்டேன். முற்றினன் முற்றினன் என்று முன்பு வந்து உற்றனன். (யுத் : 1530)

முற்றுணர் முனிவன் – முற்றும் உணர்ந்த முனிவன். (வசிட்டன்) கொற்றவற் குறுபொருள் குறித்த கொள்கையான் முற்றுணர் முனிவனை முகத்து நோக்கினான். (ஆ : 936)

முற்றுதல் – 1. நிரம்பியிருத்தல். பாப முற்றிய பேதை. (அ : 246) ஞானம் முற்றினார். (யுத் : 460) ஒளி முற்றிய திங்கள். (யுத் : 3463)
2. முதிர்தல். முன்புற அனையர்பால் நண்பு முற்றினை. (யுத் : 311) அன்பு முற்றினை. (யுத் : 311) [பா : பே] முற்றிய கோபம். (யுத் : 2256) வில்லியர் விற்றொழில் முற்றுற. (சு:611) முற்றிய சொல்லின் எல்லையான். (கி : 415)

3. அழுந்துதல். நிரயம் முற்றிய சகரர்கள். (பா : 536)
4. வந்து சேர்தல். அடைதல். கிடைத்தல். முற்றிய குரிசில். (யுத் : 343) ஒரு மதி முற்றுருத முன் முற்றுதிர். (கி : 754)
5. முடிவாகச் செய்தல். பிரிவு முற்றினுன். (யுத் : 400)
6. மிகுதல். முப்பது கோடியின் மும்மை முற்றினுர். (யுத்:487) முத்தினும் நிலவினும் முறுவல் முற்றினுள். (சு : 587)
7. ஒழிதல். முற்றின சுற்றின தேரும் மாவும். (யுத் : 3358) முற்றிடினும். (யுத் : 300)
8. இறத்தல். ஊட்டிய வல்விடம் முற்று முற்றுவார்க்கு ஊட்டிய நன் மருந்து. (யுத் : 4167) முற்றிய தின்றே யன்ரே வானரம். (யுத் : 1875)
9. முடிவுள்ளதாதல். முடிதல். முற்று முடிந்த நெடு வானினிடை முந் நீரினில் தாவி. (சு : 88)
10. நிரப்புதல். பூரணமாதல். முடித்த வானரம் வஞ்சினம் முற்றின. (யுத் : 987) அருள் முற்றினுன். (பா : 654)
11. இடுப்பில் சுற்றியுடுத்தல். கலைத்தோல் மூடி முற்றியும். (யுத் : 161)
12. வந்தடைதல். பழகுதல். முற்றுதன தேவர் முரட் படை தாம்..... பெற்ருன். (யுத் : 1740) முற்றுதிர். (கி : 757)
13. தணிதல். மூளா வெஞ்சினம் முற்ருகா. (சு : 656)
14. நிறைவேறுதல். இனி நம் வினையம் முற்றிய தென்று கொண்டேறினன். (யுத் : 4066)
15. நிரம்ப அணிதல். பரிதி பற்றிய பல்கலன் முற்றினர். (அ : 626) [பா : பே]
16. முடித்தல். செய்து முடித்தல். பண்ணை முற்றி. (அ : 1031) முற்றுதி. (யுத் : 1296) முற்றுவாம். (ஆ : 386)
17. எல்லையிலிருத்தல். திசை முற்றிய கரி. (ஆ : 458)
18. வளைத்தல். சூழ்ந்து கொள்ளுதல். முற்றிய உயிரெலாம். (ஆ : 1156)
19. எல்லாம் ஆதல். முற்றுயிர். (யுத் : 200)
20. பழகுதல். முற்றுதன தேவர் முரட்படை. (யுத் : 1740)
21. ஈடு செய்தல். அழியுங் காற்றரு முதவி ஐயனே மொழி யுங்கால் தருமுயிரின் முற்றுமே. (யுத் : 2767)
22 மறைதல். இவ்வெய்ய மாற்றம் மூவகை உலகம் முற்றுங் காலத்தும் முற்றவற்ருே. (கி : 431)

23. நிறைவேறுதல். மும்மையோர் பெருமையும் முற்றும் வெற்றியாம். (ஆ : 860)

24. அழிதல். பூதங்கள் முற்றிடினும் எந்நாளும் உலவாய் நீ. (யுத் : 300)

முற்றும் – எல்லாம். மலைகளும் மற்றும் முற்றும். (யுத் : 263)

முற்றும் நாள் – மரண காலம். சாங்காலம். ஆயுள் முடியும் நாள். முற்று நாளின் விடு நெடு மூச்சினுன். (யுத் : 3175)

முற்றும் முற்றி – மிகவும் முதிர்ந்து. முற்று முற்றிப் பொருள் திங்கில் கேள்விச் சுடர்புக்கு. (ஆ : 698)

முற்று முளதா முலகம் மூன்றும் – முற்றவும் உளதான உலகம் ஒரு மூன்றும். முற்று முளதாமுலகம் மூன்று மெதிர் தோன்றி. (யுத் : 72)

முற்று முனிதல் – மிகவும் வெகுளல். வெங்காரத்தான் முற்று முனிந்தான். (யுத் : 3799)

முற்று மூடிய கஞ்சுகன் – முழுவதும் மூடிய சட்டையுடையவன். முற்று மூடிய கஞ்சுகன் மூட்டிய வெற்றனற் பொறிக் கண்ணினன். (யுத் : 744)

முற்றுயி ராய முற்றும் – நிறைந்த உயிர்களாகிய எல்லாவற்றையும். மூன்று முலகத்தொடு முற்றுயிராய முற்றும் ஈன்ருன். (சு : 44)

முற்றுவித்தல் - 1. அழியச் செய்தல். ஊரை முற்றுவித்து. (சு:1220) மூலம் பார்க்குறின் உலகை முற்றுவிக்கும் முறை தெரினும். (சு : 317) [பா : பே]

2. நிறைவேற்றல். வேள்வியை முற்றுவித்து. (சு : 519)

முற்றுவித்திடுதல் – அழித்தல். ஈரெழு புவனம் யாவும் முற்றுவித்திடுதல் வேண்டின். (சு : 446)

முற்றுற்று – முடிவடைந்து. அப்பல் பொருள் முற்றுற்று. (ஆ:1171)

முற்றுற – 1. எங்கும். முற்றுற முழங்கின அரக்கர்தம் முகிலின் ஆர்ப்பரோ. (ஆ : 478)

2. முழுவதும். முற்றுறக் கேட்டபின் முனி. (யுத் : 86)

முற்றுற நோக்குதல் – முழுவதும் நன்கு ஆராய்தல். முற்றுற நோக்கினன் முடிவும் அன்னதால். (யுத் : 35)

முற்றுற முடித்தல் – அடியோடு அழித்தல். முற்றுற முடிக்குவன் முனியை என்றெமா. (பா : 377)

முற்றுருத முன் – முடிவதற்கு முன். ஒரு மதி முற்றுருத முன். (கி : 754)

முற்றுறுமுகை – முற்றிய அரும்பு. முற்றுறு முகைகிண்டி முரல்கில சிறுதும்பி. (அ : 701)

முற்றெயிறு – வளைந்த பல். (வை.மு) முதிர்ந்த பற்கள். (அண்) மதித்திண் பாகமெனும் முற்றெயிறு அதுக்கி. (பா : 394)

முறி – 1. துண்டம். முறிந்த பொருள். முழு நிலவின் முறியின் திறனே. (சு : 538) நிலவின் வெண்முறி. (சு:153) அது எய்தாத முன் முறியாயுக எய்தான். (யுத் : 1844)
2. இளந்தளிர். பூக்கரிந்து முறி பொறியாய். (சு : 1201)

முறிதல் – 1. நிலையழிதல். ஆடவர் முறிந்து தத்தம் முதுநகர் நோக்கினர். (யுத் : 1041)
2. துண்டுபடல். பின்னமாதல். இற்றுப்போதல். விண்ணிடு வின் முறிந்தென்ன. (ஆ : 983) படைக்கலம் யாவும் முறிந்த. (யுத் : 213)
3. தோற்றல். அரக்கர் தொடர்வார்களூராமேல் முறிந்துதிர நூறி. (சு : 610)

முறிந்துதிர நூறி – தோற்று விழும்படி யழித்து. (சு : 610)

முறுக்குதல் – 1. போர் புரிதல். இகல் முறுக்கினர் முறை முறை. (யுத் : 1485)
2. வெருட்டுதல். உதைக்கும் முறுக்குமால். (யுத் : 209)

முறுகு காதல் – முதிர்ந்த காம நோய். முறுகு காதலின் வேதனை யுழப்பவர். (சு : 289)

முறுவல் – புன்சிரிப்பு. தங்கொளி முறுவலில் தாமம் நான்றன (அ : 127)

முறுவல் செய்தல் – 1. புன்னகை புரிதல். ஆழி மன்னனும் முறுவல் செய்து. (யுத் : 2375)
2. பரிகாசமாகச் சிரித்தல். மூடரு மொழியார் என்ன மன்னனு முறுவல் செய்தான். (சு : 748)

முறுவல் நாறல் – புன் சிரிப்பு உண்டாதல். ஏந்தலும் இதனைக்கேளா இன்னிள முறுவல் நாற. (கி : 429)

முறுவல் வாண்முகம் – புன்னகை எழுகின்ற ஒளி கொண்ட முகம் முறுவல் வாண் முகத்தினன் முளரிக் கண்ணனும். (யுத்:2437)

முறுவல் வெண்ணிலவு – புன் சிரிப்பாகிய வெள்ளிய நிலவு. கேள் தொறுந் தொடர்ந்த முறுவல் வெண்ணிலவின் முகமலர் இரவி னுங்கிளா. (சு : 412)

முறுவலித்தல் – புன் முறுவல் செய்தல். ஓத நீர் எறும்வலிக் கண வனை எய்தி ஆறெலாம் முறு வலிக்கின்றன போன்றன முத்தினல். (கி : 557)

முறுவலுக நகுதல் – பற்கள் தோன்றச் சிரித்தல். பெருங்கை திரி வோரை வெல்வதரிதோ என்று முறுவலுக நக்கான். (சு : 856)

முறை – 1. குணம். மயின் முறைக் குலத்துரிமை. (அ : 161)
2. நீதி. இலங்கை வேந்தன் முறையல செய்தானென்று முனிதியோ. (கி : 319) முறையிலோயைத் தென்புலத் துய்ப்பன் என்று செப்பினன். (கி : 354)
3. கிரமம். கடமை. செய்ம் முறை .. திறம்பலின்றியே. (பா:275)
4. நூல். செய்ம் முறை கடன் முறை திறம்பலின்றியே.(பா.275)
5. நித்திய கருமம். முறையெலாம் முடித்த பின்னர். (பா:976)
6. இயல்பு. தன்மை. இருள் முறையரக்கர். (யுத் : 2414) மயின் முறைக் குலத்துரிமை. (அ : 161) உலகை முற்றுவிக்கும் முறைத்தெனினும். (சு : 317)
7. உறவு முறை. நிதிக்கிழவன் முறை தந்தன தந்து முடிக்கு வெனல். (யுத் : 1716)
8. வலிமை. (வை.மு) உலகை முற்று விக்கும் முறை தெரினும். (சு : 317) [பா : பே]
9. முறைமை அருள் முறை அவரும் நின்றார். (யுத் : 2414) உருள் முறைத் தேர். (யுத் : 2414)
10. நிலைமை. மருள் முறை எய்திற்றென்பர்சில வழங்கு அசனி- (யுத் : 2414)

முறை கால்தள்ள – கால்கள் முறையே தள்ளாட. (சு : 6)

முறை கெடல் – நீதி முறை குலைதல். முறை கெடப் புற நின்ருர்க் கும் பழிபட வாழ்கிற்பாரும் பார்த்திப ருளரோ பாவம். (யுத் : 1657)

முறை சுற்ற – முறையே சுற்றிநிற்க. (யுத் : 811)

முறை சொரிதல் – இடை விடாது சொரிதல். எரி கொள் விரி பகழி மழைகள் முறை சொரிய அமரர் மலர் சொரிய. (யுத்:3419)

முறைதருதல் – உறவின் முறை கூறிச் சமாதானப் பொருளாகத் தருதல். தெய்வ நிதிக்கிழவன் முறைதந்த. (யுத் : 1716)

முறை தவிர்த்தல் - முறையினின்றும் நீங்குதல். முன் பிறந்த நின் தமயனை முறை தவிர்த்துனக்குப் பின் பிறந்தவனுக்கு வென். (யுத் : 2455)

முறை திறம்பல் – 1. நீதி முறையினின்றும் வழுவுதல். முறை திறம்பரக்கன். (யுக் : 3752)

2. ஒழுங்கு முறையினின்றும் மாறுபடல். தலை மகற்குத் தாரணியை முன்னே கொடுத்து முறை திறம்பத் தம்பிக்குப் பின்னே கொடுத்தாற் பிழையாதோ மெய். (அ : 405)

முறை நிற்றல் – 1. முறையே நிலை பெறல். முன்னுலகளித்து முறை நின்ற உயிரெல்லாம் தன்னுயிர் எனக் கருது தன்மையினன் மைந்த. (பா : 386)

2. நன்னெறியில் நிற்றல். முளையாத திங்களுகிரான் முன்வந்து முறை நின்ற வீரன் மொழிவான். (யுத் : 2218)

முறை போகிய – கிரமமாகக் கற்றுக் கொண்ட. பயிற்சி மிக்க. முத்தமிழ்த் துறையின் முறை போகிய உத்தமக்கவிகள். பா:8

முறை மகன் – முறைமைக்குச் சிறந்த மூத்த மகன். முறை மகன் வனம் புக மொழியைக் காக்கின்ற இறைமகன். (அ : 488)

முறை மறுத்தல் – செல்லும் முறைமையைத் தவறவிடல். ஒருவரின் ஒருவர் முந்தி முறை மறுத்துருக்கின்ருரும். (சு : 763)

முறை முறை – வரிசைக் கிரமமாக. விஞ்சை வேந்தர்கள் துள்ளினர் முறை முறை துறையிற் சுற்றவே. (ஆ : 567) முரசு முற்றிய பல்லிய முறை முறை துவைப்ப. (பா : 536)

2. மேன் மேல். முனிவர் வந்து முறை முறை மொய்ப்புற. (ஆ : 554) வீவிலை முறை முறை வினவ. (யுத் : 4250)

3. படிபபடியாக. நுந்த நுந்த முறை முறை நூறினன். (யுத் : 2111)
4. அடிக்கடி. நைவள வமுதப் பாடல் முறைமுறை நணுகப் போனர். (பா : 876)

முறை முறை கூறுகொண்டனர் – முறை முறையாகப பாகங்கொண் டவராகி. புயங்களும் மார்பும் எங்கணும் முறை முறை கூறு கொண்டனர் அழுதனர். (யுத் : 3900)

முறை முறை தொழுதல் – வரிசை வரிசையாய் நின்று தொழுதல். முத்த வெண் குடை மன்னனை முறை முறை தொழுதார். (அ : 76)

முறை முறை நோக்கல் – விடாமல் பார்த்தல். முறை முறை நோக்க லாக்கினன் தடந்தாமரைத் திரு முகத்துதிரம். (யுத் : 2583)

முறை முறைபின் – முறைமையாக முறைமையாக. மேன் மேலும். துன்பத்தான் முறை முறையின் நிறை மலர்க்கண் மொய்த்த நீரார். (ஆ : 207)

முறை முறையே – மாறி மாறிப் பல முறை மூக்கினுலுச்சி முறை முறையே மோக்கின்ருன். (ஆ : 1001)

முறைமை - 1. இயைபு. தன்மை. தேவர்தம் முடியுறப் பரந்தது ஓர் முறைமை தேர்ந்திலேம். (அ : 995)
2. கிரமம். முறைமையின் எய்தினர். (அ : 12)
3. தலைமுறை. மூவெழு முறைமை எங்குலங்கள் முற்முறப் பூவெழு மழுவினுற் பொருது போக்கிய சேவகன். (அ : 71)
4. முன்பு நிகழ்ந்தன.

முறைமை நோக்கல் – ஒழுக்க நெறியை யுணர்தல். பகரத்தக்க மொழி இவை அல்ல என்பதுணர்கிலை முறைமை நோக்காய். (யுத் : 1604)

முறைமையின் இறைஞ்சி–வணங்க வேண்டிய முறைப்படி வணங் கி முனிவன் மாமலர்ப் பாதங்கள் முறைமையின் இறைஞ்சி. (அ : 43)

முறையிடுதல் – குறையைக் கூறுதல். முடையுடை வாயிலின் முறையிட்டார்த்து. (ஆ : 584)

முறையிலோன் – முறை கேடானவன், (இராவணன்) (வாலி) முறை யிலோன் தனைக்கண்டலும். (ஆ : 845) முறையிலோயைத் துய்ப்பன் என்று செப்பினன். (கி:354)

முறையினீங்கிய அரசு – முறைமையினின்றும் விலகிய அரசாட்சி. அருள் துறையின் நீங்கிய அருளும் தொல்லையோர் முறையின் நீங்கிய அரசின் முந்துமோ. (அ: 1165)

முறையுய்த்தல் – முறையே செலுத்துதல். உய்விட மளிக்கு மருளா ளர் முறையுய்த்தார். (யுத் : 700)

முறையுறவு – (அடிமை) முறையால் ஆய உறவு. அடியோமை இம் முறையுற வென்னு இனிதிரு நெடி தெம்மூர். (அ : 671)

முறையோ – முறைமையாகுமோ. முனிகின்றது முறையோ. (பா : 1370)

முன் – 1. மூத்தவன். மூத்தமகன். பிதா முன் என்ருன். (பா : 684) தம்பி முன்னலேன். (அ : 577)
2. காரணம். பின்னிலேன் முன்னிலேன். (யுத் : 290)
3. முதல். முன்னும் நீயே. (யுத் : 606)
4. முன்னே நடைபெற்றவை. பின்னை யறியோம் முன் அறி யோம் இடையும் அறியோம். (யுத் : 2615)
5. மூலம். பின்னிலன் முன்னிலன் பேர்கிலன். (யுத் : 189)

முன் குற்றம் – முதற்குற்றம். முன் குற்றம் மன்னன் முடி கொள் கெனக் கொள்ள மூண்டது. (அ : 425) [பா : பே]

முன் சொல் – முன்னரே சொல்லத்தக்க சொல். (யுத் : 1709)

முன்திசை – கிழக்கு. தேர் மேல் முன்றிசை முளைத்ததன்னுள். (பா : 1324)

முன்பர் – 1. பெரியோர். முற்றுணர்ந்த முதியரும் முன்பரும். (கி : 331)
2. வலிமையுள்ளவர். அரக்கர் முன்பர். (யுத் : 2366)

முன்பன் – 1. இராமன். மூலமாய் முடிவிலாத மூர்த்தி இம் முன்பன் என்பார். (அ : 276)
2. வலியவன். கும்பகருணன். முத்தலைச் சூல மோச்சான் வெறுங்கையான் என்று முன்பன். (யுத் : 1404)

3. இலக்குவன். முன்பனை முன்பு நோக்கி இவன் கொலாம் பரதன் முன்னோன் தம்பி என்றான். (யுத் : 2042)

முன் பிழைத்த வறுமை – முற்பிறப்புக்களில் புண்ணியஞ் செய்யத் தவறியமையால் ஆக்கிக் கொண்ட வறுமை. (அ : 308)

முன்பு – 1. வலிமை. முன்பன். (யுத் : 1404) முன்பிற் சிறந்தார். (சு : 61) உறுகுறை முடிப்பர் முன்பினால். (யுத் : 380)

2. முன்னர். முற்றினன் முற்றினன் என்று முன்பு வந்துற்றனன். (யுத் : 1530) முன்பு உளெம் ஒரு நால்வேம். (அ : 6·7)

3. எதிரே நின்று. கொடுப்பவர் முன்பு கொடேல் என நின்று தடுப்பவரே. (பா : 449)

4. முற்காலம். முன்பு பின்பின்றி மூவுலகத்தினும் அன்பின் அல்லது ஓர் ஆக்க முண்டாங் கொலோ. (அ : 113)

முன்பு பின்பு நடுவில்லாய் – முன் பின் நடு இல்லாமல் எப்போதும் இருப்பவனே தோற்றம் நிலை இறுதி இல்லாதவனே. (அண்) அவை யெல்லாம் முன்பு பின்பு நடுவில்லாய் முடித்தாலன்றி முடியாவே. (யுத் : 2619)

முன்பு புடை – சிருஷ்டி. முன்பு பின்பிரு புடையெனும் குணிப்பரு முறைமைத் தம் பெருந்தன்மைத் தாந்தெரி மறைகளின் தலைகள். (யுத் : 4021)

முன்புற – முன்னதாக. முன்புற அனையர் பால் நண்பு முற்றினை (யுத் : 311)

முன் முன் – முன்னே முன்னே. முன் முன் நின்றார் கண் கனல் சிந்த முடுகுற்றார். (சு ; 482)

முன் முனே – முன்னமேயே. முன் முனே மொழிந்தாயன்றே இவன் குறை முடிப்பதையா. (கி : 364)

முன்வந்தவன் – தமயன். முன்வந்தவனு முடிந்தான். (யுத்:2623)

முன்றலை – முன்புறம். தானை முன்றலை யொதுக்கி. (யுத் : 4341)

முன்றில் – 1. முற்றம். மணிமுற்றம். முன்றில்கள் அல்லன முத்தின் பந்தரே. (பா : 131) மழையுலாவு முன்றில். (கி : 230)

2. முன்னிடம். விழியின் ஆலி முலைமுன்றில் தத்தியுக. (சு:559)

3. ஆசார வாசல். முன்றில் முரசம் முழங்க. (யுத் : 304)

முன்றுறை – முற்றம். அன்னம் மாடும் முன்றுறை கண்டங் கயல் நின்ருர். (பா : 586)

முன்னம் – 1. மிக்கு. பொன்னின் முன்னம் ஒளிரும் பொன்னே. (அ : 354)
2. மனக்குறிப்பு. முன்ன நீருணர்ந்திலிரோ. (யுத் : 1625)
3. சிங்கம். (அண்) முன்ன வீரன். (கி : 565)

முன்ன முறைநின்ருர் – (போருக்கு) முற்பட்டவர்களாய் முறையில் நின்ருர்கள். அரக்கர் இருகையும் முள்ளெயிறும் வாளுமுற முன்னமுறை நின்ருர். (சு : 163)

முன்னர் – 1. எதிரிலே. முன்னரே வந்திம் மாற்றம் மொழிகின்றீர். (யுத் : 2970)
2. முன்னம். நின்னையும் துறந்து போயினுன் முன்னரே. (அ : 921)

முன்னர்த் தேசிகன் – முன்னோர்களுடைய ஆசாரியன். முன்னர்த் தேசிகற் பிழைத்து. (பா : 672)

முன்னவன் – 1. மூத்தவன். முனைவ ஈதுயாவ தென்று முன்ன வன் வினவ. (பா : 422)
2. பிதா மகன். பிரமன். முன்னவன் தரப் பெற்றதோர் முழு வலிச்சிலையான். (யுத் : 51)

முன்னு – 1. கிட்டி. நாயகனை முன்னு. (யுத் : 59)
2. முதலாகவுள்ள. தென்றமி முரைத்தோன் முன்னுத் தீதிர் முனிவர் யாரும். (சு : 462) முன்னு வாயிலர் விரவினுரை. (யுத் : 1225) [பா : பே]

முன்னுள் – 1. வளர்பிறை. பூர்வபக்கம். முன்னுள் இளம் பிறை முளைத்தாலென வளைத்தார். (யுத் : 3007)
2. தமக்கை. மைத்துனனேடு முன்னுள் வழங்கிய மாற்றங் கேளா. (பா : 688) [பா : பே]

முன்னுன் – முதற் கடவுளான திருமால். முன்னுன் அதுவளர் மணிமே லோங்கல். (யுத் : 4094)

முன்னுன – முன்புள்ள. முன்னுன பூதங்கள். (யுத் – 300)

முன்னி – 1. கருதி. செவ்வி முக முன்னி அடி செங்கையினி றைஞ்சா (ஆ : 261).

2. நோக்கி. முன்னெடுத்து. (உ.வி) (ஆ : 261)

முன்னிய - 1. முற்பட்ட. மேற்பட்ட. தன்னின் முன்னிய பொருளிலா ஒரு தனித்தலைவன். (யுத் : 12)
2. முன்வரக்கண்ட. தாயை முன்னிய கன்றென நின்றுயிர் தளிர்ப்ப. (அ : 58)
3. கருதிய. அவன் முன்னிய முயற்சியை முன்னி. (கி : 159)

முன்னிய பொருள் - (தன்னைக் காட்டிலும்) முற்பட்ட பொருள். (யுத் : 123)

முன்னிலன் - தனக்கு மூலமாக எதுவும் இல்லாதவன். (யுத் : 189)

முன்னின்று சொல்லுதல் - எதிரே நின்று சொல்லுதல். சுமந்திரன் முன்னின்று சொல்லும். (அ : 45)

முன்னுடை வடிவம் - முன்பு பெற்றிருந்த வடிவம். முன்னுடை வடிவம் பெற்றேன். (ஆ : 1191)

முன்னுதல் - 1. அணுகுதல். மொய் கொள் சோலை முன்னினர். (ஆ : 73)
2. கிட்டுதல். நோக்கிச் செல்லுதல். பொறிமிசை நெறியை முன்னினர். (பா : 246)
3. நினைதல். கருதுதல். விரைப்பொன்னை முன்னிய பூங்கணை மாரியால். (பா : 708)
4. அறிதல். வானவர்க் கிறைவன் முறுவல் செய்தனன் முன்னிய முயற்சியை முன்னி. (கி : 159)
5. மதித்தல். முன்னிய நன்னெறி நூலவர். (பா : 446)
6. நோக்குதல். கொடியான் முகமே முன்னி. (அ : 337) இலக்கு வனை முன்னினன் விளம்பும். (கி . 527)
7. முற்படல். சிறத்தல். தன்னின் முன்னிய பொருளிலா ஒரு தனித் தலைவன். (யுத் : 123)
8- பொருந்துதல். ஞான முன்னிய நான் மறை யாளர். (பா:16)

முன்னுரு - கருதத்தகும் ஒளியுருவம். (யுத் : 4029)

முன்னுறத் தந்து - முன்னே எடுத்துவைத்து. குதிரையும் அதிர் மதக்குன்றும் வலத்த கால் முந்துறத் தந்து நம் மனையிடைப் புகுவ மன்னோ. (யுத் : 108)

முன்னேது பின்னேது – முன்னுமில்லை பின்னுமிராது. இனிய தன்மை முன் செய்தாரி யாவ ரென்பார் முன்னேது பின்னே தென்பார். (யுத் : 2058)

முன்னே முன்னே – முன்னிடங்க ளெல்லாம். முன்னே முன்னே மொய்ம் மலர் தூவி. (பா : 593)

முன்னை - 1. பழைமையான. முன்னை வெங்கதிரவன் கடலின் மூழ்கினன். (பா : 624)
2. முன்னாள். பழைய காலம். முன்னை நான்முகன் படைக்கலம். (யுத் : 2564)
3. மூத்தவன். முன்னை வீரன். (கி ; 565) [பா : பே]

முன்னை நாள் – முதல் நாள். இறக்கு மாறிது வென்பான் போல் முன்னை நாள் இறந்தான். (அ : 667)

முன்னை மூலத்தின் முதற் பெயர் மொழிவது – பழைய வேதத்தின் முதற் சொல்லான பிரணவம் முதலிற் கூறும் பொருளான நாராயணன். முன்னை மூலத்தின் முதற் பெயர் மொழிவது மொழிந்தேன். (யுத் : 155)

முன்னையர் – தம் மரபிற் றோன்றிய முன்னையோர். முன்னையர் முறை கெட முடித்த பாவியை. (அ : 988)

முன்னை யூழ்வினை – முற் பிறப்பிற் செய்த வினை. முன்னையூழ் வினையினாலோ நடுவொன்று முடிந்த துண்டோ. (பா : 550)

முன்னை வெங்கதிரவன் – பழைமையான வெப்பத்தைக் கொண்ட சூரியன். முன்னை வெங்கதிரவன் கடலின் மூழ்கினன். (பா:624) முன்னை வேதத்தின் முதற்பெயர் மொழிவது. (யுத்:155) [பா:பே]

முன்னோள் – தமக்கை. மைத்தனனோடு முன்னோள் வழங்கிய முறைமை கேளா. (பா : 688)

முன்னோன் – 1. தமயன். மற்றவன் முன்னோன் வாலி. (சு : 619) எனக்கு முன்னோன். (யுத் : 1332)
2. முதியோனாகிய பிரமன். அண்ட நெடு முகட்டிருந்த முன்னோன். (யுத் : 261)

முனார் – தமயன். செம்மணி மகுடம் நீக்கித் திருவடி புனைந்த செல்வன் தன் முனார் சரந்ணதாழ என் முனார் எனக்குச் செய்த உதவி யென் றேம்பலுற்றான். (யுத் : 444)

முனி - முனிவன். வந்து முனி எய்துதலும். (பா : 321)

முனிக் கணங்கள் - இருடிக் கூட்டத்தார். கண்ட முனிக்கணங்கள் ஓதினர் சீர்த்தி. (யுத் : 295)

முனிதல் - 1. வெறுத்தல். வெறுத்து நீக்குதல். மூப்பெனும் பருவம் முனிய முற்றினன். (ஆ : 834) (யுத் : 169) முத்தணி யணிவாரும் மணியணி முனி வாரும். (பா : 1280) முனிந்தன. (அ:507) 2. சினங் கொள்ளுதல். இருளினை முனிவர். (யுத் : 2140) முனியாதானை முனிவித்திர். (கி:638) முனிதியோ முனிவிலாதாய். (கி : 319) முனியல். (ஆ : 1020) முனிவாயல்லை. (ஆ : 1024)

முனிந்தருளல் - கோபிக்க வேண்டாம். கேட்டி யடியேனுரை முனிந்தருளல். (சு : 608)

முனிந்திடேல் - சினங்கொள்ளாதே. நீதியாய் முனிந்திடேல். (பா : 1385)

முனிமனந் தொடரப் போதல் - முனிவனது மனம் தன்னைப் பின் தொடர்ந்துவரச் செல்லுதல். (முனிவன் பூர்ணனுக்கிரகத்துடனே கருதி யிருப்பச் செல்லுதல். துணைவரோடு முனிமனம் தொடரப் போனான். (யுத் : 4239)

முனியல் - வெகுளாதே. செவ்வியோய் முனியல் வாழி. (ஆ:1020)

முனியாதான் - வெகுளாத இயல்பினன். முனியாதானை முனிவித்திர். (கி : 638)

முனியும் முனியுஞ் செய்கைக் கொடியாள் - (வசிட்ட) முனிவனும் யாவரும் வெறுக்குஞ் செய்கையையுடைய கொடியாள். (அ:337)

முனிவர் - பேரறிவு படைத்த இருடிகள். வித்தக முனிவரும் விண்ணுளோர்களும். (பா : 283)

முனிவர் எழுவகை - சப்த ரிஷிகள். அத்திரி, பிருகு, குத்ஸர், வசிஷ்டர், கௌதமர், காசிபர், அங்கீரசர் என்பவர். (யுத்;3098) (கி : 174)

முனிவர்கடஞ் சொல் - முனிவர்களின் சாபச்சொல். எழுவகை முனிவர்கடஞ் சொல்லினும் வலியதொர் சுடுகணை. (யுத் : 3098)

முனிவர் சொல் - முனிவர்களின் (சாபச்) சொல். வைவன முனிவர் சொல்லனைய வாளிகள். (யுத் : 1792)

முனிவர் தம் தருமப்பன்னியர் – இருடிகளுடைய தருமபத்தினிகள். முனிவர் தம் தருமப் பன்னியர் தூய நீராட்டினர். (அ : 1153)

முனிவரர் – முனிவர்கள். என்னனைய முனிவரரும் இமையவரும். (பா : 324) (யுத் : 2760)

முனிவரன் – முனிவன். முனிவர்களுட் சிறந்தவன். அருமறை நூல் வடிவு கொண்ட தன்னமுனிவர னுறையுள் தணையணுகி. (பா : 243)

முனிவன்–பிரமன். முத்தலை எஃகன் மற்றை முராந்தகன் முனிவன் முன்னு. (சு : 1157)

முனிவாறுதல் – சினந்தணிதல். அங்கவன் தணைமலைந்து கொன்று முனிவாற வந்தனென். (யுத் : 2028)

முனிவித்தீர் – வெகுளும்படி செய்து விட்டீர். (கி : 638)

முனிவிலாதாய் – யாவரையும் வெகுளாத இயல்புடையவனே. (கி : 319)

முனிவினும் முனைக்கும் அன்பான் – வேடங்கொண்ட சமயத்திலும் தோன்றுகின்ற அன்பையுடையவனான இலக்குவன். நீயும் அயர்த் தணையாகு மன்றே முந்தின செய்கை யென்றான் முனிவினும் முனைக்கும் அன்பான். (கி : 625) [பா : பே]

முனிவு – 1. வெறுப்பு. ஊசலின் முற்றிய ஆடலின் முனிவுற் றேங் கினார். (ஆ : 598)
2. சினம். உனக் கபய மென்றுயாதலால் முனிவு தீர்ந்தேன். (யுத் : 616

முனிவு தீர்தல் – சீற்றம் நீங்குதல். (யுத் : 616)

முனிவு மாறுதல் – சினம் நீங்குதல். மன்னனு முவந்து தன் முனிவு மாறினான். (யுத் ; 14)

முனிவுழி முனிந்து – வெறுக்க வேண்டிய இடத்தில் வெறுத்து. முறையறிந்தவாவை நீக்கி முனிவுழி முனிந்து. (பா : 51)

முனி வெஞ்சல் – கோபங் குறைதல். முனி வெஞ்சாள். (அ : 215)

முனி வெனும் வடவை வெங்கனல் – கோபம் என்ற வடவா முகாக் கினி. ஏறிய முனி வெனும் வடவை வெங்கனலை அறிவெனும் பெரும் பரவை யம்புனலினால் அவித்தான். (சு : 226)

முனை – 1. போர் முனை. போர்க்களம். படைக்கலம் பண்டு தேவரெல்லாரும் முனைத்தலை ஈந்த. (யுத் : 1970)

2. முன்னர். முன்பு. ஆ முனையிற் சிறு கூழ் என இப் பொழுதாகாதோ. (அ : 1015) எம்முனைத் தூது வந்தாய். (சு : 1131)

3. போர். முனைத் தொழில் மூண்டதாக. (யுத் : 1390) வெம்முனை விளைதலினன்று. (யுத் : 368)

4. முகம். கொழுமுனை. (பா : 766)

5. நுனி. மும் முனை நெடு வேல். (யுத் : 1410)

6. முன்னைய. முனை நீரலிரோ. (யுத் : 2989)

முனைத்தண்டு – தண்டாயுதம். எழு முனை வயிரத் தண்டர். (யுத் : 2125)

முனைத்தலை – யுத்தகளம். (யுத் : 1970)

முனைதல் – 1. முண்டெழுதல். முழு முதற் படைகளேந்தி இராக்கதர் முனைந்த போது. (யுத் : 904)

2. வெறுத்தல். எம்மோயை வாளா முனையல். (யுத் : 4032)

3. போர் செய்தல். முனைதலும். (கி : 785)

முனை தொழில் – போர்த் தொழில். (யுத் : 1390)

முனையல் – வெறுக்க வேண்டாம். (யுத் : 4032)

முனையின் – 1. முனைந்தால். (அண்)

2. முன்பு. (வை.மு) ஆமுனையிற் சிறு கூழ். (அ : 1015)

முனைவ – முனிவனே. முனைவ ஈது யாவது. (பா ; 422)

முனைவர் – 1. முனிவர். முனைவரும் நகர மூதூர் முதியரும். (அ.272) முனைவரும் பிறரும். (கி : 91)

2. முன்னோர். முனைவரும் அமரரும். (யுத் : 3989)

3. மும்மூர்த்திகள்- முனைவர் வானவர் முதலினர். (யுத் : 178)

முனைவர் கோன் – அந்தணர் தலைவனான பிரமன். தவத்தால் முனைவர் கோன்வரம். (யுத் : 513)

முனைவன் – 1. முனிவன். முனைவ ஈது யாவது. (பா : 422)

2. தலைவன். வேள்வி நிரப்பிய மா முனைவன். (ஆ : 78)

முனைவிளைதல் – போர் விளைதல். வெம் முனை விளைதலின் அன்று. (யுத் : 368)

முனைவீரன் – முனைந்து நின்ற வீரன். முனைவீரன் கொற்றப் போர்ச் சிலைத் தொழில். (சு : 318)

முனோன் – முன்னோன். அண்ணன். ஏழை வாழ்வுடை எம்முனோன். (யுத் : 1334)

## மூ

மூக்கரிதல் – மூக்கை அறுத்தல். மூக்கினை நீக்குதல். விரிகுழல் உங்கை மூக்கரிந்த வீரரை. (யுத் : 29) மூக்கரிந்த நரன். (ஆ : 333) மூக்கரிந்து. (ஆ : 349) புழைகாண மூக்கரிவான் பொருள் வேறுண்டோ. (ஆ : 357) ஆக்கரியமூக் குங்கை அரியுண்டாள் என்றுரை. (ஆ : 349) இலங்கு வாளால் முன்னை மூக்கரிந்து விட்டான். (ஆ : 640)

மூக்கவிழ்தல் – காம்பிலிருந்து மலர் நெகிழ்ந்து உதிர்தல். கொய்யு நரின்மையின் மூக்கவிழ்ந்து உதிர்ந்துலர்ந்தன ஒண்மல ரீட்டமே. (அ : 812)

மூக்கறவு – மூக்கு அறுபடல். (பேரவமானம்) மாதுலனுர் பொன்ற வும் என் பின் பிறந்தாள் மூக்கறவும் வாழ்ந்தேன். (யுத்:1664)

மூக்கிற் ருக்குறு மூரி நந்து – மூக்குப் போன்ற இடத்திலே வாய் வைத்து ஊதுவதால் ஒலிக்கின்ற வலிமை பொருந்திய சங்க வாத்தியம். (பா : 88)

மூக்கினுல் உச்சி மோத்தல் – மூக்கினுல் தலையுச்சியை மோந்திடுதல். மூக்கினுல் உச்சி முறை முறையே மோக்கின்ருன். (ஆ : 1001)

மூக்கு – 1. காம்பு. முதிர்ந்து கொய்யு நரின்மையின் மூக்கவிழ்ந் துதிர்ந்துலர்ந்தன ஒண் மலரீட்டமே. (அ : 812)
2. நாசி. எள்ளொத்த கோல மூக்கின் ஏந்திழை ஒருத்தி. (பா : 1064)
3. பறவை அலகு. மூக்காற் கொத்தா. (ஆ : 925)

மூக்குடைக் கை – மூக்கோடு கூடிய கை. மூக்குடைக் கைகளால் திசை நிலைக்களிற்றை ஆய்வன. (பா : 835)

மூங்கிற் காடு – மூங்கில் நிரம்பிய காடு. மூங்கிற் காட்டிற் புக்க தோர் ஊழித்தீ. (யுத் : 2550)

மூங்கையர்–ஊமர்கள். மூங்கையர் சொற் பெற்றென்ன. (யுத்:4288) (ஆ : 657)

மூங்கையான் – ஊமையான். மூங்கையான் பேசலுற்றான் என்ன யான் மொழியலுற்றேன். (பா : 32)

மூச்சு – உயிர்ப்பு. மூச்சிற்ற இராவணன். (ஆ : 938) [பா : பே]

மூச – அழிய. மாளிகை மூச முட்டிமுழுது முருக்கிற்றால். (சு:1184)

மூச முட்டுதல் – நெருங்கிப் பிடித்தல். (சு : 1184)

மூசரி – பரவுந் தன்மையுள்ள வடவைக்கனல். (அரி-கனல்) மூசரிக் குவமை மும்மை மும் மதக்களிறு. (யுத் : 4346)

மூசிய – 1. மொய்த்த. தண்டேன் மூசிய சூந்தன் மாதர். (பா:980)
 2. அடர்ந்த. மூசிய உயிர்ப்பெனும் முடுகு வாதம். (சு : 221)

மூசின முயங்கு சேறு – நெருங்கிக் கலந்த கலவைச் சாந்து. பூசிய சந்தனம் புழுகு குங்குமம் மூசின முயங்கு சேறு உலர. (கி:553)

மூசு – 1. மொய்த்த. மூசரவு சூடு முதலோன். (ஆ : 157)
 2. அழுக்குச் செறிந்த. மூசு தூசுடுத்து. (அ : 1066)

மூசுதல் – 1. மொய்த்தல். மூசெரி. (யுத்:4230) பதுப மூசும் தேன். (யுத்:4230)
 2. நெருங்குதல். மூசரவு. (ஆ : 157)
 3. கலத்தல். மூசின முயங்கு சேறு. (கி : 553)

மூசுதூசு – (அழுக்கு) மொய்த்த ஆடை. (அ : 1066)

மூசெரி – உலகமெல்லாம் பரவுகின்ற வடவைக்கனல். (யுத் : 4346) [பா : பே ]

மூட்டல் (மூட்டுதல்) – 1. செலுத்துதல். பிரயோகித்தல். நான்முகன் மூல மந்திரந் தன்னொடு மூட்டலால். (யுத் : 3862) முப்புரத் துலகையும் முடிக்க மூட்டலால். (சு : 671) [பா : பே]
 2. மூளும்படி செய்தல். கடும் போர் மூட்டும் வகை யாவது. (சு : 693)
 3. முயன்று செய்தல். விரிஞ்சன் மூட்டும் வேள்வி. (யுத்:2899)

மூட்டறுத்தல் - பொருத்து வாய் அறும்படி செய்தல். பூட்டுக்களைத் துணித்தல். முத்தார மார்பிற் கவசத்தையும் மூட்டறுத்தான். (ஆ : 925)

மூட்டாத காலக் கடைத்தீ – (யாவராலும்) மூட்டப் படாததாய் ஊழிக் கடையில் மூண்டெழும் வடவைத் தீ. யாவராலும் மூட் டாத காலக் கடைத் தியென மூண்டெழுந்தான். (அ : 408)

முட்டிய – 1. மூண்ட. முட்டிய வெகுளியானல் முடிவதற் கையமுண்டோ. (கி : 660)
2. எண்ணெய் விறகு கொண்டு மூளச்செய்த. முட்டிய தீ. (யுத் : 307)

முட்டு – 1 கட்டு. பிணிப்பு. இணைப்பு. கச் சொடு கலையும் முட்டற. (பா : 1070) விலங்க லாரையை மூட்டற நீக்குவான் முயலும் வேளையில். (யுத் : 1505)
2. பொருத்துவாய். கவசத்தையும் மூட்டறுத்தான். (ஆ : 925)
3. முகப்பு. கொக்குவாய். கவச மூட்டறக்கழல. (யுத் : 2470)

மூட்டும் வேள்வி – முயன்று செய்த யாகம். மெய்ச்சிலை விரிஞ்சன் மூட்டும் வேள்வியின் வேட்டுப் பெற்ற கைச்சிலை. (யுத் : 2899)

மூடர் – அறிவிலிகள். இராக்கதர் கொற்றம் சொற்றல் மூடரும் மொழியார். (சு : 748)

மூடி – ஆடை. உடலைமூடுவது என ஆடைக்குக் காரணக்குறி. கலைத்தோல் மூடி முற்றியும். (யுத் : 161)

மூடிய களி – கண்ணை மூடிக் கொள்ளும் படியான பெருங் களிப்பு. மூடிய களி மன்னும் முடுகின நெறி காணு. (அ : 702)

மூடு – போர்வை. உடை. கலைத் தோல் மூடுபற்றியும் முண்டித்தும், (யுத் : 161) [பா : பே]

மூடுதல் – 1. கவித்து மறைத்தல். பூகவன மூடுபடுகர்ப் புளினம். (அ : 545)
2. மிகுதல். மூலமே வீரமே மூடினுயோடு போர் ஏலுமே. (கி : 184)
3. நிறைந்திருத்தல். மூன்று லோகமும் மூடும் அரக்கராம் என்ற காரிருள். (ஆ : 313)
4. மூழ்கிக் கிடத்தல். (உ.வ.) மூலமே வீரமே மூடினுயோடு போர் ஏலுமே- (கி : 184)

மூண்ட கால வெந் தீ – கிளர்ந்தெழுந்த கொடிய பிரளயத் தீ. அண்டத்தை யழிப்பான் மூண்ட கால வெந்தீ யென முற்றிய சீற்றம். (சு : 470)

மூண்டது – முற்பட்டது. (அ : 425)

மூண்டெழு காதலான் – கிளர்ந்தெழுகின்ற அன்பினையுடைய பரதன். மூண்டெழு காதலான் முளரித்தாள் தொழ. (அ : 835)

மூண்டெழுதல் – பொங்கி எழுதல். கோபம் மூண்டெழுந்தும் கொல்லான். (யுத் : 249)

மூண்டெழும் பெரும் பழி - (மனத்தில்) கிளர்ந் தெழுகின்ற பெரும் பழி. மூண்டெழு பெரும்பழி முடிக்கும் வெவ்வினை தூண்டிட. (அ : 141)

மூண்டெழு மாசை – உள்ளத்தில் மூண்டு எழுகின்ற ஆசை. காசையிற் கரியவற் காண மூண்டெழும் ஆசையின் நிமிர்ந்தது அவ் வனிக ராசியே. (அ : 960)

மூத்தது கொள்கை போலாம் – முதுமையடைந்தது போலும்; வலிமை முடிந்திட்டது போலும். மூத்தது கொள்கை போலாம் என்னுடை முயற்சி யெல்லாம். (யுத் : 2248)

மூத்தம் – முகூர்த்தம். மூன்றே முக்கால் நாழிகை கொண்டது. இரண்டு நாழிகை யென்றும் சொல்லப்படும். மூத்த மொன்றின் முடிந்தவர். (ஆ : 556)

மூத்தமை – முதுமைத் தன்மை. உத்தியோகம். மூவாமை யில்லை மூத்தமையும் இல்லை. (ஆ : 101)

மூத்தவர் – தமயன்மார் முதலிய வயதால் மூத்தவர். மூத்தவர் இருக்கவே முறைமையான் நிலங் காத்தவர். (அ : 949)

மூத்தவன் – தமயன். வயதில் மூத்தவன். மூத்தவற் குரித்தர செனும் முறைமை. (அ : 166)

மூத்தான் – அண்ணன். இலக்குவற்கும் இளையவற்கும் எனக்கும் மூத்தான். (அ : 1057)

மூதக்கோய் – மூத்த அறிவுடைய பெரியோனே. மூதக்கோய் இது நற்றவ மன்று. (யுத் : 152)

மூதறிவாளர் – மிக்க பேரறிஞர். மறை வலாளர் மந்திரக் கிழவர் மற்றும் மூதறிவாளர். (யுத் : 4312)

மூதறிவு – முதுமை அறிவு. பேரறிவு. சுடேணன் மூதறிவொடு தொடர்ந்தோன். (யுத் : 836)

முதாதை - மாதா மகர். பாட்டன். ஆணையின் நினது முதாதை ஐய நிற் காணிய விரைவதோர் கருத்தனுதலால். (பா : 1395) [பா : பே] அவன் தன் முதாதையாகிய மூப்பின் யாக்கை வாங்கிய வரிவிலன்ன மாலிய வானென்பான். (யுத் : 1230)

முதானவன் – அண்ணன். முன்னவன். முதிர்ந்தவன். மூதானவன் முன்னர் முடிந்திடெனும் மாதா உரையின் வழி நின்றனேயோ. (யுத் : 2641)

மூதுணர்தல் – பழஞ் செய்தியை யுணர்தல். மூதுணர்ந்த இம் முதுமகன் கூறிய முயற்சி. (யுத் : 3255)

மூதுணர்வு – (முதுமை உணர்வு) பேருணர்வு. மூதுணர்வின் மிக் கான் அடல் வீடணன். (யுத் : 1763)

மூதுரை – பழ மொழி. மூதுரைப் பெருங்கதைகளும் பிதிர்களும் மொழிவார். (சு : 234)

மூதுலகு – பெரிய உலகம். (யுத் 3458)

மூதூர் – பழமையான நகரம். கண்டனென் இலங்கை மூதூர். (சு : 3) (யுத் : 793)

மூதெரி – பழைமையாகிய வேள்வித்தீ. மூதெரி வளர்க்கிலேம். (அ : 131)

மூதெரி வளர்க்கிலேம் – வேள்வித்தீயை வளர்க்க மாட்டேம். (ஆ : 131)

மூப்பு – முதுமைப் பருவம். கிழத்தனம். விரும்பிய மூப்பெனும் வீடு கண்ட யான். (அ : 16) நிரம்ப மூப்படைந்த பின்னரும் துறந் திலன். (அ : 28) விளைந்த மூப்பினிர். (ஆ : 852)

மூப் பெனும் பருவமும் முனிய முற்றினன் – முதுமை யென்னும் பருவந்தானும் வெறுக்கும்படி முதிர்ந்தவன். (ஆ : 834)

மூப்பெனும் வீடு – மூப்புப் பருவம் என்கின்ற விடுதலை பெறுதற் குரிய காலம். மூப்பெனும் வீடு கண்ட யான். (அ : 16)

மூய்சு – அடர்கின்ற மூய்செரி பிறக்க. (யுத் : 644) [பா : பே]

மூய்செரி – மொய்க்கின்ற அக்கினி. (யுத் : 644) [பா : பே]

மூர்க்கர் – 1. மூடர். பிடிவாத குணமுள்ளவர்கள் எவ்வுயிரு முண் டுழல் மூர்க்கராம் அரக்கர்களாயினர். (பா : 380)

2. கொடுமைக் குணமுள்ளவர். மூண்ட வான் மழை யுரித் தெடுத்துலாவரு மூர்க்கர். (யுத் : 3264)

மூர்க்கன் – பிடிவாதக்காரன். மூர்க்கன் முடித்தலையற்ற போதன்றி யாசையருன். (யுத் : 962)

மூர்ச்சிக்கும் – மூர்ச்சிப்பான். பகழியைப் பன்முறை முறிக்கும் மூர்ச்சிக்கும். (யுத் : 3176)

மூர்ச்சித்தல் – பிரஞ்ஞை தவறுதல். மூர்ச்சித்த இராவணனும் முடி சாய்த்து இருந்தான். (ஆ : 938)

மூர்த்தம் - 1. தலை. தலைவன். வளைந்த மூர்த்தியான். (சு : 588)
2. உருவம். நல்லற மூர்த்தி யென்னின். (யுத் : 3124)

மூர்த்தி – 1. வடிவம். அண்ணல் வெங்கதிரவன் அளவில் மூர்த்தி யாய் மண்ணிடை யிழிந்து. (அ : 964)
2. உடல். சுற்றிய சிரையும் உழையின் தோற்றமும் முற்றுறப் பொலிதரு மூர்த்தியான்தனை. (பா : 251)
3. தலையை யுடையவன். உரு வொரு வளைந்த மூர்த்தியான். (சு : 588)

மூர்த்தியான் – தலையை யுடையவன். (அண்) வடிவுடையவன். (வை.மு) (பா : 251) வளைந்த மூர்த்தியான். (சு : 588)

மூரல் – பற்கள். முருக்கிதழ் முத்த மூரல். (பா : 872) மூரல் நகை யான். (கி : 878)

மூரன் முறுவல் – பற்கள் தோன்றும் சிரிப்பு. மூரன் முறுவலன் இளைய மொய்ம்பினேன் முக நோக்கி. (ஆ : 344) மூரன் முறுவற் குறிகாட்டி. (யுத் : 11)

மூரி – 1. பெருமை. மூரி மாரி. (யுத் : 1863) மூரி மழை. (சு:211) மூரி வெஞ்சிலை இராவணன். (யுத் : 1120)
2. வலிமை. மூரி மாரி. (யுத் : 1862) மூரி நந்து. (சு : 356) மூரிவில். (பா : 820) (யுத் : 101)
3. எருமை. (காளை) மோட்டிள மூரி உழக்க வாளைகள் பாளை யிற் குதிப்பன. (பா : 545)
4. சோம்பல் முறித்தல். பொய்த்த தோர் மூரியால் நிமிர்ந்து போக்குவாள். (பா : 1081)
5. மிகுதி. மூரிச்சடையினன். (அ : 710)

முரிச்சடை – பெரிய சடை. (அ : 710)

முரி ஞாலம் – பெருமையுடைய உலக மக்கள். மொய் பெருஞ் சேனையும் முரி ஞாலமும் கைகலந்து. (அ : 990)

முரித்தயங்கு பேராற்றலான் – பெரிதாக விளங்குகின்ற சிறந்த ஆற்றலையுடையவன். இந்திரசித்து. (யுத் : 2154)

முரித்திண்டேர் – வலிமை கொண்ட உறுதியான தேர். ஆழி முழுகி மீதெழுந்த தென்னச் சென்றது முரித்திண்டேர். (யுத் : 3668) (யுத் : 1862)

முரி நந்து – வலிமை பொருந்திய சங்கவாத்தியம். (பா : 88)

முரி நிமிர்தல் – துயின் றெழுந்தவுடன் இரண்டு கைகளையும் நிமிர்த்துச் சோம்பைப் போக்குதல். பொய்த்த தோர் முரியால் நிமிர்ந்து போக்குவாள். (பா : 1081)

முரி நீர் – பெரிய நீர். கடல். வலியகடல் நீர் முரி நீர் முழக்கு. (சு : 108) (பா : 489) இம்முரி நீர் நெடிய மாநிலம். (ஆ:1060)

முரிப்போர் வால் – வலிய போர்த்திற முள்ளவால். (சு : 1179)

முரி போதல் – சோம்பல் முறித்தல். குருதி வாட்கண் முகிழ்த்திட முரி போவார். (யுத் : 2785)

முரிமாக்கள் – வலிமை படைத்த காலாட்படை. மொய்பெருஞ் சேனையும் முரி மாக்களும் கைகலந் தயலொரு கடலிற் சுற்றிட. (அ : 990)

முரி மாநகர் – வலிமையுள்ள பெரிய நகரம். (அயோத்தி) முடுகுக என்ற சொல் முரிமா நகர் உடுபதி வேலையின் உதயம் போன் றதே. (அ : 957)

முரிமாமத யானை – வலிய பெரிய மதயானை. அந்தரிற் சென்றொரு முரி மா மத யானையை முட்டினன். (பா : 846) முரிமாரி. (யுத் : 1863)

முரி முழக்கு – வலிய முழக்கம். பெரு முழக்கு. படியும் விண்ணும் யாவையும் பன்முறை முடியும் என்பதோர் முரி முழக்கினல். (யுத் : 370)

முரி மேகம் – பெரிய மேகங்கள். முழங்கின முறை முறை முரி மேகம். (கி : 466)

மூரியாக்கை - வலிய உடல். மூரி யாக்கையை முழுக்கினர். (யுத் : 1773)

மூரிவால் - பெரிய வால். மூரி வால் போற் கைத்தலங் காலுந் தூங்கக் கிடத்தலைக் கருதி. (யுத் : 1412)

மூரிவான் - பெரிய வானம். மூரிவான் சொரிந்ததே யாம் எனுத் துள்ளு மீனொடும் (சு : 150)

மூரி வில் - பெரிய வில். மூரி விற்கை இளையவன். (அ : 527)

மூரி வெஞ்சிலை - வலிமை சான்ற கடியவில். மூரி வெஞ்சிலை மேலிட்டு மொய்யமர் மூட்டிவிட்டான். (பா : 1376)

மூரி வெள்ளம் - பெருக்கு. பெரிய வெள்ளம். முதுமலர்க் கண்ணீர் மூரி வெள்ளத்தான் முருகின் செவ்வி வழுவுறப் பின்னி. (யுத் : 4266)

மூல காரணத்தவன் - உலகத் தோற்றத்திற்கு மூல காரணனான பிரமன். மூலகாரணத்தவனொடு முடிவுற முற்றும் காலமாமென. (ஆ : 974)

மூலகாரணத்தவனொடு முடிவுற முற்றுங்காலம் - மூலகாரணமாக வுள்ள இறைவனது சொருபத்துடனே இலயப்படும்படி அழியுங் கற்பாந்த காலம். மூல காரணத்தவனொடு முடிவுற முற்றுங் காலமா மெனக் கடையிடு கணிக்கரும் பொருள்கள் மேல கீழுற கீழன மேலுறும் வேலை. (ஆ : 974) [பா : பே]

மூலங்கொண்டார் - திருமாலினது நாபிக் கமலத்தைப் பிறப்பிட மாகக் கொண்ட பிரமன். (வை.மு) நீலங் கொண்டார் கண்ட னும் நேமிப்படை யோனும் மூலங் கொண்டார் கண்டகராவி முடிவிப்பான் காலங் கொண்டார். (யுத் : 3792)

மூலங் கொண்டார் கண்டகர் - நீண்டகாலமாக உலகில் வேரூன்றி யுள்ள கொடியவராகிய அரக்கர். (அண்) (யுத் : 3792)

மூலச்சேனை - மூலபலம். மூலப்படை. (யுத் : 3441)

மூலத்தானை - மூலப்படை. மூலத்தானை யென்றுண்டு. (யுத் : 3250)

மூலத்தேவு - மூல காரணமான திருமால். திருவொடு மிகுந்த மூலத் தேவையும் வணக்கஞ் செய்தான். (யுத் : 2705)

மூலத்தொருவராம் இருவர் – காரணநிலையில் ஒருவராய்க் காரிய நிலையில் இருவரானவர்கள். (சிவனும் திருமாலும்) யாரினு முயர்ந்த மூலத் தொருவராம் இருவர் தம்மை மூரிகவெஞ்சிலை மேலிட்டு மொய்யமர் முட்டிவிட்டார். (பா : 1376)

மூலத் தொன்ருகி – ஆதிகாலத்து ஒன்றே யாயிருந்து. ஒன்ருகி மூலத் துருவம் பலவாகி. (ஆ : 103)

மூலதாமரை முழுமலர் – (சிருட்டிக்கு) மூலமான தாமரை முழுமலர். அயனெடு வந்த மூலதாமரை முழுமலர். (பா : 508)

மூலதாமரை முழுமுதற் கிழவன் – பிரமன். பிரபஞ்சத் தோற்றத் திற்கு மூலமான உந்தித் தாமரையில் தோன்றிய எல்லாப் பிராணிகட்கும் முதல்வனுன பிரம தேவன். (பா : 524)

மூல நாசம் – வேரோடழிவு. நிருதர் வேந்தனை மூல நாசம் பெற முடிக்கும் மொய்ம்பினுள். (ஆ : 232)

மூலப் பொத்தல் – அடிப் பாகத்திலுள்ள புரை. (துளை) (யுத்:2608)

மூலம் – 1. காரணம். மூலகாரணம். ஏதமென்பன யாவையும் எய்துதற் கோது மூலம் இவை. (அ : 109)

2. வேர். மூலப் பொத்தற் செத்தமரம். (யுத் : 2608) சினையும் மூலம் முகடும் வெந்து. (அ : 727) மூலமென் துணைவரைப் பிரிவு முற்றினுன். (யுத் : 400) [பா : பே]

3. மூலாக்கினி. மூலமாம் முகடு விண்டு. (பா : 693)

4. முதல். முதலாக. அன்று மூலமாதியா. (ஆ : 69)

5. ஆதிகாரணம். உனை மூல மென்றுணர்வரப் பிரிவு முற்றி னுன். (யுத் : 400)

6. அநாதி. மூல வெங்கொடுமையிற் றவத்தின் முற்றினுன். (யுத் : 2287)

7. பிரம தேவன் பிறப்பிடமாகிய கொப்பூழ்த் தாமரை. மூலங் கொண்டார். (யுத் : 3792)

8. கிழங்கு. சினையும் மூலமும் வேரும். (அ : 727) [பா : பே]

9. அடிப்படை. மூலமில் கனவின் திரு முற்றுற. (அ : 1083)

10. மலையின் அடிப்பாகம். மூலமே மண்ணில் மூழ்கிக்கிடந்த தோர் பொருப்பு. (யுத் : 1402)

11. அடிப்பாகம். நீணில மூல முட்டலின். (யுத் : 657) மூலச் பொத்தற் செத்த மரம். (யுத் : 2608)

மூலம்வந்துதவிய மூவர் – எல்லாப் பொருள்கட்கும் முதற் பொருளாய்ப் பொருந்தி யருள்கின்ற மும்மூர்த்திகள். மூலம் வந்துதவிய மூவர்க்காயினும் காலமென் றொரு வலை கடக்கலாகுமோ. (அ : 1138)

மூல மந்திரம் – 1. முக்கியமான மந்திரம். (வை.மு)
2. ஆதாரமாகப் பொருந்திய மந்திரம். (அண்)
3. ஆதிகாரணமாய் அமைந்த மந்திரம். (கலா) மும்மைசால் உலகுக் கெல்லாம் மூல மந்திரத்தை. (கி : 308)
4. பிஜாட்சரம். (வை.மு) நான்முகன் மூல மந்திரந் தன்னொடு மூட்டலால். (யுத் : 3862)

மூல மாத்தானை – பெரிய மூலபலப் படை. வாழிமற்றவன் மூல மாத்தானை முன் வருவ. (யுத் : 3889)

மூல மாமலர் முன்னவன் முற்றுங் காலம் – உலகத் தோற்றத்திற் கெல்லாம் மூலமாகிய திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றிய பிரமனது வாழ்நாள் முடியும் பிரமகற்பம். (ஆ : 1064)

மூலமா முகடு விண்டு – மூலாக்கினியால் பெரிய கபாலம் வெடித்து. இதயத் தூடெழுத் தொன்றெண்ணி விடாது பல் பருவம் நிற்ப மூலமா முகடு விண்டு தடாதிருட் படலை மூட. (பா : 693);

மூலமில் கனவு – அடிப் படையின்றித் தோன்றும் கனவு. நீல வல்லிருள் நீங்கலும் நிங்குறும் மூலமில் கனவென. (அ : 1083)

மூல முதல் – முதற் காரணம். மூல முதலுமாய் இடையுமாய். (யுத் : 3401)

மூல முழை – முன்னிருந்த இடம். மொய்த்த குன்றையம் மூல முழைவாய் வைத்து மீடியால். (யுத் : 2771)

மூலமே யில்லா முதல்வன் – தனக்கு முந்திய காரணப் பொருள் வேறொன்று மில்லாத முழு முதற்டவுள். மூல மே. யில்லா முதல்வனே நீ யெடுத்த கோலமே யார்க்கும் தெரி வரிய கொள்கைத்தால். (ஆ : 1181)

மூல வேள்வி – பிரதான வேள்வி. மூல வேள்விக்கு வேண்டுவ கலப்பைகள். (யுத் : 2556)

மூவகைத் திரு மூர்த்தியர் – சிறந்த மும் மூர்த்திகள். மூவகைத் திரு மூர்த்திய ராயினும்... ஏவர் நிற்பவர் எதிர் என்னுடைச் சேவகற்கு. (யுத் : 4135)

மூவகைப் பகை – காமம், வெகுளி, மயக்கம். மூவகைப் பகையரண் கடந்து. (பா : 356)

மூவகைப் பகையரண் கடந்து – மூன்று வகையான பகைகளின் அரண்களை வென்று. (பா : 356)

மூவகை யமரர் – பிரமன் விஷ்ணு சிவன் என்ற மூன்று வகையான தேவர்கள். மூவகை யமரரும் உலகம் மும்மையும். (ஆ : 1125)

மூவகை யுலகம் – மூன்றுலகம். காவன் மூவகை யுலகமும் முனி வருங் கலங்க. (யுத் : 3260) மூவகை யுலக மேத்து முதலவன். (யுத் : 3065) (யுத் : 2708) மூவகை யுலகங் காக்கும் முதல்வன் தம்பி. (யுத் : 2969)

மூவகையுலகு – சுவர்க்கம், மத்திமம், பாதாளம் என்னும் மூன்று லகம். பொன்னகர் மூவகை யுலகினும் அழகு முற்றுற ஏவினன் இயற்றினன். (யுத் : 13) மூவகை யுலகுமாய். (யுத் : 193) மூவகை யுலகுக்கும் முதல்வன். (பா : 1301) (யுத் : 3683)

மூவடி – மூன்றடி. மூவடி குறித்து. (கி : 887)

மூவர் - 1. திரிமூர்த்திகள். பிறத்து யாவையுங் காத்தவை துடைக் கும் திறத்து மூவர். (அ : 37) (யுத் : 82)
2. மந்திரிகள், சேனுதிபதிகள், பிரதானிகள். மூவரோடு மாமந்திர மொருமுகமுயல. (சு : 1092)

மூவர்க்குந் தலைவரான மூர்த்தியார் – மும் மூர்த்திகளுக்குந் தலைமை மூர்த்தியானவர். மூவர்க்குந் தலைவரான மூர்த்தியார் அறத்தை முற்றுங் காவற்குப் புகுந்து நின்ருர் காகுத்த வேடங் காட்டி. (யுத் : 1368)

மூவர்க்கும் இளையவள்ளல் – சத்துருக்கன். (யுத் : 4269)

மூவர்க்கும் பின்னுலான் – மூவர்க்கும் பின் பிறந்தவனுகிய சத்துருக் கன். முன்னர்ச் சென்றனன் மூவர்க்கும் பின்னுளான். (யுத்:4138)

மூவராய் – அரன், அரி, அயன் என்ற மூவராகி. மூவராகி முதலாகி மூலமது ஆகினுலமும் ஆகும் அத் தேவதேவர் பிடித்த போர் வில் ஒடித்த சேவகர். (அ : 247)

மூவரின் நால்வராம் முனி - மும்மூர்த்திகளோடு சேர்த்து நாலாமவராக எண்ணத்தக்க பெருமையுடைய வசிட்ட முனிவன். தேவர்கள் மூவரில் நால்வராம் முனிவந் தெய்தினன். (அ : 5)

மூவா மருந்து - சாவா மருந்தாகிய அமிர்தம். மேலை நான் முகன் மூவா மருந்துண்ட தேவர். (யுத் : 1671)

மூவாமுதல் - அழியாத முதல் மூர்த்தி. மூவர்முதல் நான் முகனார். (யுத் : 1733)

மூவா முதல் ஈசன் - முத்தலில்லாத சிவபிரான். தேவாசுரரும் திசை நான் முகனும் மூவாமுத லீசனும். (யுத் : 2918)

மூவா முதல் நாயகன் - அழியாத உலைவனாகிய முதன்மையுடைய திருமால். மூவா முதனயகன் மீள முயன்ற வந்நாள். (சு : 46)

மூவாமுதல் நான் முகனார் - என்றும் மூப்பில்லாத மூர்த்தியான பிரமதேவன். இறையுஞ் சலியானிவன் மூவாமுதல், நான்முகனார் மொழியால். (யுத் : 1733)

மூவாமை - இளமை. மூவாமை யில்லை மூத்தமையுமில்லை. (ஆ:101)

மூவாயிர கோடி - மூவா யிரங் கோடி. போவாய் இது போது பொலங் கழலோய் மூவாயிர கோடியரோடு. (யுத் : 1691)

மூவிலை - சூலம். மூவிலையைக் கொண்ட முனையோடு கூடிய சூலம். முசுண்டி மூவிலை கழு வயிற் கப்பணம். (யுத் : 2440)

மூவிலை வேல் - முத்தலைச் சூலப்படை. மூவிலை வேலைச் செலவிட்டாள். (சு : 182) (யுத் : 3357)

மூவினை - 1. பழைய வினை. மூத்தவினை.
2. மூன்று வினை. மனமொழி மெய்களாலான வினை. (யுத்:4111)

மூவுலகளித்தவவன் - மூவுலகங்களை அளித்த அந்தப் பிரமதேவன். சிவனு முன்னள் மூவுலகளித்த அவனும் முதல்வ முன்னின்று ஏவினர். (யுத் : 3663)

மூவுலகாக்கிய முதலோன் - மூவுலகத்தையும் படைக்குந் தொழிலைக் கொண்ட முதல்வனான பிரமன். முன்னதாக்கி மூவுல காக்கிய முதலோன். (யுத் : 533)

மூவுலகின் கோவாகிய கொற்றவன் - திருமால். (யுத் : 2918)

மூவுலகு – மூன்று உலகங்கள். மூவுலகும் என்னைத் தொழுதேத்தி எய்தும் பயனெய்தி. (யுத் : 301) (யுத் ; 305) ஒருவன் மூவுலகை யாண்டான். (யுத் : 1376) மூவுலகத் தவரும். (யுத் : 2819) (யுத் : 2840) (யுத் : 3646) (யுத் : 3932) மூவுலகத்துளோர். (யுத் : 4110)

மூவெழு பொழுது – இருபத்தொரு (தலை) முறை. மழுவின்வாய் இனமன்னரை மூவெழு பொழுது தூறி. (சு : 356)

மூவெழு முறைமை – இருபத் தொரு தலைமுறை. மூவெழு முறைமை பாரில் முடியுடை வேந்தை யெல்லாம் மேவெழு மழுவின் வாயால் வேரறக் களைகட்டு. (பா : 1380 (அ' 77)

மூழ்க – 1. ஸ்நானஞ் செய்ய. கோள் இயம் கயம் மூழ்க. (பா:959)
2. முழுவதும். (உ.வி) கோளி பங்கயம் மூழ்க. (பா : 959)

மூழ்குதல் – 1. மறைத்தல். ஒடுங்கிக் கொண்டிருத்தல். முள் எயிறு தின்று பசி மூழ்கிட இருந்த. (கி : 525)
2. அமிழ்தல். புக்கு மூழ்கியது அம் முகக்குன்றம். (யுத் : 1580)

மூழ்குவ – மூழ்குவன. நிறை மாலைக் கொம்புகள்...... மூழ்குவ பலகாணுய். (அ : 700)

மூழை – 1. அகப்பை. (முழவை–நீர் முகக்கும் கருவி) ஆழிவறக்க அமைந்த மூழையெனப் பொலி மொய்பில வாயாள். (ஆ : 1082) (யுத் : 1436)
2. முழை. குகை. (பள்ளமான இடம்) மூதல் நீண்டது. மொய்த்த குன்றை யம் மூல மூழைவாய் வைத்து மீடியால். (யுத் : 2771)

மூள்தல் (மூளுதல்) – 1. முற்படல். ஊக்கத்துடன் முற்படல். கொள்ள முண்டதென் குற்ற மன்றே. (அ : 425) முதலற முடிக்க மூண்டான். (யுத் : 2889) தடவரை மூளுறத்தி அடுக்கின. (கி : 597)
2. மேற்படல். மூண்டெழு காதலான். (அ : 835)
3. சினம் கிளம்புதல். கோபம் மூளுறப் பொருத்தி. (யுத்:3193)
4. கிளர்ந்தெழுதல். அண்டத்தை யழிப்பான் மூண்ட கால வெந்தீ. (சு : 470) மூளா வெஞ்சினம். (சு : 655)
5. உண்டாதல். மூளா வெஞ்சினம். (சு : 655) இவன் சொல்லி ஞல் மூள்வது ஏதம். (ஆ : 812)
6. பல்கி எழுதல். மூளு முளதாய பழி. (ஆ : 619)

7. வளர்தல். பெருகுதல். பாவந்தன்னை மூள்வித்திர். (கி : 638) உவகை மூள வழுவலில் அபயம் உன்பால் வழங்கினன். (யுத் : 430)

8. தலைப்படுதல். மூச்சிறு வாழ்க்கையின் மூண்டுளோர் என. (யுத் : 2297)

9. தொடங்குதல். மூவகை உலகையும் விழுங்க மூள்கின்றான். (சு : 809)

10. பொங்கி எழுதல். கோவ மூண்டெழுந்தும். (யுத் : 249)

மூளா வெஞ்சினம் – தக்க காரணமின்றிக் கிளர்ந்தெழாத கொடிய கோபம். (சு : 655)

மூளுறுத்தி – ஒன்றாகச் சேர்த்து. (வை.மு) ஊக்கத்துடன் முற்பட்டு. (அண்) தாளுறுத்தித் தடவரை தந்தன மூளுறுத்தி அடுக்கின. (கி : 597)

மூளை – மச்சை. மூக்கினூடுஞ் சொரிந்தன மூளையே. (யுத் : 983) மூளைகள் வெடித்திழிந்திட வீழ்ந்தனனு மரோ. (யுத் : 1029)

மூன்றும் உலகம் – மூன்றாகிய உலகம். மூன்றும் உலகம் துயர் தீர்த்தி. (யுத் : 2017)

மூன்றாய் நின்ற பேருலகம் – மூன்றாக நிலைபெற்ற இப் பேருலகம் மூன்றாய் நின்ற பேருல கொன்றாய் முடியாவேல். (யுத் : 2607)

மூன்று – 1- முக்குணம். எண்ணிய மூன்றனுள் முற்குணத்தவரே முதலோர். (பா : 2)

2. மூன்று என்னும் எண். ஈசற்கு முந்திய மலர்க்கண் ஓர் மூன்று. (ஆ : 236) (ஆ : 525)

மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலம் – பிரமன் விஷ்ணு சிவன் என்ற மூன்று பிரிவாகத் தோன்றிக் கிளர்ந்த பரம்பொருள். (ஆ : 1180)

மூன்று கோடி – மூன்று கோடி. மூன்று கோடியர் எடுக்கினும். (யுத் : 627)

மூன்று கோடியின் மேலொரு முப்பத்து மூவர் – முப்பத்து முக்கோடிக் கணக்கினர். துனுக்க முற்றிரிவாத் தொகுதி மூன்று கோடியின் மேலொரு முப்பத்து மூவர். (யுத் : 515)

மூன்று நாடு – மூன்றுலகம். மூன்று நாட்டிலுள்ளவர் யாவரும் மடிய. (யுத் : 3636)

மூன்று நூல் – முப்புரி நூல். மூன்று நூல் கிடந்த தோள்முனி. (அ : 1202)

மூன்று பகல் – மூன்று பகற் பொழுது. மூன்று பகலிடை முற்றவும். (யுத் : 684)

மூன்று பத்தாயிரத் திரட்டி - அறுபதினுயிரம். ஆன்றவ ருணர்த்திய அக்கு ரோணிகள் மூன்று பத்தாயிரத் திரட்டி முற்றுமே. (அ : 997)

மூன்றுரு – பிரமன், திருமால், சிவபிரான் என்பவர். (கலா) மூன்றுருவெனக் குணம் மும்மையால். (கி : 1)

மூன்றுலகு – மண் விண் பாதாலம் என்பன. முன்றுலகு மீன்ருனே முன்னின்ருனே. (அ : 1056)

மூன்றுலகும் ஈன்ருன் – பிரமன். (அ : 1056)

மூன்று வைப்பு – மண்ணுலகம், விண்ணுலகம், பாதாளம் என்கின்ற மூன்றுஉலகம். (அண்) மேல் கீழ்நடு என்ற மூன்றுலகம். மூன்று வைப்பினும் அப்புறத்துலகினும். (யுத் : 3496)

மூன்றுற்ற தலம் – மூன்ருகவுள்ள உலகம். மூன்றுற்ற தலத்திடை. (சு : 66)

முன்றெயில் – திரிபுரம். கரித்த மூன்றெயில். (சு : 139)

## மெ

மெத்த – மிகுதியாக. உலகினை மெத்த மீதெழு மேகம். (யுத்.1150)

மெத்தி - மிகுதியான. மெத்த மெத்தியோனிகள் ஏறினும். (யுத் : 4079)

மெத்துதல் – 1. நிறைதல். மிகுதியாதல். மெத்தியோனிகள். (யுத் : 4079) மெத்து யோனிகள். (யுத் : 4079) [பா : பே]
2. புகழ்தல். மெத்து சந்திரர். (பா : 499)

மெய் – 1. உடம்பு. மெய் யெடுத்த கவி வெள்ளம். (யுத்:2020) மெய் கலந்த மால் நிகர்வரும் உவமையை வென்ருர். (சு:877) [பா:பே] குன்று மறையும் தருமமும் மெய்குழைந்து குழைந்து விழுந்தமுத. (யுத் : 2629) [பா : பே] மெய் சுருண்டாள். (யுத் : 2631)

2. அறிவு. (கலா) கைவழி நிதியெனு நதிகலெ மறையோர் மெய்வழி உவரி நிறைத்தன மேன்மேல். (பா : 303)

3. சத்தியம். உண்மை. மெய்முகிழ்த்த தொத்தின் தொகை கொல். (சு : 542) மெய் எஞ்சாவகை. (யுத் : 4024)

4. மெய்ப் பொருளாகிய கடவுள். நெறி அறிஞர் யாவரும் மெய் மறந்தனர். (அ : 503) நின்னை மெய்யாக மெய்யின் நினையும். (யுத் : 2208) (யுத் : 423)

5. தோற்றம். வீடுறு மூலகினும் விளங்கு மெய்யறு (கி : 829)

6. தலை. ஓாடிக் கலகிலாதவ் வடிக் கன்பன் மெய்யதாம். (பா : 455)

7. தத்துவ ஞானம். மெய்ந்நெறி. (வை.மு) (அண்) நெறி யறிஞர் யாவரும் மெய்மறந்தனர். (அ : 503)

8. மனம். தையலாளை மெய்யுறப் பாவியாத போதிலாத பாவி. (ஆ : 651)

9. நிறம். மெய்த்தனிச் சோதி. (கி : 142)

10. மெய்யுணர்வு. மெய்யின் நினையும். (யுத் : 2208)

11. உள்ளன்பு. மெய்யுறக் கொடுத்து. (யுத் : 4335)

12. வடிவம். மானவன் மெய்யிறை மறக்கலாமையின். (ஆ : 1133)

மெய்க்கடுந்திறல் வீடணன் – மெய்ம்மையும் திண்ணிதாகிய வலிமையும் உடைய வீடணன். (யுத் : 3288)

மெய்க்கணி - உண்மைக்கு அலங்காரம். மெய்க்கணியே புகழின் வாழ்வே. (ஆ : 197)

மெய்க் குரல் – உண்மையான குரல். மெய்க்குரல் சாபமிட்டான். (சு : 564)

மெய்க்குலம் – உடல் தொகுதிகள். கண்டகர் மெய்க்குலம் வேரொடு துணித்து வீழ்த்தின. (ஆ : 491)

மெய்க் கொடு நரகு – மெய்மையான கொடிய நரகம். இன்னோர் புகு மெய்க்கொடு நரகிடை வீழ்க யானுமே. (அ : 895)

மெய்க் கொள் வால் – உடம்பில் ஓர் உறுப்பாகக் கொண்ட வால். மெய்க் கொள் வாலினால் மிடல் இராவணன் தொக்க தோள் உறப்பிணித்த நாள். (கி . 126)

மெய்க் கொள்ளுதல் – உடலைக் கொள்ளுதல். மெய்க் கொளவிளி யினும். (யுத் : 382)

மெய்கண்ட பொய் – மெய்யைக் கண்ட பொய். விரிந்த தன் படை மெய்கண்ட பொய்யென வீய்ந்த. (யுத் : 3762)

மெய் கலந்தமா – மானுட மடங்கல். மெய் கலந்தமா நிகர் வரும் உவமையை வென்றார். (சு : 877)

மெய் கலந்தமால் – உடம்பு பெற்றுள்ள மேகம். (வை.மு) (சு : 877) [பா : பே]

மெய்குழைதல் – உடல் நெகிழ்தல். மெய்குழைந்து குழைந்து தளர்ந்தழுத. (யுத் : 2629)

மெய் கொள் பூசனை – உண்மையான பூசனை. படைகட்கு வரன் முறை மெய் கொள் பூசனை இயற்றினம் விடுமிது விதியால். (யுத் : 2482)

மெய் கொள் வேத மெய்யர் – மெய்ம்மையான வேதங்களையே வடி வாகவுடைய முனிவர்கள். மெய் கொள் வேத மெய்யர் வாழ் மொய் கொள் சோலை. (ஆ : 73)

மெய்ச்சரண் – மெய்ம்மையான பாதுகாப்பு. (யுத் : 3953)

மெய்ஞ்ஞானக் கண் – தத்துவ ஞானமாகிய கண். மெய்ஞ்ஞானக் கண்ணருள் செய் கண்ணன். (ஆ : 259)

மெய்ஞ்ஞானம் – தத்துவ ஞானம். (ஆ : 259)

மெய்ஞ்ஞானியர் – தத்துவ ஞானிகள். மறுமை கண்ட மெய்ஞ் ஞானியர். (யுத் : 548)

மெய்ஞ்நிறை விரிசாயல் – உடலில் நிறைந்த மிக்க சாயல். இன மென்றே மெய்ஞ்நிறை விரிசாயல் கண்டு. (அ : 695)

மெய்த்த – 1. வாய்மையைக் காத்த. கடையோட மெய்த்த வேந்தன். (அ : 602)
2. உண்மை யறிவினையுடைய. மெய்த்த தாதை விரும்பினன் நீட்டிய கைத்தலங்களைக் கையினின் நீக்கி. (சு : 353)

மெய்த்தகு மருந்து – மெய்ம்மையுடன் பொருந்திய (தவறுமற் பயன் விளைக்கின்ற) மருந்து. (சஞ்சீவி) மெய்த்தகு மருந்து தன்னை வெற்பொடுங் கொணர்ந்த வீரன். (யுத் : 3538)

மெய்த்ததாதை – சத்திய சீலனுன தந்தை. நீதி விரத மெய்த்த தாதை பாதம் வணங்கி. (பா : 1313)

மெய்த்தல் – 1. நல்லொழுக்கந் தவருதிருத்தல். (வை.மு) உண்மை யறிவுடைமை. (அண்) மெய்த்த தாதை. (சு : 353)
2. நிருபித்தல். (உ.வி) வேத மெய்க்கும். (சு : 34)

மெய்த்திரு - 1. அழியாத செல்வம். மெய்த்திருப்பதம் மேவென்ற போதினும். (சு : 349)
2. உண்மையான திருமகள். மெய்த்திரு விருக்கும் அலங்கன் மார்பையும். (அ : 60) (சு : 308)

மெய்த்திருப்பதம் – உண்மையான (அழியாத) செல்வமாகிய அரச பதவி. (சு : 349)

மெய்த்திறத்து – உண்மைத் தன்மையுடைய. மெய் பேசும் திறமுடைய. பொய்த்திறத்தின ருக்குதியோ புகல் மெய்த் திறத்து நம் வேந்தனே நீ என்றான். (அ : 310) மெய்த்திறத்து விளங்கிழை யுன்னுவாள். (அ : 322)

மெய்ந் நெறி – உண்மையான நெறி. (அண்) (கு) மெய்ப் பொரு ளாகிய கடவுள். (வை.மு) மெய்ந்நெறி நன்மையன். (பா : 3

மெய்ந்நெறி நன்மையன் – உண்மையான நெறியும் பயனுமாக விளங்கும் இறைவன். (அண்) மெய்ந்நெறியை உண்டாக்கிய நன்மையுடைய பரமபதி. (கு) உண்மைப் பொருளாய் (அப்பொரு ளைப் பெறுதற்கு) உபாயமாகி (ப்பற்றினார்க்கு) நன்மை தருபவனாகிய கடவுள். (வை.மு) மெய்ந்நெறி நன்மையன் பாதமல்லது பற்றிலர் பற்றிலார். (பா : 3)

மெய்ந்நெறி நாயகன் – மோட்ச நெறிக்கு நாயகனான திருமால். மெய்ந் நெறி நாயகன் தனைநாளும் வணங்கிய தூய நற்றவர். (கி : 928)

மெய்ந்நெறி நோன்மையன் - உலகத்துக் கெல்லாம் உண்மையான வழியைத் தருகின்ற பெருமையுடையவன். (பா : 3) [பா : பே]

மெய்ப்பலி - உடம் பாகிய பலி. என் தாதைக்காக மெய்ப்பலி விசும் புளோர்க்கு ஊட்டுவன் உயிர் கொண்டு. (யுத் : 727)

மெய்ப்புகழ் - உண்மையான கீர்த்தி. இராவணன் மெய்ப்புகழ். (யுத் : 968)

மெய்ப்புதல்வர் - சற்புத்திரர். சான்றவ ராக மெய்ப் புதல்வராக. (அ : 1191) [பா : பே]

மெய்ப்புதல்வன் - மெய்ம்மையான புதல்வன். கைகேசி மெய்ப்புதல் வன். (அ : 387)

மெய்ப் பெருந் திருநகர் - உண்மையான பெருமை பெற்ற அழகிய நகர். இலங்கை. (யுத் : 948)

மெய்ப்பேர் (பெயர்) - 1. உண்மைப் பெயர். மெய்ப்பேர் தீட்டியது. (சு : 552)
2. அழியாத பெயர் - உண்மைப் பொருள் பொதிந்ததாகிய ராம நாமம். (அண்) (கலா) பயனளிக்கும் பெயர் (வை.மு) தெருண் டான் மெய்ப் பெயர் செப்ப லோடும். (கி : 997) (உ.வி) (சு:552)

மெய்ப்பொருள் - 1. பரம் பொருள். கடவுள். தன்னின் மேலொரு பொருளு மில்லா மெய்ப்பொருள். (கி : 384)
2. மெய்ம்மைச் செய்தி. (யுத் : 4011)

மெய்ப் போர் மாருதி - உண்மைப் போரைச் செய்தலில் வல்ல அனுமான். (கி : 412)

மெய்புகத் துன்னெடுஞ் கஞ்சுகம் - உடம்பு முழுவதும் உட்புகும்படி அமைந்த நீண்ட ஆடையாலாகிய சட்டை. மெய்புகத் துன்னெடுங் கஞ்சுகத்துகிலர். (ஆ : 575)

மெய்ம்மறத்தல் - உடல் அவச நிலையடைதல். கான்ற இன்னுயிர் காலனும் கவர்ந்து மெய்ம் மறந்தான். (ஆ : 521)

மெய்ம் முதல் - உண்மைப் பொருளாகிய முதற் கடவுள்; திருமால். வெந்தெழு கொடுவினை வீழ்க்கும் மெய்ம் முதல். (பா : 247)

மெய்ம் முறை - சத்தியமாக. உண்மையாக. சோர்விலீர் மெய்ம்முறை சொல்லுவீர் என்றான். (யுத் : 350)

மெய்ம் மெலிவு – சரீரத் தளர்ச்சி. குன்ற மொன்றில் மெய்ம் மெலி வாற்றலுற்ருன். (யுத் : 3542)

மெய்ம்மை – 1. உண்மை. மெய்ம்மை போல் என்றுந் தேய்வுருத் தூணி. (பா : 336) இறப்பெனும் மெய்ம்மை. (அ:21) மெய்ம்மை பொதிந்தன. (அ : 311) மெய்ம்மை யல்லது புகல்கிலாமையால். (ஆ : 193) (யுத்:720) மெய்ம்மையின் வேலி போல்வான. (கி.68) மெய்ம்மையுற்றவர். (யுத் : 1291) மெய்ம்மை தேய. (யுத்:1646) (யுத் : 3848) மெய்ம்மை யோன். (கி : 987) (கி : 988) மெய்ம் மொழி. (சு : 684)

2. இயற்கைத் தொழில். தன்மை. மெய்ம்மை யல்லாற் புரி யாதன யாவையும் ஆய்ந்து கொண்டான். (யுத் : 1970) விண்ட லம் இருபுடை விளங்கும் மெய்ம்மைய. (சு : 591)

3. மெய்யன்பு. வனையறு நோன்பினுளும் மெய்ம்மையின் நோக்கி. (ஆ : 1202)

மெய்ம்மை ஏத்து – உண்மையான புகழ்ச்சி. மெய்ம்மை ஏத்தவை இசைக்கும் செம் பொன் மண்டபம். (அ : 286)

மெய்ம்மை தொடர்ந்தோய் – உண்மைநெறி நடப்பவனே. (சு : 684)

மெய்ம்மை நிற்பதாக்கி – வாய்மை நிலை நிறுத்தி. நெறிதிறம்பாத் தன் மெய்மை நிற்பதாக்கி இறந்தான் தன் இளந் தேவி. (அ : 1059) [பா : பே]

மெய்ம்மை பொதிந்தன - மெய்ம்மை நிறைந்தன. (அ : 311)

மெய்ம்மையால் – உண்மையாகவே. மெய்ம்மையால் ஆறிஞன். (கி : 139)

மெய்ம்மையின் வாரம்–வாய்மைத் திறத்தோடு பொருந்திய செயல். மெய்ம்மையின் வார மன்று. (கி : 321)

மெய்ம்மையின் வேலி – மெய்ம்மையைப் பாதுகாக்கும் வேலி. மெய்ம்மையின் வேலி போல்வான். (கி : 68)

மெய்மையுற்ருர் – வாய்மைப் பண்பாகிய நல்லொழுக்கத்தினைக் கடைப்பிடித் தொழுகுவோர். மெய்மையுற்ருர் சிலர் அல்லவரே பலர் என்பதுண்மை. (கி : 270)

மெய்ம் மொழி – வாய்மை. சலித்தது மெய்ம் மொழி. (யுத் : 1448)

மெய்யஞ்சுதல் – மெய்ந் நடுக்கங் கொள்ளுதல். கையஞ் சாயுத முடைய அக்கடவுளைக் காண மெய்யஞ் சாதவன். (கி : 723)

மெய்யணிகள் – உடலில் அணிந்திருந்த அணிகள். மெய்யணிகள் மின்ன. (பா : 1228)

மெய்யர் - மெய் கூறியவர். பாரை ஓர் மெல்லியல் என்றவர் மெய்யரே கொலாம். (அ : 969)

மெய்யராகம் – உடலிற் பூசிய சந்தனச் சுண்ணம். அங்கராகம் மெய்யராக மழிய. (பா : 1032)

மெய்யற மூர்த்தி – உண்மைத் தருமஸ்வரூபி. வேதமும் அறனுஞ் சொல்லும் மெய்யற மூர்த்தி வில்லோன். (சு : 1120)

மெய்யன் – மெய்ப் பொருளான இறைவன். மெய்யனைத் திரையின் வேலை மென்மலர்ப் பள்ளியானை ஐயனை. (யுத் : 893)

மெய்யார் தவம் – மெய்ம்மை பொருந்திய தவம். மெய்யார் தவமே செய்துன் மிடன்மார் பரிதிற் பெற்ற செய்யாள் என்னும் பொன்னும். (அ : 360)

மெய்யார் நிதியம் பெரு வெறுக்கை - நிலையாகப் பொருந்திய தொகுதியாயுள்ள செல்வம். (வை.மு) சங்கம் பதுமம் என்னும் இவற்றின் வடிவமைந்த நிதியம். (கலா) மெய்யார் நிதியம் பெரு வெறுக்கை வெறுக்கவீசி. (யுத் : 2624)

மெய்யிடை–(சேனை) உள்ள இடம். மெய்யிடை நெருங்க. (யுத்:700)

மெய்யிலாள், – உண்மை யில்லாதவள். (சூர்ப்பணகை) (ஆ : 267)

மெய்யிற்று – உண்மையில் நிகழக் கூடியது. உண்மையானது. அலக்கணும் இன்பமும் அணுகு நாளவை விலக்குவம் என்பது மெய்யிற்றுகுமோ. (ஆ : 1007)

மெய்யின் மெய் – 1. உண்மையின் வடிவம். மெய்யின் மெய்யே. (அ | 365)
2. வாய்மைக்கு உடல். மெய்யின் மெய்யன்ன நின்னுயிர் வீடினால் உய்யுமே யவன். (யுத் :·4160)

மெய்யினினைதல் – உண்மையுணர் விறலாராய் கூறுதல். மீளாத வேத முடிவின்கண் நின்னை மெய்யாக மெய்யின் நினையும். (யுத் : 2208)

மெய்யினுக்குயிரை ஈந்த வேந்தன் - தசரதன். (யுத் : 4218)

மெய்யினுக் குறையுளான ஒருவன் – உண்மைக்கு இருப்பிடமா யுள்ள ஒருவனாகிய விபீடணன். (யுத் : 427)

மெய்யினைப் பொய்யென்றான் – தத்துவப் பொருளாகிய கடவுளை இல்லை யென்று சாதிக்கின்ற நாஸ்திகன். மாமறை நெறியி னின்ற மெய்யினைப் பொய்யென்றானும் மீள்கிலா நரகின் வீழ்வார். (யுத் : 423)

மெய்யி னோடருந் துறக்க முறுதல் – உடம்புடனே பெறுதற் கருமை யான சுவர்க்கத்தை யடைதல். மெய்யினோ டருந்துறக்க முற்று ரென வியந்தார். (யுத் : 4076)

மெய்யுணர்ந்த போதம் – தன்னையும் தனக்காதாரத் தலைவனையும் கண்டுணர்ந்த மெய்ஞ்ஞான அறிவு. வேதத்தானும் நல்வேள்வி யினானும் மெய்யுணர்ந்த போதத்தானும். (யுத் : 160)

மெய்யுணர்பவன் – தத்துவ ஞானம் பெற்றவன். பரமன். (வை.மு) (அண்) உண்ட பேதைமை மயக்கற வேறுபட்டுருவங் கொண்டு மெய்யுணர்பவன் கழல் கூடியது ஒப்ப. (பா : 548)

மெய்யுணர்வு – தத்துவஞானம். துரக்கும் மெய்யுணர்வு இருவினை களை. (யுத் : 1441)

மெய்யுணர்வோர் – உண்மைத் தத்துவ ஞானிகள். வினை வரும் நெறியை மாற்றும் மெய்யுணர்வோரும். (கி : 925)

மெய்யுயிர் – உடம்பிலுள்ள உயிர். விண்ணிறைந்தன மெய்யுயிர். (யுத் : 3385)

மெய்யுயி ரனையான் – உடலிலுள்ள உயிர் போன்றவன். (குகன்) மெய்யுயிரனையானும் முடுகினன் நெடு நாவாய். (அ : 677)

மெய்யுரை – மெய் பேசுதல். மெய்யுரை குற்ற மெனப் புழுங்கி விம்மும். (அ : 208)

மெய்யுரைத்தல் – மெய் பேசுதல். மெய்யுரைத் துயிர் கொடுத் தமரரும் பெறுகலா வீடு பெற்றான். (யுத் : 97)

மெய்யுற – உறுதியாக. ஊழின் வால் மெய்யுறப் பற்றுதிர் (கி . 847)

மெய்யுறப் புழுங்கி நைந்தான் – உடல் மிகவும் வெயர்த்து வருந்தினுன். பன்னெடுந் திரள்தோள் ஐயன் மெய்யுறப் புழுங்கி நைந்தான். (யுத் : 713)

மெய்யுறு கேண்மை – மெய்ம்மையாக நிலைபெற்ற நட்பு. மெய்யுறு கேண்மையார். (கி : 6271)

மெய்யுறு விளக்கம் – உடம்பிலுள்ள காந்தி. விளக்கென விளங்கும் மணி மெய்யுறு விளக்கம். (சு : 259)

மெய்யெடுத்த – உடம்பெடுத்துள்ள. மெய்யெடுத்த கவி வெள்ளம். (யுத் : 2020)

மெய்யெனும் மாதவம் – வாய்மை என்னும் பெரிய தவம். மனையின் மெய் யெனும் மாதவம் புரிந்தவன் மைந்தன். (அ : 773)

மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான் – உண்மையாகப் பிறந்திருந்தும் ஒரு பொழுதும் பிறப்பில்லாதவனுகிய இராமபிரான். ஐயா பிழைத்தியோ என்னும் மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான். (யுத் : 2174)

மெய் யொத்து – மெய்ம்மை தவருமல். வாளரக்கன் மெய்யொத்து ஆற்றிய தவம். (சு : 113)

மெய் வணக்குறு வேய் – உடல் வளைவைப் பொருந்திய மூங்கில். மெய் வணக்குறு வேயின மீன்ற மெல்லரிசி. (அ : 770)

மெய் வரம் – உண்மையான வரங்கள். (யுத் : 3802)

மெய்வருபோகம் – உடற் சேர்க்கையாலுண்டாகிய காம இன்பம். மெய்வரு போகம் ஒக்க உடனுண்டு விலையுங் கொள்ளும் பையரா வல்குலார். (பா : 579)

மெய்வலி யரக்கர் – உடல் வலிமை கொண்ட அரக்கர். ஐயிரு தலையினேன் அனுசனுதியாம் மெய் வல்யரக்கர். (பா : 19)

மெய்வழி உவரி – உடம்பினிட மாகிய கடல். (அண்) மெய்ப் பொருள் வழியும் மனமாகிய கடல். (கலா) (வை.மு) கைவழி நிதி யெனும் நிதி கல மறையோர் மெய்வழி உவரி நிறைத்தன மேன் மேல். (பா : 303)

மெய் விளைவிடம் – உண்மை வெளிப்படுமிடம். மெய் விளைவிடத்து முதல் ஐயம் விடலுற்ருள். (பா : 1238)

மெய் வேதம் - உண்மையான வேதம். மெய் வேத நான்கும் திண்டு ருவனல்லாத திருமாலே இவனென்றூர். (யுத் : 2693)

மெய்வேறு வகிர்களாகக் கீண்டாலும் பொருந்துவிப்பதொரு மருந்து - ஸந்தான கரணி. மாண்டாரை உய்விக்கும் மருந்து தொன்றும் மெய்வேறு வகிர்களாகக் கீண்டாலும் பொருந்து விப்பதொரு மருந்தும். (யுத் : 2682)

மெல்கிய இடையினுள் - மெல்லிய இடையினையுடையவள். சீதா பிராட்டி. (யுத் : 4202)

மெல்லடகு - மெல்லிய கீரை. அருந்தும் மெல்லடகு. (சு : 344) (அ : 644)

மெல்லணை - 1. மெத்தென்ற படுக்கை. நனை நறுந்துளி நஞ்சு மயக்கவுந் தனையுணர்ந்திலன் மெல்லணைத் தங்கினுன். (கி;589)
2. மெத்தென்ற ஆசனம். யான் பொன் செய் பூத்தொடர் மெல்லணை வைகலும் வேண்டுமோ. (கி : 672)
3. மெல்லிய படுக்கை இழுங்கணையால் மேவுங்குளிர் மெல்லணை மேவினையோ. (யுத் : 2642)

மெல்லத் தூங்கிய விழியார் - மெதுவாகச் சிறு துயில் கொள்ளும் கண்களையுடையவர். மெல்லத் தூங்கிய விழியார் துளங்கிய நடையார். (யுத் : 2232)

மெல்லம்பு - மெல்லிய அம்புகள். (யுத் : 1663)

மெல்லமுதம் - இனிய அமுதம். விண்ணருள வந்ததொரு மெல்லமுத மென்ன. (ஆ : 259)

மெல்ல மெல்ல - 1. மெள்ள மெள்ள. மிதித்தது மெல்ல மெல்ல. (ஆ : 801) மெல்ல மெல்ல அயர்த்திலள் அரிதிற்றேரி வாய்திறந் தரற்ற லுற்ருள். (யுத் : 3190)
2. படிப்படியாய். மெல்ல மெல்ல... வெண்ணெய் போல் வெதும்பிற்றன்றே. (ஆ : 640) [பா : பே]

மெல்லரக்கு - மென்மையான அரக்கு. இராவணனும் இவ்வூரும் மெல்லரக்கின் உருகிவிழ வெந்தழலால் வேய்கேனே. (சு:325)

மெல்லரிக் குரல் - மெல்லிய சிறிய பரல்களையுடைய பாதச் சிலம் பொலி. (கலா) மெல்லென இடையிட் டொலிக்கும் அரிப்பறை போன்ற ஒலி. (கி : 610)

மெல்லியர் – 1. வலியொடுங்கியவர். தேவர் மெல்லியர். (யுத்:44) 2. மகளிர். வேற்கண் வெம்புருவப் போர்வில் மெல்லியர் வளைந்தபோது. (கி : 611) [பா : பே]

மெல்லியல் – மென்மைத் தன்மையுடைய பெண். (சீதை) மெல்லியல் ஆக்கை முற்றும் நடுங்கினள். (யுத் : 1595) (பா : 1036)

மெல்லியலார் – பெண்கள். மட மெல்லியலார் தமைப்போல் நிலத்தின் மேல்விழ்ந் தமுவதே யான். (ஆ : 200)

மெல்லியோய் - அற்பனே. மெல்லியோய் கல்லெடுக்க உரியானு நின்றனன். (யுத் ; 2026)

மெல்லியோர் – சிற்றறிவுடையோர். மிடற்றினுக் குவமை யென் றுரைக்கும் மெல்லியோர்க் குடற்பட வொண்ணுமோ. (சு : 539) [பா t பே] (சு : 866)

மெல்லுருவு – மென்மையான (பெண்) உருவம். பாருழையினில்ல தொரு மெல்லுருவுபாரா. (ஆ : 260)

மெல்லென் சயனம் – மெத்தென்ற படுக்கை. மெல்லென் சயனத் தான். (யுத் . 892)

மெல்லென் பிடி – மென்மையான பெண் யானை. மெய்யுறத் தழிஇய மெல்லென் பிடியொடும். (சு : 6)

மெல்லென – மெல்ல. வெளிறு நீங்கிய பாலையை மெல்லெனப் போனர். (அ : 736)

மெல்லென மெல்லென – மெல்ல மெல்ல. பன்னூல் விதங்களால வன் மெல்லென மெல்லென விளம்பும் இதங்கள். (பா ; 901)

மெல்லோதியர் – மெல்லிய கூந்தலையுடைய பெண்கள். கன்னியராம் மெல்லோதியர் விளையாடிடமே. (பா : 1262)

மெலிகுவது – தளர்தல் மெலிகுவதன்றி யுண்டோ விண்ணவர் வெருவல் கண்டால். (யுத் : 3310)

மெலிதரும் உணர்வு – சிற்றறிவு. மெலிதரும் உணர்வினேன் என் விளம்புகேன். (பா : 1326)

மெலிதல் – 1. வருந்தல். விள்ளாநிலை சேர் அன்பால் மகன் மேன் மெலியின் உலகம் கொள்ளா தன்றே. (அ : 346) 2. உக்கிரந் தணிதல். வெயிலின் வெங்கதிர் தண்ணிய மெலிந் தன. (கி . 446)

3. குறைவுபடுதல். வாழ்க்கை நாளும் மெலியுங்கடை சென்றுள தாதலின். (ஆ : 940)

மெலிந்த தோள்கள் வீங்குதல் – (பிரிவினால்) மெலிந்த தோள்கள் (மகிழ்ச்சியினால்) பூரித்தல். மயிலே நாள்கள் சாலவும் நீங்கலின் நலங் கெட மெலிந்த தோள்கள் வீங்கி. (யுத் : 530)

மெலியர் – பலவீனர். மித்திரர் அடைந்துளோர் மெலியர் வன்மை யோர். (யுத் : 318)

மெலியவர் கடன் – வலியற்றவர் செய்ய வேண்டிய கடமை. பொது வுற எண்ணும் புன்றொழில் மெலியவர் கடன். (யுத் : 45)

மெலியாதவர் – தளர்ச்சியில்லாதவர். (யுத் ; 2912)

மெலிவாற்றல் – தளர்ச்சியை ஆற்றிக் கொள்ளுதல். கொண்டல் மேனிறை குன்ற மொன்றின் மெய்ம் மெலிவாற்றலுற்றான் (யுத் : 3542)

மெலிவித்தீர் – மெலியச் செய்தீர். வயிரத் தோளை மெலிவித்திர். (யுத் : 1592)

மெலிவு – 1. பிறரைத் துன்புறுத்தல். வலியவர் மெலிவு செய்தாற் புகழன்றி வசையு முண்டோ. (கி . 317)

2. மனத் துயரம். வித்தகர் சொற்களால் மெலிவு நீங்கினான். (யுத் : 339)

3. சோர்வு வித்தகன் சரந்தொட மெலிவு தோன்றிய சித்திரம் பெறுதலின். (யுத் : 1312

4. இளைப்பு மெலிந்த மெலிவகல ஓங்கினாள். (யுத் : 1669)

5. தளர்ச்சி. மெலிவென்பதும் உணர்ந்தேன் எனை வேன்றாய். (யுத் : 1143)

மெழுகு – தேனடையின் சக்கை. அனலில் இட விரைவில் உருகுந் தன்மையது. இடருறு மறை யோரும் எரியுறு மெழுகானார். (அ : 677) [பா : பே] வெவ்வழலுற்ற மெழுகென உருகும் மெய்யன். (சு : 572)

மெள்ள மெள்ள – மெள்ள மெள்ள. மெள்ள மெள்ள உயிர் நிலைத்து உவகையூன்ற. (யுத் : 3546)

மென் கிளி – மென்மையாகிய கிளிப்பிள்ளை. என்னோர் மென் கிளிக்கு யார் பெயரிகேன் மன்ன என்றலும். (சு : 684)

மென்துகில் - மெல்லிய ஆடை. ஒரு நிலையுருத மென்துகிலாள். (சு : 375)

மென் மகளிர் - மெல்லியலாரான மங்கையர். கலவிப் போரின் ஒசிந்த மென் மகளிரே போல். (பா : 571)

மென் மேல் - மேன் மேல். இவை கொலாம் விளைவ மென் மேல். (யுத் : 1627) (யுத் : 2816)

மென்மை - 1. மெலிந்த தன்மை. மென்மைத் தோள் நிலத்தை மேவ. (யுத் : 344)
2. அடக்கம். (வெ.ப) எளிமை. (அண்) மென்மையினுல் உன் தன் மாட்டுவந்தது காணுமதியினுல். (சு : 1151)

மென்றன - கடித்தன. மேகத்துருமென எயிற்றுளி மென்றன வெகுளி பொங்க. (ஆ : 876)

மென்றூசு - மெல்லிய ஆடை. மகளிர் மென்றூசு. (அ : 1048)

மென்னடை - மென்மையான நடை. பிடியின் மென்னடைப் பெண். (பா : 640)

## மே

மே - பொருந்திய. மேவியம் படை படப்பட. (வியம்மே) (யுத்:3501)

மேக்கு - 1. மேற்றிசை. வெங்கருங் கால் பொர மேக்கு நோக்கிய பொங்கிரும் பாற்கடல் தரங்கம். (பா : 119)
2. உயரம். மேல். மேலே. மேக்குற விசைத் தாரென்னப் பொலிந்தனர். (சு : 8)
3. வானம். மேக்கு நால்வகை மேகமும். (சு : 244)

மேக்கு நிமிர் விம்மலள் - மேலே கிளர்ந் தெழும் ஏக்கத்தையுடையவள். (சு : 556)

மேக்கு நீங்கிய - மேலான தொன்றில்லாத. மேக்கு நீங்கிய வெள்ள உவகையால் ஏக்க முற்று. (யுத் : 3946)

மேக்கு நோக்குதல் - மேலே நோக்கி எழுதல். (வை.மு.) மேற்றிசையைப் பார்த்துக் கரை புரண்டு வருதல். (அண்) (பா:119)

மேக்குயர் - மேன்மேலுயருகின்ற. மேக்குயர் வெள்ளம். (யுத்:1089) மேக்குயர் விம்மலன். (யுத் : 4142) மேக்குயர் சீயம். (யுத்:285) (யுத் : 1790) (யுத் : 1089) (சு : 895)

மேக்குயர் தடந்தோள் — மேலே உயர்ந்த பெரிய தோள். மேக்குயர் தடந் தோள் பெற்று வீரராய் விளைந்த என்பான் (கி : 96)

மேக்குயர மீப்போய் — மேற்பட்டு உயர்தலால் மேலே சென்று. வாலி வெய்ய மார்பகத்துட் டங்காதுருவி மேக்குயர மீப்போய் துய்ய நீர்க்கடலுட் டோய்ந்து. (கி : 389)

மேக்குயரும் நெடு மூக்கு — முகத்தின் மேலே உயருகின்ற நீண்ட மூக்கு. மேக்குயரு நெடு மூக்கும் மடந்தையர்க்கு மிகையன்றோ: (ஆ : 354)

மேக்குற — மிகவும் மேலே. மேக்குற விசையிற் சென்றான். (கி : 1008) மேக்குறச் செல்வோன். (சு : 91)

மேக்குற விசைத்தல் — மிகவும் மேலே விரைதல். மேக்குற விசைத் தாரென்னப் பொலிந்தனர் விஞ்சை வேந்தர். (சு : 8)

மேக்கூடு — மேற்குத்திக்கினிடை. மேக்கூடு கிழக்கூடு மிக்கிரண்டு திக்கூடு போக்கூடு தவிர்த்து. (யுத் : 3580)

மேகக் குழுவின் காடு — மேகக் கூட்டத்தின் வரிசையான காடு. (யுத் : 3872)

மேகங்கள் குமிறின — மேகங்கள் முழங்கின வாகி. குழுமிமேகங்கள் குமிறின குளிர்துளி கொணர்ந்த. (அ : 730)

மேகங்கள் பொரிதல் — மேகங்கள் வெப்பத்தாற் பொரிதல். ஒடு மேகங்கள் பொரிந்திட உதிர்ந்தன. (யுத் : 556)

மேகச் சங்கம் — மேகத்திரள். மேகச் சங்கந் தொக்கன வீழும் வெளியின்றி நாகக் குன்றம் நின்றன காண்மின். (யுத் : 3548)

மேகத்தின் பதம் — மேக மண்டலம். மேகத்தின் பதங்கடந்து. (யுத் : 2691)

மேகத்தினை நிகர் வில்லி — காள மேகத்தினை ஒத்த வில் வீரனான இராமன். மேகத்தினை நிகர் வில்லியை வளைத்தார் செரு விளைத் தார். (ஆ : 464)

மேகந்தோய் தனிக் கோயில் - முகில் தவழுமாறு உயர்ந்த ஒப்பற்ற மாளிகை. சுமித்திரை மேகந் தோய்தனிக் கோயிலை நண்ணி னான். (அ : 324)

மேகநாதன் — இந்திரசித்து. வரம்பிலா உலகிற் கேக நாதனை எறூழ்வலித் தோள்பிணித் திர்த்த மேகநாதன். (சு : 1021)

மேக நிறவண்ணன் - மேகம் போன்று கருநிறத்தையுடைய இராமன். மேகநிற வண்ணனும் வணங்கி விடை கொண்டான். (ஆ : 176)

மேகப்பாடல் - மேகராகக் குறிஞ்சிப்பாடல். நணிவளர் மேகப்பாடல். (பா : 876) [பா : பே]

மேகம் - முகில். கருமை தோன்று மீச்செலும் மேகமெல்லாம். (யுத் : 791)

மேகம் அவை - மேகங்கள். இவை ஒரு சொல் நீர்மைய. மேகம் அவை இற்றுக விழித்தனள் புழுங்கா. (பா : 394)

மேகம் கால்பிடித்தெழுதல் - (நீருண்ட) மேகம் மழைக்கால் பற்றி (விண்ணின்மீது) எழுதல். கருமுடித்தமைந்த மேகம் கால்பிடித் தெழுந்த காலம் பெருமுடி கிரியிற் பெய்யுந் தாரைபோற் பகழி எய்தான். (யுத் : 2371)

மேகம் வெளுத்தல் - மேகம் வெண்ணிற மடைதல். இரவலர்க்கீவ தின்மையால் வெள்கிய மாந்தரின் வெளுத்த மேகமே. (கி:547)

மேக மாலை - 1. முகிற் படலம். மேக வரிசைகள். மேக மாலை மிடைந்தன மேலெலாம். (பா : 960) (சு : 835)

2. முத்தக் காசு என்னும் புல்லின் தொகுதி. (உ.வி) (பா : 960)

மேக முகுத்த நீர் - மேகஞ் சொரிந்த புனல். உப்புறைத்தன மேக முகுத்த நீர். (யுத் : 679)

மேக மொப்பான் - மேகத்தை யொத்தவனான இராமபிரான். மேக மொப்பானும் நன்று போகென்று விடையு மீந்தான். (யுத்:) 346)

மேக ராசி - மேகக் கூட்டம். மின்னெடுந் துவன்றின மேகராசியே. (கி : 458)

மேகலை - எண் கோவையாக இடுப்பில் அணியும் பொன் மாலை. வாம மேகலையார். (பா : 855)

மேகலைத் தடம் - மேகலை யணிந்த கடிதடம். மேகலைத் தடங் கடலிடைப் புகுந்த கட்கலுழியாறரோ. (அ : 476)

மேகலை நில மகள் - (கடலாகிய) மேகலையை யணிந்த நிலமாகிய பெண். வண்ண மேகலை நிலமகள் மற்றுனைப் பிரிந்து கண் ணிழந்திலள் எனச் செய்யும் நீதந்த கழலோன். (அ : 36)

மேடு – மேட்டு நிலம். பள்ள மொடு மேடு தெரியாவகை. (யுத் : 3403)

மேடு பள்ளம் வெளி – மேடும் பள்ளமும் இவ்விரண்டு மில்லாத சம பூமியும். மேடு பள்ளம் வெளி இன்மையால் உற்ற செங் குருதி வெள்ளமுள்ள திரை ஓத வேலையொடும் ஒத்ததால். (யுத் : 2018)

மேடை – செய் குன்று. மேடை நல்லணி முனிந்தன வெள்ளிடை பிறவும். (அ : 507)

மேதகம் – கோமேதகம். முதற் குறை. மேதகத்தின் மீதரோ. (பா : 117)

மேதகு – மேன்மையான. மேதகு பொருள்கள் யாவும் வேந்தருக் கென்கை தன்னுல். (பா : 658)

மேதகையவர் – மேன்மையான குணங்களையுடையவர். விருத்தர் மேதகையவர் வினைஞர் மந்திரத் திருத்தியோ. (யுத் : 79)

மேதகையார் – மேன்மை யுற்றவர். வில்லாளர் அரக்கரின் மேதகை யார். (யுத் : 3448)

மேதகையோர். (யுத் . 3448) [பா : பே]

மேதன் – அறிவுடையவன். மேதா இளையோய். (யுத் : 2644)

மேதா – அறிவு நிரம்பியவனே. (யுத். 2641)

மேதாவி – அறிஞர்கள். அறிவினுல் மேம்பட்டவர். மேதாவிகட்கெல் லாம் மேலான மேன்மையான். (யுத் : 306) மேதா இளையோய். (யுத் : 2641)

மேதாவிகட்கெல்லாம் மேலான மேன்மையான் - அறிவினுல் மேம்பட் டோர்க்கெல்லாம் மேலாய் விளங்கும் சிறப்பினையுடைய விபீடணன். (யுத் : 306)

மேதி – எருமை. மேதிக்குழி. பா : 33) கால் பாய்வன முதுமேதி கள். (அ : 625)

மேதிக்குழி – எருமை மாடுகள் புரளும்குழி. (பா : 33)

மேதினி – உலகம். மதுவின் மேதஸ் பட்டதனுல் உலகு மேதினி எனப்பட்டது. மது மேதைபடப்படர் மேதினியாயது பூவுல கெங்கணுமே. (யுத் : 1751)

மேதை - கொழுப்பு. (மேதசு) (யுத் : 1751)

மேதை வார்த்தைகள் – அறிவுமிக்கவன் போன்று பேசும் வாரத்தைகள் - பெயர்த்தும் மேதை வார்த்தைகள் இனியன விளம்பலே. (யுத் : 186) [பா : பே]

மேபுரம் – உடலின் மேலிடம். வன்றுளமே: புரமடங்கலென. (உ.வி) (யுத் : 860) [பா : பே]

மேய – அடையப்படுகின்ற. பெற்ற. மேயவான் கடவுளும் பிறவும் வேறம் நீ (பா : 180) மேயமண். (அ : 515)

மேயது – 1. பொருத்தமானது. மேயதோர் கட்டுரை விளம்பல் மேயினுள். (சு . 360)

2. விளைந்தது. மேயது சொன்னூர் தூதர். (யுத் : 2394)

மேயவன்–சார்ந்தவன். மேயவன் தன்னெடு மெண்ணி. (யுத்:473)

மேயின - பொருந்திய. பொருத்தமான. மேயின சில பொருள் விளம்ப வேண்டுமால். (யுத் t 395)

மேயினள் - வந்தாள். (சு : 381)

மேயினன் - சேர்ந்தான். அரம்பையர் குழுவும் அல்லவும் வேறயல் அகல மேயினன். (சு : 427)

மேரு - 1. மலே. மந்தர மேரு. (அ : 416)

2. மேருமலே. மேருமுதல் மால் வரைகள் ஏழு. (ஆ : 27) (யுத் : 2702) (ஆ : 37)

மேருத்திடர். மேருமலே. காவல் மேருத்திடல் ஒன்றினே டொன்று அமர் செய்யவும். (கி : 277)

மேறு நெடுமதிள் - மேரு மலே போன்று ஓங்கிய மதிள். நின்று மேரு நெடு நெற்றியின் நின்று. (யுத் : 985)

மேரு மேருஎன - (இது) மேருமலேயே மேருமலேயே என்று சிலர் சொல்லும்படி. (யுத் : 2037)

மேரு வாங் கோர் புற்றுமென ஓங்கிய தோள் - மேருமலே ஒரு புற்று என்று சொல்லுமாறு மிகவும் உவர்ந்துள்ள தோள். (அ : 411)

மேரு வில்லாளன் - மேருவை வில்லாகக் கொண்ட சிவபெருமான். மேரு வில்லாளன் கொடுத்த. (யுத் . 1970)

மேருவின் உத்தர குரு - மேருமலேயின் வடக்கின்கண் உள்ள குரு நாடு. மேருவின் உத்தர குருவின் மேலுள. (யுத் : 2743)

மேருவெனு மத்தொல்லேப் பொருப்பு - மேருவென்று பெயர் பெற்ற அந்தப்பழமையான மலே. இடை நின்ற மேருவெனுமத் தொல்லேப் பொருப்பு. (யுத் : 2198)

மேருவைத்துளக்குவார்–மேருமலேயையும் அசைக்கவல்ல (பேராற்றல் படைத்த) வீரர்கள். (அரக்க வீரர்கள்) மேருவைத்துளக்குவார் உடற் பொறைதுணிந்து துள்ளுவார். (யுத் : 1796)

மேல் – 1, உடம்பு. என மேல்நிலேயழிந்துயிர் விம்மினனரோ. (கி : 680)
2. வரப்போவது. எதிர்காலம். அளக்கரைகடந்து மேலறிந்து. (யுத் : 322) மேல்வரும் உறுதிவேண்டலர். (அ : 464) மேல் நிற்கும் சொல் என்னும். (சு : 314) இடை மேலுறவீங்கி. (ஆ : 699) மேல் நனிவிளேவது. (யுத் : 383)
3. வானம் விசும்பு. மேலுயர் கயிலே. (யுத் : 92)
4. முற்காலத்தில். மேனிகழ் பொருளெலாம் விளம்பினன். (பா : 675) மேலுகத் தொகுதிவான் முதிர்ந்த மெய்யெல்லாம் தோலுகத்தாலென அரவத் தொல்கடல் வாலுத்தாலிடைப் பரந்த வைப்பெலாம். (யுத் : 468) மேனிறை வானவர். (யுத் : 4218)
5. ஏழனுருபு. பொன்னின் மால்வரை மேல்மணி பொழிந்தன பொருவ. (சு : 123)
6 முன்னமே. தேனெடு கிழங்குங் காயுநறியன அரிதிற்றேடி மேன்முறை வைத்தோம். (சு : 1251)
7. மேலும். மேற்கொண்டு. மேல் எண்ணவேண்டுமோ. (யுத் : 738)
8. வானுலகம். மேல்கீழ் ஒருவமையில்லா மானிடர். (ஆ : 609)
9. மூலப்பகுதி. நுவன்ற பூதங்கள் மேல்மறைந் தொளிப்பினும். யுத் ; 1779)

மேல்வருதல் – மேலே படையெடுத்து வருதல். வேற்று மன்னர் தம் மேல்வரும் வேந்தர்போல். (பா : 104)

மேல்வரும் ஊதியம் – விடுபேறு. இவ்வெல்லேயில் இன்பத்தை உன்னு மேல்வரும் ஊதியத்தோடென்முன். (அ : 791)

மேல்வானவர் – மேலுலகத்திலுள்ள தேவர்கள். வண்மைஇயும் மானமும் மேல் வானவர்க்கும் பேர்க்ககிலாத் திண்மைஇயும். (அ : 1131) [பா:பே]

மேல்வினை பொருள்உணர்தல் – மேலே அறியப்போகும் விஷத்தை யுணர்தல். காலமேல் வினைபொருள் உணரும் கற்பிலாப் பாலன் நீ. (யுத் : 78)

மேல்வினைவு - மேற்கொண்டு நிகழ்வது. இனி நடக்க வேண்டிய செயல். மேலமர் வினைவை யுன்னி விலக்கினன். (யுத் : 2412) என்னதாகு மேல்வினை வென்று இருந்தான் இராமன். (யுத் : 11)

மேல்வினை - மேலான அருட் செல்வம். உயிர் தீர்வதொர் மேல்வினை நீ ஐயா ஒரு நாளும் அயர்த்தனையோ. (யுத் : 237)

மேலகீழுற கீழன மேலுறும் வேலை - மேலுள்ளவை யெல்லாம் கீழாகக் கீழுள்ளவை யெல்லாம் மேலாக நிலைதடுமாறுற அப்பொழுது. (ஆ : 974)

மேலது - உள்ளது. பாலது. செவ்வழிப் பெருமை யென்றுரைக்குஞ் செம்மைதான் வெவ்வழிப் பூதமோர் ஐந்தின் மேலதோ. (சு : 689)

மேலரசு - மோட்ச சாம் ராஜ்யம். நிற் சேர்ந்து தெள்ளிதின் மேலர செய்துவான் விரும்பி மேயினுன். (யுத் : 498)

மேலவர் - 1. மேலே இருப்பவர். பாகர். படையோடு மேலவர் மடிய. (யுத் : 2299)

2. பெரியோர். மேலோர். தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும் அவர் தம் மருண்ட தன்மையை மாற்றுவர். (பா:905) யுத் : 199)

3. மேலானவர். திரிமூர்த்திகள். யார்க்கும் மேலவர் என்றேரும் இருக்க. சு : 475)

மேலவன் - 1. பாகன். குதிரையின் தலைகள் கொய்து மேலவன் சிரத்தைச் சிந்தி. (யுத் : 1877)

2. மேன்மையுள்ளவன். நிலனை நின் கருத்தியம்பு நீ யென மேலவன் விளம்பலும். (யுத் : 384) (அ : 566)

3. வானிற் செல்லும் சூரியன். (கலா) விண்மேல் விளங்கும் சூரியன். (அன்) மேலவன் திருமகற் குரைசெய்தான். (கி : 80)

மேலவன் திருமகன் - சூரியனுக்கு மகனுகிய சுக்கிரீவன். (கி : 80)

மேலா - மேலே கிடந்து. (சு : 308)

மேலாம் விண்ணவன் - திருமால், உயர்ந்த கடவுள். வினைய மத ருத்து மேலாம் விண்ணவன் பதத்திற் சேர்வார். (பாயி : 22)

மேலின் மேல் - ஒன்றன்மேல் ஒன்ருக. அடுக்கு நாகர் மேலின்மேல் நின்றகாறும் சென்ற கூலத்தன். (சு : 33)

மேலுறுதல் - தொடர்ந்து செல்லுதல். (வை.மு)(உ.வி) ஆயுமேலுறு தல் செல்லாம். (ஆ : 804) [பா:பே]

மேலுறைவார் - வானவர். வேனல் வேளொடு மேலுறைவார் களோடு ஆனபூசலறிந்திலம். (பா : 1181)

மேலை - 1. மேற்கு. மேலை வேலை. (அ : 726)
2. உயர்வான. ஏழுலகின் மேலை வெளிகாறும். (சு : 157)
3. மேலிடம். விண்ணின் மேலை விளம்பார். (சு : 1234)

மேலைக்கிரி - மேற்றிசை மலை. அத்தமனகிரி. (கி : 408)

மேலை நாள் - முற்காலத்தில். (பிறந்தபொழுதே) மேலைநாள் உயி ரொடும் பிறந்து கால மோர்ந்துடனுறை கடிய நோயனுள். (ஆ : 232)

மேலைமலை - மேற்கு மலை. தேருடை நெடுந்தகையும் மேலைமலை சென்ருன். (கி : 890)

மேலை வாயில் - மேற்கு பக்கத்து வாயில். மாருதி மேலைவாயில் உழிஞை மேல் வருவதானுன். (யுத் : 896)

மேலை விரிஞ்சன் - யாவரினும் மேம்பட்ட பிரமன். (ஐ- சாரியை) மேலை விரிஞ்சன் வீயினும் வியா மிகை நாளீர். (கி : 1010)

மேலை வேலை - மேற்குச் சமுத்திரம். மேலைக்கடல். கடிதின் மேலை மேலையிற் பாய்ந்தது மீண்டநீர் வெள்ளம். (அ : 726)

மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருள் - பரப் பிரமம். மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருள் வில்லுந் தாங்கிக் கால் தரை தோயநின்று கட்புலக்குற்ற தம்மா. (கி - 374)

மேலொற்றுதல் – மேலேபடுதல். வன்சிரங்கள் தம்மை அண்மிமேல் ஒற்றுமென அங்குமிங்கும் விண்ணுளோர் ஒதுங்குவார். (யுத் : 3354)

மேலோர் – பெரியோர். உறும்போகமெல்லாம் நலனுள்வழி யுண் பரன்றே. (பா : 986) [பா : பே] மேலோர் தருமமேல் அதுவு மன்று. (யுத் : 3203)

மேவரும் – 1. அணுகுதற்கரிய. மேவருஞ் சுடரென விளங்கும் மார்பின் நூல். (பா : 1305)

2. மேவுதல் பொருந்திய. மேவருமுணர்வு முடிவிலாமையினுல் வேதமுமொக்கும். (பா : 101)

3. விரும்புதல் – பொருந்துதல். மேவருநீர் ஐதாதலினே (ஆ : 1100)

மேவல் – 1. விருப்பம். மேவலார்ந்த கைமைத்தலால். (பா:1028)

2. சித்தி. விதியே நல்கின் மேவலாகர்தது என் என்ருன். (கி : 101)

3. அடைதல். மேவல் மேயினுன். (சு : 156)

மேவலர் – பகைவர். மேவலர் செய்யுங் கண்கோடற் பொறியிற் கடிதேகி. (யுத் : 228) (ஆ : 759)

மேவாத இன்பம் – எய்தற்கரிய இன்பம். மேவாத இன்பமவை மேவி. (யித் : 2203)

மேவாதவர் – 1. பகைவர் மேவாதவரில்லை மேவினருமில்லை. (ஆ : 1001)

2. விரும்பிவந்து சேராதவர். (யுத் : 2918)

மேவார் – பகைவர். வெருவியோடினர் விண்ணவர் கண்ணன் மேவாரின். (பா : 495)

மேவினம் - அடைந்தோம். மேவினம் பிரிதலாற்றேம். (பா : 421)

மேவினர் - நண்பர். (ஆ : 101)

மேவுதல் - 1. சார்தல். அடைதல். திரும்பிவருதல். (யுத் : 2822 மேயவன் தன்னெடும் எண்ணி. (யும் : 473) மேவுகாறும்) (சு : 582) மேவுதும். (அ : 528)

2. கூடுதல். பொருந்துதல். (சு : 582) மேவு சிந்தையில் மாதர். (சு : 927) மேயாய வருவாய். (சு : 582) [பா : பே]

3. விரும்புதல். மூவுலகத்தவரும் முதலோரும் மேவின விற் றெழில் வீரன். (யுத் : 2819)

4. வருதல். மேயினள். (சு : 381)

மேவெழுமழு - (பகைவர் தசையை) விரும்பி எழுகின்ற மழுவாயுதம். முடியுடை வேந்தை யெல்லாம் மேவெழு மழுவாயால் வேரறக் களைகட்டு. (பா . 1381)

மேற்கின் வேலை - மேற்குக் கடல். மாறுவை மேற்கின் வேலை வருணனை வென்றவால். (யுத் : 3575)

மேற்கொள்ளல் - 1. முயலுதல். புன்றொழில் விலக்க மேற்கொளாய். (சு : 455)

2. கைக் கொள்ளுதல். ஏறிக்கொள்ளுதல். புட்பக விமானமதன் மேற்கொண்ட கொண்டல். (யுத் : 4068)

மேற்கோள் – மனவெழுச்சி வெறுவிதுநந்தம் வீரம் என்றொரு மேற்கோள் தோன்ற. (யுத் : 1109)

மேற்செல்லுதல் – பகைவர்மீது படையெடுத்துச் செல்லுதல். விடாத முனிவின் மேற்செல்லும் கங்கைத் திருநாடுடையானை. (யுத்.11) மேற்செல்வீர். (யுத் : 1682)

மேற்படுதல் – மிகுதல் பழிமேற்படப் படுத்தான். (யுத் : 1854)

மேற்றிசை – மேலைத்திசை. மேற்றிசை வாயில். (யுத் : 1986)

மேற்று – மாட்டு. இடத்து. கூற்று ஆவியுண்பது இதனின் மேற்று ஆகும். (யுத் : 2516)

மேன்முறை – 1. பழமையான முறைமை. மெய்யைச் சிதைவித்து நின்மேன் முறைநீத்த நெஞ்ச மையிற் கரியாள். (அ : 420)

2. உயர்ந்தமுறை. மேன்முறை அமரர்போற்றும் விழுநதி. (பா : 423)

மேன்மேல் – 1. மேல் மேல். ஏறின புருவம் மேன் மேல். (ஆ : 1013)

2. இனி. மேன் மேல் இசைந்தவாறு இசைக. (யுத் : 2250)

மேன்மை - 1. பெருமை. உயர்வு போனது பொற்பும் மேன்மையும். (அ : 732). வினையினால் வரும் மேன்மையுங் கீழ்மையும். (கி : 352)

2. பெருமிதம். வெறுவிது நந்தம் வீரம் என்றொரு மேன்மை தோன்ற. (யுத் : 1109)

மேனகை – தேவலோகப் பெண். மேனகையாதி மிளிர் வேற்கண் அனையோர். (பா : 591)

மேனுள் - முன்னுள். மேனுளவன் வில்வலி கண்டமையால். (ஆ : 770) மேனுளும் இதனைவிடின் (யுத் : 3042)

மேனி - 1. வடிவம். அரத்தமுண்டனைய மேனி அகலிகை.(பா:1152) 2. உடம்பு அற்காணிற் கண்டனைய அழகமைந்த மேனியான். (அ : 1018) (யுத் : 214)

மேனிகழ் பொருள் - முன் நடந்த செய்திகள். மேனிகழ் பொருள் களெல்லாம் விளம்பினன் வணங்கி வேந்தன். (பா : 675)

மேனிகழ்வது - பின் நடக்கவேண்டியவை. உன்னுல் மேல் நிகழ் வதுண்டு. (அ : 548)

மேனி பொருந்தல் - உடம்பைத்தீண்டுதல். விவாகஞ் செய்து கொள்ளல். பொய்யான என்மேனி பொருந்துதலால். (யுத்:2643)

மேனிமிர்தல் - 1. உயரஎழுதல். மேனேக்கி வளர்தல். மேனி மிர்ந்து நெருப்புக வீசினுன். (யுத் : 2999) மேனிமிர்ந்தெழுந் திடில் விசும்பும் வேம் என. (பா . 344) மேனிமிர் செம்மயிர்க் கற்றையான். (யுத் : 1283)
2. போருக்குச் செல்லல். காலன் மேனிமிர் மத்தன். (யுத் : 1283)

மேனிமுற்றுந்திறத்தல் - மேனிமுற்றும் (சல்லடைக்கண் போலத்) தொளையாக்குதல். பின்னின்ருர் முன்னின்ருரைக் காணலாம் பெற்றித்தாக மின்னின்ற வயிரவாளி திறந்தன மேனிமுற்றும். (யுத் : 1880)

மேனியது - தன்மையுடையது. நிறமுடையது. விள்ளாமுழுமா நிழற் பிழம்பும் வேண்ட வேண்டும் மேனியதோ. (சு : 543)

மேனியால் நிலத்தையுழுதல் - உடலாற் பூமியை உழுதல். விழும் விழிக்கும் முகிழ்க்கும் தன் மேனியால் உழும் நிலத்தை யுருளும் புரளுமால். (யுத் : 3159)

மேனிலை - 1. மேல் நிலை. பழைய நிலை. ஆனம் முடையுமை யண்ணலை யந்நாளுறு சிலைதான் ஊனம்முளது அதன் மேனிலை கேள்நீ என உரைப்பான். (பா : 1373)
2. மேலாம் நிலையாகிய அரச பதவி. மேனிலை யணையான் செய்கை விளைந்தவா விளம்புகென்ருன். (கி : 618)

3. உயர்ந்த சிறப்பு. அன்னவன் ஓங்கிய மேனிலை அறிதற் பாலதோ. (யுத் : 190)

மேனிலை கோலங் கோடல் - மேன்மையுடையதாகக் கருதி சொல்லப் பட்ட அலங்காரத்தைப் புனைதல். மேனிலை கோலங் கோடல் விழுமிய தன்று விர. (யுத் : 3960)

மேனிவடு - உடல்களின் தழும்புகள். வல்லா னெருத்தனிடையே படுத்தவடுவான மேனி வடுவும். (யுத் : 2216)

மேனிவளைந்து வாய் புதைத்தல் - உடல் வளைந்து வாய் பொத்தி ஒடுங்கியிருத்தல். வணக்கத்தின் குறி. மண்ணுறப் பணிந்து மேனி வளைந்து வாய்புதைத்து நின்றான் (அ : 657)

மேனி வெதும்பல் - உடம்பு தாபமடைதல். மேனி சால வெதும் பினன். (யுத் : 3326)

மேனி - உடல். மேனியுமின்றி வெறுநீரே யாயினர். (அ : 386)

## மை

மை – 1. அழுக்கு. துரு. ஆவரும் வன்மை நேர் அறிந்து திட்ட லால். (பா : 1751)

2. மேகம். மை தவழ் பொழில்கள். (பா : 309)

3. இருள். மைம்மலி பொழில். (பா : 433)

4. கருமை. மையார் களபந்துருவி. (அ : 376) மைம்மலி குழலி னர். (யுத் : 4097) மையவாம் குவளை (பா : 1016)

5. கண்ணுக்கு இடும் அஞ்சனம். மையோ மரகதமோ மறி கடலோ. (அ : 618)

6. குற்றம். மையுற உயிரெலாம் இறுதிவாங்குவான். (அ:1000)

மைக்கடங்கார் மதயானை – கறுத்த மதநீரை மேகம்போற் பொழி கின்ற மதயானை. மைக்கடங்கார் மதயானை வாள் வேந்தன் வழிவந்திர். (யுத் : 1574)

மைக்கரி – கரிய யானைகள். மைக்கரி மதத்த. (பா : 923)

மைக்கருங் குழலினள் – மைபோலக் கரிய கூந்தலையுடைய நங்கை. மைக்கருங் குழலினள்மாட் டன்பினில் வலியன் என்றாள். (ஆ : 294)

மைக் கருங் கூந்தல் – அஞ்சன மை போலக் கரிய கூந்தல். மைக் கருங் கூந்தற் செவ்வாய் வாணுதலொருத்தி. (பா : 1161)

மைக் கருநிறம் - மேகம்போற் கருத்த நிறம். மைக்கரு நிறத்திடை மறைந்த தன்னுரு. (யுத் : 1490)

மைக் குப்பை – அஞ்சனத் தொகுதி. மைக்குப்பையின் எழில் கொண்டொளிர் வயிரத் தட மார்பில். (யுத் : 1138)

மைக்குழல் – கரிய கூந்தல். வாசமைக் குழல் பற்ற மயங்கினுர். (சு : 1207)

மைத்துனன் – உடன் பிறந்தாள் கணவன். மைத்துனனேடு முன்னேள் வழங்கிய முறைமைகேளர். (பா i 688) கொல்லாத மைத்துனனைக் கொன்றுயென்பது கருதி. (யுத் : 3892)

மைதவழ்கிரி - மேகம் நெருங்கித் தவழப்பெற்ற மலைகள். கருநிறம் பொருந்திய மலை. (அண்). மைதவழ்கிரியும் மேருக் குன்றமும் வருவதென்ன. (யுத் : 437).

மைதவழ்ந்த கருங்கண் – மை தீட்டப்பட்டுள்ள கரிய கண்கள். மை தவழ்ந்த கருங்கண் ஓர் வாணுதல். (பா : 1170)

மைதாழ் கருங்கண் – மையுண்ட கரிய கண்கள். மை தாழ்கருங் கண்கள் சிவப்புற. (பா : 990)

மைந்தர் – 1. வலிமையுடையவர். மக்கள். அவண் மைந்தர் நீதிலர் வைகினர். (ஆ : 143)

2. கணவர். பள்ளியின் மைந்தரோடு. (சு : 212)

3. ஆடவர். வாளரி திரிவ வெண்ணத் திரித்தனர் மைந்தரெல்லாம். (பா : 927)

மைந்தரைக் கொன்றுளோன் – புதல்வரைக் கொன்றவன். மைந்தரைக் கொன்றுளோன் வழக்கிற் பொய்த்துளோன். (அ : 896)

மைந்தரைப் பெறுகின்றது – புத்திரரைப் பெறுவது. உரிமை மைந்தரைப் பெறுகின்றது உறுதுயர் நீங்கி இருமையும் பெறற்கென்பது பெரியவர் இயற்கை. (அ : 63)

மைந்தரையளிக்கும் மாமகம் – புதல்வர்களைக் கொடுக்கவல்ல பெரிய யாகம். புத்திரகாம யாகம். (உ.வி.) அசுவமேத யாகம். மா – குதிரை வன்றிறல் மைந்தரையளிக்கும் மாமகம் இன்று நீ இயற்றுதற்கெழுக ஈண்டு என்முன். பா : 263)

மைந்தரையின்மை - மக்கள் இல்லாமை. மைந்தரை யின்மையின் வரம்பில் காலமும் நொந்தனென். (அ : 27)

மைந்தன் - மகன். மைந்தா. (அ : 359)
பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி. (ஆ : 200)

மைந்தன்மீர்-குமாரர்களே. முழுவதேமுலகுடையான் மைந்தன்மீர் கேண்மின். (ஆ : 200)

மைந்தீர் - புதல்வர்களே. நைவிரலீர் மைந்தீர் இனித் துயரால். (அ : 1058)

மைந்து - வலிமை. வானமழை வந்ததென மைந்துறு மனத்தான். (ஆ : 163)

மைந்நாகம் - கடலில் தோன்றிய ஒரு மலை. மைந்நாக மென்னும் மலை வானுற வந்ததன்றே. (சு : 40) (சு : 1245)

மைந்நிறை கண்ணியர் - மை நிரம்பத் தீட்டிய கண்ணழகுடையவர். மைந்நிறை கண்ணியர் வானுறை நீரார் மெய்ந்நிறை மூவரை மூவரும் வேட்டார். (பா : 1346)

மைப்பொழில் - கரிய சோலை. மைப்பொழில் துறு பஞ்சவடி. (யுத்:4201)

மைம்மலி குழலினர் - கருமைமிக்க கூந்தலையுடைய மகளிர். மைம் மலி மகளிர் குழலினாரை மரபினாற் கொணர்தி என்று.(யுத்:409)

மைம்முகத்தனிகம் - கருங்குரங்குச் சேனை. திரைக்கும் பாற் கருங் கடற்குயர்ந்துள மைம்முகத்தனிகம். (கி : 772)

மையடுத்தல் - மை படிதல். மையடுத்தொத்தது மறைத்த வானமே. (கி : 445)

மையரி நெடுங்கண் – மையிட்டு செவ்வரி படிந்துள்ள நீண்ட கண். மையரி நெடுங்கண் நோக்கம் இமைத்தலும் மயங்கி நின்றார். (பா : 790)

மையல் – 1. மயக்கம். (யுத் : 1756) மயல். இவ்வைய மையல் தோன்று நெறிவாழ் துணைத் தம்பி. (அ : 432)
2. காமம். மையல் நோய் கொடு முடித்தவாதான். (யுத்:1572)

மையல் தார்க்கரி – மதக்களிப்புக்கொண்ட கிண்கிணி மாலையணிந்த யானைகள். (யுத் : 2651)

மையல் தோன்றுநெறி - மயக்கம் தோன்றாத நல்லநெறி. நன்னடத்தை (கலா.) (அ : 431)

மையல் நோய் - ஆசைப்பிணி. (யுத் : 1572)

மையல் வேதனை - காமநோய். தன்மனத்தெழுந்த மையல் வேதனை வெப்பஞ் செய்ய. (ஆ : 660)

மையலால் அறிவு நீங்கி - காம மயக்கத்தால் நல்லறிவுகெட்டு. ஒரு நாளுற்ற மையலால் அறிவு நீங்கி மாமுனிக் கற்றஞ்செய்து. (பா : 552)

மையற்கொடியாள்-மஞ்ஞைசையுடைய கொடியாள் ஆகிய கைகேசி. மையற்கொடியாள் மகன். (அ : 606)

மையறக்கரிதென்னும் மனத்தினன் - அஞ்சனத்தைக் காட்டிலும் மிகவும் கரிதென்று எண்ணுதற்குரிய (கொடிய எண்ணங்கள் நிறைந்த) மனத்தையுடையவன். (இந்திரசித்து) பூத்த மையறக் கரிதென் றெண்ணும் மனத்தினன் கையறத் தலையற்றார் போற் கலங்கினார் நிருதர் கண்டார். (யுத் : 3120)

மையறுதவம் - குற்றமற்ற தவம். மையறு தவத்தின் வந்த சவரி. (கி : 102)

மையறு மரபின் வருதல் - குற்றமற்ற வமிசத்திலே தோன்றுதல். மையறு மரபின் வந்த அமைச்சர். (யுத் : 9)

மையறு மலர் - குற்றமற்ற தாமரை மலர். மையறு மலரின் நீங்கி. (பா : 564)

மையன் மா - மையல் மா. மதம் பிடித்தயானை. அன்றியு மையிறு நூறு மையன்மா ஒன்றிய வலியினள். (பா : 362)

மையுறவு - தீவினைத் தொடர்பு. மையுறவு உயிர். (அ : 1000)

மையெடுத்தல் - மை பரவுதல். வெய்யவன் விளக்கமா மேருப் பொற்றிரிமை யெடுத் தொத்தது மறைத்த வானமே. (கி ; 445) [பா : பே]

மையொடு பகைத்து நின்ற நிறத்தினன் - அஞ்சனத் தோடு பகைத்து நின்ற நிறத்தையுடையவன். மிகக்கரிய நிறமுடையவன். (அகம்பன்) (யுதி : 2528)

மை வரை – அஞ்சன மலை. கரிய மலை. மை வரை நெருப் பெரிய வந்த தென வந்தாள். (பா : 388)

மை விளக்கியதே யன்ன வயங்கிருள் – மையை மாசு நீக்கித் துலக்கியது போன்ற தோற்ற முடைய இருள். மை விளக்கியதே யன்ன வயங்கிருள் துரக்க வானம் கை விளக்கெடுத்த தென்ன வந்தது கடவுட்டிங்கள். (அ : 579)

## மொ

மொக்குள் - 1. குமிழி. நீர்க்குமிழி. விண்ணுநீர் மொக்குளில் விளியும் யாக்கை. (அ : 1144) பனிக்கடலுள் நில்லாத மொக்குள். (யுத் : 288) ஆலியின் மொக்குளன்ன அரக்கர். (யுத் : 2800) (ஆ : 1018)

2. கொப்புளம் - புள்ளிவெண் மொக்குளென்னப் பொடித்து வேர் பொங்க. (சு : 307)

3. அரும்பு. (உ.வி) (சு : 307)

மொச்சு - மொய்த்து நெருங்கி. அகல்வானின் மொச்சுச் சென்றார். (யுத் : 3562)

மொட்டு - தேரின் கூம்பு. கடைந்த குமிழ். (கலா) கொடுஞ்சொடு தட்டும் அச்சும் ஆழியும் கோத்த மொட்டும். (அ : 1044) வான வேந்தன் முதுகைத் தழும்பாக்கிய மொய்யொளி மொட்டதம்மா. (யுத் : 1974)

மொத்துதல்- தாக்குதல். அடித்தல். (கலா) கும்பானுவைத் தானெதிர் மொத்திநின்று. (யுத் : 1028)

மொய் - 1. போர். மொய்பொரு தினவுறு முழவுத் தோளினன். (பா : 179)

2. பெருமை. மொய்யமர் முடித்து. (யுத் : 422)

3. போர் வலி. மொய்கிடக்கும் அண்ணல் தோள். (பா : 703)

4. வலிமை. மொய்கொண்டு. (யுத் : 3174). மொய்தவழ் கிரிகள். (யுத் : 437). மொய் பெற்றுயர் முதுகிற்றன. (யுத் : 1817 (யுத் : 3174)

5. போர்க்களம். மொய்கண்டார் திரைவேலை மூடவே.(யுத்:3714)

6. நெருக்கம். மொய்தவழ் கிரிகள். (உ.வி) (யுத் : 437). மொய் யஞ்சனமேகம். (யுத் : 2321)

7. வண்டு. மொய் வளர் குவளை. (பா : 1217)
8. நிரம்பிய தன்மை. மொய்ம்மதி. (சு : 263)
9. மிகுதி. மொய்யொளி. (சு : 264)
10. அடர்த்தி; செறிவு. மொய்ம் மயிர் சிலிர்த்ததன்றே. (பா : 661)
11. திரளான தன்மை. மொய்ம் மணி மாட மூதூர். (சு : 193)
12 நிறைதல். மொய்தவப் பெருமை. (பா : 756)
13. நெருக்கம். மொய்யமர். (யுத் : 51)

மொய்க்கணை – 1. வலிய அம்பு. முப்புர மெரித்ததனி மொய்க்கணை. (அ : 173)
2. நெருங்குதலையுடைய அம்பு. மூற்றியற் சிலை வலாளன் மொய்க்கணை துமிப்ப. (யுத் : 3601)

மொய்கணை – வலிய அம்பு. மொய்கணை மாரியாலே யிறந்து பாழ் முழுதும் பட்டால். (யுத்:1355) [பா : பே] ( ஆ : 173) [பா : பே]

மொய்கழல் – செறிந்த வீர கண்டை. மொய்கழல் மன்னன். (யுத் : 14)

மொய்கிடத்தல் – வலிமை மிக்கிருத்தல். மொய்கிடக்கும் அண்ணல் தோள். (பா : 803)

மொய் குழல் – நெருங்கிய கூந்தல். மொய்குழல் இருவர் தாளும். (யுத் : 4264)

மொய் கொள் சோலை – நெருங்குதலைக் கொண்ட சோலை. மொய் கொள் சோலை முன்னினர். (ஆ : 7)

மொய் கொள் திண்சேனை – வன்மை வாய்ந்த உறுதியான சேனை. இனியதன் மொய் கொள் திண்சேனை பின்நிற்க. (பா : 1130)

மொய் கொள் வேலை – பெருமை மிக்ககடல். பெருகு வெள்ளம் போய் மொய் கொள் வேலைவாய் முடுகுமாறு போல். (பா : 332)

மொய்ச்சுச் சென்றார் – நெருங்கிச் சென்றார். (யுத் : 3562)

மொய்த்தல் – 1. நெருங்குதல். முத்திருத்தியவ் விருந்தனைய மொய்ந் நகையொடும். (ஆ : 2) மொய்த்த முள். (ஆ ; 33) ஆலி மொய்த் துக. (அ ; 490)

2. அடர்ந்திருத்தல். மொய்த்தமுள். (உவி) (ஆ : 33)
3. மிகுதியாகத் தோன்றுதல். நிறைமலர்க் கண் மொய்த்த நீரார். (ஆ : 207) நெடுங்கணீர் ஆலி மொய்த்துக. (யுத்: 3992)
4. சூழ்தல். உலகம் முற்றுடைய கோவைப் பிரியாது மொய்த் திண்டி. (அ : 404)

மொய்த்துக - நெருங்கி மொய்த்துப் பின் சிதற. (அ : 490)

மொய்தவழ் கிரிகள் - நெருங்கித் தவழப்பெற்ற மலைகள். வலிமை பொருந்திய மலைகள். (அண்) (யுத். 437)

மொய் தொழிலான் - நெருங்கிப் போர்புரிகின்ற தொழிலான். ஐம் பத்தொரு வெங்கணை அங்கதன் மா மொய்ம்பிற் புக வுய்த்தனன் மொய்தொழிலான். (யுத் : 2326)

மொய்ந்நகை - நெருங்கிய பற்கள். நெருங்கிய பற்களையுடைய பிராட்டி. (ஆ : 2)

மொய்ந்நிறம் - வலிய மார்பு. (யுத் : 2366)

மொய்ப்பு - நெருங்கிச் சூழ்கை. முனிவர் வந்து முறைமுறை மொய்ப் புற. (ஆ : 554)

மொய் புண் - செறிந்த புண். மொய் புணீர் நீத்தம். (ஆ. 556)

மொய்புணீர் நீத்தம் - மிக்க இரத்த வெள்ளம். (வை.மு) செறிந்த புண்ணினின்று பெருகிய இரத்த வெள்ளம். (அண்) முடிந்தவர் மொய்புணீர் நீத்தம் ஓடி. (ஆ : 556)

மொய்புலி - வலியபுலி. மொய்புலி அன்னான் ஓர் பின்னவன். (அ : 1008)

மொய்ம்பர் - வீரர். மொய்ம்பர் அகங்களைக் கிழித்து. (யுத் : 1107)

மொய்ம்பினோய் - வலிமையுடையவனே. முந்தி வந்தனன் இவனின் மொய்ம்பினோய். (கி : 127)

மொய்ம்பு - 1. வலிமை. மண்டலமுழுதுங்காக்கும் மொய்ம்பொரு வலியன்று. (பா : 667)
2. தோள். கை. புணியல் மொய்ம்பினன். (மா : 809) ஐம்பத் தொரு வெங்கணை அங்கதன் மாமொய்ம் பிற்புக உய்த்தனன். (யுத் : 2326)
3. வலிமையுள்ள மார்பு. மாந்தர் தம் மெய்ம்பினின் மகளிர் கொங்கையாம் ஏந்திளநிர்களும் வறுமை எய்தின. (அ : 506)

4. பேராற்றல். மூவகை உலகங்காக்கும் மொய்ம்பினீர். (கி : 628)

மொய்ம்மணிமாடம் - திரளான இரத்தினங்கள் பதிப்பிக்கப்பெற்ற மாளிகை. மொய்மணி மாட மூதூர். (சு : 193)

மொய்மதி - வலிய அறிவு. பூரண அறிவு. முக்காலமும் மொய்மதி யான் முறையின்னுணர்வான். (யுத் : 332)

மொய்ம்மலை - கூட்டமாகிய மலை. (அண்) வலியமலை. (கலா) (யுத் : 653)

மொய்ம்மாண் வினை - வலிமையாற் செய்த சிறந்த நல்வினை தீவினை. மொய்ம்மாண் வினைவேரற. (அ : 338)

மொய்ய - கூட்டமாகிய. அடர்த்தியையுடைய. செங்கதிரின் மொய்ய சோதியை மிலைச்சிய முறைமை போன்ருெளிரும் மெய். (பா:486)

மொய்ய சோதி - ஒளிக்கற்றை. (அண்) அடர்த்தியை யுடைய ஒளி. (வை.மு) (பா : 486)

மொய்யமர் - பெரும்போர். (வை.மு) நெருங்கிய போர். (வெ.ப) (கலா) சிலவர் மொய்யமர் நந்தினர். (யுத் : 51) மொய்யமர் முடித்து. (யுத் : 422) மொய்யமர்வாய் உயிருண்டவன். (யுத் : 2356) மொய்யமர் மூட்டி விட்டான். (பா : 1376)

மொய்யராகம் - வலிய வேட்கை. மொய்யராகம் நிரம்ப. (அ : 239)

மொய்யற மூர்த்தியன்ன மொய்ம்பினுன் - வலிமை பொருந்திய அறக்கடவுள் போன்றவனுகிய இலக்குவன். (யுத் : 3120)

மொய்யன் - வலியோன். இவர் வலிகடந்த காலமொய்யனே. (யுத் : 3192)

மொய்யுளை வயப்புரவி - நெருங்கிய பிடரி மயிரையுடைய வெற்றி பொருந்திய குதிரைகள். மொய்யுளை வயப்புரவி மொழிந்த முதுவேதம். (யுத் : 3664)

மொய்யுறு நறுமலர் - நெருங்கிய நல்லபூக்கள். மொய்யுறு நறு மலர் முகிழ்த்தவாம் சில. (அ : 778)

மொய்வலி வீரர்கள் - நெருங்கிய (உடல்) வலியுள்ளவீரர்கள். (யுத் : 3441)

மொய்வித்தகன் – வலிமைபெற்ற சமர்த்தன். மொய்வித்தகன் தடந்தோள். (யுத் : 3052)

மொழி-பேச்சு. அமுதின் தெளிவன்னதொர் மொழியாள். (அ:619)

மொழிகுவான் – பேசுவான். முழுதுணர் கேள்விமேலோன் மொழிகுவான். (யுத் : 4236)

மொழிதருதல் – மொழிதல். மொழிதருமளவில். (ஆ : 897)

மொழிதல் – 1. இசைத்தல். மொழிந்தன பல்லியம். (பா: 249) 2. கூறுதல். மூடரும் மொழியார். (சு : 748) மொழிந்தனன் ஆசிகள். (பா : 253) முன்மொழியும் பின்மொழியும் முனிவன் ஆங்கே. (பா : 326) மொழிந்தனர் ஆசிகள் முப்பங்க ஏன்றுர். (பா : 775) மொழிந்த காமக்கடுங்கனல். (ஆ : 296) வள்ளல் மொழி வாசகம். (சு : 551)

மொழிந்ததோர் அளவில் – ஒருசொல் பேசும் நேரத்தில். மொழிந்ததோர் அளவில் விண்ணை முட்டினுன். (யுத் : 3112)

மொழிந்த பேருழி - நூல்களிற் சொல்லப்பட்ட பேருழிக் காலம். ஏழுவேலையின் மொழிந்த பேருழியின் முழங்கி முந்தெழ. (அ : 958)

மொழி வழங்குதல் மொழியைச் சொல்லுதல். மன்னன் முன்னின்ற மகோதரற்கிம் மொழி வழங்கும். (யுத் : 2486)

## மோ

மோ - 1. முன்னிலையசை. வன்றிண் சிலையாய் கேண்மோ. (அ:380) 2. முகர்தல். மோக்கும். (யுத் : 3177)

மோக்கும் - மோந்து பார்ப்பான். மூக்காலே முகருவான். மூர்ச்சிக்கும் மோக்கும் முயங்குமால். (யுத் : 3177) மோக்கும். (சு : 556)

மோகத்தாற் பிறக்கை - அவாவினுல் மறுபடி பிறப்பெடுத்தல். இறக்கையுஞ் சிலரேகலு மோகத்தாற் பிறக்கையுங்கடன் என்று. (யுத் : 4155)

மோகம் - 1. காமமயக்கம். மிக்க காமத்துமிடல். மோகத்துக்கோர் முடிவுமுண்டாங் கொலோ. (ஆ : 308)
2. மயக்கம். மூர்ச்சை. எருவை வேந்தனும் மோக வெந்துயர் சிறிதாறி. (ஆ : 951)

3. மோகனாஸ்திரம். மோக மொன்றுண்டு முதல்வன் வகுத்தது. (யுத் : 3515)

4. அறியாமை. மாயை. தேவரை யெல்லாம் மோகத்தின்பட முடித்தவர். (யுத் : 3215)

5. மாயையால் உண்டாகும் மயக்க உணர்ச்சி. மோகத்தாற் பிறக்கையும். (யுத் : 4155)

மோகம் படைத்தான் - ஆசை மயக்கத்தை அடைந்தவன். (இராவணன்) பாகன் தலையைப் பறித்துப் படர் கற்பினுள்பால் மோகம் படைத்தான் உளைவெய்த முகத்தெறிந்தான். (ஆ : 932)

மோகமாப்படை - பெருமை பெற்ற மோகனாஸ்திரம். (யுத் : 3517) [பா:பே]

மோகமுறுதல் - அறிவு மயங்குதல். அரக்கர் மோக முற்றனாரமென. (சு ; 796)

மோக வெந்துயர் - மயக்கத்தைத் தந்த கொடிய துன்பம். (வை மு) மூர்ச்சையாகிய கொடிய துயரம். (அண்) மோக வெந்துயர் சிறிதாறி. (ஆ : 951)

மோகனை - மோகத்தையுண்டாக்கும் மாயை. மோகனம் என்னும் செய்வினை. மோகனை என்பது முந்தி முயன்றுள். (ஆ : 1096)

மோகினி மடந்தை - கண்டவர்களை மயக்குவதொரு பெண் வடிவம். திருமால் கொண்ட மோகினி வடிவம். சிறந்த மோகினி மடந்தையால் அவுணர் தஞ் செய்கை துறந்து மாண்டனர். (பா:502)

மோட்டிளமூரி - பருமையும் இளமையு முடைய எருமைகள். வெருவிய மோட்டிளமூரி உழக்க வாளைகள் பாளையிற் குதிப்பன ஓடை. (பா : 545)

மோடி - துர்க்கை; பார்வதியின் அம்சமானவள்; போர்க்களத்திற்கு அதிதேவதை. மணப் பெருங் களத்தின் மோடி மங்கல வாழ்க்கை வைப்பில். (யுத் : 2172)

மோடி மங்கல வாழ்க்கை வைப்பு - துர்க்கையின் மங்கல வாழ்க்கைக்கு இடம் போன்ற போர்க்களம். (யுத் : 2172)

மோடு - உயர்ச்சி. மோடு தெண்டிரை. (கி : 305) [பா : பே]

மோத்தல் - மோந்து பார்த்தல். முந்தி வந்திறைஞ்சினனை மோந்து மார் பிறுகப்புல்லி. (யுத்: 1348) மோக்கின்றுன். (ஆ : 1001) பிசைந்து மோந்தவன். (யுத் : 1502)

மோதரன் - மகோதரன். இராவணன் ஆலோசகரில் ஒருவன். மந்திர இருக்கை வந்த மோதரன் என்னு நாமத் தொருவன். (யுத் : 1583) (யுத் : 3683)

மோதிரம்-விரலணி. வளையுமாமணி நன்மோதிர மளித்து. (கி:816) (யுத் : 4122) (யுத் : 4168)

மோதுதல் - அறைதல். அடித்தல். அங்கதன் அலங்கன் மார்பினிற் கையின் மோதினுன் காலனேயனுன். (கி : 897) கண்ணைச் சிதையக் கையான் மோதினுள். (யுத் : 2630)

2. வீசுதல். ஊழிவெங்காற்றிதென்ன இருசிறை வூதை மோத. (ஆ : 900)

3. குறுந்தடியால் அடித்தல், அடிக்கப்படுதல். மோதுகின்றில பேரி முழா. (அ : 816)

மோதுறுதல் - மோதிக்கொண்டு நிற்றல். மோதுற்றுர் திரை வேலை யின் மூழ்கான். (யுத் : 233)

மோய் - தாய். மனையின் மாட்சியை வளர்த்த எம் மோயினை வாளா முனையல். (யுத் : 4032) அருந்ததிக்கற்பின். எம் மோய். (ஆ : 274) தேவர்க்குந் தம்மோயை. (யுத் : 293)

மோயினன் - மோந்தான். முடியை மோயினன். (யுத் : 4106)

மோலி - மௌலி என்பதன் திரிபு, சிரசு என்பது பொருள். அதில் அணியும் கிரீடத்துக்கு இடவாகு பெயர். ஜடாமகுடம். பெற்றவன் அளித்த மோலி இளையவன் பெற. (யுத் : 442) செம்பொன் மோலி. (யுத் : 459)

மோழை - குமிழி. நீராறு. மண்டலங் கிழிந்த வாயின் மறிகடல் மோழை மண்ட. (சு : 750)

மோனம் - பேசாவிரதம். மோனமும் பாழ்பட. (யுத் : 2951)

மோனமாகியிருத்தல் - மௌனமாகி யிருத்தல். மோனமாகி யிருந் தனன் முற்றினுன். (யுத் : 740)

மோனர் - பேசாவிரதம் பூண்டவர். முண்டரும் மோனரும் முதலி னேர்கள். (ஆ : 120)

## மௌ

மௌலி - 1. மகுடம். மேருவின் நெற்றி முற்றிய வாளிரவியிற் பொலி மௌலியான். (ஆ : 183) மௌலி சூட்டும் மண்டபம். (அ : 257) மௌலி கவித்தனன் வரும். (அ : 297) புனைந்திலன் மௌலி. (அ : 298) (அ : 420) வசிட்டனே புனைந்தான் மௌலி. (யுத் : 4316)
2. உச்சி. கலசங் கொண்ட உச்சி. செம்பொன் மௌலிச் சிகரங்கள் தயங்க. (யுத் : 807)

மௌலி துளக்கல் - முடியை அசைத்தல். வீடணன் அலங்கன் மௌலி செவ்விதிற்றுளக்கி. (யுத் : 3062)

மௌலியின மணி - மகுடத்தின் தொகுதியான மணி. இக்கிரி பத்தின் மௌலியின மணி அடங்கக் கொண்ட சுக்கிரீவற்கு முண்டோ சூலமும் வாளும் வேலும். (யுத் : 906)

மௌனி - மோன விரதம் பூண்டவன். வார்த்தை மாறுரைத்திலன் முனிவன் மௌனியாய். (பா : 461)

## ய

யக்கன் - இயக்கன். இயக்கர் தேவர்களுள் ஒரு பிரிவினர். அன்ன யக்கன். (ஆ : 67)

யமன் - யமதர்மராஜன். வன்றிறல் யமனையும் அரசு மாற்றுவார். (யுத் : 483)

யமன்திசை - தென்திசை. எண்மரில் வலியனுன யமன்திசை. (பா : 670)

யமான் - யமன். மாய மானுயினுன் மாயமானுயினுன். (கி : 89)

யமுனை ஒரு புண்ணியநதி. கங்கையோடு யமுனை கோதாவரி. (யுத் . 4080)

யவனர் - யவனவீரர். பப்பரர் யவனர் சீனர். (பா:662) [பா:பே]

யா - யாது. யாவை. நீயாவான் யாவென. (அ:655) [பா:பே] இடர் உறுபகையா. (அ : 687)

யாக்கை - உடல். எழுவகைத் தாதுக்களால் யாக்கப்பட்டது. நின் யாக்கைதன்னை ஆர்ந்தே பசிதீர்வன். (சு : 70) (யுத் : 1744) யாக்கையினை முடித்தொழிந்தால், (யுத் ; 4146)

யாகம் - வேள்வி. யாகம் முற்றுமேல் யாரும் வெல்லார். (யுத் : 2892)

யாகம் சமைத்தல் - யாகத்தை முயற்சியுடன் செய்தல். தானவர் சமைத்தயாகம். (யுத் : 3215)

யாங்கண் - எங்கே. இகலனும னேனோர் விடணன் யாங்கணுள் ளார். (யுத் : 2554)

யாங்கள் - நாங்கள். யாங்களுற்ற கையறு துயரம். (கி : 102)

யாண்டு - எப்பொழுது. யாண்டு வந்திருக்கும். (யுத் : 4131)

யாண்டும் - எப்பொழுதும். யாண்டும் இடருடை யுள்ளத்தாரை எண்ணினும் உணர்ந்திலாதான். (கி : 376)

யாண் டெல்லை - வகுத்த ஆண்டுகளின் முடிவு. யாண் டெல்லை ஒருவனன்றே உலகறிக்கும் மறியான். (சு : 457)

யாண்டை - 1. எவ்விடம். என்னின் வேறு அரக்கியர் யாண்டை யார் கொலோ. (சு : 5)

2. எவ்வாறு. யாண்டை என்னிலை அறிவுறுப்பார்கள். (சு:342) [பா : பே]

யாண்டையார் - எவ்விடத்திலுள்ளார். (சு : 500)

யாண்டையான் - எங்குள்ளான். ஆண்டகை நெடுமுடி அரசர் கோமகன் யாண்டையான். (அ : 835) (சு : 1127) (யுத் : 2546) (அ : 1155)

யாணர் 1. புதிய வருவாய். யாணர் நீர்க்கங்கை யாற்றங்கரை. (சு : 638)

2. அழகு. யாணர்த் தூவியம் பேடை. (சு : 213)

3. புதுமை. யாணர்...... உணர்வு தோன்ற. (சு : 942)

யாணர்ப் பொங்கு நின்சுற்றம் - அழகுமிக்க நின் பரிவாரம். யாணர்ப் பொங்குநின் சுற்றத்தோடும் போயுவந்தினிதுன்னூரிற் றங்கி. (அ : 660)

யாத்தல் - கட்டுதல். பிணித்தல். எந்தை புனையுறு திரள்தோள் யாத்துப் பூமியிற் புரளக்கண்டேன். (யுத் : 1624)

யாதானுமாக - சிறிதாவது. (வை.மு) ஒரே பழங்கதையென்று கொண்டு. (அண்) யாதானுமாக நினையா திகழ்தியேல். (யுத்:306)

யாதியான் - யாது யான். யாதியானியம்புவது. (யுத் ; 3988)

யாதின் - எக்காரணத்தால். ஓங்கிய விதியினே யாதினே எனு (அ : 853)

யாதினும் இனிய நண்ப - எல்லாவற்றினும் இனிய நண்பனே. யாதினுமினிய நண்ப இருத்தீண் டெம்மோடென்ருன். (அ ; 662)

யாது - 1. என்ன. யாதென்றெண்ணுவது. (பா : 397) யாதுமக் கரிது. (பா : 700) யாது நுங்கருத்து. (அ : 31)
2. எது. நின்னை ஈன்றுள பயத்தினின் நிரம்புவது யாதோ. (அ : 65)

யாதுகொல் இது - இந்நோய்க் காரணம் யாதோ. யாதுகொல் இது என எண்ணல் தேற்றலர். (பா : 614)

யாதுதானர் - அரக்கர். பின்னுவைதனர் யாதுதானர். (யுத்:1393)

யாதும் - சிறிதும். எதுவும், ஏல்லாமெனையே முனிவிர் நினையா வில்லாளனை யாதும் விளித்திலிரோ. (சு : 492)

யாதும் ஒன்றும் - யாதொன்றும். யாதும் ஒன்றும் புகன்றிலன். (யுத் : 2857)

யாதுமிலார் - ஒன்றும் இல்லாதவர். யாவை யாதுமிலார்க்கியை யாதவே. (அ : 786)

யாதெனின் - எதன் பொருட்டு என்றால் வைய மென்னே இகழவும் மாசெனக் கெய்தவும் இது இயம்புவது யாதெனின். (பா : 6)

யாதையும் - யாவற்றையும். சேனை யாதையும் எழுக என்ருனே மணிமுரசு எற்றுக என்ருன். (யுத் : 3606)

யாப்புறு - உறுதிபூண்ட. யாப்புறு காதலர். (யுத் : 3442)

யாம் - நாம். யாரும் யாஞ்செய்த நல்லறப் பயனென இருப்பர். (அ : 39)

யாமபேரி - இரவின் முடிவைத் தெரிவிக்கும் முழா. காலை யாமத்திற் குரிய முரசு. யாம பேரி இசைத்தலால். (அ : 242)

யாமம் - 1. இரவு. யாம யாழ். (பா : 372)
2. சாமம். ஏழரை நாழிகை கொண்ட சிறுபொழுது. எல்லி யாமத்திருளுடே. (பா : 636)
3. நள்ளிரவு (கலா) யாம யாழ் மழலையாள். (கி : 777)

யாமயாழ் - இராப் பொழுதில். (நள்ளிரவில்) ஓசை மிக்குடைய வீணை. (கி : 777)

யாய் - தாய். யாய்க்கும் எந்தைக்கும். (அ : 373) (கி : 959) எந்தையை யாயைக் கொன்று வந்தானென்றுண்டோ. (யுத் : 415 யாயினுமன்பிஞேய். (யுத் : 4250) (சு : 644)

யார் - எவர் யாவர். இன்னர். இவட்காயவன் யார் கொல் என்ருய்ந்து. (பா : 371) யாரோடு நீ இவ்வரசாள்வாய். (அ : 212) யாரினி என்ஞேடொப்பார். (யுத்:932) யாரெனவிளபுகேன் நான். (கி : 68) யாரினுமுயர்ந்த தனக்கும் தன்னிலை அறிவரும் ஒரு தனித் தலைவன். (யுத் : 163)

யாரும் - யாவரும். ஏம்பலோடெழுந்தனன் யாருங்காணவே. (பா : 272)

யாருள் யாவன் நீ - (முன்பு சொல்லப்பட்டவர்) அனைவருள்ளும் நீ யாவனே. திசைநின்று ஆட்சியர் என்றிசைக்கின்றவர் யாருள் யாவன்நீ. (சு : 1113)

யாரென விரும்பார் - யார் என்று அறியவும் விரும்பமாட்டார். மறுமைகண்ட மெய்ஞ்ஞானியர் ஞாலத்துவரினும் வெறுமை கண்டபின் யாவரும் யாரென விரும்பார். (யுத் : 548)

யாரை - யார். யாவன். இங்குறை அருந்தவர் யாவர் நீர் யாரை. (ஆ : 848) யாரை நீ என்னையிங்கெய்து காரணம். (சு : 1115)

யாவதாகும் - ஏதாக ஆகும். மூவகைப் பேருலகின் முறைமையும் யாவதாகும் இன்று என்ன இரங்குவான். (யுத் : 3168)

யாவது - 1. எத்தன்மையுடையது. சோலைகண்டு யாவது ஈதென்ருன். (பா . 341)

2. யாது. கோவினை உடன்கொடு குறுகினேன் என்கோ யாவது கூறுகேன் இரும்பின் நெஞ்சினேன். (அ : 551) சிந்தனை யாவது. (அ : 1039) யாவது அவ்வுரை. (யுத் : 171)

யாவர் - 1. யார். மன்னன் மாதுயரத்தினை யாவர் சொல்ல வல்லார். (அ . 197) யாவர் என்று தேர்கிலேன். (பா : 802) அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்றவல்லார். (பா : 1221)

2. உயர்திணை உயிர்கள். யாவரும் எவையுமாய். (கி:360)

யாவர்ங்கும் அறிவருந்தனிமேனி - எவர்க்கும் அறிவறிதாகிய ஒப்பற்ற திருமேனி. அனைய குன்றெனுமசனியை யாவர்க்கு மறிவருந்தனிமேனி புனையுநன்னெடு நீறென நூறிய புரவலன். (யுத் : 1551)

யாவர்ங்கும் செல்வம் - இலக்குமி. யாவர்க்குஞ் செல்வத்தை வீடு என்னும் இன்பத்தை. (யுத் : 293)

யாவர்க்கும் தோலாதான் - எப்படிப்பட்ட ஆற்றலுடையார்க்கும் தோற்காதவன். (கும்பகருணன்) யுத் : 1548)

யாவரும் - எல்லாரும். எல்லா உயர்திணைப் பொருளும். யாவரும் நேர்கிலாப் பெண்ணின் நோக்குடையாள். (ஆ : 373) யாவரும் இன்பமுற்றுர். (யுத் : 454)

யாவள் - யார். அன்னவள் யாவளென்றறைபக் கேட்டியால். (பா : 366) யாவளடீ. (ஆ. 1088)

யாவன் - 1. யார். ஈனன் நீ யாவன். (பா : 675)
2. எத்தன்மையன். யாவனுகி இப்பழி நின்றேறுவேன். (அ : 1164)

யாவிர் - யார். யாவிர் இவ்விருக்கையுள் இருந்துளீர். (ஆ : 836) நீர் யாவிர். (யுத் : 359) யாவரும். (யுத் : 960)

யாவும் - (சராசரப்) பொருள் எல்லாம். நின்றுஞ் சென்றும் வாழ்வன யாவும் நிலையாவால். (ஆ : 747)

யாவை - எப்பொருள்கள். மின்னினுேடிடியும் வேமென்னில் வேறு யாவை வேவாதவே. (பா : 347)

யாவையும் - எல்லாவற்றையும். இமையவர் கடைய யாவையும் வழங்கிய கடல் என வறியள் ஆயினள். (பா : 607)

யாவையும் எவருமாய் - அஃறிணைப் பொருள் உயர்திணைப் பொருள் எல்லாமுமாகி. மூவகையுலகுமாய்க் குணங்கள் மூன்றுமாய் யாவையும் எவருமாய். (யுத் : 193)

யாழ் - யாழ் என்னும் இசைக்கருவி. இசையின் கிழவர்தம் மனை யன கிளைபயில் வளையாழ். (பா : 81)

யாழ்ச்செயிரியர் - யாழை வாசித்தலில் வல்ல பாணர். விறலிய ரோடு நல் யாழ்ச் செயிரியர் புரவிமேலார். (பா : 876)

யாழ் நறை – யாழிசையாகிய தேன். கோதில் யாழ் நறையடுத்த அசுண நன்மாச்செவி பறையடுத்தது போலும் என்பாவரோ' (பா : 7)

யாழ் நாமத்தேன் – யாழிசை என்னும் பெயர்கொண்டதேன். செவியிற்புகு நாமயாழ்த் தேனிற்றிசைப் பெய்துகின்ருர் சிலர். (சு : 271)

யாழ்மொழித் தெரிவைமார் – யாழ்போலும் பேச்சையுடைய மகளிர். நம்படை காண வானத்து யாழ்மொழித் தெரிவைமாரும் மைந்தருமேறுகின்ருர். (யுத் : 803)

யாழிசைமொழி – யாழிசைபோலும் இனிய மொழியையுடைய சீதை. யாழிசை மொழியோடன்றி யானும் இன்பம் என்னே. (கி : 430)

யாளி – சிங்கமுகமும் யானையின் துதிக்கையும் தந்தமுமுடையதாகக் கருதப்படும் ஒரு பிராணி. தேரும் பாகரும் வாசியும் செம்முகக் காரும் யாளியுஞ் சியமும். (யுத் : 1023)

யாளித்தாலி - யாளியைத் தொகுத்துக் கட்டிய தாலி. யாளியினைப் பல தாலியிசைத்தாள். (ஆ : 1085)

யாளிப்போத்து – யாளிக்குட்டி. வெய்ய புலிகளும் யாளிப்போத்தும் நீரிடைத் தோற்றவன்றே. (யுத் : 642)

யாற்றுநீர் – நதிகளின்நீர். யாற்றுநீர் சில வென்று மருவான். (யுத் : 134)

யாறு – ஆறு. செல்வர்க்கண்டடி படிவதென்னப் பொலிந்தது கடவுள் யாறு. (ஆ : 226) மண்டும்மால் யாறு. (கி : 473)

யான் -நான். யான்பெறப் புரிந்த தெத்தவம் என ஆடி. (பா:485)

யான் என உரியாய் நீ-என்னை யொத்த உரிமையுடைய நீ. (அ:687)

யானலாதார் - என்னை யொழியப் பிறர். யானலாதார் ஆரவை நோக்ககிற்பார். (யுத் : 1241)

யானுடைவில் - யான் கைக்கொண்டிருக்கும் வில். (யுத் : 2973)

யானை-யானை இரண்டு மராமரம் இடையிற நடந்த தோரியானை. (பா : 900) (பா : 901)

யானை ஈட்டம் - யானைகளின் கூட்டம். விங்கிருள் வேறிருந்த மால் யானை யீட்டம் என வந்து பரந்த வன்றே. (பா : 967)

யானைக்கடம் - யானையின் மதப்பெருக்கு. யானைக் கடங்களும் கலினமா விலாழியும் கணக்கிலாத. (சு : 135)

யானைக்குலம் - யானைக்கூட்டம். (யுத் : 2396)

யானைச் சேவகர் - யானைவீரர். (சு : 824)

யானைப்பதாகை - யானைகளின்மேல் கட்டியிருந்த கொடிகள். (யுத் : 978)

யானைப்பந்தி - யானை வரிசை. பாடியல் களிநல் யானைப்பந்தி. (அ : 1046)

யானையினுரிவைப் போர்வை - யானையின் தோலாகிய போர்வை. புதையிருளின் எழுகின்ற புகர்முக யானையின் உரிவைப் போர்வை போர்த்த உதகிரி எனுங்கடவுள். (பா : 713)

## யு

யுகம் - 1. இரண்டு. பதயுகம். (யுத் : 4326)
2. கற்பம். அருங்கடை யுகந்தனில் அசனிமா மழை. (அ : 103)

யுகமுடிவு - யுகாந்தகாலம். ஊழியிறுதி. கடையுக முடிவினில் எவையும் கால்படப் புடைபெயர் கடலென எழுந்து போயதே. (பா : 825)

## யூ

யூகம் - 1. கருங்குரங்கு. நாகமோட வேங்கையோடும் யூகம் ஓடுமே. (கி : 232)
2. குரங்குச்சேனை. ஒன்பதிறயிர கோடி யூகந்தன் முன்செல. (கி : 684) வானர யூகத்தோர். (யுத் : 1655)

யூதம் - காட்டு யானைகளின் கூட்டம். யூதத் தலைவனே ஒத்தது. (பா : 904) [பா : பே]

யூபம் - யாகப் பசுவைக் கட்டுந்தூண். யூபத்தணைக்குபு இம் மறையினை ஓதின் விரசுவர் விண்ணுளோரும். (பா : 691)

# யோ

யோகம் 1. உலகத்தை பகவானுடைய சொருப மாக நினைத்து இமயம், நியமம், ஆசனம், பிராணு யாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எட்டு அங்கங்களும் வழு வாது நின்று மனத்தை மற்றை விஷயங்களினின்று மீட்டுப் பரம் பொருளினிடத்து நிறுத்துவது. சாங்கியம் யோகமென்றிரண்டு தன்மைய. (யுத் : 190)

2. உபயோகம். யோக வெஞ்சேனை. (யுத் : 1678)

3. செய் தொழில். (வை.மு) சேர்க்கை. (அண்) தேவர்க்குந் தேவராய மூர்த்திகள் தாமும் தத்தம் யோகத்தின் முயற்சி விட்டார். (சு . 983)

4. உபயம். தந்திரம். (உ.வி) என்னுடை யோக வெஞ் சேனையும். (யுத் : 1678)

5. நினைவு. யோகம் வந்தது. (யுத் : 3534)

யோக முறு பேருயிர் – யோக மார்க்கத்தில் நிலை நிற்கின்ற பெரிய முனிவர்கள். யோகமுறு பேருயிர்கள் தாமுலைவுருமல் ஏகு நெறி யாதென. (ஆ : 156)

யோகர் – போகியர். பருவரல் இன்பமென்றிரண்டும் ஒக்க நோக்கிய யோகரும் அருந்துய ருழந்தார். (அ : 508)

யோக வெஞ்சேனை – உபாயம் வல்ல வெவ்விய சேனை. (யுத்:1678)

யோகி - யோகமுறை கைவந்தவர். களிப்பில் இந்தியத்து யோகியைக் கரக்கிலன். (அ : 707)

யோகியர் - யோகப் பயிற்சியிற் றேர்ந்தவர். யோகியர் உறுபத மிழந்தார். (யுத் : 139) (ஆ : 931)

யோகு - 1. யோகம். வானவனிருந்து யோகு செய்தனனெனின். (பா : 344)

2. அறிதுயில். உலகத்தைப் பாதுகாக்கும் சிந்தனை. உலகளித்து யோகின் எய்திய சக்கரத்தவன். (அ : 3)

யோசனை - ஓர் நீட்டலளவை. நாற்காத தூரமென்றும் பிறவாறும் கூறுவர். (கலா) யோசனைகள் பேச நின்ற ஒன்பதினுயிரங் கடந்தால். (யுத் : 2679)

யோனிகள் - பிறப்பு வகைகள்· உயிர் வர்க்கங்கள். விரிந்த யோனிகள் எவ்வளவிற் செல எண்ணலாதுமோ. (அ : 1141)

## ர

ரகு - சூரிய குலத்தரசன். வந்த குலத்திடை வந்தான் ரகுவென் பான். (பா : 731)

ரத்தம் - உதிரம். சித்து ரத்தம் துதைந் தெழு செச்சையான். (யுத் : 962)

## ரா

ராகம் - செந்நிறம். மாகராக நிறை வாளொளியோனை. (யுத் : 822)

ராகவன் - இராமபிரான். ஆக ராகவனை அவ்வழிக் கண்டான். (யுத் : 823)

ராகு - இராகு வெனும் பாம்பு. வேக ராகுவென வெம்பி வெகுண் டான். (யுத் : 823)

ராசி - கூட்டம். குவியல். திரள். கூர் கனக ராசியொடு கோடி மணியாலும் தூர்மின் நெடு வீதியினை. (அ : 281) (கி : 852) துரக ராசி. (யுத் : 1769)

ராம வென் றிரண்டெழுத்து - ராம என்று சொல்லப்படுகிற இரண்டு எழுத்து. சென்மமும் மரணமு மின்றித் திருமே இம்மையே இராம வென்றிரண் டெழுத்தினால். (பாயி : 13)

ராமன் - எல்லோர்க்கும் மகிழ்ச்சி தருபவன்.

## ரி

ரிசிகன் - சுனச்சேபன் தந்தை. விசுவாமித்திரனது உடன் பிறந் தாள் கணவன். நற்றவரிசிகன் வைகும் நணிவரும் பழுவம். (பா : 684)

## ரோ

ரோதம் - கரை. அணையுமாம். சீத ரோதக் குருதி. (யுத் : 3145)
ரோதனம் - அழுகை. ஓத ரோதன வேலை. (யுத் : 3145)

## லோ

லோக சாரங்கன் - ஒரு முனிவன். தாழ்ந்த மாதவத்து லோக சாரங்கன் உறையுஞ் சாரல். (கி : 1001)

வ

வக்கு - வேறுகை. வக்கிலாத்திசைகளும். (யுத் : 3732)

வக்குதல் - 1. பிளவுபடுதல். (வை.மு) வதங்குதல். வாட்டுதல். (அண்) வக்கிலாத்திசைகள். (யுத் : 3732)
2. எரிதல் (உ.வி) (யுத் : 3732)

வகிர் - பிளவு. வகிர்படத்துணிக்கும். (யுத் : 268)

வகிர்த்திங்கள் - பிறைச்சந்திரன். வகிர்த்திங்கள் சூடிய செல்வன். (அ : 635)

வகிர்தல் - 1. பகுத்தல். வாணிலா வயங்கு செவ்வி வளர்பிறை வகிர்ந்த தென்கோ. (பா : 1209)
2. பிளத்தல். (அண்) பிரிதல். (வை.மு) வகிர்ந்து நீங்கலா நெஞ்சினும் வலிதுயிர். (அ : 481)
3. கீறுதல். துண்டித்தல். (அண்) வகிர்ந்தான் சில. (யுத்:1836)
4. வெட்டிபெடுத்தல். நிலம் வகிர்ந்தகுழி. (ஆ : 45)

வகிர்ந்த - நீண்ட. நிலம் வகிர்ந்தகுழி. (ஆ : 45)

வகிர்ப்படுத்தல் - இரு பிளவாகச்செய்தல். வகிர்ப்படுத்துரிக்கும். (யுத் : 268)

வகிர்மதிநெற்றியாள் - பிறைமதிபோன்ற நுதலாள். ஓர் வகிர்மதி நெற்றியாள். (பா : 1097)

வகிர்வுறுதல் - வாரிக்கொள்ளுதல். மானுர்கண்ணின் மடவாராயினர் முன்னே தங்குழல் வகிர்வுற்றார். (சு : 969)

வகுத்தல் - 1. வகைப்படுத்தல். கூறு கூறுக்குதல். (வை.மு)
2. படைத்தல். (அண்) மனத்தினில் உலகெலாம் வகுத்து. (கி : 541) பகுத்த வான்மதிகொடு பதுமத்தண்ணலே வகுத்த வாணுதலியர். (அ : 535)
3. சொல்லல். ஒரு சொல் வகுத்தான். (அ : 380)
4. தெரிவித்தல். மழைக்கண் என்பது காரணக் குறியென வகுத்தான். (சு : 335)
5. சமமாகப் பிரித்தல். வெண்மதி வாணுதலாள் தனக்கும் மடவாட்கும் வகுத்து நல்கி. (பா : 996)

6. உண்டாக்கல். மோகமொன்றுண்டு முதல்வன் வகுத்தது முன்னாள். (யுத் : 3515)
7. அமைத்தல். கால் வகுத்து. (சு : 816)
8. பெய்தல். கல்லின் மாரியைக் கைவகுத்தாள். (பா : 412)
9. அணிவகுத்தல். பற்றிய வாசல்தோறும் முறையின் வகுத்தி ரால். (யுத் : 963)

வகுதி – பகுப்பு. வகுப்பு. பகுப்புகளில் அடங்கிய பொருள்கள். மேலவர் வகுதியின் வயத்தன வரவு போக்கது. (யுத் : 199)

வகுந்து – வழி. வகுந்துவின் வசு அரி வதிந்தது இவ்வனம் புகுந்தனள். (பா : 383)

வகை – 1. அணிவகுப்பு. வகையும் மானமும். (கி : 744)
2. அழகு. வகை நின்றுயர் தாணொடு மாருதியும். (யுத்:2320)
3. விதம். அறிவில் தோரா வகைநின்று திரிந்துளவால். (யுத் : 2347)
4. ஒழுங்கு. வட்டவெங்கண் வரை ஆளி பதினறு வகையில். (ஆ : 6) [பா : பே]
5. வலி, திறமை, முறை, காரணம் ஆற்றல் முதலியன. கொடி யிர் வாளுக்கு எல்லையும் வந்தனவகை கொண்டு வந்தேன். (சு : 1018)
6. வகுத்தல். வகையில் வஞ்சனுய். (அ : 1167)

வகைதல் – 1. வேறு வகையாகக் கூறுதல். வகையாது தொடர்ந்து. (யுத் : 2639)
2. வகைப்படுத்தல். மந்தரை பின்னரும் வகைந்து கூறுவாள். (அ : 157)

வகைந்து – படுத்து. வகைப்படுத்தி. (அ : 157)

வகையாது – பிரிந்திராமல். (அண்) வேறு வகையாக மறுமொழி கூருமல். (வை.மு) ஒருவகைப் படுத்தாமல்; செவியேற்காமல். (கலா) தகைவாணகர் நீ தவிர்வா யெனவும் வகையாது தொடர்ந்து. (யுத் : 2635)

வகையில் வஞ்சன் – (மனத்திலுல்) வகுத்தற்கரிய வஞ்சனை யுடைய வன். (அ : 1167)

வங்கநீர்க்கடல் – கப்பல்கள் செல்லும் நீரை யுடைய கடல். வங்க நீர்க் கடலும் வந்துதன் வழிப்படர. (அ : 1042)

வங்கம் - கப்பல். வங்கம் வேலைக் கூம்பொடு படர்வதேபோல். (அ : 1041) (யுத் : 231)

வங்கர் - வங்கநாட்டரச பரிவாரம். வங்கர் மாளவர் சோழர் மராடரே. (பா : 1194)

வங்கவாரி - கப்பலையுடைய கடல். தாழ்ந்த வங்கவாரியில். (பா : 109)

வங்கவேலை - கப்பல்களோடு கூடிய கடல். வரம்பிகந்தோடி வங்க வேலைவாய் மடுப்ப. (பா : 40)

வங்கியம் - புல்லாங்குழல். வம்சம் என்ற சொல்லின் சிதைவு. [வம்சம்-மூங்கில்] துளைக்கருவி. நாதசுரம். (கலா) வங்கியம் பல தேன் விளம்பின. (அ : 245) வங்கியம் வகுத்த கான மாறு கொள் மழலையர். (யுத் : 2783)

வங்கியம் வகுத்த கானம் - புல்லாங்குழலில் சுரங்கள் வகைப் படுத்தப்பட்ட இசைப்பாடல். (யுத் : 2783)

வச்சிர உடல் - வச்சிரம் போன்று உறுதியான உடல். நலியுமிட்ட தோ வச்சிர உடல். (சு : 1045)

வச்சிரத் தெயிற்றவன் - வச்சிர தந்தன். வச்சிரத் தெயிற்றவன் வல்லை கூறுவான். (யுத் : 40) (யுத் : 501)

வச்சிரப்பகழி - பல தலைகளையுடைய வச்சிரத்தின் வடிவான பாணம். வச்சிரப்பகழி கோடி வளையெயிற்றரக்கன் எய்தான். (யுத்:2604)

வச்சிரப்பொருப்பு-வச்சிர மயமானதொரு மலை. வச்சிரப்பொருப்பை யுற்றதோர் பொருப்பெனக் கடி தொடிந்து. (யுத் : 2032)

வச்சிரபாணம் - வச்சிராயுதம். இமையாக்கோன் வச்சிரபாணம் புகமூழ்க. (கி : 1021)

வச்சிரம் - 1. இந்திரன் படை. வச்சிரமுந்திண்டினவா ஒன்றுஞ் செயலற்றவாம் (யுத் : 1663)

2 வயிரம். வயிரம் போன்று உறுதியுடைய பொருள். வச்சிரப் பொருப்பு. (யுத் ; 2032) வச்சிரயாக்கை. (சு : 537)

வச்சிரம் வென்ற எயிற்றுன் - வச்சிரத்தை வென்ற கோரப் பற்களை யுடையவன். வஜ்ரதம்ஷ்ட்ரன். பிசாசனெனும்பேர் வெய்யவன் வச்சிரன் வென்ற எயிற்றுன். (யுத் : 2273)

வச்சிரமுட்டி - அரக்கவீரன். மலைகுலைந்தென வச்சிரமுட்டி தன் நிலை குலைந்து விழுதலின். (யுத் : 1017) (யுத் : 1047)

வச்சிரயாக்கை - உறுதியான உடல். கனகன் என்பவன் வச்சிர யாக்கையை வகிர்ந்த வன்தொழில். (சு : 537)

வச்சிராயுதத்திறைவன் - இந்திரன். (பா : 187)

வச்சிராயுதம் - வச்சிரப்படை. இந்திரன் வச்சிராயுதம் போலு மருங்கினன். (அ : 651)

வச்சை - பழிப்பு. வச்சையாமெனும் பயம். (ஆ : 509) [பா : பே]

வச்சைமாக்கள் - உலோபிகள். வச்சைமாக்கள் என்று அவர் நிதியம் வேட்ட இரவலர். (பா : 1065)

வச்சையன் - உலோபத் தன்மையுள்ளவன். மாற்றான் உதவான் கடுவச்சையன் போலொரு மன்னன். (பா : 99)

வசஞ்செய்தல் - வெல்லப்பெறுதல். வசஞ்செயாதவன். (யுத்:502)

வசஞ்செயாதவன் - போரில் எவராலும் வெல்லப்படாதவன். அவரின் வசஞ்செயாதவன் தானன்றிப் பிறரிலா வலியான். (யுத் : 502)

வசத்தம் - அடங்கியிருத்தல். மேலவர் வகுதியின் வசத்தன. (யுத் : 199)

வசி - கூர்மை. வள்ளுறை கழித்தவாபோல். வசியுற வயங்கு கண்ணாள். (பா : 1066) [பா:பே]

வசிட்டமா முனிவன் - பெரிய வசிட்டமுனிவன். வள்ளியோய் கேட்டி என்று வசிட்டமா முனிவன் சொன்னான். (அ : 1183)

வசிட்டன் - வசிட்ட முனிவன். அசட்டர்கள் ஐவரை அறுவராக்கிய வசிட்டனும். (பா : 256)

வசித்து - வசஞ் செய்து. வஞ்சியிற் செவ்வியாளை வசித் தென் பால் வருவீர். (சு : 480)

வசு - 1, ஒளி. சுவாலை. வகுந்துவின் வசுவரி வதிந்தது இவ்வனம் புகுந்தனள். (பா : 383)

2. ஓர் அரசன். குசனுடைய மைந்தன், மற்றை வசு கிரி விரசம் வாழ்ந்தார். (பா : 425)

வசுவரி - வசு அரி. சுவாலையோடு கூடிய நெருப்பு. (பா : 383)

வசை - 1. குற்றம். பழிப்பு. பரசு ராமன் கைவரிசிலை வாங்கி ஓர் வசையை நல்கிய ஒருவன். (பா : 1391)
2. தீங்கு. வசை இல இனிய கூறல். (கி : 420)

வசைக் கசைதல் - பழிக்கு வாடுதல். வசைக் கசைந்த எந்தையார் அருள. (சு : 1179)

வசை கொண்டாள் - பழிகொண்டாளாகிய கைகேசி. வசை கொண் டாள் கோளும் என்னுலே யெனல் கொண்டான். (அ : 871)

வசைத்திறம் - 1. பழி. வசைத்திறம் நின் வயின் வைத்து மாள் வென். (அ : 204)
2. பழிப்பின் கூறுபாடு. மாதை ஒறுத்தல் வசைத்திற மென்ருன். (யுத் : 2826)

வசைப்பொருள் - பழி. வசைப் பொருள் நின்வயின் வைத்து மாள் வென். (அ : 204) [பா:பே]

வசைபடுதல்-பழியுறுதல். வருகைத்தல மதவெங்கரி வசைபட்டன. (யுத் : 1132)

வஞ்சக்கிளை - வஞ்சனைக்கு அனுகூலமாயுள்ள நின் சுற்றத்தார். வஞ்சக்கிளையொடும் இன்றுகாறும் அழிகிலை. (யுத் . 1600)

வஞ்சகர் - கள்வர். கள்ளம் மன்னகத்துடையராய வஞ்சகர் மாற்ற மல்லன். (சு : 517)

வஞ்சகவுழை - மாரீசனுகிய மாயமான். வஞ்சகவுழை யொன்றேவி. (யுத் : 4205)

வஞ்சகன் - இராவணன். வஞ்சகன் தன் தலையறுத்து இடர் தணிப்பன். (பா : 199) [பா : பே]

வஞ்சம் - 1. அறிவின் வலிமையாலும் நுணுக்கத்தாலும் செய்யும் சூது. வஞ்சர் தீவினைகளால். (பா : 348)
2. வஞ்சனை. பொய். கபடம். வஞ்சனேன். (யுத் : 159) உரங் கொள் மனத்தவள் வஞ்சம் ஓர்கிலாதான். (அ : 194)
3. கொடுமை. வரனும் மாயமும் வஞ்சமும் வரம்பில வல்லோர். (சு : 347

வஞ்சமகள் - வஞ்சனையுடையவளாகிய சூர்ப்பணகை. வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள். (ஆ : 255)

வஞ்சகர் - வஞ்சனைக் குண முள்ளவர். (அரக்கர்) உறங்குகின்ற வஞ்சரும் மறுகி மீள. (யுத் : 2224) வஞ்சரில்லை இவ்வண்டத்தி லெனும்படி. (யுத் : 4060)

வஞ்சமாயர் - வஞ்சனையும் மாயமும் உடைய அரக்கர். (யுத் : 3331)

வஞ்சரூர் - வஞ்சக அரக்கர் ஊராகிய இலங்கை. (சு : 1324) (யுத் : 2754)

வஞ்சவினை - வஞ்சகமான தொழில். வஞ்சவினை செய்து நெடு மன்றில் வளமுண்டு கரி பொய்க்கு மறவோர். (யுத் : 3402)

வஞ்சன் - வஞ்சகன். (இராவணன்) (இந்திரசித்து) அத்தேர் மிசை நின்ற வஞ்சன் இராமனை நேர்வுரு. (யுத் : 3850) பிற் பயனுணர்தல் தேற்றுப் பேதைபால் வஞ்சன்செய்த கற்பனை யென்ன. (யுத் : 2278) (யுத் : 2033)

வஞ்சனை - மாயம். வஞ்சனை மானென்றேவி. (சு : 44)

வஞ்சனை புணர்த்தல் - வஞ்சனையான செயல்களைப்புரிதல். வஞ்சனை புணர்த்த போதினும். (யுத் : 382)

வஞ்சனை மடந்தை வேடம் - மடந்தையர் வஞ்சனையின் வேடம். வஞ்சனை பண்டு மடந்தை வேடமென்றே தஞ்செ்ன மாதரை உள்ளலார்கள் தக்கோர். (அ : 202)

வஞ்சனையாலரசெய்திய மன்னர் - சூழ்ச்சியால் அரசாட்சிபெற்ற மன்னன். (பரதன்) என்னுருயிர் நாயகன் ஆளாமே வஞ்சனை யாலர செய்திய மன்னரும் வந்தாரே. (அ : 1006)

வஞ்சனையான்-வஞ்சனைக் குணமுள்ளவன். (இராவணன்) வஞ்சனை யான் தூதரும் எய்தினர். (யுத் : 2353)

வஞ்சனையியற்றுதல் - சூழ்ச்சிசெய்தல். வஞ்சித்தல். கபடச் செய் கையைச் செய்தல். வஞ்சனை மனிதரை இயற்றி. யுத் : 28) வஞ்சனை யியற்றிட வந்தவாறலால். (யுத் : 377) வஞ்சனை இயற்றிய மாயக்கைகையார். (யுத் . 4172)

வஞ்சி - 1. நீர் வஞ்சிக்கொடி. வஞ்சிபோன் மருங்குலார். (பா ; 991)

2. கொடிபோன்ற பெண். மாது. உவமையாகுபெயர். வழிக்குங் கண்ணீர் அழுவத்து வஞ்சியழுங்க. (யுத் : 5)

3. புறத்திணைகளுள் ஒருதிணை; அது நிலம்பெறும் ஆசையால் பகைவர் மேற் படைபெடுத்துச் செல்வதை ஒழுக்கமாகக்கொண் டது. அவ்வொழுக்கத்தால் வஞ்சிப்பூச் சூடுவது மரபு. வஞ்சி சென்றிறுத்தவன் வாகை மீக்கொள். (அ : 901)

வஞ்சிசென்றிறுத்தவன் - நிலம் பெறும் பேராசையால் வஞ்சி மாலை சூடி வந்து படையொடு தங்கின வஞ்சிமன்னன். (அ:901)

வஞ்சித்த பேதை - வஞ்சனையால் அரசு பெற்ற பேதையாகிய கைகேசி. வஞ்சித்த பேதை சிறுவனைப் பின் பார்த்து நிற்குமே. (அ : 406)

வஞ்சித்தல் - ஏமாற்றுதல். வஞ்சனை செய்தல். பதம் வஞ்சித்த நாய்கள். (சு : 620) [பா:பே]

வஞ்சிப்புண்ட - வஞ்சிக்கப்பட்ட. அரக்கனால் வஞ்சிப்புண்ட சீதை. (கி : 917)

வஞ்சிபோல் மருங்குல் - வஞ்சிக்கொடி போலும் நுணுகிய இடை. வஞ்சிபோன் மருங்குலார். (பா : 981) வஞ்சி போல் மருங்கு லாள். (கி . 780)

வஞ்சி போலியர் - பூங்கொடி போன்ற வடிவுடைய மகளிர். வஞ்சி போலியர் மருங்கென நுடங்கின வல்லி. (கி : 488)

வஞ்சியர் - மகளிர். பஞ்சியடி வஞ்சியர்கள். (சு : 704)

வஞ்சியன்ன மின்னிடை - வஞ்சிக் கொடி போன்று நுண்ணிதாய் விளங்குகின்ற இடை. வஞ்சியன்ன மின்னிடையலச ஓடி. (ஆ : 290) [பா : பே]

வஞ்சியே போல்வாள் - வஞ்சிக் கொடி போன்றவள். சீதை. மண் ணிடை மணியின் வந்த வஞ்சியே போல்வாள் வந்தாள். (ஆ : 280)

வட்டக்கண்ணடி - வட்டமானகண்ணடி. பால் நிறத்தட்டம் வட்டக்கண்ணடி பலவுமின்னபோலு மென்றுரைத்தபோதும் புனைந்துரை. (கி : 782)

வட்டகிடுகு - வட்டவடிவான கேடயம். வட்டச் செயிரறு கிடுகு பற்றி. (யுத் : 274)

வட்டணை - 1. விரைந்தநடை. மாப்புண்டரவாளியின் வட்டணை மேல் ஆப்புண்டவர் ஒத்தனை. (யுத் : 2349)

2. சுற்றல். சுழற்றுதல். (கலா)

3. பெருந்தாளமிடுதல். (வை.மு) கூற்றையும் வென்றுயர் வட்டணை கொண்டான். (யுத் : 282)

வட்டணை கொள்ளல் – 1. தாளம்போடல். (வை.மு) உம்பரையும் கொம்மைக்குய வட்டணை கொண்டிலரோ. (யுத் : 1683)

2. சுற்றல் காணுதல். சுழற்றுதல். (கலா) கூற்றையும் வென் றுயர் வட்டணை கொண்டான். (யுத் : 2822)

வட்டம் – 1. சிலாவட்டம் (வை.மு) வட்டவடிவம். (அண்) வட்ட வேங்கையின் மலரொடுந்ததைந்தன. (அ : 744)

2. வளைவு. வட்டமோ ரோசனை வளைவிற்றாய். (அ : 539)

3. திரட்சி. வட்டவான் வயிரத்திண்டோள் மலை. (யுத்:2141)

வட்டம் ஓடினர் – வட்டமாக ஓடியவர்கள். மாறிவட்டமோடினர் சாரிபோனர். (யுத் : 2527)

வட்டமண்டலம் – வட்டமாய் உள்ள இப்பூமண்டலம். வட்ட மண்ட லத்தரிது வாழ்வெனு. (கி : 129)

வட்டமிடுதல் – சூழ்ந்துவருதல். வட்டமிட்டகிரியற்றுக. (ஆ : 30)

வட்டமேரு – வட்டவடிவமானமேரு. வட்டமேரு இதுவென வான் முகடு வட்ட நீண்ட மதின்மிசையேறி. (யுத் : 976)

வட்ட வாண்முகம் – வட்டமாகிய ஒளி பொருந்திய முகம். வட்ட வாண்முகத்தொரு மயிலும் மன்னனும் கிட்டியபோது.(பா:1111)

வட்ட வான் வயிரத்திண்டோள்மலை – திரண்ட பெரிய உறுதியான வலிமையுள்ள மலைபோன்ற தோள்கள். காகுத்தற்கிளைய காளை வட்ட வான் வயிரத்திண்டோள் மலைகளையுளைய வாங்கி. (யுத் : 2141)

வட்ட வெண்குடை – வட்ட வடிவமான வெண்குடை. பைம் பொற் றேரர் வட்ட வெண்குடையர். (யுத் : 4284)

வெட்ட வெண்டிசை – வட்ட வடிவமாக அமைந்த எட்டுத்திக்கு. தூர வட்ட வெண்டிசைகளைத் தனித்தனி சுமக்கும். (ஆ : 526)

வட்டாட்டு – உருண்டை உருட்டி ஆடும் ஆட்டம். படை நெடுங் கண்ணர் வட்டாட் டாடிடம் பலவுங் கண்டார். (பா : 480)

வட்டில் – அம்பறுத்தூணி. வாளி வட்டில் புறம் வைத்து. யுத் : 3644)

வட்டினி - பந்தயப் பொருள். வடமுகம் மகர யாழும் வட்டினி கொடுத்து. (பா : 580)

வட்டு-1. கண்ட சர்க்கரை.ஒரு வகைச் சர்க்கரை. சிரணி போதன் வட்டாய்ச் செய்தனன். (பாயி : 12)

2. திரண்ட வடிவானது. உலக்குவட்டு உருகு செம்பொத்து உதிரநீர் ஒழுகுங்கண்ணன். (யுத் : 1943)

வடக்கு - மேருமலை. கோவையார் வடக்கொழுங்குவடு ஒடிதர நிவந்த. (பா : 898)

வடக்கு வாய்தல்-வடக்கு வாயில். வடக்கு வாய்தலின் வச்சிர முட்டியும். (யுத் : 1046) [பா : பே]

வடக் கொழுங்குவடு - வடதிசையிலுள்ள கொழுத்த மேருமலை. (பா : 898)

வட கடுங்கனல் - கொடியவடவைத்தீ. கதழ்வட கடுங்கனல் போன் மயிர்ப்பங்கியான். (யுத் : 1285)

வடகம் - 1. மேலாடை. போர்வை. வடகமும் மகர யாழும். (பா : 580) (யுத் . 3818) (கி : 919)

2. இரத்தின ஆரம் (வை.மு) எருவை வேந்தன் விசிய வடக மிக்கோள். (கி : 819)

வடகமிக்கோள் - வடகமாகிய போர்வை. எருவை வேந்தன் விசிய வடக மிக்கோள் ஈதெனவிளங்கிற்றன்றே. (கி : 919)

வடகமும் தூசும் வீசுதல் - மகிழ்ச்சிக்குரிய செயல். வடகமும் தூசும் விசினர் துதித்தனர் பாடினர். (யுத் 3818)

வடகலை - வடமொழி. கடகலை தென்கலை வடுகு கன்னடம். (பாயி : 18)

வடகனல் - வடவைத்தீ. காய்ப் பொடுற் றெழுவடகனலும் கண் கெட. (கி : 244)

வடகீழ்ப்பாகம் - வடகிழக்குப் பகுதி. (ஈசானதிசை) ஆயதன்வட கீழ்ப் பாகத்து ஆயிரம் அருக்கர் ஆன்ற காய்கதிர் பரப்பி (யுத் : 2706)

வடகுணதிசை - வடகிழக்கு. ஈசானியம். வடகுண திசையின் ஏறு மாதவக்கபிலன் இவுளி கண்டு. (பா : 515) வடகுணதிசையிற் றேன்று மழுவலர்ன். (யுத் : 2699) (பா : 515)

வடகுன்றம் – மேருமலை. வடகுன்றம் போல்வாள். (சு : 173)

வடங்கொள் பூண்முலை – மணி வடங்களையும் பிற அணிகளையும் அணிந்த தனங்கள். வடங்கொள் பூண்முலை மடந்தைமார். (பா . 83) வடங்கொள் பூண்முலை மடமயிலே· (ஆ : 739)

வடசொல் – வடமொழி. வடசொற்கும் தென்சொற்கும் வரம்பாகி. (கி : 769)

வடதிசை – வடக்கு. வடதிசை வருமந்தாள் நின்னுழை வருகின்றேன். (அ : 687)

வடதிசையயனம் - வடக்கு வழியிற்செல்லல். வடதிசையயனம் முன்னிவருவதேகடுப்ப· (யுத் : 4083)

வடநூன் முனிவர் – வடமொழி நூல்களையருளிய முனிபுங்கவர். கவிஞர் அனைவரும் வடநூன் முனிவரும் புகழ்ந்தது. (பா : 93)

வடபாகம்–வடக்குப்பக்கம். பருவரைகள் எனைப்பலவும் வடபாகத்துச் சாய்ந்தன· (யுத் : 2689)

வடபால் – வடதிசையில். வடபால் வான்றோயப் பாழிதெற்குள்ளன பொருப்பும். (யுத் . 2)

வடபெருங்கிரி – வடக்கேயுள்ள பெரிய மேருமலை. அம்பொன் வட பெருங்கிரி பொருவுதேர். யுத் : (144)

வடம் – 1. மேகலை முதலிய வடங்களாலாகிய அணிகள். வடங் கொள நுடங்குமிடையாள். (பா : 391)

2. ஆரம். (கழுத்தணி) வடங்களும் குழைகளும் வானவில்லிட. (பா : 805)

3. மாலை. உள் அணிவடம். (அ : 704)

4. முத்து முதலிய மணிகளால் தொடுத்தமாலை. வடங்கொள் பூண்முலை மடமயிலே. (அ : 7401)

5. கயிறு. காற்றுடிவிடும் கயிறு. மாகால் விசைக்க வடமண்ணிலுற வாலோடு ஆகாய முற்ற கதலிக்குவமையானுன். (சு : 85)

6. ஆலமரம். ஓர் குன்றின் பாங்கருளதாலுறையுள் பஞ்சவடி. (ஆ : 174) வடம் – ஆலமரம். வடி – ஆலமரத்தையுடைய இடம்.

வடமலை-மேருமலை. வடக்கேயுள்ள மேருமலை. வடமலை புரைவன கோயில் வாயிலின். (யுத் : 490) [பா:பே] வடமலையாமெனு நிலையான். (யுத் : 1852)

வடமுலை - மாலையணிந்த தனங்கள். (அண்) முத்துமாலை யணிந்த தனங்கள். (வை.மு) உன் அணிவட முலைமுன்றிற் சுணங்கின மலைவமான. (அ : 804)

வடமேரு-வடக்கிலுள்ள மேருமலை. வடமேரு தன்னெழில் அழிப்பர் திரள் தோளின் வலிதன்னால். (ஆ : 611) தள்ளாடிய வட மேருவிற் சலித்தான். (யுத் : 3016) விசையாலனுங்க வடமேரு. (யுத் : 2196)

வடவரை - மேருமலை. வடவரைக் குடுமியின் நடுவண். (பா:188) (யுத் : 490) (யுத் : 438)

வடவரை வில்லி - சிவபிரான். வடவரை வில்லி தன்னை வணங்கினன். (பா : 665)

வடவனல்-வடவையனல் என்பதன் திரிபு. வடவைத்தீ. வெள்ளத்திடை வாழ்வடவனலை யஞ்சி வேலை கடவாத பள்ளக்கடல். (அ : 617) (சு : 1171)

வடவாவனல்-படவா முகாக்கினி. படவா - பெண் குதிரை. வடவா வனல்-படபாநலம் என்ற சொல்லின் திரிபு. கடலினிடையில் ஒருபெண் குதிரையின் முகத்தினின்று வெளித் தோன்றுவதா யமைந்துள்ளதீ. (வை.மு) வடவர் வனல் அன்றெனின் மண்பிடர் வைத்த பாம்பின் விடவாளெயிறு. (ஆ : 693)

வடவெரி - வடவா முகாக்கினி. வகுந்துவின் வடவெரி வதிந்த திவ்வனம். (பா : 383) [பா:பே]

வடவை - பெண்குதிரை முக வடிவமாகக் கடலிலுள்ள தென்றும் அதன் வாயினின்றும் எழும் தீயினால் உலகம் முடிவில் அழியு மென்றும் புராணங்கள் கூறும். கடல் எல்லை கடந்து பெருகாத வாறு அதினிடை நின்று பருகித் தடுப்பது. நீரின் மிசை வடவைக்கனல் நெடு வானுற முடுகிப் பாரின் மிசை வருகின்ற தொர்படி வெஞ்சுடர் படிய. (பா : 1358) (ஆ : 26)

வடவைத்தீ - வடவா முகாக்கினி. பூநனி வடவைத் தியிற் புக்கெனப் பொரிந்து போமென்று. (யுத் ; 3483)

வடவை தீதர விளைதரு கடுவுடை விரிகொள் பாயல் - வடவைத் தீயும் கரிந்து போகும்படி பொங்குகின்ற நஞ்சையுடைய விரிக்கப் படுகின்ற பாம்பாயுள்ள ஆதிசேடன். (பா : 202)

வடாதிசை - வடாது திசை. வடதிசை. வடாதிசை முனியும் நண்ணி. (பா : 693)

வடாது - வடக்கு. வடாது திசைக்கண் பொன்றிகழ் புட்பக மேல் கொடுபோனான்' (யுத் : 2836)

வடாதுதிக்கின் மதவரை - வடக்குத் திக்கிற்குரிய யானை. (சார்வ பௌமம்) வடாது திக்கின் மதவரையின்வழிக் கடாமுகத்த முளரிக் கணக்கவால். (யுத் : 3573)

வடாதுதிசை - வடதிசை. வடாது திசை மேனாள் நீசமுற.(ஆ:157) (யுத் : 2836)

வடி - 1. மாம்பிஞ்சு. அதன்பிளவு. வடித்தடங் கண்ணீர். (பா : 427

2. நீட்சி. வடித்தாழ் கூந்தற்கேகயன் மாதே. (அ : 657)

3. கூர்மை. வடியுடைக் கனற்படை வயவர். (சு : 1040 வடிக் கணை. (யுத் : 561) வடிவாள். (ஆ : 1115)

4. சிறப்பு. வடிக்குழல் விரைவண்டேங்க. (கி : 491)

5. ஆலமரங்களையுடைய இடம். பாங்குருளதால் உறையுள் பஞ்சவடி மஞ்சு. (ஆ : 174)

6. அலங்கரித்தல். (உ. வி) வடிக்குழல். (கி : 491)

7. தேன். வடிக்குழல் பற்று. (யுத் : 2823)

வடிக்கண் - 1. கூரிய கண். வாளொக்கும் வடிக்கணார். (கி : 798)

2. மாவடுபோன்ற கண். (அண்) அற்புத வடிக்கண் வாளிக்கு அஞ்சனமெழுதி. (சு : 204)

வடிக்கணை - கூரிய அம்பு. வடிக்கணை தொடுத்துக் கொல்வான் (யுத் : 445) (யுத் : 2338) வடிக்கணைமாரி. (யுத் : 1015)

வடிக்குலங்கள் வாளி-வடிவாளிக்குலங்கள். கூரிய அம்புத்தொகுதி கள். (யுத் : 3348)

வடிக்குழல் - 1. தேன்நிறைந்த கூந்தல். (யுத் : 2823)

2. அலங்கரித்த கூந்தல். (கி : 491)

வடிசிலை - எய்தற்குச் சித்தமாகவுள்ள வில். வடிசிலை பிடித்து. (அ : 662)

வடித்த - 1. வசமாகிய. (வெ.ப) தேர்ந்த. (வை.மு) அழகிய. (அண்) வரிசிலை வடித்த தோளான். (அ : 280)

2. வளைத்த. ஈசன். இகல்வில்லாய் வடித்தமலையேயிது வலித்தி யெனவாரிப் பிடித்தமலை. (ஆ : 751)

3. தெரிந்தெடுத்த. வடித்தகுனி வரிசிலைக்கை மைந்தன். (பா : 710) வடிநெடுஞ்சிலையறும். (யுத் : 2443)

4. கூரிய. வடித்த வெங்கணையினுற்றடிந்தனர். (யுத் : 651)

5. தெளிந்து செய்யப்பட்ட. வடித்தமாதவ கேட்டி. (பா : 651)

6. வார்ந்து தாழவிட்ட. மஞ்சொக்கும் வடித்த கூந்தல். (ஆ : 629)

வடித்த நூல்முனி - நன்கு தேர்ந்துணர்ந்த சாத்திரங்களையுடைய முனிவன். திருந்திய பூணூல் அணிந்த முனிவன். (அண்) (வசிட்டன்) (யுத் : 4262)

வடித்தல் - 1. பயிலல். தெளிந்து செய்தல். வடித்த மாதவ. (பா : 651)

2. திருத்தமாகச் செய்தல். (வெ.ப) (பா : 651) வடித்த நூன் முனி. (யுத் : 426)

3. தேர்ந்தெடுத்தல். வடித்த தோள் வலயத்தின் வயங்கு காசரோ. (கி : 248) வடித்தாழ் பூங்குழலாள். (சு : 328)

4. கூராக்கல். வடிக்கும் அயில்வீரர். (பா : 912)

5. அழகு செய்தல். வடித்த தோளான். (ஆ : 280)

6. பழகித் தேர்தல். வடித்தகை மலரின் மேலான். (கி : 805)

7. வாரிமுடித்தல் அரக்கியர் வடித்த அஞ்சிலோதி. (சு : 99)

8. ஆராய்ந்து தெளிதல். மாருதி வடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி. (யுத் : 414) வடித்த மாதவ. (உ.வி) (பா: 651)

9. வளைத்தல். வடித்தமலை. (அ : 751)

10. தெளிவாக்கல். மாருதி வடித்துச் சொன்ன. (யுத் : 414)

வடித்துச் சொன்ன பேற்றியே பெற்றி - ஆராய்ந்து கூறிய வகையே (செய்பத்தகுந்த) ஆலோசனையாம். (யுத் : 414)

வடிநெடுங்கண் - கூறிய நீண்ட கண்கள். வடி நெடுங்கண் மடந்தையர் வளர் மடப்பிடி. (அ : 802)

வடிம்பு - விளிம்பு. பொன்னின்ற வடிம்பின் வாளிப் புட்டிலன். (ஆ : 427) பொன்னின்ற வடிம்பின் வாளி. (யுத் : 1880)
2. கூர்முனை. பொன் தொடர் வடிம்பின் வாளி. (யுத் : 1102)
3. தழும்பு வடிம்புடை நெடுநாண் ஏற்றுருதமுன். (யுத்:1204)

வடிமணி ஆராய்ந்தெடுத்த மணிகள். வடிமணி வயிர வெவ்வாள் சிவன் வயின் வாங்கிக்கொண்டான். (யுத் : 887)

வடிவழி பொழில் - வடிவு அழிபொழில். உருவழிந்து கிடந்த அசோக வனம். வடிவழிபொழிலை வளைந்தார். (சு : 769)

வடிவாளி - கூரிய அம்பு. வடிவாளிகள் சதகோடிகள் உய்த்தார், (யுத் : 3053)

வடிவு - 1. திருமேனி. ஐயோ இவன் வடிவென்பதொர் அழியா அழகுடையான். (அ : 618)
2. அழகு கமல வாண்முக வடிவுடை மடந்தையர். (பா:255)

வடிவெங்கணை - கூரியகொடியஅம்பு. பத்தாயிரம் வடிவெங்கணை விடுத்தான். (யுத் : 3017)

வடு - 1. குற்றம் பழுது. நாயகன் மேனிக்கில்லை வடு. (யுத்:2668)
2. மாவடு. வடுவின் மாவகிர். (அ : 766) வடுக்கண் வார்கூந்தலாள். (ஆ:1012)
3. பழி. வல்லியன் மறவர் தம் வடுவிற்றீர்பவர். (சு : 506)
4. புண்வாய். தழும்பு. மேயின வடுவினின்ற வேதனைகளைய வெந்த தீயிடைத் தணிந்த தென்ன. (யுத் : 2869) [பா:பேழ் ஊசிபோழ்வதோர் வடு. (சு : 879)

வடுக்கண் - மாவடுவின் உட்பிளவுபோன்ற கண். (ஆ : 1012)

வடுகு - வடுகு என்னும் பாஷை. வடமொழி தென்மொழி வடுகு கன்னடம் இடமுளபாடை யாதொன்றினும். (பாயி:18)

வண்டமிழ் - வளம் வாய்ந்த தமிழ். வண்டமிழுடைத் தென்திசை. (கி : 819)

வண்டல் - ஆற்றுநீரிற் கலந்து வரும் மண்துகள். திரையால் ஒதுக்கி விடப்படும் பொருள். வண்டல் அம்புனலாற்றின் மடிந்தன. (சு : 722) வண்டல் தெண்டிரை. (யுத் : 134) (சு : 789)

வண்டலம்பு நல் ஆறு - வண்டுகள் அலையப்பெற்ற நல்வழிகள். (சு : 722)

வண்டலம் புனல் ஆறு - வண்டலைக்கொண்ட அழகிய நீர் நிறைந்த ஆறு. (சு : 722)

வண்டலிட்டோடல் - வண்டலாகப் படியவைத்து ஓடுதல். தண்டலை பரப்பும் சாலி வேலியும் தழீஇய வைப்பும் வண்டலிட்டோடும். (பா : 43)

வண்டலிடுதல்-வண்டலை இடையிடையே இடுதல். குங்குமச் சேறும் சாந்தமும் இடையிடை வண்டலிட்டார மீர்த்தன. (அ : 476)

வண்டாடுதார் - வண்டுகள் மொய்க்கும் மாலை. வண்டாடு தார்ச் சகரர். (அ : 230)

வண்டார் கோதை-வண்டுகள் நிறைந்து மொய்க்கும் மாலையணிந்த பிராட்டி. (கலா) வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய சீதை. (அண்) வண்டார் கோதையை வைத்து நீங்கென. (சு : 986)

வண்டானம் - நாரையில் ஒருவகை. அன்னங்கோழி வண்டானங் கள். (சு : 246)

வண்டியல் ஓதி - வண்டுகள் தங்குகின்ற கூந்தலையுடைய சானகி. வண்டியல் ஓதியும் வலியள். (சு : 1302)

வண்டு - நான்கு சாதிவண்டுகளுள் ஒன்று. இது நன்மணத்தே செல்வது என்பர். தேனெடு மிஞிறும் வண்டும் தும்பியும் தொடர்ந்து செல்ல. (பா : 884) வண்டினிற் பொலியும் நல்யாழ். (யுத் : 2399) (யுத் . 1717)

வண்டுகள் குழலின்படி சுழல-வண்டுகள் பாவில் நெய் குழல்போல மயங்கித்திரிய. வண்டுகள் வேய்ங்குழலின் தன்மையோடு வட்ட மிட. (வை.மு) துஞ்சுங் களிவரி வண்டுகள் குழலின்படி சுழலக் கஞ்சங்களை மஞ்சன் கழல் நகுகின்றது கண்டாள். (அ : 620)

வண்டு சோப்பி-வண்டுகளை ஓட்டுவதற்குரிய ஈச்சோப்பி. மாகமா மரங்களெல்லாம் கடாத்திடை வண்டு சோப்பி ஆகினும் ஆம். யுத் : 1893

வண்டுழல் புரிகுழல் மடந்தைமார் - வண்டுகள் சுழன்று மொய்க் கத்தக்க அலங்கரித்த கூந்தலையுடைய தேவமாதர்கள். அரக்கர் தேவராய் வண்டுழல் புரிகுழல் மடந்தைமாரோடும் கண்டனர் தம்முடைக் கவந்த நாடகம். (ஆ : 488)

வண்டுளர் கோதை - வண்டுகள் தேன் பருகுவதற்குக் கிண்டுகின்ற பூமாலை. வண்டுளர் கோதை மாதர். (பா : 1022)

வண்டுறை யோதி - வண்டுகள் தங்குகின்ற கூந்தலை யுடைய சீதாபிராட்டி. வண்டுறை யோதியும். வலியள். (சு : 1302)

வண்டேர் முழங்கரவம் - வண்டுகள் அழகாக ஒலிக்கின்ற ஒலி. கருங்குழலின் வண்டேர் முழங்காரவமேழ் இசை முழங்காரவமே. (பா : 1122)

வண்டேறு கோதை மடவார் - வண்டுகள் மொய்த்த கூந்தலை யுடைய இளமங்கையர். வண்டேறு கோதை மடவார் இவராகு மன்றே. (ஆ : 704)

வண்ணக்குனிசிலைக்குரிசில் - இராமபிரான். (யுத் : 4231)

வண்ணஞ் செய் கூந்தல் - வட்டமான கூந்தல். வண்ணஞ் செய் கூந்தற் பாரவலயம். (பா : 1205)

வண்ணம் - 1. வகை. விதம். இவ் வண்ணம். (பா : 559)

2. படி. நிகழ்ந்த வண்ணம். (பா : 359)

3. வன்மை. திறம். கை வண்ணம் அங்குக் கண்டேன் கால் வண்ணம் இங்குக் கண்டேன். (பா : 559)

4. ஆறு. வழி. உலகுக் கெல்லாம் உய்வண்ண மன்றி மற்றோர் துயர் வண்ண முறுவதுண்டோ. (பா : 559)

5. நிறம். குணம். மை வண்ணத் தரக்கி. மழை வண்ணத் தண்ணலே. (பா : 559) பச்சிலை வண்ணம். (யுந் . 3976) (யுத் : 1531)

6. தன்மை. வடிவம். வஞ்சி போலிடையாள் முன்னை வண்ணத் தளாகி நின்றாள். (பா : 562) விதியின் வண்ணமே. (யுத்:1298)

7. அழகு. வண்ணமாலை கைபரப்பி. (பா : 646) வண்ண வான்... பொதும்பர். (சு : 406) வண்ணவாய். (பா ; 1173) வண்ணவான் கருங் கடல். (யுத் : 1564)

8. வட்டம். வண்ணஞ் செய் கூந்தற் பாரவலயத்து. (பா:1205)

9. உபாயம். கடலினை கடக்கும் வண்ணமும் எண்ணுதி. (யுத் : 535)

வண்ண மணியாடை - பல வண்ணங்களையுடைய அழகிய பட்டாடை. வண்ணமணி யாடையுளமற்று முள. (கி ; 881)

வண்ண மேகலை நிலமகள் - அழகிய மேகலாபரணத்தை யணிந்த பூமிதேவி. (அ ; 36)

வண்ணவன்மயிர் - (கரிய) நிறமுடைய வலிய உரோமம். பெண்ணை வன் செறும்பிற் பிறங்கிச் செறி வண்ணவன் மயிர். (அ : 650)

வண்ணவாய் - அழகிய வாய். வண்ணவா யொரு வாணுதல். (பா : 1173)

வண்ணவான் கடல் - அழகிய பாற்கடல். வண்ணவான் கடல் பண்டு கடைந்த மத்தென்பார். (பா : 756)

வண்ணவிற் குமரன் - அழகிய வில்லையுடைய குமரன். இலக்குவன். (யுத் : 4243)

வண்ண வெஞ்சிலை - அழகிய கொடிய வில். பிரியா வண்ண வெஞ்சிலைக் குரிசிலும் மருங்கினி திருப்ப. (அ : 50)

வண்ண வெண்ணகைத்தரளம் - அழகிய வெண்மையான முத்துக்களாகிய பற்கள். வண்ண வெண்ணகைத்தரள வாண் முகப் பெண்ணை நண்ணினர். (கி : 902)

வண்மை - 1. வள்ளன்மை உதார குணம். (வை.மு)
2. இயல்பு. (அண்) கண்மையும் பொருந்திக் கருணைப்படா வண்மை என்கொல். (சு : 439)
3. வலிமை. வண்மையின் வளைந்து வாரியிட்டு உண்கையின் உவகையர். (ஆ : 413)
4. மிகுதி. உண்மையில் பிறவிகள் உலப்பில் கோடிகள் தன்மையில் வெம்மையில் தழுவின எனும் வண்மையை நோக்கிய. (அ : 1136)
5. மேம்மாடு. இவ் வுலகந் தாங்கும் வண்மை ஈது. (கி : 314)

வண்மையின் மன்னவன் - ஈகை யில்லாத அரசன். வண்மையின் மன்னவன் புகழின் மாய்ந்தவால். (யுத் : 3987)

வணக்கஞ் செய்தார் - வணங்கினர். சென்றடைந் திராமன் தன்னைத் திருவடி வணக்கஞ் செய்தார் (யுத் : 3537)

வணக்கம் - வணங்குதல். தொழுதல், குறைவிலா என்னெடு வணக்கங் கூறி. (அ : 568)

வணக்கம் போக்கினள் - வணங்கினள். புனத்துழாய் கணவற்கும் வணக்கம் போக்கினள். (யுத : 4004)

வணங்கலாதார் - வணங்காமல் நிற்பவர். வஞ்சிபோன் மருங்குலார் மாட்டு யாவரே வணங்கலாதார். (பா ; 981)

வணங்குதல் - 1. வளைதல். வளைந்து ஒசிதல். துவளுதல். முகங் கவிழ்தல். மதி முகம் கதுமென வணங்கினள். (பா : 1085) வணங்கு நுண்ணிடை. (யுத் : 2313) (யுத் : 4067)
2. நிலத்தில் விழுந்து வணங்குதல். முந்தி அந்தயில் அறிவனை வணங்கி. (அ : )2) வணங்க. (யுத் : 4067)
3. கை கூப்பி வணங்குதல். வாழ்வினை நோக்கினைய வணங்கி நோக்கினன். (அ : 569)
4. தாழ்ந்து கேட்டல். கணவர் தம் பெருந் தோள் நரிகளிர்த் தன வணங்கவும் இணங்கவும் நல்கா. (யுத் : 2313)
5. பணிதல். வணங்கி வாழ்வதோ விண்டவர் உறுவலி யடக் கும் வீரந்தான். (யுத் : 30)

வணிக மாக்கள் - வணிகர். வணிகமாக்களை ஒத்தது வாரியே. (பா : 18)

வதனம் - முகம். சந்திர வதனத்தருந்ததி. (சு : 410) (யுத் : 2853)

வதனமென்னும் தாமரை - முகமென்னும் தாமரை. செய்ய வஞ்சி வாழ் வதன மென்னும் தாமரை மலர்ந்த தன்றே. (அ : 668)

வதனராசி - முகங்களின் தொகுதி. பகுத்தவான் மதிகொடு பது மத்தண்ணலே வகுத்த வாணுதலியர் வதனராசி போல். (அ : 535)

வதிட்டன் - வசிட்ட முனிவன். மங்கல அங்கி வதிட்டன் வகுத் தான். (பா : 1344) [பா : பே] மாவதிட்டான் தேற்றினன். (அ : 1132)

வதிதல் - தங்குதல். புட்பகத்தினை வதிகென நினைந்தனன் புவியில். (யுத் : 4104) மாற்பெருங்கடல் வதிந்ததே யனையதோர் வனப்பினன். (சு : 301)

வதுவை - 1. திருமணம். குயிலினம் வதுவை செய்ய. (பா : 45)
2. மணத்தின் பின் சடங்கொடு நிகழுங் கூட்டம். பொருந்திய மகளிரோடு வதுவையிற் பொருந்துவாரும். (பா : 46)

வதை - வதைத்தல். கொலைத்தொழில். இன்று கற்றுன் கதையினால் வதையின் கல்வி. (யுத் : 2519) (யுத் : 2079)

வதைத் தொழில் புரிதல் - கொல்லுந் தொழிலைச் செய்தல். (யுத் : 2896)

வதைபுரிகுநர் – கொலை செய்வோர். பாலரைப் பாவைமாரை வதை புரிகுநர்க்கும் உண்டாம் மாற்றலாம் ஆற்றல். (கி : 626)

வதை புரி புருட மேதம் – மனிதன் ஒருவனைக் கொன்று ஓமம் செய்வதாகிய புருட மேதம். வதை புரி புருட மேதம் வகுப்ப ஓர் மைந்தற் கொல்வான்... அடவிகள் துருவிச் சென்றான். (பா : 683)

வதையின் கல்வி – வதைத்தலாகிய கல்வி. கொல்லுந் தொழில். (அண்) (யுத் : 2519)

வந்த – ஏற்ற. இவுளிப் பந்தி வந்த புற்பாயலான். (யுத் : 4115)

வந்த இல் – பிறந்த குடி. அல்லது புகுந்த குடி. வினையினேன் வந்த இற் பழியுண்ட தென்றிரங்கி ஏங்கினாள். (ஆ : 947)

வந்தருளுதல் – பிறத்தல். நங்குல மரபினின் வந்தருள் வேந்தர். (அ : 64)

வந்தவர்கள் வந்தவர்கள்-மேன் மேலும் (இடையறாது) வருபவர்கள். வந்தவர்கள் வந்தவர்கள் மீள்கிலர் மடிந்தால். (க : 697)

வந்தன வந்தன வாரா – வாரா வந்தன வந்தன. வருபவைகள் வருந் தோறும் வருந் தோறும். மாற்றுத் தேரவை வந்தன வந்தன வாரா விற்று விற்றுக வெயிலுமிழ் கடுங்கணைவிட்டான். (யுத் : 1206)

வந்தனன் வந்தனன் – வந்தான் வந்தான். இந்திரன் தன்...... தடந்தோள் போயார்த்தவன் வந்தனன் வந்தனன் என்று. (யுத் : 1973)

வந்தனனையா வந்தனனையா – ஐயா வந்திட்டேன் ஐயாவந்திட்டேன். வந்தனனையா வந்தனனையா இனி வாழேன். (யுத் : 2598)

வந்தனென் வந்தனென் – வந்தேன் வந்தேன். அடுக்கு விரைவு பற்றியது. வந்தனென் வந்தனென் என்ற வாசகம் இந்திரி முதற்றிசை எட்டுங் கேட்டன. (கி ; 246)

வந்தனை – 1. வணக்கம். கிளைஞர் யார்க்கும் என் வந்தனை விளம்புதி. (சு : 644) (சு : 1245)
2. வழிபாடு. வந்தனை நீதியும் பிறவும் மாண்பமைந்து. (யுத் : 406) (ஆ ; 612)

வந்தனை செய்தல் - வணக்கஞ் செய்தல். அருந்ததியும் வந்தனை செய் அஞ்சொல் இளவஞ்சி. (யுத் : 704)

வந்தனைத்தொழில் - கடவுள் வழிபாடு. அந்தி வந்தனைத் தொழில் முடித்து. (யுத் : 462)

வந்தனை புரிதல் - வணங்குதல். வந்தனைபுரிவரன்றே. (யுத் : 141)

வந்தனை வைத்தல் - வந்தனையைச் செலுத்துதல். வந்தனையவன் கழல் வைத்தபோதலாற் சிந்தை வெங் கொடுந்துயர் தீர்கலா தென்ருன். (அ : 850)

வந்தான் - அவதரித்தவன். வந்தான் மறைந்து. (யுத் : 2202)

வந்திகர் - மங்கலப் பாடகர். வந்திகள் நின்று ஏந்துவோர். மல்லர் இடிப்பினை மாறு கொண்டன வந்திகர் ஏத்தரோ. (அ : 809) வந்திகர் வாழ்த்த வந்தான். (யுத் : 1587)

வந்திகள் - மங்கலப் பாடகர். வந்திகள் ஏத்தரோ. (அ : 809) [பா : பே]

வந்திருத்தல் - வணங்குதல். வந்திக்கலாகு மடவாட்கும். (பா:996)

வந்தும் - வந்தோம். தேடி நாம் வந்தும் என்ருர். (கி : 1007)

வந்து வந்து - 1. எதிர்கொண்டு வந்து. (வந்து உவந்து) வந்து வந்தெதிர் ஏற்றனர். (ஏத்தினர்) (அ 1073)
2. மேன்மேல் வந்து. அனங்கன்வாளி வந்து வந்துரங்குடைந்து. (ஆ : 657)

வந்துறுதல் - 1. நேரிடுதல். நங்குலத்துக் கொவ்வாப்பங்கம் வந்துற்றதன்றிப் பழியும் வந்துற்றதென்ருன். (யுத் : 1233)
2. பொருந்துதல். சங்கம் வந்துற்ற கொற்றத்தாபதர். (யுத் : 1233)
3. மூளுதல். அங்கம் வந்துற்றதாக. (யுத் : 1233)
4. வந்தடைதல். வந்துற்றீர் மலர்க்கை நீண்ட. (ஆ : 1191) வந்துறுவர். (கி : 91) வந்துற்ருர். (கி : 729) ஊழியின் இறுதி வந்துறும். (சு : 401)
5. மீண்டும் வருதல். வந்துற்று. (யுத் : 2012)

வந்தேம் வந்தேம் - வந்தோம் வந்தோம். வாழ்ந்தே இருப்பந் தரியேம் வந்தேம் வந்தேம் இனியே. (அ : 379)

வம் – வாருங்கள். வாரும். உந்தையர்க் கமைந்த நண்பனைக் காணிய வம் மெனக் கலங்கி விம்மினள். (ஆ:946) தின்னுமின் வம் என்பர் மெய்யும். (சு : 486) கருங்கடலடைக்கவம் மென. (யுத் : 623)

வம்பளவு கொங்கை – கச்சணிந்த தனங்கள். (அ : 546)

வம்பிட்ட தெரியல்-வாசனை பொருந்திய மாலை. வம்பிட்ட தெரியல் எம்முன். (யுத் : 1378)

வம்பியல் சடை – புதுவதாகச் செய்து கொண்ட சடை. (அண்) (யுத் : 4279) நறுமணம் கமழ்கின்ற சடை. (கலா)

வம்பிழைத்தது – வீணே இயற்றப்பட்டுக் கழிந்தது. (கலா) இத்தனை காலமும் உழன்ற ஈதெலாம் பித்தெனலாய வம்பிழைத்த தாலன்றே. (யுத் : 3994)

வம்பு – 1. நறுமணம் வாசனை. வம்பலர் மாலை. (பா:718) வம்பலர் சடையுமாற்றி. (யுத் : 4279)

2. கச்சு. வம்பளவு கொங்கை. (அ : 546) வம்பின் முலையாய் (சு : 606)

3. விண் மறலிமறம் புகாதினி வானவர் புகாரென்கை வம்பே. (சு : 118) (யுத் : 3994)

4. புதிது. புதுமை. நூதனம். கொம்போடடை பூக்கனி காயெனினும் வம்போ மரமொன்றெனும் வாசகமே. (யுத் ; 241)

5. விநோதம். (வை.மு) (கலா) முப்புர மொருங்கச் சுட்ட மூரி வெஞ்சிலையும் வீரன் அற்புத வில்லுக்கைய வம்பெனக் கொளலு மாகா. (யுத் : 1244)

6. கயிறு. வில்லின் நாணாகிய கயிறு. (வை.மு) வம்பியல் சிலையை நோக்கி. (சு : 984) [பா : பே]

7. கட்டு. (கலா) (சு : 984) [பா : பே]

8. போர்த்தொழில். (உ.வி) (சு : 984) [பா : பே]

வம்பு செறிந்த மலர்க்கோயில் மறையோன் – மணம் நிறைந்த தாமரை மலரைக் கோயிலாகக் கொண்ட பிரமன். (யுத் : 3142)

வம்மின்-வாருங்கள். வந்து குரங்கிற்குற்றதனை வம்மின் காண வம்மென்று. (சு : 1167) வம்மின் அட வம்மின் எதிர்வந்து நும் மாருயிர் வரங்கள் பிறவும் தம்மின். (யுத் ; 3406)

வய்த்து – வைத்து. (யுத் ; 3820)

வய்யகம் – பூமி. (யுத் : 4336)

வய்யம் – வையம். பூலோகம். (யுத் : 3705)

வாய்யும் சாபம் – வைகின்ற சாப மொழி. (யுத் : 3797)

வய - வலி. கால்வயக் கொடுங் குரந்துணிந்தன. (யுத் : 1084)

வயக்கதி - பெரிய விரைவு. வயக்கதி நினைப்பின் நெடி தென்னப் பூண்டான். (சு : 87)

வயக்கொடும் பகழி – வலியகடுமையான அம்புகள். (யுத் : 2016)

வயங்குதல் – 1. விளங்குதல். ஒளிர்தல். வயங்கு வெங்கதிர்த் தேசுண்டதிங்கள். (சு : 397) வயங்கு வெங்கதிர்சுட. (பா:352)
2. நெடுந்தூரத்திலுள்ளார்க்கும் புலனாகும் தோற்றப் பொலிவுடையதாதல். மஞ்சு சுற்றிய வயங்குகிரி. (ஆ : 7)
3. மிகுதல். மாமங்கு பாதகம் விடங்கனலை வயங்கி நிமிர. (ஆ : 14)
4. வெளி (வந்து) விளங்குதல். மடித்த வாயன் வயங்கு முயிர்ப்பினன். (ஆ : 1046)

வயங்கெரி – (சுடர்) கொழுந்துவிட்டெரிகின்ற நெருப்பு. வயங்கெழு வந்து பொடித்தெழுந்த விழியின். (யுத் : 822) (யுத் . 216)

வயந்தர – வசப்பட. கண்வயந்தர. (யுத் : 741)

வயப்படை – வலிமை மிக்க சேனை. வயப்படை வருவிப்பாரை திறந் திறம் ஏவி அன்னார் சேர்வது பார்த்துத்தாழ்ந்தான். (கி : 629)

வயப்பரி - வெற்றிபொருந்தின குதிரை. வயப்பரி பூட்டுந்தேரும் பொடித்துகளாகவே. (யுத் : 1034) (யுத் : 2348)

வயப்போத்து - வலிமை மிக்க ஆண். இடங்கரின் வயப்போத்து. (யுத் : 2236)

வயப்போர் – வெற்றிதரும் போர்த் தொழில். வாலியளிக்கும் வீர வயப்போர் வசையில்லான். (கி : 1014)

வயப்போர்ச்சிலை – வலிய போர் புரிதற்குரிய விற்கள். வயப்போர்ச் சிலை மிகுந்தன. (ஆ : 451)

வயம் - 1. வலிமை. கால்வயத்தூர்பரி. (யுத் : 492)
2. சுவாதீனம். ஆன்றோர் சொல்லும் நல்லறம் அன்னான் வயமானால். (யுத் ; 2607)

3. வெற்றி. வயக்கடுஞ் சுடர்க்கணை. (யுத் : 1208)
4. வேகம். வயப்பெரும்படை. (பா : 658) கால்வயக்கலிமா. (ஆ : 987)
5. வசம். கண் வயந்தா. (யுத் : 741)

வயமந்தன் - இராவணன் படை வீரருள் ஒருவன். போரின் மத்தனும் பொருவய மத்தனும் புலவர் நீரின் மத்தெனும் பெருமையர். (யுத் : 50) [பா : பே] (யுத் : 1904)

வயமா - 1. சிங்கம். புலி. (அண்) கரடி முதலிய வலிய விலங்குகள். (கலா) குன்றுறை வயமாவின் குருளையும். (அ : 699)
2. யானை. வயமாத் தானவாரியும் நீரோடு மடுத்தலின். (சு : 112)
3. குதிரை. மத்தகரி வயமாவின் வாணிருதர். (யுத் : 356)

வயல் - நெல்வயல். ஏர் துறந்தனவயல். (அ : 811)

வயவர் - வீரர். வயவர் விட்ட வெந்திறற்படைகளும். (சு : 1012) (யுத் : 214)

வயவன் - போர்வீரன். குனிசிலை வயவனும். (பா : 246)

வயவானம் - வலிய ஆகாயம். துகளே போலாயின வய வானமும். (யுத் : 1827)

வய வீரர் - வலிய வீரர். (யுத் : 25)1)

வய வீரன் - வலிமிக்க வீரன் இலக்குவன். பொன் துன்னு வற்கை வய வீரன். (ஆ : 964)

வயா - மசக்கை. கருப்பவதிகளுக்குச் சில பொருள்களின் மேற் செல்லும் விருப்பம். மருவிய வயா வொடு வருத்தந் துய்த்து. (பா : 281)

வயா வொடு வருத்தந் துய்த்து - மசக்கை நோயினாலுண்டாகிய வருத்தத்தை யடைந்து. (பா : 281)

வயிர் - 1. ஊது கொம்பு. வளையொலி வயிரொலி. (பா : 153) சங்கொலி வயிரி னேசையாகுளி. (யுத் : 2399)
2. செற்றம். பகை. வயிர்த்துக் கூறுவாள். (ஆ : 824)

வயிர்த்தல் – 1. பகைமை பாராட்டுதல். என்னதோ இறந்துளான் மேல் வயிர்த்தல் நீ. (யுத் : 3883) வன்றறு கண்ணினள் வயிர்த்துக் கூறுவாள். (ஆ : 824) மங்கையர் திறத்தினில் வயிர்த்த சிந்தையர். (யுத் : 386)
2. வயிரம் பற்றுதல். செற்றம் பற்றுதல். வயிர்த்ததோர் பகை கொடு. (சு : 288) [பா : பே] வயிர்த்த உள்ளம். (கி - 167)
3. வயிரத் தன்மை யுடையதாதல். உறுதி. வயிர்த்த கையினுங் காலினும். (கி ; 291)

வயிர்ப்பு – வயிரத் தன்மை. பகைமை. ஒன்றினொன்று உள் வயிர்ப்புடைய. (கி : 167)

வயிரக் கட்டமைந்த கதிர் வாளி – உறுதியான கட்டுப் பொருந்திய கூர்மையான பாணங்கள். வட்டமிட்ட கிரியற்றுக வயங்கு வயிரக் கட்டமைந்த கதிர் வாளி எதிரே கடவலான். (ஆ : 30)

வயிரக்கரம் – வயிர மொத்த வலிய கரம். அவன் மா மார்பிற் கடிது எதிர்குத்தினன் வயிரக் கரமதனுல். (யுத் : 1135)

வயிரக் குன்றக்கல் - வயிர மலையாகிய கல். வயிரக்குன்றக் கல்லொக்கும் நெஞ்சு. (பா : 413)

வயிரக் குன்றம் – வயிரமலை. வச்சிரமயமான மலை. (பா : 413)

வயிரச்சுரிகொள் சங்கு – வயிரப்பூண் அணிந்த வளைந்த வயிரச் சங்கு. ஒற்றை வயிரச் சுரிகொள் சங்கின் ஒலி பொங்க. (பா : 1243

வயிரத்தண்டு - 1. வயிரக்கம்பம். (கலா) வயிரத்தண்டு. (வை.மு) எழுமுனை வயிரத்தண்டு. (யுத் : 1407)
2. வலிய திணிந்த குறுந்தடி. வளைவயிரத் தண்டு காமரு கணையம். (சு : 940)

வயிரத்தூண் - வயிரத்தூண். தோல்படத் துதைந்தெழு வயிரத் தூண் நிகர் கால்பட. (யுத் : 1771))

வயிரத்தெழு – திண்ணிய எழு எனும் படை. (யுத் : 3364)

வயிரத்தோள் - வயிரமலை போன்ற தோள். வயிரம் போன்று வலிய தோள். (வை.மு) வயிரம் போன்று உறுதியான தோள். (அண்) வயிரமலை போன்ற திண்ணிய தோள். வானுறப் பிறங்கிய வயிரத்தோளொடும். (கி : 529) வயிரத்தோளை மெலிவித்தீர். (யுத் : 1582) (பா : 819) (யுத் : 2143)

வயிரப்படை - வச்சிராயுதம். அவர்தம் வயிரப்படை தள்ளிய வாளியினுன். (யுத் : 1739)

வயிரப்பைம்பூண் - வயிர மிழைத்துச் செய்யப்பட்ட பசும் பொன்னு பரணம். (அ : 665a) [பா : பே]

வயிரம் - 1. கூர்மை. வயிரவாள் தடக்கை. (அ : 709)
2. திண்மை. வலிமை. உறுதி. வள்ளுறு வயிரவாள் மன்னர். (பா : 231) வயிரத்தண்டு. (யுத் : 2163) வன்றிணி வயிரத்திண் டோள் மாருதி. (கி : 624) வயிரத்தோள். (சு : 958) வயிரக் கட்டமைந்த கதிர்வாளி. (ஆ : 30)
3. இரத்தின வகை. வயிரமிட்ட அச்சிேைடாழி வெவ்வேருக் கினுன் ஆணி நீக்கி. (யுத் : 310)
4. சினம். அருவிசோர் வயிரக்கண்ணுன். (சு : 986)

வயிர மார்பு - வயிரம் போன்று உறுதியான மார்பு. வயிரத்தட மார்பு. (யுத் : 1138)

வயிரமிட்ட அச்சு - வயிரம் பிடித்த (மரத்தினுலான) அச்சு. வயிர மிட்ட அச்சினேடு ஆழி வெவ்வேருக்கினுன். (யுத் : 3110)

வயிர யாக்கை - வயிரம் போன்ற திண்ணிய உடல். வயிர யாக்கை யொடுங்கினுன். (யுத் : 1386) [பா : பே]

வயிர வல்வில் - திண்மை வாய்ந்த வயிர வில். (யுத் : 2903)

வயிரவன் கரதலம் - வயிரம் போன்று உறுதியான வலிய கை. வயிரவன் கரதலத்தவன் வலித்தெறிய. (கி : 192)

வயிர வாட்சூலம் - உறுதிவாய்ந்த கூர்மையான சூலப்படை. அவனைத் தன்கை வயிர வாட்சூலம் மார்பிற் குறித்துற எறிய லுற்ற காலையில். (யுத் : 1419)

வயிர வாள் - இந்திரனது வயிரப்படை போன்ற கூரிய வாட்படை. உறுதியான வாள். வயிர வாள் உறையின் வாங்கி. (யுத் : 274) வள்ளுறு வயிர வாள் அரசில் வையகம். (அ:940) (யுத்:2366)

வயிரவான் குன்று – பெரியவயிரக்குன்று. வயிரவான் குன்றின் வெம்பும் சுடர் விரிப்பது. (யுத் : 2505)

வயிரவான் பூண் – வயிர மிழைத்த சிறந்த நகைகள். வயிரவான் பூணணி மடங்கல் மொய்ம்பினன். (பா : 177)

வயிர வில் – உறுதியான வில். வயிர வில்லின் பேரொலி யரவம் விண்ணைப் பிளந்திட. (யுத் : 2443)

வயிர வேதி-வச்சிராயுதம். வலங்கையின் வயிரவேதி வைத்தவன். (சு : 37)

வயிரியர் – 1. கூத்தர். அரங்கினில் வயிரியர் முழவம் முழக்கும் இன்னிசை. (பா : 545)

2. வாத்தியக்காரர். இன்னிசைபாடு வோர். பாடகர். வயிரியர் மதுரகீதம். (பா : 789)

3. பாடகர். பாணர். களிறும் பிடிகூட்டமும் ...நிதியும் வயிரியர் கொள்ளை மாக்களிற் கொண்டனரேகவே. (அ : 824)

வயிற்றினிடுதல் – வயிற்றில் அடக்கிவிடுதல். விழுங்குதல். இனிச் சிறிது நாளில் மன்னுயிரனைத்தையும் வயிற்றினிடும். (பா : 386)

வயிறலைத்தல் – வயிற்றினில் அடித்துக் கொள்ளுதல். வந்தானை முகநோக்கி வயிறலைத்து. (ஆ : 339)

வயிறு – வயிறு. வயிற்றிற் பெற்ருயு நீயே. (அ : 429)

வயிறு கொல்லல் - வயிற்றை மோதி வருத்துதல். சனகி தன் மலர்க் கையால் வயிறு கொன்று. (யுத் : 3630)

வயிறு தகர்த்தல் – வயிற்றி லடித்துக் கொள்ளல். இராவணன் தங்கை தன் கை வயிறு தகர்த்தனள். (ஆ : 557)

வயிறு தருதல் – வயிற்றிலிருந்து பெறுதல். வார்தந்த முலையினர் தம் வயிறு தந்தாளு மல்லள். (ஆ : 637) [பா : பே]

வயிறுதிறத்தல் – வயிறு பிளக்கப் பெறுதல். நெடுந் தோள் பறிதா வயிறு திறந்தார். (சு : 777)

வயிறு பிசைதல் – பெருந் துன்பத்தின் செயல். ஆலிலையன்ன வயிற்றினைப் பெய்வளைத்தளிராற் பிசையும். (அ : 306)

வயிறு புடைத்தல் – வயிற்றி லடித்துக் கொள்ளுதல். கற்புடையாள் வயிறு புடைத்தலமந் தேங்கி. (யுத் : 4146)

வயிறு வாய்த்தல் – 1. மக்களைக் கருப்பத்திற் கொள்ளுதல். என் தவ மின்மை வார் காத்த வனமுலையார் மணி வயிறு வாய்த்திலரால். (பா : 736)
2. மக்களைப் பெறுதல். திதி என்பாள் அதினிரட்டி மைந்தர் தமை வயிறுவாய்த்தாள். (ஆ : 201)

வயின் - காலம். இடம். வயின் தொறும். (அ : 760) அவ்வயின். (ஆ : 159)

வயின்தொறும் - இடந்தொறும். மலையும் வேலையும் வரம்பில வயின்தொறும் பரந்து. (யுத் : 2309)

வயின் வயின் - இடந்தொறும் இடந்தொறும். வயின் வயின் எயிற்றி மார்கள் வயிறலைத்தோட ஓடி. (பா:25) வயின் வயின் வரம்பிலர் தொடர. (அ : 510) (பா : 938)

வயின்றொறும் வயின்றொறும் – இடந்தொறும் இடந்தொறும். வாலு கப்பரப்பில் பைம்புலில் வயின்றொறும் வயின்றொறும் வைகினர். (அ : 540) (அ : 734) (கி : 561)

வயின தேயன் – கருடன். மழை புரையுங் குழல் விநதை வானிடி மின் அருணனுடன் வயினதேயன் ...பெரும்பறவை தம்மை ஈன்றாள். (ஆ : 203)

வர்க்கம் – வருக்கம். கூட்டம். ஆனவர்க்கம். ஏனை வர்க்கம். (யுத் : 3574)

வரக்கடவார்களல்லர் – வரத்தக்கவரல்லர். (யுத் : 2673)

வரக்குறுகும்–வந்துநேர்படும். குற்ற மொன்றிலாதார் மேலும் கொள் வரக் குறுகும் என்று. (யுத் : 597)

வரங்களின் வாரி - வரங்களின் வாயில். (அண்) வேண்டிய வரங் களைத் தரவல்ல கடல். (வை.மு) வரங்களின் வாரியன்ன தாளிணை வந்து வீழ்ந்தான். (யுத் : 446)

வரங்குறைந்து வீழ்தல் - பெற்ற வரமெல்லாம் அழிந்து பட்டு விழுதல். வீரம் போய் உரங் குறைந்து வரங்குறைந்து வீழ்ந் தானே வேறே. (யுத் : 3907)

வரங்கொள்ளுதல் – வரங் கேட்டுக் கொள்ளல். வரங் கொண்டான் இனி மறுத்தல் வழக்கன்று. (யுத் : 1579)

வரத மாதவன் - வரங்களைக் கொடுக்கவல்ல முனிவன். (கலைக் கோட்டு முனிவன்) முனிவருந் தொடரப் போயினன் மருளொழி உணர்வுடை வரத மாதவன். (பா : 232)

வரதர்க்கும் வரதன் - வரந்தருந் தெய்வங்களுக் கெல்லாம் வர மளிக்கக் கூடியவனான சிவபெருமான். நீ இவள் திறத்திகழ்ச்சி மறக்குந் தன்மையது என்றனன் வரதர்க்கும் வரதன். (யுத் : 4034) [பா : பே]

வரதன் - 1. வரங்களைக் கொடுக்க வல்லவன். வரத மாதவன். (பா : 234)
2. இராமன். சரதமிப் புவியெலாம் தம்பியோடும் இவ்வரதனே காக்குமேல். (அ : 154) (ஆ : 891) வரதா. (யுத் : 4320) (யுத் : 4354)

வரந்தரு முதல்வன் - முதற் கடவுளாகிய வரங் கொடுக்குந் திருமால். (யுத் : 3130)

வரந்தரு முனிவன் - கௌதமன். தடுப்பரும் சாபம் வல்ல வரந்தரு முனிவன் எய்த வருதலும். (பா : 554)

வரநதி - கங்கை. இன்னு நீ பெருகு நற்றவம் புரிகென வரநதி பெயர்ந்தாள். (பா : 528)

வர நல்கல் - வரங் கொடுத்தல். வாய்மை வளர்ப்பான் வர நல்கிப் பரிந்தா லென்னும். (அ : 228)

வரப்பு - வரம்பு· வரப்பறு மணியும் பொன்னும். (பா : 574)

வர பன்னகம் - சிறந்த பல்வாகிய மலைகள். வர பன்னகத்தனை யும் வேரொடு வாங்கும் சரபன். (யுத் : 835)

வரம் - 1. மேன்மை, சிறப்பு. எவ்வரம் பெரிய தோள். (யுத் : 103) வரசரோருகன் மகன். (பா . 184) வர பன்னகம். (யுத் ; 835)
2. சாபம், வரம் அளிக்குந்திறமை. வரமுனி. (பா : 230)
3. அனுமதி. வரந்தரும் இந்த மாக்கடல். (யுத் ; 536)
4. பெருமை. சிரமும் வரமும் சிந்துவெனென்றுந்த. (யுத்:2625) வரத்து வாசவன். (யுத் : 4101)

வரம்பழியாமை - அறத்தின் எல்லையைக் கடவாமை. அங்கும் இவ் வறமே நோக்கி அரசிழந்தடவி எய்தி மங்கையை வஞ்சன் பற்ற வரம்பழியாது வாழ்ந்தேம். (யுத் : 2863)

வரம்பறு சும்மையர் - எண்ணற்ற ஏனை நாட்டினர். (சும்மை-நாடு தொகுதியுமாம்) (அண்) வரம்பறு சும்மையர் தலை மயங்கினர். (சு : 1058)

வரம்பறுதிரு - எல்லையற்ற இன்பமுடைய வீடு. இடருழக்கும் வருத்த நீங்கி யவ்வரம்பறு திருவினை மருவும் அருத்தியுண் டெனக்கு. (அ : 66)

வரம்பறு துயரின்வைகல் - எல்லையற்ற துன்பத்துள் அழுந்துதல். நின்னையன்று வரம்பறு துயரின் வைகச் சூழ்விலா மாயஞ் செய்து. (யுத் : 924)

வரம்பில் காலம் - அளவுகடந்த ஆயுட்காலம். மைந்தரை இன்மை யின் வரம்பில் காலமும் நொந்தனென். (அ : 27)

வரம்பில் கோடி - அளவில்லாத கோடிக்கணக்கு. மாதரின் நுடங் குவ வரம்பில் கோடியே. (அ : 963)

வரம்பில் பேரழகினள் - எல்லையற்ற பேரழகினளாகிய சீதாபிராட்டி. வரம்பில் பேரழகினளை மணஞ் செய்வான் வருகின்றான் என்று. (பா : 565)

வரம்பில் வையகம் - எல்லையில்லாத நிலவுலகம். வரம்பில் வையகம் இங்கு நின்னருளினால் இனிதின் ஓம்பினேன். (பா : 181)

வரம்பிலாற்றல் - அளவற்ற வலிமை. வரம்பிலாற்றல் உலைவிலா வகையுழந்த தருமம் என. (ஆ : 561)

வரம்பிலாற்றலான் - அளவற்ற வலிமை வாய்ந்த சாம்பவான். எம் சாகையும் உணர்த்துதி தவிர்தி சோகம் போர் வாகையாய் என்றனன் வரம்பிலாற்றலான். (கி : 963)

வரம்பிலான் - கட்டுக் கடங்காதவன். வரம்புகடந் தொழுகுபவ னாகிய இராவணன். மங்கைய்ஃ துரைத்தல் கேட்ட வரம்பி லான். (ஆ : 865)

வரம்பிழைக்கும் - வரம் தவறினும் தவறும். நரம்பிழைத்தன பாடலின் நல்கிய வரம் பிழைக்கும். (சு : 1145)

வரம்பின்மை - வரம்பில்லாமை. அநவஸ்தா தோஷம். அதாவது இறைவனது சொருபமாக வுள்ளவற்றை அவனது சொருபமே யழித்தல். எல்லா வுருவமுமாய் நின்றக்கால் இவ்வுருவம் வல்லே படைத்தால் வரம்பின்மை வாராதோ. (யுத் ; 288)

வரம்பின்றி வாழ்வான் - என்றும் வரம்பின்றி வாழ வேண்டியவனான இராவணன். வரம்பின்றி வாழ்வானுக்கு உய்யுமாறரிது என்று. (யுத் : 1572)

வரம்பு - 1. எல்லை. வடசொற்கும் தென் சொற்கும் வரம்பிற்றாய். (கி : 769)

2. நீதிநெறிக்குக் கட்டுப்படல். வரம்பிலாதாய். (யுத் : 1605) வரம்பிலான். (ஆ : 864)

3. சமயம். இராமன் திருமுடி மண்ணு நீர்க்கு வரம்பு கண்டா லன்றிக் கண்ணினீர்க் கொர் கரையெங்குங் காண்கிலான். (யுத் : 4129)

4. அளவு. வரம்பில் மாயப்புன் சிறைப்பொறையைத் தீர்ப் பான். (யுத் : 1619) வரம்பிலாற்றலான். (கி : 115)

5. முறை. மறையுடை வரம்பு நீங்கா வழிவந்த மன்னர் நீரே. (யுத் : 1608)

6. முடிவு. துயர்க்கொரு வரம்புண்டாகுமோ. (கி : 536)

7. விளிம்பு. வாளின் வரம்பு. (யுத் : 1873)

8. வரப்பு. வரம்பெலாம் முத்தம். (ப : 33)

9. அணை. வேலை வகுத்தன வரம்பு. (யுத் : 1608)

வரம்பு காணுதல் - எல்லையை அளவிட்டு அறிதல். மறத்தியே, மறைகளின் வரம்பு கண்ட நீ. (அ : 1135)

வரம்பு நீங்காமை - வரன் முறையினின்றும் நீங்காமை. மறையுடை வரம்பு நீங்கா வழிவந்த மன்னர்நீரே. (யுத் : 1618)

வரமிகு - மேன்மை மிக்க. வரமிகு கம்பன். (பாயி : 8)

வரமீதல் - வரங்கொடுத்தல். வரமீந்துள்ளம் ஆற்று தயர்ந்தா னென்று மறிந்தாள். (அ : 347) ஏன்ற வரங்களிரண்டும் ஈதி. (அ : 193)

வரவர - நெருங்கிவர. மண்ணொடு நகரம் மாடே வரவர. (யுத் : 713) [பா : பே]

வரவற்று - வரவல்லது. நிறைவேறக் கூடியது. என் பெருஞ் செல்வ மெய்திப்பின் வாழவோ கருத்து அது வரவற்றுருமோ. (யுத்:310)

வரவிடுதல் - அனுப்புதல். அவை யாவையும் உடனே வரவிட்டான் (யுத் : 1824)

வரவிற்று - வருதலை யுடையது. இப்புவனமுற்று மொருதட்டினிடை யிட்டால் ஒப்புவர விற்றென உரைப்பரியவாள். (ஆ : 173)

வரவின் வந்த வாழ்க்கை - (நீ) வந்ததனாலுண்டான (எங்கள்) வாழ்க்கை. கருணைச் செல்வம் அருளினை வரவின் வந்த வாழ்க்கை ஈதாகின் வாயால் அருளினை யென்னின் எய்த அரியன உளவோ ஐய. (யுத் : 2120)

வரவினர் - வருகின்றவர்கள். (கி : 45)

வரவீசுதல் - வீசுதல். மாருதம் வரவீச. (அ : 704) [பா ; பே]

வரவு - 1. வழங்கப்படுகை. அடுத்தாங்குற வளர்ந்தான் திருவடியின் வரவன்னான். (யுத் : 1)24)
2. வருகை. படி காரிர் எம் வரவு சொல்லுதிர். (அ : 793) வரவின் வந்த வாழ்க்கை. (யுத் : 2250) வாலி ஏவலின் வரவினர். (கி : 45)
3. தோற்றம். வரவு போக்கது. (யுத் : 199)
4. வருதல். உலங்கு நம்மேல் வரவு ஒழிக்கற் பாலதோ. ((யுத் : 29)

வரவு போக்கது-வரவினது போதலையுடைத்து; வருதல் இல்லாதது. தோற்றமும் ஒடுக்கமுமாகிய இயல்பு. (அண்) விகுதியின் மிகுதிகள் எவையும் மேலவர் விகுதியின் வயத்தன வரவு போக்கது. (யுத் : 199)

வரவு மாற்றுதல் - வாராதவாறு தடைவிதித்தல். வண்டொடுகாலையும் வரவு மாற்றினான். (யுத் : 20)

வரவுற்றார் - வருமாறு இருப்பவர்கள். (சு : 956 )

வரவெதிர் கொள்ளுதல் - வரவேற்றல். பரமுனி பவ நோயின் மருத்துவன் அனையானை வரவெதிர் கொள வந்தான். (அ : 709) வானவர் தலைவனை வரவெதிர் கொண்டான். (ஆ : 106)

வரற்பாலர் - வரக்கூடியவர்கள். மற்றும் வாற்பாலர் எல்லாரும் வந்தடைந்தார், (அ : 1134)

வரன் - 1. சிறந்தவன். அருமறை நூல்வடிவு கொண்டதன்ன முனிவரன். (பா : 243)
2. வரம். வரனும் மாயமும் வரம்பில வல்லவர். (சு : 347)

வரன்முறை – 1. வரல் முறை; வரலாறு. பொய்யிலாதவன் வரன் முறை இம்மொழி புகல. (கி : 146)
2. விதிமரபு. சாஸ்திரவிதி. காயெரி விதிமுறை நடித்திருந்தி வான். (ஆ : 110) படைக்கலம் வரன் முறை துறக்கும் மெய் கொள் பூசனை. (யுத் : 258)
3. நீதிமுறை. வரன் முறை துறந்தான். (யுத் : 2393)
4. தொன்று தொட்டு வரும் முறை. மாதவன்தனை வரன்முறை வணங்கி. (அ : 59)

வரனின் அமைந்தார் - வரபலம் பொருந்தினவர்கள். (சு : 765)

வரால் - வரால் மீன். முரிய வரால் மீன் பாளை விரியக் குதிகொள் பண்ணைவள நாடா. (பா : 1242) (கி : 26)

வரி - 1. கட்டு. வரிசிலை நெடியோன். (யுத் : 2576)
2. அழகு. பொறிவரியம் பெறுந்தும்பி. (யுத் : 2310)
3. ரேகை. (உ.வி) (யுத் : 2310) வரிவாளம். (கி : 863)
4. கீற்று. மாதிரக் களிற்றின் வரிக்கைவாய். (சு : 408)
5. நரம்புகள். இளவரிக் கவட்டிலை ஆர். (யுத் : 1077) (ஆ : 789)
6. பிணைத்துக்கட்டுதல். வரி சிந்துரம். (ஆ : 469)

வரிக்கல் - கட்டுதல். தடுத்தல். (வை.மு) நியமித்தல். (அண்) வரிக்கலாகாக் கூற்றம். (ஆ : 878)

வரிகள் - செவ்வரிகள். கிளரிள வரிகள் தோய் கயற்கண்கள் (அ : 160)

வரிச்சு - கட்டுவரிச்சல். பன்னசாலையின் உறுப்புக்களுள் ஒன்று. வரிச்சு மேல் விரிச்சு முட்டியே. (அ : 780)

வரிசிந்துரம் - முதுகில் தவிசு கட்டிய யானைகள். (ஆ : 469)

வரிசிலை - கட்டமைந்தவில். வரிசிலையுழவன். (ஆ : 111) (யுத் : 398)

வரிசிலைக் குரிசில் - கட்டமைந்தவில்லையுடைய அரசன். (தசரதன்) வரிசிலைக் குரிசில் மைந்தன் தேற்றமுற்று இவனினுங்குச் செவ்வியோ ரின்மைதேறி. (கி : 60)

வரிசிலைக்கை நம்பி - கட்டமைந்த வில்லேந்திய நம்பி. (இராமபிரான் தான் மயங்கிருளின் நள்ளிற் போன வரிசிலைக்கை நம்பி செய்கை நடத்துவாம். (அ : 617)

வரிசிலைத் தடக்கையன் - வில்லேந்திய பெருத்த கையுடையவன். வரிசிலைத்தடக்கையன் மார்பின் நூலினன். (பா : 621)

வரிசிலையுழவன் - கட்டமைந்த வில்லில் வல்ல இராமன். வரிசிலை யுழவன் மறையுழவனை நீ புரிதொழில் எனையது புகலுதி எனலும். (ஆ : 111)

வரிசை - 1. முறைமை, மரியாதை. வேந்தர் ஆதி சிவிகையின் விங்குதோள் மாந்தர் காறும் வரிசை வழாமலே. (அ : 1077)
2. சிறப்பு. வரிசையின் வழாமை நோக்கி. (யுத் : 4098)
3. ஒழுங்கு. வாரணம் இவுளிதேர் வசிசைதான் வரிசையின் வழாச் சிரணியணிக. (யுத் : 4183)

வரிசையின் அளவளாய் - முறைமைப்படி விளவி. இருங்கிளையை யும் தமரையும் வழுவில் சிந்தையினான் வரிசையின்னளவளாய். (பா : 1131)

வரிசையின் வழாமை - அவரவர்க்குரிய சிறப்புக்களில் குறைவு நேராமை. வரிசையின் வழாமை நோக்கி. (யுத் : 4098)

வரித்தல் - 1. கட்டுதல். மன்ன கவசத் துறவரித்த லெனல். (யுத் : 3643)
2. மேற் கொள்ளுதல்; தாங்குதல். அரக்கர் வல்லர் வேண்டுரு வரிக்க என்பது ஆயவள் அறிதல் தேற்றாள். (ஆ : 866)
3. நியமித்தல். தடுத்தல். வரிக்க லாகாக் கூற்றம். (ஆ:878)

வரிதல் - கட்டுதல். திக்கின் வரிந்தன எருவை மானச் சிறை களால். (யுத் : 2523) வரிந்த வாள். (யுத் : 1165) வரிந்த வாள் அனங்கன் வாளி மனங் கழன்றனவும். (பா : 1165)

வரி மருப்பிணை - வரிகள் அமைந்த இரண்டு கொம்புகள். வரி மருப்பிணை வன்தலை யேற்றை. (பா : 61)

வரிவண்டு - பல நிறங் கொண்ட வண்டுகள். இன்னறை யுற்று உண் வாய் வரி வண்டுகள் மொய்த்தனவால். (யுத் : 3465) (யுத் : 3621)

வரி வாளம் - இரேகைகளையுடைய சக்கரவாளம். வரிவாளம் பொருங் கலச மொக்குமுலை. (கி : 863)

வரிவில் - கட்டமைந்த வில். வரிவி லேந்திக் காலை வாயளவும் தம்பி இமைப்பிலன் காத்து நின்றான். (அ : 665) (யுத் : 2462)

வரிவிலெம்பி - கட்டமைந்த வில்லையுடைய என் தம்பி. வரிவிலெம்பி யிம்மணரசாய். (அ : 316)

வரிவிற் குமரன் - கட்டமைந்த வில்லையுடைய மைந்தன். மின்னின் மின்னும் வரிவிற் குமரா. (அ : 354)

வருக்கம் - 1. கூட்டம். அருமறை வருக்க மோதி. (பா : 889) கவந்தத்தின் வருக்கம். (யுத் : 3604)

2. இனம். பந்துக்கள். அரக்கர் தம் வருக்கத்தோடும் இறந்த னர் முடிவர். (ஆ : 868)

வருக்கை - பலா. மருந்தினுமினியன வருக்கை வாழை மாத்தருங் கனி. பா : 222)

வருங்குறி - மீண்டு வருங்காலம் பற்றிய குறிப்பு. பண்டுவருங் குறிபகர்ந்து பாசறையிற் பொருள் வயினிற் பிரிந்துபோன. (பா : 715)

வருடம் - ஆண்டுக்குரிய தேவதை. மனிதர் தம்மோடு ஆன வருடங்கள வையடைவேபயந்தன. (ஆ : 202)

வருடல் (வருடுதல்) - 1. பிடித்துத் தடவுதல். மெய்யுங்கையும் பற்றினன் வருடலோடும். (யுத் : 2856)

2. விழுதல். தீண்டுதல். பொறைதிர் வெங்கதிர் மணிமுகம் வருடவும். (யுத் : 540) வருடாமல். (யுத் : 701)

வருடை - மலையாடு. மால்வரை உம்பரிற் குதிக்கின்ற வருடை. (அ : 739)

வருணசரம் - பலவர்ணமுள்ள மாலை. வருணற் கீந்த வருண சரத்தையே. (யுத் : 654)

வருணசாமரை - நன்னிறமுள்ள சாமரை. நடுவண் வட்டவாய் களில் வதிந்தன வருண சாமரைகள். (யுத் : 1437)

வருணம் - 1. சாதி. இமையோரோடும் வருணங்கள் வகுதிட்ட காலத்தே வந்துதித்தேன். (ஆ : 206)

2. நன்னிறம். வருணசாமரைகள். (யுத் : 1437)

வருண மந்திரம் - வருண பகவான் உபாசனைக் குறிப்பு. வருண மந்திர மெண்ணினன் விதிமுறை வணங்கி. (யுத் : 539)

வருணன் - மழைக்கு இறைவன். மற்றைய பூதமெல்லாம் வருணனை வைதமாதோ. (யுத் : 597)

வருணன் வன்கயிறு - வருணனது வலியு பாசாயுதம். வாசவன் வயக் குலிசமும் வருணன்வன் கயிறும். (சு : 879)

வருத்தஞ்செய்தல் - வருந்துதல். வருத்தஞ் செய்யாதேகுதி எம்மை நோக்கி இரங்கலே. (யுத் : 1384)

வருத்தப்பாடு - வருத்தப்படுந்தன்மை. மன்னநின் வருத்தப்பாடு முணர்த்தினென் உயிர்ப்பு வந்தாள். (சு : 1325)

வருத்தம் - துன்பம். வருத்தம் நீங்கரக்கர். (அ : 275) வருத்தஞ் செய்யாது ஏகுதி. (யுத் : 1384)

வருத்து - வருத்தம். வலைத்தோள் வளவி யுண்டவன் வருந்து மென்றுல் அது ஒரு வருத்தோ. (கி : 493)

வருதல் - 1. தோன்றுதல். மாலுற வருதலும். (பா : 604) இமையோர்க்கின்னல் வருவித்தீர். (கி : 638) வாரார். (சு : 473)

2. உண்டாக்குதல். வந்த அமலேயும். (யுத் : 2790)

3. பிறத்தல். பாவை நீ இவனின் வந்த பயன் பழுதாவ தென்றுல். (யுத் : 1635) தசரதன் மதலேயாய் வருதும் தாரணி. (பா : 201)

4. பழகுதல். பூவரு மழலே யன்னம். (கி : 807)

5. இருத்தல். மின்வந்த எயிற்றவன். (யுத் : 1723)

6. சஞ்சரித்தல். குயிலினம் வருகானம். (அ : 707) [பா : பே]

7. நடை பெறுதல். வாரா அமர். (யுத் : 1744)

8. அனுகிவருதல். வாரும் உங்களுடன் வானுளோர்களேயும் மண்ணுளோரையும் வரச்சொலும். (யுத் : 2029) நேர்ந்த நாள் வாரும் வாரலிரா மெனின் வானரப் பேரு மாளும். (கி :570) வாரார். (யுத் : 1867)

9. உணர்வினுல் தெளியப்படுதல். வருவாய் போல வாரர்தாய் (யுத் : 2620)

10. அவதரித்தல். வந்தாயென்று மனங்களிப்ப வெருவா திருந் தோம். (யுத் : 2620) வருதும் தாரணி. (பா : 201)

11. வருதலேச் செய்தல். வருதி என்னேடோட. (பா : 1015) (சே : 1071) வருக என்னேடோட. (பா : 1019) வாரும் வாரலிராமெனின். (கி : 570)

வருதும் - நாம் பிறப்போம். தசரதன் மதலேயாய் வருதுந்தாரணி. (பா ; 201)

வருது முன் - வருவதற்கு முன். நாம் பதிவருது முன். (யுத்:4122)

வருதொழில்-வருதல். அனையவர் வருதொழில் கண்டான். (சு:770)

வருந்தல் - 1. முயலுதல். பிழைப்பில் செய்தவம் வருந்தினன் வருகென வசிட்ட னெய்தினன். (அ : 99)

2. வருத்த மடைதல். வருந்தலில் மானமா அனைய மாட்சியர். (சு : 507) வருந்தருந் துயரினன் மாளலுற்ற மான். (யுத்:3991) இனியவன் வருந்த. (அ : 27)

3. துன்பப்பட வேண்டாம். வருந்தல் வஞ்சகர் தந்தலையறுத்து இடர் தணிப்பன். (பா : 199) (அ : 837) வருந்தலை. (சு : 515)

வருந்தலை வருந்தலை-வருந்தாதே வருந்தாதே. வருந்தலை வருந்தலை வள்ளியோய். (ஆ : 1119)

வருந்தாவண்ணம் வருந்தினர் - பிறர் எவரும் வருந்தாத அளவில் வருந்தியவர்கள். வருத்தாவண்ணம் வருந்தினர் மறந்தார் தம்மை வள்ளலுமாங் கிருந்தா னென்றே யிருந்தார்கள். (அ:610)

வருந்தித்தர வந்த அமுது - வருந்திக் கடைந்து உண்டாக்கத் தோன்றிய அமுதம். வருந்தித் தான் தரவந்த அமுதையும் அருந்துக் நீர் என்றமரரை யூட்டினன். (அ : 644)

வருநாள் - 1. வளர்ந்து வரும் நாள். வளர் பருவம். வருநாள் தோன்றும் தனிமறுவும். (சு : 645)

2. எதிர் காலம். நீதி வருநாளு நிற்றி. (யுத் : 2006)

வருநெறி - வருகின்ற வழி. நினைப்பின் முன் அயோத்தி எய்தி வருநெறி பார்த்து நிற்பேன். (யுத் : 2881)

வரும் வரும் - 1. நிச்சயமாக வருவான். வரும்வரும் என்றுயிர் போக்கிப் போக்கி யுழக்கும் பொருமலான். (யுத் : 4128) வாங்கு வில்லன் வரும் வரும் என்றிரு பாங்கு நீணெறி பார்த்தனளோ எனும். (ஆ : 1047)

2. விரைவிலே வருவான். சுருதி நாயகன் வரும் வரும் என்பதோர் துணிவால் கருதி. (சு : 338)

வருமே வருமே - வருவானோ வருவானோ. அடுக்கு ஆர்வ மிகுதியை உணர்த்திற்று வண்றிண்சிலை நங்குரிசில் வருமே வருமே என்றான். (அ : 366)

வருவது - வர வேண்டுவதொரு பொருள். வருவது வரு நாளன்றி வந்துகை கூடவற்றே. (ஆ : 639)

வருவபோல் - வருவது போல. ஓர் செம் பொற் குன்றின்மேல் வருவ போற் கலுழன் மேல்வந்து தோன்றினன். (பா : 192)

வருவாய் போல் வாராதாய் - அறியப்பட்டாய் போன்று நின்று அறிவுக்கு விஷயமாகாதவனே. (யுத் : 2620)

வருவித்தல் - படைத்தல். மன்னுயிரெல்லாந்தானே வருவித்து வளர்க்கும் மாயன். (யுத் . 420) இமையோர்க்கின்னல் வருவித்தீர். (கி : 638) (கி : 205)

வருதினி - சேனை. வல்லி ஆய வருதினி வந்ததே. (ஆ : 610) [பா : பே]

வரை - 1. மலை. மேரு மால் வரைக்குலம். (யுத் : 101)

2. எல்லை. இற்றை நாள் வரை முதலியான் முன் செய்தன குற்றமு முளவெனில் பொறுத்தி. (யுத் : 1316)

வரைக் கொழுந்து - மலையின் சிகரம். கரிய மால்வரைக் கொழுந்தெனப் படர் வனகானும். (அ : 754)

வரைச் சூழல்கள் - மலைச் சாரல்கள். அத்துங்க மால்வரைச் சூழல்கள் யாவையுந் தங்கி. (பா : 961)

வரை சூழ்தல் - மலைகள் சூழ்ந்து நிற்றல். முற்றுவா மிறை சொன் முறையாலெனுச் சுற்றினர் வரை சூழ்ந்தன்ன தோற்றத்தார். (ஆ : 383)

வரை செய் மும்மதவாரணம் - மலை போன்ற தோற்றத்தினையும் மும்மதங்களையும் உடைய யானை. (கி : 36)

வரைசெய் மேனி-மலையை ஒத்த (பெரிய) உடல். வரை செய் மேனி இராக்கதர். (யுத் : 3585) (யுத் : 3952)

வரை செய்வில் - மலை போன்ற வில். வரை செய்தாள் வில்லிறுத்தவன். (கி : 811)

வரைத்தோள் - 1. மலையின் தாழ்வரை. (வை.மு) மணிவரைத் தோளின் வைகும் நெறிப் புண்டரீக மன்ன முகத்தியர். (யுத் : 955)

2. மலை போன்ற தோள்கள். (உ.வி) (யுத் : 955) வரைத்தடந் தோளினுள் வதனம் நோக்கினன். (அ : 453)

வரைதல் - குறித்து எழுதுதல். வரையறை செய்தல். வரைந்து விட்டார்... மவுலி சூடும் ஓரையும் நாளும் தூக்கி. (யுத் ; 4303)

வரைப் பரப்பு - மலையிடம். (யுத் : 683)

வரைப்பு - இடம். இந்நெடு நில வரைப்பும். (யுத் : 1648)

வரைப்புயத் தண்ணல் - மலை போன்ற தோள்களையுடைய இராமன். வரைப் புயத்தண்ணல் தன் மனையை நோக்கினான். (அ : 479)

வரை புரையகலம் - மலைபோன்ற மார்பு. அண்டர் நாயகன் வரை புரையகலத்துள். (அ : 55)

வரைபொரு மாடம் - மலையை ஒத்துத் தோன்றுகின்ற மாடம். வரை பொரு மாட வாயில் நெருக்குற வந்து. (யுத் : 4326)

வரைமகள் - பார்வதி. வரைமகள் புனிதன். (பா : 529) [பா:பே)

வரைமுதற் கலப்பைகள் - மந்தர மலையாகிய மத்து முதலிய கருவிகள். வரை முதற் கலப்பைகள் மாடு நாட்டி. (கி : 540)

வரையருவி - மலைகளினின்று துள்ளிப்பாயும் அருவிகள். பவள மால்வரை யருவியைப் பொருவன பாராய். (அ : 741)

வரையளித்த குலமாட நகர் - மலைகளை ஒப்பாகக் கொண்ட சிறந்த மாளிகைகளையுடைய அயோத்தி மாநகரம். அரக்கர் குலந் தொலைத்துக் கண்டாய் வரையளித்த குலமாட நகர் புகுவேம். (ஆ : 360)

வரையாடு - மலை, ஆடு. ஆறு சேர்வன மாவரை ஆடுமே. (பா : 957)

வரையாளி - மலைப்புறத்துள்ள யாளி. வரையாளியொடு வாசியொடு சீய முதலா. (யுத் : 3405)

வரையுண்ட மதுகை மேனி. - மலை மோன்ற வலிமையுடைய உடம்பு. (உண்ட - உவமவுருபு) வரையுண்ட மதுகைமேனி மருமத்து வள்ளல் வாளி இரையுண்டு துயிலச் சென்றார். (யுத் : 2120)

வரையுறை புனிதன் - கைலாசவாசியான பரிசுத்த மூர்த்தி. (பா : 529)

வல் - 1. விரைவு. எழுந்தனன் வல் விரைந்து. (கி : 243) (ஆ : 390)

2. சூதாடு கருவி. அதனை யொத்த முலை. (கலா) வல்லவை வழுத்துகேனே. (ஆ : 632)
3. வலிமை. வல்லியல் மறவர். (சு : 506)
4. பெருமை. வல்விரை. (யுத் : 224) வல்வாய். (யுத் : 818)

வல்ல – சிறந்த. வல்ல உருவொளியாய் நானு வளர்கநீ· (யுத் : 303)

வல்லது – ஆகக்கூடியது. ஆரமர் வெல்லுது மென்றிரேன் மேற். செல்விர் இனி வல்லது மடிதலே யென்னின் மாறுதிர் (யுத் : 1682)

வல்லர் – வித்தகர். வல்லவர். மல்லின் வல்லர். (அ : 805) [பா:பே)

வல்லரவம் – கொல்லும் கொடிய பாம்பு. கடிக்கும் வல்லரவம் கேட்கும் மந்திரம். (சு : 465)

வல்லரவினம் – வலிமைமிக்க பாம்புக்கூட்டம். (யுத் : 3284)

வல்லவர் – வித்தகர். சுரிகையின் வல்லவர். (அ : 805)

வல்லவன் – வல்லமையுள்ளவன். வல்லவன் அவ்வுரை வழங்குங் காலையின். (யுத் : 2436)

வல்லன் – வல்லவன். உய்யவந்தவன் வல்லனென்றுன்னினான். (ஆ : 808)

வல்லான் – வல்லவன். அம்பினை மாட்டியென்னே சிறிதுபோ ஆற்றவல்லான் தம்பியைக் காட்டித் தாரீர். (யுத் : 2988)

வல்லி – 1. கொடி. மாவொடு மானும் மண்ணும் வல்லியும். (சு : 20)
2. பெண். அருட்டை யெனும் வல்லிதந்தாள். (ஆ : 204)
3. காமவல்லியென்னுங் கொடி. வல்லினும் அனங்கன் வில்லும் மான்மதச் சாந்திற்றீட்டி. (பா : 1213)
4. பூங்கொடி. வஞ்சி போலியர் மருங்கென நுடங்கினவல்லி. (கி : 488)
5. கொடிபோன்ற மடிப்பு. அம் பொன் வல்லி மூன்றுளவால் கோல வயிற்றின். (கி : 785)
6. விலங்கு. கால் விலங்கு; அவ்விலங்கு போலக் கட்டுங் கயிறு. யானை பிணிக்கும் காற் கயிறு. (அண்) பூட்டும் வல்லி முட்டோடும் புரசை யிழந்த போர் யானை. (சு : 1161)

7. துவசம். அழகிய கற்பகக் கொடிபோன்ற கொடிகள். வல்லி கோலி நிவந்தன. (சு : 1195)

8. ஈடா தண்டம். எர்க்கால். (உ.வி) (கலா) வல்லிதனையூர்வது. (யுத் · 3665)

9. குசைக் கயிறு. வல்லியூடற மறிந்தன புரவிகள். (யுத்:2449)

வல்லி ஆயம் - மகளிர் கூட்டம். வல்லி ஆயம் வலத்தினில் வந்ததே. (கி : 610)

வல்லிக் கொடி - வல்லி யென்னுங் கொடிகள். நானிற வல்லிக் கொடி நவையில பல்கி. (அ : 707)

வல்லி சுற்றிய மாமரம் - கொடியினுல் தழுவப்பட்ட பெரிய மரம். வல்லிசுற்றிய மாமர நிகர்த்தனர் வயவர். (யுத் ; 2312)

வல்லிதாங்கழை - வலிய மூங்கில். வல்லிதாங்கழை தாக்கலின் வந்திழி பிரசம். (அ : 740)

வல்லி பொரு சிற்றிடை - பூங்கொடியை ஒத்த நுண்ணிய இடை. வல்லி பொருசிற்றிடை மடந்தை. (பா : 1241)

வல்லியக்குழாம் - புலிக்கூட்டம். (ஆ : 397)

வல்லியம் - புலி. வன் பறழ் வாயிற் கௌவ வல்லிய மிரிந்த மாதோ. (சு : 7)

வல்லியல் மறவர்-வலிமை பொருந்திய வீரராகிய இராமலக்குமணர். (சு ; 506)

வல்லியின் மருங்கினர் - கொடி போன்ற இடையினை யுடையவராகிய மகளிர். வல்லியின் மருங்கினர் மருங்கு மாப்பிடி புல்லிய களிறென மைந்தர் போயினர். (பா : 833)

வல்லிருள் - வலிய இருள். வல்லிருள் கோத்தது. (யுத் : 463)

வல்லி வாங்கிய மருங்குல்மாதர் - பூங்கொடியும் ஒப்பாகாது (பின் வாங்கும்) வளைந்து கொடுக்கும் இடையையுடைய பெண்கள். (யுத் : 2232)

வல்லீர் - வல்லமையுடையீர். நல்ல சொல் வல்லீர். (கி ; 993) வல்லீரேல் ஒருவர் ஏகி. (கி ; 1007) (கி ; 1019)

வல்லூரு - வலிய உருவங்கள். புலிகொள் வல்லுருப் பொடித்தன வோ. (யுத் ; 3282)

வல்லெழு - வலிய தூண்கள். வல்லெழு அல்லவேல் மரகதப் பெருங் கல்லெனும் இருபுயம். (பா : 616)

வல்லே - விரைவாக. வல்லே யுளராயின மானிடரைக் கொல் லேன். (யுத் : 1706)

வல்லை - 1. திறமையுடைய. வல்லை மைந்த. (ஆ : 217)
2. விரைவு. வச்சிரத் தெயிற்றன் வல்லை கூறுவான். (யுத் : 40) அவிர் சோலை வல்லை யணுகா. (ஆ : 969) (ஆ : 390)
3. காடு. பெருங்காடு. வல்லையுற்ற வேய். (அ : 731)

வல்லையம் - ஓர் படை. வாமவில் வல்லையம் கணையம். (யுத் : 1323)

வல்லையின் - விரைவாக. மணிமுடி வேந்தன் தன்னை வல்லையிற் கொணர்தி. (அ : 268) (ஆ : 390) (சு : 752)

வல்லையுற்ற வேய் - பெருங் காட்டிலுள்ள மூங்கில்கள். (அ : 75)

வல்லை வல்லை - மிகவும் வல்லமையுடையை. எறும் வலிக்கு யாரொடும் இகல வல்லை வல்லை. (சு : 1017)

வல்லோசை - வலிய ஒலி. வையஞ் சேர்வான் அழைத்தவல் லோசை. (சு : 563)

வல்லோர்-வலியோர். மாட்டாயோ இக்காலம் வல்லோர் வலி தீர்க்க. (யுத் : 1945)

வல்வன் வார்சிலை - மிக்க வலிமையுள்ள நீண்ட வில். வல்வன் வார்சிலை பத்துடன் இடக்கையின் வாங்கி. (யுத் : 1158)

வல்வாய் - வலிய அல்லது பெரிய வாய். வல்வாய்ச் சங்கினம். (யுத் : 4311)

வல்விசைக்கால் - வலிய வேகத்துடன் கூடிய பெருங்காற்று. வாலி கலங்கி வல்விசைக் கால் கிளர்ந் தெறிவுறக் கடைக்கால் விலங்கன் மேருவும் வேர்பறிந்தா லென வீழ்ந்தான். (கி : 295)

வல்விடம் - கொடிய நஞ்சு. (யுத் : 4166)

வல் விரைந்து - வெகு விரைவாக. கொணர்க மைந்தனை வல் விரைந் தென்றனன். (யுத் : 168) (யுத் : 3581)

வல்வில் - வலிய வில். வல் வில்லுக் காற்றுார்கள். (பா : 770)

வல்வீரைத் துயில்வான் - பெரியபாற் கடல் யோக நித்திரை செய் யும் திருமால். வல்வீரைத் துயில்வான். (யுத் : 225)

வலக்கார் முகம் - வலிய வில். வலக்கார் முகம் என்கையதாக. (அ : 421)

வலக்கை - வலது கை. வலக்கையாற் குன்று நின்றது பேர்த் தெடுத்து. (யுத் : 1550)

வலங் கடிந்து - வலிமையை விட்டு. வலங்கடிந் தேழையாராய மன்னரை. (அ : 484)

வலங்கள் - வலிமைகள். எல்லையில் வலங்களும் வரங்களும் தவத்தின் வாய்த்தவர். (யுத் : 497)

வலங்கை - வலக்கை. சுடர் வாய் வாளி தாங்கிய வலங்கையர். (ஆ : 21) வலங்கையின் வாள் சிவன் கொடுக்க வாங்கிய அலங்கலந் தோளவன். (யுத் : 493)

வலங்கொடு - வலம்வந்து. மும்மைவலங் கொடிறைஞ்சினன். (சு ; 690) (யுத் : 2396) [பா : பே]

வலங்கொண்டு - பிரதட்சிணஞ் செய்து. வலங்கொண்டு வணங்கி. (யுத் : 2396)

வலங்கொள் நேமி மழைநிறவானவன் - வெற்றி கொள்ளும் சுதர் சனம் என்னும் சக்கராயுதத்தைக் கைக்கொண்ட நீருண்ட மேகம் போன்ற கருநிறத்தை யுடைய திருமால். (வேங்கடவாணன்) (கி : 927)

வலங்கொள்ளுதல் - பிரதட்சிணம் செய்தல். மல்லன் மாளிகைக் கோயில் வலங்கொளா. (அ : 97)

வலஞ்சுழித்து வந்தெழுதல் - வலது புறமாகச் சுழன்று வந்து நிமிர்தல். யாகத்தில் தீயானது வலஞ்சுழித் தெழுதல் நல்ல சகுனம் என்பர். வலஞ்சுழித்து வந்தெழுந்து எரி நறு வெறி வயங்கி நலஞ் சுரந்தன பெருங்குறி முறைமையின் நல்க. (யுத் : 2557)

வலஞ்செய்தல் - சுற்றி வருதல். வலஞ்செய்திந்த வானெலாம் நலிஞ்சு தின்னும் கிலிஞ்சன். (ஆ : 68) வலஞ்செய்க. (யுத் : 457)

வலத்தகால் - வலதுகால். வலத்தக்காலையும் வடித்த வெங்கணை யினால் தடிந்தனன் தனுவல்லான். (யுத் : 1566) (யுத் : 2353)

வலத்தது - வலிமையுடையது. மாண்டார்க் கெல்லாம் உயிர்தரும் வலத்தது. (யுத் : 3534)

வலத்தல் – 1. பின்னுதல். (அண்) சூழ்தல். (கலா) தாள்வலந் தொளிர் தமனியக்கச்சு. (யுத் : 3610) நுட்சிலம்பி கலந்தன நுண் துகில். (பா : 861)
2. சுற்றுதல். தோள் வலந்தன. (யுத் : 3610)
3. கட்டுதல். புதியன வலந்தன புதவராசியே. (அ : 128)

வலத்தியல் – வெற்றித்தன்மை. வலத்தியல் அழிவதற் கேது. (யுத் : 1300)

வலத்தோர் – ஆற்றல் மிக்கவர். அன்றியும் வலத்தோர் ஆயில். (சு : 169)

வலது – வன்மை. அவர் சொல் வலத்தால் ஏய்ப்புண்டவன். (யுத் : 1686)

வலந்தன – 1. பின்னியது போன்ற. வலந்தன நுண் துகில். (பா : 861)
2. கட்டப்பட்டன. புதியன வலந்தன. (அ : 128)
3. சுற்றிவருவன. (யுத் : 3610)

வலந்து – சுற்றிக் கட்டப்பட்டு. பின்னப்பட்டு. (யுத் : 3610)

வலம் – 1. வெற்றி. வலமுங் கொள்வாய். (யுத் : 2898) வழலி ஆயம் வலத்தினில் வந்ததே. (கி : 610) வலத்தியல் தோள். (யுத் : 1350) வலக்கார் முகம். (அ : 421)
2. பலம். வலிமை. வலங்களும் வரங்களும் தவத்தின் வாய்த்த வர். (யுத் : 493)
3. ஆற்றல். இடந் தென் வலங்கொள் ஒரு கைத்தலையில் வைத்து. (சு : 611) விண்டவர் வலம். (சு : 613)
4. உறுதி. வல மரங்கள். (யுத் : 618) வலமணித்தோள். (யுத் : 2000)
5. பிரதட்சிணம். வலங்கொண்டு வணங்கி. (யுத் : 2396)
6. வலப்பக்கம். சூலத்தை வலத்து வாங்கினுன். (யுத் : 1312) வலம்பட. (யுத் : 3610)

வலம்பட – வலப்புறமாகப் பொருந்த. (யுத் : 3610)

வலம்புரி – வலம்புரிச் சங்கம். வலம்புரி யுமிழ்ந்த முத்தம். (யுத் : 644) காலவலம்புரி கையின் வாங்கி அமரர் அஞ்ச ஊதினுன். (யுத் : 2404)

வலம்வரல் (வலம் வருதல்)-சுற்றிவருதல். பிரதட்சிணமாக வருதல். வலம்வரு மளவையின் மறுகி வான் முதல் உலகமும் உயிர்களும் ஓலமிட்டன. (யுத் : 4001)

வலமணித்தேர் - உறுதிவாய்ந்த மணிகள் கட்டிய தேர். (யுத்:2000)

வலமரங்கள் - கொடிகளால் சுற்றப்பட்டுள்ள மரங்கள். வலிய மரங்கள். (உ.வி) (யுத் : 678)

வலயம் - 1. தோள்வளை. வாகுவலயம். காசின் சுடரொளி வலயந் திர்ந்த சுந்தரத் தோளினுனே. (யுத் : 441) கொற்றப்பொற்றேள் பூட்டிய வலயம். (யுத் : 109)
2. வட்டம். சூந்தற்பார வலயம். (பா : 1206)
3. வளை யென்னும் படை. வெந்தொழில் வலயமும் விளங்கு சங்கமும். (ஆ : 402)
4. கங்கணம், கைவளை. மணியணி வலயம் வந்தெதிர் வேண்டினர்க் குதவுவான் விரும்பி. (பா : 1302) (ஆ : 16)
5. உலகம். எல்லை வலயங்கள் நின்னுழை என்று. (ஆ : 104)
6. ஒரு படை. மழு எழு தண்டு கோல் வலயம் நாஞ்சில். (யுத் : 3428)

வலவன் - 1. வலப்பக்கத்திற் கொண்டவன். ஆழிவலவன். (யுத் . 109)
2. சாரதி. (அ : 1055a)

வலன் - 1. வல்லபன். ஆற்றலுடையவன். ஆண்டான் வலன். (சு : 72)
2. வெற்றிச் செயல். மாண்ட மாதவத்தோன் செய்த வலனையே மனத்தின் எண்ணி. (பா : 668)

வலாய் - வல்லவனே. பேரா இடர் பேர்க்க வலாய். (ஆ:1106)

வலார் - வல்லார். படை மற்றுகும் வழங்க வலாரிலவும் பெற்றுன். (யுத் : 1740)

வலாளன் - வல்லவன். புண்டிறப்புற வலாளன் கையினுற் புதைந்து குத்த. (யுத் : 1414)

வலி - வலிமை. ஆற்றல். மௌலியின் மணி வலியின் வாங்கி. (யுத் : 871) கொற்றமும் வீரமும் வலியும் கூட்டற. (யுத் : 31) திராய் ஒரு நாள் வலி சேவகனே. (சு;4941 [பா ; பே] வலிந்து. (யுத் : 1980)

2. நோய். கொடு நோவு. வலியானே யான்பட்ட வலிகாண வாராயோ. (ஆ : 326)
3. துன்பம். கஷ்டம். வலியார் வலியே. (சு : 491) [பா : பே] (யுத் : 118)
4. வல்லிக் கொடி. பதவலிச் சதங்கை. (யுத் : 4045)
5. எள்ளற் பொருட்டு. இது நன்று வலியன்றே. (ஆ : 758)

வலிக் கடன் – வலிமையின் முறைமை. (வை.மு) வலிமைக்குரிய கடன். (அண்) வலிமை காரணமாக மேற்கொண்ட கடமை. (கலா) வலிக்கடன் வானுளோரைக் கொண்டு. (யுத் : 3589) என்தனை யெய்தாவலி செய்தாய் (யுத் : 1142)

வலி செய்தல் - 1. வலிந்து துன்புறுத்தல். அஞ்சொன் மாதரை வேறுளார் வலி செயின். (கி : 216)
2. இகல் செய்தல், வலி செய்தாய் அணையாய் இனி என தாழ் என வடரா. (யுத் : 1142)

வலித்தகைமை – வலியின் பெருமை. ஆற்றலின் தன்மை. மாருதி வலித் தகைமை பேசி. (கி : 890) (ஆ: 755)

வலித்தல் – 1. உறுதியாகக் கொள்ளுதல் அருஞ் சமங் கடத்தல் மறத்திறலரி தென்பது மனத்திடை வலித்தி. (யுத் : 1214)
2. வலிமையாற் கடத்தல். மெய்யுயிர் உலகத்தாக விதியையும் வலித்து விண்மெல் பொய்யுடல் கொண்டு செல்லும் நமனுடைத் தூதர். (யுத் : 2655)
3. பற்றியிழுத்தல். கான்ற இன்னுயிர்க் காலனும் வலித்து மெய்ம் மறந்தான். (ஆ : 521) [பா : பே] யாது தானர் வலித்த னர் வானரேசர். (யுத் : 1393)
4. சொல்லுதல். தெளியக் கூறுதல். தவம்புரிந்தனன் இவண் என வலித்தான். (பா : 481) (யுத் : 3663)
5. அழுத்துதல். (வை.மு) முதுகினில் மந்தாந் திரிய விறல் கொள் ஆயிரந் தடக்கை பரப்பி மிவலிப்ப. (பா : 500)
6. கருதுதல். தீர்மானித்தல். போர்வில்லை வலித்தானே மங்கை திருமணத்தானென்று யாம் வலித்தேம். (பா : 769) வலித்தான். (பா : 437)
7. வளைத்தல். நீ இது வலித்தி என. (ஆ : 751) போர்வில்லை வலித்தானே. (பா : 769)

8. பூட்டுதல். காலன் விருதைச் சிந்தும் வில்லின் வலித்துச் செலவிட்டான். (யுத் : 3804)

9. வலோற் காரஞ்செய்தல். மண்ணிற் செல்லுதிர் இக்கணத் தேயென வலிந்தார். (யுத் : 2575)

10. வலிமை காட்டுதல். நீலன் எறிந்ததனை வாளான் மடி வித்து வலித்து அடர்வான் தோளா சரவிசி வாளி துரந்தன ருல். (யுத் : 2334)

11. வலிமை கொண்டு. பொருந்துதல். மண்ணினும் விசும் பினும் மருங்கினும் வலித்தார். (சு : 847) [பா : பே]

12. வற்புறுத்திக் கூறுதல். (உ.வி) மண்ணிற் செல்லுதிர் இக் கணத்தேயென வலிந்தார். (யுத் : 2575)

13. வலிந்து கவர்தல். ஆதாலரலே மாயையின் வலித்தும். (ஆ : 767)

14. இறுகுதல். வெந்து உறுகியது ஆறு வலித்தது குளிர்ப் புள்ளூர. (சு : 1325)

15. துணிந்து செய்தல். மறத்துறை நமக்கென வலிக்கும் வன்மையோர். (கி : 544)

16. துன்புறுத்தல். அறம்வலித்தான். (யுத் : 1139)

வலிதருதல் - வெல்லுதல். விண்ணின் வலிதரலரிதால். (யுத்:3098)

வலிதல் - துன்புறுத்தல். மற நினைந்துமை வலிகிலாராயினும். (அ : 167)

வலிதிற் கொள்ளுதல் - வலிமையாற் கொள்ளுதல். மாற்றலர் வலிதிற் கொண்ட சின்னமும். (யுத் : 3205)

வலி தீர்த்தல் - வலிமையை அடக்குதல். மாட்டாயோ இக்காலம் வல்லோர் வலிதீர்க்க. (யுத் : 1945)

வலிந்து - 1. வருந்தி. வரம்பறு முலகினை வலிந்து. (பா : 1319)

2. கடினமாக. வலிந்து கூறுவான். (ஆ : 8`4) [பா : பே]

3. வலிமையுற்று. வடமேருவின் மேலும் வலிந்து செல்ல. (யுத் : 806)

வலிந்து மலைதல் - திறமையைக் காட்டிப் போர் செய்தல். மற்கடங் கள் வலிந்து மலைந்திட. (யுத் : 1010)

வலிநடத்தியவாள்-ஆற்றலால் செலுத்திய (வீசிய) வாள். (கி : 22)

வலி நடத்துதல் - ஆற்றலாற் செலுத்தல். வலி நடத்திய வாள். (கி : 22)

வலிய - 1. உறுத்துந்தன்மையுள்ள. வலிய புல்லில் துயின்றனை யெனவும். (அ : 1032) [பா:பே]
2. வலியுள்ளனவாயிருக்கின்றன. வேந்தன்தன் வரைத்தடந் தோளிணை வலியவோ என்றான். (ஆ : 194)

வலியர் - 1. வலிமையையுடைவர். மக்களுங் குரங்குமே வலியரா மெனின். (யுத் : 44)
2 நோயின்றி திடமாக இருப்பவர். மனையும் மக்களும் வலியரே என்றனன் மறவோன். (யுத் : 3238)

வலியராந்தகைமை - வலியராகிய தன்மை. மற்றென்னெடிங் கொருவயிற்றுதித்த உனக்கு மானுடர் வலியராந் தகைமையு முளதோ. (யுத் : 115)

வலியள் - க்ஷேமமாயிருக்கின்றாள். வண்டி... வலியள். (சு : 1302)

வலியன் - சௌக்கியமாகவுள்ளவன். மல்லுயர் தோளினான் வலியனோ என்றான். (அ : 1121) என்னுடன் பிறத்த யான் வலியன் என்றியால். (அ : 875)

வலியாட்டம் - வலிகாட்டும் ஆட்டம். வலிமையால் ஆட்டிவைத்தல் மாரனார் வலியாட்டந் தவிர்ந்தாரோ. (யுத் : 3891)

வலியாடுதல் - வலியைக்காட்டி நலிதல். மயிலே எனை நீ வலியாடுதியோ. (கி : 497)

வலியார்விதி - வலிமை பொருந்திய] விதியே. (சு : 497)

வலியாற்கொள்ளுதல் - வலிமையாற் கவர்தல். வலியாலொன்றுங் கொண்டிலன், (யுத் : 3064)

வலியான் - வலிமையையுடையவன். வானவர்க்குந் தானவர்க்கும் வலியானே. (ஆ : 326)

வலியின் வாங்குதல் - வாலாற் கரத்தால் வாங்குதல். வரக்கர் வன்கை வயிரவாள் வலியின் வாங்கி- (யுத் : 2366)

வலியுற்று - வற்புறுத்தி. நீ வலியுற்று. (யுத் : 1712) [பா : பே]

வலியூழ் – வலிமைமிக்க ஊழ்வினை. மாண்டு விழும் இன்றென்கின்ற தென்மதி வலியூழ் தூண்டுகின்றது என்றடிமலர் தொழுதவன் சொன்னான். (யுத் : 3290)

வலிபொதுங்குதல் – வலி யொடுங்குதல். புவனம் மூன்றும் நான் ஆண்டுளது ஆண்ட அப்பொரு வில் உவனிலாமையோ வலி யொதுங்கியோ உரையாய். (யுத் : 126)

வலியோர்கள் - வலிமை மிக்கவர்கள். வலியோர்கள் எளியோரைக் கொன்றனர் நுகர்ந்த பொருளிற் கடிது கொன்ற. (ஆ : 535)

வலீஇதாம் – மிக்க வலிமை யுடையதாகிய. முதல் வானவர்க்கும் வலீஇதாம் விதி. (அ : 427)

வலை – வலை. மூவர்க்காயினும் கால மென்றொரு வலை கடக்கலாகுமோ. (அ : 1138 பறிப்பரு வலை. (ஆ : 1141) ஏழுவேலை இடுவலை. (யுத் : 3275) (யுத் : 466)

வலையுற்று – வல்லையுற்று. விரைவாக அடைந்து. இருவோரையும் வலையுற்று. (யுத் : 1712)

வலோம் – வல்லோம். தரவலோ மலம். (யுத் : 675)

வவ்வி – 1. குடித்து. குமுதத்தின் நறுந் தேன்வவ்வி. (கி : 17)
2. பெற்று. இனித் தேவர் வவ்வி நுகர் பெருவேள் விக்தரிய வெலாம் வருக என்றான். (பா : 737)

வவ்விய – கொள்ளை கொண்ட. கைப்பற்றிய. வவ்விய வில்லன் போனான். (யுத : 2359)

வவ்வுதல் – 1. தூக்கிக் கொள்ளுதல். மாக நெடுங்கிரி போலியை வவ்வா. (ஆ : 1036) வவ்வினர் கொண்டு போனார். (யுத்:1417)
2. பற்றுதல். கையிற் பிடித்தல். இவ்வகை மலையினை ஏற்றெரர் அங்கையால் வவ்வினன் அரக்கன். (யுத் : 1475) வவ்விய வில்லன் போனான். (யுத் : 2359)
3. கவர்தல் கைப்பற்றுதல். வவ்வலாற்றான். (ஆ:630) பூமாண் குழலாள்தனை வவ்வுதி. (ஆ : 712) எவ்வுலகங்களும் இமைப்பினெய்துவர் வவ்வுவர் அவ்வழி மகிழ்ந்த யாவையும். (கி : 225) (யுத் : 2359)
4. பிடுங்குதல். வாங்கி சிரத்தின் மற்றை வயிரவான் கோட்டை வவ்வி வீங்கிய விசையின் நீலன் அரக்கன் மேற் செல்ல விட்டான். (யுத் : 1900)

வழக்கம் - பிரயோகிக்கை. தொடுப்பு. (அண்) வேதநாயகன் வெங்கணை வழக்கத்தின் மிகுதியை ஓதுகின்றதென். (யுத்:1542)

வழக்கிற்பொய்த்துளோன்-பொய்வழக்குத் தொடுத்தவன். வழக்கிற் பொய்த்துளோன் புகும் வெந்துயர் நரகத்து வீழ்க யானுமே. (அ : 896)

வழக்கு - 1. உலகியல்பு. தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்தம் மருண்ட தன்மையை மாற்றுவர் எனுமிது வழக்கே. (பா : 905)

2. முறைமை. தெய்வ மரணம் என் தாதை பெற்றது என் வயின் வழக்கன்றுமோ. (யுத் : 422) வரங்கொண்டான் இனி மறுத்தல் வழக்கன்று. (யுத் : 1579)

3. பேச்சு வழக்கு. உயர்ந்துலக மோதும் வழக்கினும் மதிக்க வினும் மரபின் நாடி. (ஆ : 158)

4. நிகழ்ந்த முறை. செருவின் வழக்கு. (யுத் : 1056)

5. வியவகார தருமம். சான்றுக்குச் சான்றில்லை வழக்கால். (யுத் : 424)

வழக்குதல் - வழங்கச் செய்தல். வெளிப்படச் செய்தல். வகைப் பிறை நிறத்தெயிறுடைப் பொறி வழக்கி. (யுத் : 851)

வழங்குதல் - 1. (வழங்கல்) பயன் கருதாது கொடுத்தல்- வையம் ஓர் ஏழும் ஆருயிரோடு வழங்கும் மெய்யன். (அ : 244)

2. தருதல். கொடுத்தல். வன்றிறல் இருகரம் வழங்க மாந்தியே. (யுத் : 1325) (ஆ : 937)

3. செலுத்துதல். பிரயோகித்தல். முற்றுதன தேவர் முரட்படை தாம் மற்றும் வழங்கவலாரிலவும் பெற்றுன். (யுத் : 1740)

4. செல்லுதல். புனல் வழங்காமையால். (அ : 815)

5. நிலைபெறுதல். சுடர்புக்கு வழங்கலின்றி. (ஆ : 698)

6. சொல்லுதல். - முன்சொல் வழங்குதியால். (யுத் . 1709)

வழங்குபாடல் - பாடுகின்றபாடல். வள்விசிக் கருவிபம்பவயின் வயின் வழங்கு பாடல். (பா : 39)

வழாத - தவறுதவை. வல்லையேல் இனி ஓதுவி நீதியின் வழாத. (யுத் : 158)

வழாமை - தவறுமை. சிவிகையின் வீங்குதோள் மாந்தர் காறும் வரிசையின் வழாமலே. (அ ; 1077)

வழி – 1. இடம். அவ்வழித்து அன்றெனின்... எவ்வழித்து. (சு : 589) எவ்வழி உலகமும். (சு : 980)
2. செல்லும்வழி. வெவ்வழி எரிபுக. (சு : 980)
3. பொழுது. அவ்வழி அவ்வுரைகேட்ட ஆண்டகை. (சு : 980)
4. கால்வழி. சந்ததி. வழிகெடவரினும். (யுத் : 1647)
5. மரபு. வாள்வேந்தன் வழிவந்நீர். (யுத் : 1574)

வழிக்கடன்வகுத்தி- சந்ததியினர் செய்யவேண்டிய ஈமக்கடன்களை முறைப்படிசெய்வாய். வாழ்ந்த நீ இவனுக்கேற்ற வழிக்கடன் வகுத்தி என்ன. (யுத் : 3885) [பா:பே]

வழிக்கும் – பெருக்கும். வழிக்கும் கண்ணீர் அமுவம். (யுத் : 5)

வழிக்கொள்ளல் – 1. புறப்படுதல். பிரயாணஞ்செய்தல். தேர்மிசை வந்த மாதவரோடும் வழிக்கொண்டேகினன். (பா . 279)
2. வழிநடத்தலை மேற்கொள்ளுதல். மன்னன் இன்னுயிர் வழிக்கொண்டாலென. (பா : 337) வழிக்கொண்டு முன்னினர். (பா : 866)
3. போய் வருவாய் என்று விடை தருதல். அயற்குப் பூசனை வரன்முறை இயற்றி நீவழிக் கொள்வாயென்றான். (யுத் : 16)
4. வசப்படுத்தல். மறிந்து போரிடை வழிக்கொள்வான்... வான் சிலையினை எடுத்தான். (சு : 1025)
5. (பின்) செல்லுதல். மஞ்சனை வைதுபின் வழிக்கொள்வாய் எனா. (சு : 505) வழிக் கொளீரே. (யுத் : 2989)
6. செல்லுதல். நும்தம் மலைதொறும் வழிக் கொளீரே. (யுத் : 2889)
7. வழியாகக் கொள்ளல். அத்திசை வழிக்கொண்டு ஏகி. (ஆ : 1195)

வழிக்கொண்டு முன்னினர் – வழியைப்பற்றி நடந்தனர். (பா : 866)

வழிக்கொளா முன்னம்-பயணமாகாத முன்னமே. சுடர்முடி துறந்து தூய மண்ணெனும் திருவை நீங்கி வழிக்கொளா முன்னம். (அ : 269)

வழிகை – 1. வெளிப்படுத்தல். வெவ்வழி ஆசனம். (யுத் : 1)
2. திரளுதல். செவ்வழிச் செம்மணத் தாணம். (யுத் ; 17)

வழிச்செல்வார் – வழியில் செல்லுவார். மந்தரை கூற்றமும் வழிச் செல்வாரொடு முந்தியே போதல் கண்டு. (அ ; 987)

வழித்தல் - வடித்தல். பெருகுதல். வழிக்குங் கண்ணீர். (யுத் : 5)

வழிதல் - வடிதல். வழிந்த நாகத்தின் வன்றெளி வாளெயிற் றிழிந்த கார்விடம். (ஆ : 296)

வழிதிருத்தல் - வழிகாட்டல். வழிவிடல். செவ்வழி தென்றலாற்கு திருத்தினீர் நீர் கொல் என்ன. (ஆ : 725)

வழிப்பகை - தொடர்ந்து வந்த பகை. வழிப்பகையுடையவன் உம்பால். (பா . 1380)

வழிபடர்தல் - (ஒருவர்) வசத்தில் அடைதல். ஆதீனத்தில் வருதல். இவன் வழிப்படரும் நங்கை. (யுத் : 1653)

வழிபாடு - பணிவிடை. மாதவர்க்கு வழிபாடிழைத்து அரும் போத முற்றி. (அ : 319)

வழி மாற்றுதல் - வழியைத் தடுத்தல். மகளிர் குழாத்தினுல் வலங் கொள்வீதி நெடுவழி மாற்றினுள். (கி : 609)

வழியலாவழி - நியாயத்திற்கு மாருன வழி. கெட்ட வழி. அநீதி. வழியலா வழிமேற் செல்வான். (யுத் : 923) வழியலா வழிமே லோடி நஞ்சினுங் கொடியராகி நவைசெயற்குரிய நீரார். (சு:926)

வழியின் மேல் வைத்த கண்ணர் - வழியின் மேல் வைத்த பார்வை யினையுடையவராய். (சு : 209)

வழியின் வந்த வருத்தம் - வழிநடந்து வந்தமையால் உளதாய துன்பம். வழியின் வந்த வருத்தத்தை வீட்டினர். (அ : 631)

வழியுடைத் தாய்வரும் மரபு - வழி வழியாய் வருகின்ற குலத்து முறைமை. வழியுடைத் தாய்வரு மரபை மாய்த்து ஒரு பழி யுடைத் தாக்கினன். (அ : 866)

வழியோர் - உறவினர். எவ்வழி யோர்களும் இரங்கி ஏங்கினுர். (யுத் : 1317)

வழிவருதருமம் - வழிவழியாக மேற்கொள்ளப்பட்டு வந்த அறநெறி. வழிவருதருமத்தை மறந்து மற்றெரு பழிவரு நெறிபடர் பதகனுகை யான். (அ : 900)

வழி வழி - வழியில். மீனுய் வேலையிலுற்ருர் சிலர் சிலர் பசுவாய் வழிவழி மேய்வுற்ருர். (சி : 969)

வழிவிலக்கல் - வழிமறித்தல். மின்னில வில்லினுளை வழியெதிர் விலக்கி நின்ருள். (கி : 657)

வழீஇவந்து - நழுவிவந்து. சீதைபோகின்ருள் கூந்தல் வழீஇ வந்து புவனஞ்சேர்ந்த கோதைபோற்கிடந்த கோதாவரி. (கி : 917)

வழு - 1, தவறுதல். தவறு. வழுவிலா வாய்மை மைந்தர். (ஆ : 227) வழுவிலாவரம். (யுத் : 1874)

2. துன்பம். வழுவினியுளதென்றிந்த மாநிலக் கிழத்திக் கென்ருன். (யுத் : 4273)

3. குறைவு. (அண்) வாளிக்குழு வழுவில் புட்டில். (ஆ : 172) வழுவிலன். (யுத் : 26681

வழுக்குதல் - (சேற்றில்) வழுக்குதல். இழுக்கலில் வழுக்க வழுக்கி வீழ்ந்து. (அ : 486)

வழுத்தி-துதித்து. தெய்வவான் மரகதமலையினை வழுத்தி.(பா:191)

வழுத்துஞ்சொல் - தோத்திரஞ்செய்யும் சொல். நொய்திற்ருேன் றினன் வழுத்துஞ் சொல்லான். (யுத் : 598)

வழுத்துதல் - 1. சொல்லுதல். வல்லவை வழுத்துகேனு· (ஆ : 632)

2. துதித்தல். கொண்டாடுதல். புகழ்தல். இளையோனை வழுத்தி னர். (அ : 530) வழுத்தரிய மாருதி. (கி : 884)

வழுத்துற - துதிக்க. நான்மறைச் செல்வர்கள் வழுத்துறத் தேர் வந்தேறினன். (பா . 1314) [பா:பே]

வழுவலில் மறை - பழுதற்றவேதம். வழுவலில் மறையும் உன்னுல் வாழ்ந்தவாகும். (யுத் : 2678)

வழுவிய - நீங்கிய. வழுவிய இன்னுயிர் வந்த மன்னனும். (ஆ : 196)

வழுவிலா வாய்மை மைந்தர் - தவறுதலில்லாத மெய்ம் மொழியை யுடைய குமாரர்கள். (ஆ : 227)

வழுவு - குறைவு. (வை.மு) வாளிக்குழு வழுவு இல் புட்டில். (அ : 172)

வழுவுதல் - 1. தவறுதல். நீங்குதல். வழுவினை யாமென மனக்கொ டேங்கினேன். (ஆ : 1122) வழுவுற்ற. (அ : 422)

2. குறைதல். (அண்) வாளிக் குழு வழுவில் புட்டில். (அ:172)

3. நழுவுதல். வழீஇவந்து. (கி : 915)

4. முரண்படல். நீதியின் வழாத. (யுத் : 158)
5. கெடுதல். முருகின் செவ்வி வழுவுறப் பின்னி (யுத் : 4264)

வழுவுற்ற சீற்றம் - முறை வழுவிய கோபம். (அ : 422)

வழை - சுரபுன்னை. வழை முதல் மரனெலாம் மடிப்ப. (பா : 376) (கி : 477)

வழைத்தரு - குங்கும மரம். (வை.மு) சுரபுன்னை. (அண்) உயர்ந்த வழைத்தரு எடுத்தருகு வந்தனர் அநேகர். (யுத் : 701)

வள் - 1. கூர்மை. வள்ளுகிர்த் தடக்கை. (பா : 575) வள்ளுகிராற் பிளவாக்கின. (யுத் : 987)
2. வளவிய. வள்ளுறை கழித்து. (அ : 57)
3. வலிமை. (உ.வி) (அ : 57) வள் வார்த்தூரியம். (ஆ . 475)
4. வாளின் உறை. வள்ளுறு வயிர வாள் அரசில் வையகம். (அ : 939)
5. தோல். வள்வார் முரசம் மதிர் மாநகர். (பா : 165)

வள்வார் முரசம்-தோலால் இழுத்துக் கட்டப்பட்ட முரசம். (பா:165)

வள்விசி கருவி - வாராற் கட்டப்பட்ட முழவம். அவ்வழி கறங்குவ வள்விசி கருவி. (பா : 140)

வள்ளப்பட்டன - தோணிகள் பொருந்திய. (வை.மு) வள்ளத்தில் வார்த்துக் கொடுத்த தொப்ப. (அண்) (சு : 957)

வள்ளப் பெருவெள்ளத் தெறுழ்வலி யாரினும் வலியான் - வளம் மிக்க பெருவெள்ளம் போன்ற மிக்க வலியவரினும் வலியவனான அனுமன். (யுத் : 1147)

வள்ளம் - 1. கிண்ணம். நீத்த திந்தேன் வள்ளங்கள் பலவுங் கண்டார். (பா : 948)
2. புணை தோணி. வள்ளச் சேக்கைக் கரியவன். (பா : 704)
3. வளம். வள்ளத்தாரகலம். (பா : 1105)

வள்ளல் - 1. கருணையான். (இராமன்) வரந்தருவள்ளால். (கி : 357) (யுத் : 4082)
2. வரையாது கொடுப்போர். உள்ளது மருதுதவு வள்ளல். (பா : 920)

வள்ளற் சேக்கை - ஆதிசேஷனாகிய படுக்கை. (பா . 383) [பா:பே]

வள்ளற்றனம் – வள்ளல் தன்மை. கள்ளக் கைகேசிக்கே யுதவிப் புகழ்கைக் கொண்ட வள்ளற்றனம். (அ : 357)

வள்ளால் – வள்ளலே. (கி : 957)

வள்ளி - பூங்கொடி. கொடி. வள்ளி நுண்ணிடை மாமலராள். (அ : 636) (சு : 525) (கி : 971)

வள்ளி நுண்ணிடை – வல்லிபோலும் நுண்ணிய இடை. (அ : 636)

வள்ளியமருங்குல் – கொடியை ஒத்த (அழகிய) இடை. வள்ளிய மருங்குற் செவ்வாய் மாதர். (யுத் : 3201)

வள்ளியர் – வள்ளன்மையுடையோர். மேலோர் வள்ளியராக வழங்குவதல்லால் எள்ளுவ என்சில. (பா : 447)

வள்ளியராயோர் – வண்மையுடையோர். வள்ளியராயோர் செல்வம் மன்னுயிர்க் குதவுமன்றே. (யுத் : 643)

வள்ளியோர் – வள்ளன்மை யுடையோர். வள்ளியோர்கள் நின்னின் யார் சொல்லற்பாலார். (கி : 381)

வள்ளியோன் – வரையாது அருளுந் தன்மையன். (இராமபிரான்) வந்தது சேனை வெள்ளம் வள்ளியோன் மருங்கு.] (ஆ : 423) வள்ளியோய். (ஆ : 1115)

வள்ளுகிர் – வள் உகிர். கூரிய நகம். வள்ளுகிர்த் தளிர்க்கை. (பா : 575) வள்ளுகிர் ஊன்றிக் கிளா. (யுத் : 1401) வள்ளுகிர்ப் புலி. (அ : 1002) (யுத் : 987) வாந்தரு வள்ளல் வெள்ளை வள்ளுகிர். (யுத் : 282)

வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ – கூர்மையான நகங்களுடையனவும் தளிர் போன்று மெல்லியவுமான கை விரல்கள் நோவுமாறு. வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ மாடகம் பற்றி. (பா : 675)

வள்ளுகிர்ப்புலி – வலிமிக்க கூரிய நகத்தையுடைய புலி. வள்ளுகிர்ப் புலியெலாம் ஒரு வழிப் புகுந்த போலவே. (அ : 1002)

வள்ளுவர் – யானை மேலிருந்து முரசறைந்து அரசன் கட்டளைகளை வெளிப்படுத்துங் குலத்தார். என்றலும் வள்ளுவர் யானை மீமிசை நன் பறை யறைந்தனர். (பா : 294)

வள்ளுவன் – யானை மேலிருந்து பறை யறைவிப்போன். வள்ளுவன் ...சாம்பவன் திரிந்தெனத் திரிந்து சாற்றினான். (பா ; 823)

வள்ளுறு வயிர வாள் - 1. கூர்மையான திண்ணிய வாட்படை. வள்ளுறு வயிரவாள் மன்னன். (பா : 231)
2. உறையில் பொருந்திய கூரிய வாள். வள்ளுறு வயிர வாள் அரசில் வையகம். (அ : 940)

வள்ளுறை - வள் உறை. கூர்மை உறையும். (கலா) செறிந்த உறை. (அண்) தோலாற் செய்த உறை (வை.மு) வள்ளுறை கழித்த வாள் போல் வரியுற வயங்கு கண்ணுள். (பா : 1066)

வள்ளி - 1. உலக்கைப்பாட்டு சூளிகை மாடம் நீத்தன மங்கல வள்ளியே. (அ : 817)
2. ஒரு கொடி. கொடி வள்ளி. (கி : 26) வள்ளி கத்திரிகை வாம மயிர் வினைக் கருவி யென்ன. (கி : 796)

வள்ளி மாக்கள் - செல்வர். மங்கல பாடகருமாம். வள்ளி மாக்கள் நிதியும் கொண்டேகவே. (அ : 824) [பா : பே]

வளப்பரு மருதவைப்பு - வளம்பரு மருதவைப்பு. வளப்பத்தால் மிகுந்த மருதநிலம். (பா : 384)

வளம் - 1. உணவு வகை. (அக்கார அடிசில்) கம்பன் வாரமா மிராம காதை வளமுறத் திருத்தினனே. (பாயி : 12)
2. விளை பொருளாகிய பல பண்டங்கள். நிலஞ் சுரக்கும் நிறை வளம். (பா : 69)
3. செல்வம். வஞ்சவினை செய்து நெடுமன்றில் வளமுண்டு கரி பொய்க்கும் மறமார் நெஞ்ச முடையோர்கள். (யுத் : 3402)
4. வளப்பம். வளப்பரு மருதவைப்பு அழித்து மாற்றினுள். (பா : 384) வளமை (யுத் : 64)

வளமைகூறப் பேசுதல் - வளம்படப் பேசுவது. சிறப்புமிகப் பேசுதல். வளமை கூரப் பேசுவது மானம். (யுத் : 64)

வளர்கின்ற பருவ நாள் - வளர்கின்ற பிராய முடைய நாள். வான் பெருவேள்வி காக்க வளர்கின்ற பருவநாளில் தான் பிரிந்தேகக் கண்ட தயரதன் தன்னை யொத்தான். (யுத் : 2904)

வளர் செக்கர் - விரிந்த செவ்வானம். வளர் செக்கர்ப்பைவாயந் திப்பட வரவே என்னு. (பா : 629)

வளர்த்தல் - 1. வளரச்செய்தல், கண்வளரச் செய்தல். மாலுண்ட நளினப்பள்ளி. (பா : 44)

2. காத்தல். பேணுதல். வாய்மை வளர்ப்பான் வரம் நல்கி. (அ : 228) வயங்கெரி வளர்க்கலெ வைகவல்லையே. (அ : 846) [பா : பே] மன்னுயிரெல்லாம் தானே வருவித்து வளர்க்கும் மாயன். (யுத் : 420)

3. படுக்கவிடுதல். பூமியின் வளர்த்தும். (யுத் : 2175) வளர்த்து. (யுத் : 3205)

வளர்த்திய – கிடத்திய. (பா : 44)

வளர்தல் கண் வளர்தல். மாயன் வந்தான் இனி வளர்வான் என்று கருதி வருந்தென்றல். (யுத் : 4)

2. வளர்ச்சியடைதல். வான்பொரு வேள்வி காக்க வளர்கின்ற பருவநாளில். (சு : 2904)

3. விரிதல். வளர் செக்கர். (பா : 629)

4. வளம் பெற்று வாழ்தல். (அண்) நல்ல உருவொளியாய் நாறு வளர்க நீ. (யுத் : 303)

வளர்பிறை - வளர்பிறைச் சந்திரன். வரிகொள் வெஞ்சிலை வளர் பிறை யாமென வாங்கி. (யுத் : 552)

வளரியல்வடு - வளர்ந்த தன்மையுடைய புறப்புண் வடு. (யுத் : 3873)

வளவரசு–வளப்பம் பொருந்திய அரசாட்சி. வளவர செய்தி மற்றை வானர வீரர் யாருங் கிளைஞரின் உதவ. (கி : 442)

வளவி - தழுவி. கலந்து. வளைத்தோள் வளவியுண்டவன். (கி : 493)

வளவினம் – வண்மைக்குணமுடையவரானேம். இரவிதன் குலத்துக் கேற்ற வளவினம். (யுத் : 3540)

வளவுதல் - தழுவுதல். கலத்தல். (கி : 493)

வளன் – வளப்பம். வளனணிகலனும் தூசும். (யுத் : 4347)

வளாகம் – இடம். எழுதிரை வளாகம். (கி : 378)

வளாகவைப்பு – இடமாகிய பூமி. தளிர்கடல் வளாகவைப்பிற் காவன் மூன்றுலக மோதும் கடவுண் மாமரத்தைக் கண்டான். (யுத் : 2703)

வளாவுதல் – சூழ்தல். மகோததி வளாவும் பூதலம். (யுத் : 3647)

வளி – காற்று. இடியொடு மடங்கலும் வளியும் ஏங்கிட. (பா : 378)

வளை – 1. புற்று. அசனிகேட்ட வளையுறை அரவம். (யுத் : 2236)
2. சக்கரம். பணிலமும் வளையுந் தாங்குநீர். (சு : 532) சேற்ற வளை. (ஆ : 345) முரலும் வெள்வளை. (யுத் : 586)
3. சங்கு. வளை சொரிமுத்தம். (யுத் : 230)
4. சங்கம். வளையொலி. (பா : 153) (சு : 940)
5. கைவளை. வளைகள் காந்தளிற் பெய்தன அனைய கை. (அ : 765)

வளை எஃகு - வட்ட வடிவான சக்கரப்படை. மாயோன் வளை எஃகின் வரவுங்கண்டேன். (யுத் : 1241)

வளை எயிற்றவர் - அரக்கர். வளை எயிற்றவர்களோடும் வரும் வளையாட்டென்றுலும். (ஆ : 291)

வளைக்கலாத - வளைக்க முடியாத. வளைக்கலாத விற்கையாளி வள்ளல். (பா : 799)

வளைகழுத்து - வளைந்த கழுத்து. ஆடல் தீர்ந்தன வளை கழுத்தற்றன. (யுத் : 1541)

வளைகள் – கைவளைகள். வளைகள் காந்தளிற் பெய்தன அனைய கை (அ ; 765)

வளைகுளப்பு - வளைந்த காற்குளம்பு. குளம்பு என்பது குளப்பு என நின்றது. வளைகுளப்பின மணிநிற வாசியே. (சு : 1205)

வளைத்தல் – சூழ்தல். சில வளைத்துலவுந் தேரோன். (சு : 1272)

வளைதரும் கருங்கடல் – இலங்கையை வளைந்துள்ள கரியகடல். (யுத் : 622)

வளைதல் – 1. கோணுதல். மாறுபடல். வளையாவரும் நன்னெறி. (அ : 422)
2. வணங்குதல். வளைந்து நிற்றல். நீடுமேல் முட்டுமென்று உருவொடு வளைந்த மூர்த்தியான். (சு : 588)
3. சூழ்ந்து கொள்ளல். மகரமறி கடலின் வளையும் வயநிருதர். (யுத் : 3413)

வளை திருத்துபு – கைவளையைத் திருத்தும்போது. ஐயனை அகத்து வடிவே அல புறத்தும் கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்த்தாள். (பா : 1238)

வளை தெரிதல் – (சங்க) வளையல்களை ஆராய்ந்து அணிதல். பஞ்சிளை யணிவார் பால்வளை தெரிவார். (அ : 244)

வளைப்பு - முற்றுகை. வளைத்தல். (யுத் : 4059)

வளைப்புண்ணல் - சூழப்படுதல். ஊர் வளைப்புண்டது பாராய், (ஆ : 437)

வளைப்புறல் - முற்றுகை செய்தல். சேனையை வளைப்புறப் போக்கி, (யுத் : 4059)

வளைப்புனல் - கடல். வளைப்புனலுள் வாழ்மீன குலம். (யுத் . 3399)

வளைமுகம் - வளைந்த முகம். வளை முகத்தனவாசி. (அ : 804)

வளையம் - அடிப்பகுதி. கிழங்கு. (கலா) கொழுத்தடந் தாமரை வளையம் வன்கையில் வாங்கின வானரம். (யுத் : 968)

வளையா நேமியன் – கோணுத ஆஞ்ஞா சக்கரத்தையுடைய தசரதன். (கலா) அழியாத ஒற்றைச் சக்கரத்தையுடைய சூரியன். (வை.மு) வளையா நேமியன் வன்மை சால்வலிக்கு இளையானே. (கி : 979)

வளையின் நாகு - சங்கின் பெண். பெண் சங்குகள். கிளரிள வளையின் நாகுகள் உமிழ்வன நகை புரை தாளம். (பா : 80)

வளையுடைப் புணரி - சங்குகளையுடைய கடல். வளையுடைப் புணரி சூழ் மகிதலத் திருவெலாம் இளையவற் குதவி. (கி : 86)

வளையும் - வளைந்து கொண்ட. வளையும் வயநிருதர், (யுத் : 3413)

வளையுறை அரவம் - புற்றிலுள்ள பாம்பு. (யுத் : 2236)

வளையெஃகு - வளை எஃகு பார்க்க.

வளை யெயிற் றரக்கன் - வளைந்த கோர தந்தங்களையுடைய இராவணன். வளை யெயிற் றரக்கன் வெம் போர்க்கினி யெதிர் வருவதுண்டோ. (யுத் : 952) வளை யெயிற்றரக்கிமார். (யுத் : 2645)

வளை யெயிற் றவர்கள் - வளைந்த கோர தந்தங்களையுடைய அரக்கர். (ஆ : 291)

வளையொலி – 1. சங்குகளின் முழக்கம். (பா : 15)
2. வளையல்களின் ஆரவாரம். வளையொலி முன்கை யாள். (யுத் : 3998)

வளை வரிசிலை - வளைக்கப்படுகின்ற கட்டமைந்த வில். குறைத் தலைக் குழாம் கைவளை வரிசிலை கடுப்பிற் கைவிடா எய்வன எனைப்பல இரதவீரரே. (யுத் : 1792) (ஆ : 346)

வளைவாய்ப்பல் - வக்கிர தந்தம். வளைவாய்ப் பல்லொடும் விளிக்குஞ் சொல்லொடும் உயிரொடுந் துகைத்தான். (சு : 843)

வளைவித்து - வளைத்து. சிலையினை வளைவித்து. (யுத் : 4214)

வளைவிற்றுய் - வளை வினையுடையதாய். வட்ட மோரோசனை வளை விற்றாய். (அ : 539)

வற்கம் - வர்க்கம். தொகுதி. வற்மாயின் மாப்படை யொடும். (யுத் : 1055)

வற்கலை - மரவுரி. மாயாப்பழியாள்தர வற்கலை ஏந்தி வந்தார் (அ : 439) வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை. (அ : 1021)

வற்புறுத்தல். - 1. உறுதிப்படமொழிதல். கற்புடையாள்தனை வற் புறுத்தி மனங்கொளத் தேற்றுவான். (அ : 311)
2. ஆறுதல் கூறுதல். தைரியஞ்சொல்லுதல். மன்னர் மன்னனை வற்புறுத்தாதுடன் துன்னுகானந் தொடரத் துணிவதோ. (அ : 815)

வற்றுநீர் - வற்றாத நீர்ப்பெருக்கு. கண்ணில் வற்றுநீர் கொண்ட நெடுந்தேர்ப் பாகன். (அ : 587)

வற்றி வற்றி - பெரிதும்வற்றி. பெருமை தீர்ந்த மலைக்குலம் வற்றி வற்றிக்குறைந்தன. (யுத் : 1399)

வற்று - 1. வல்லது. நெல்லொக்கும் புல்லென்றாலும் நேருரைத் தாகவற்றே. (ஆ : 633)
2. நிறைவேறும் வன்மையுடையது. அது வாரவற்றுகுமோ. (யுத் : 310)

வற்றுதல் - வற்றிப்போதல். வற்றிய வேலையென்ன இலங்கையூர் வறளிற்றுக. (யுத் : 3607) வாழிவற்று மறிகடலும் மண்ணிம் (யுத் : 2)

வறத்தல் – 1. வற்றச்செய்தல். ஆழிவறக்க முகக்க அமைந்த முறை. (ஆ:1082) பேருவகைக்கடல் பெட்பற வறக்கும் மாவடவைக்கனல் ஆனதால். (அ : 91)
2. வற்றுதல். புனல் வறந்தகான யாறுகள். (அ : 755)
3. வெறிதாதல். யாருமின்றி வறந்தது. (யுத் : 1475)

வறந்தன – வரண்டு போயின. அசும்பற வறந்தன வானயாறெலாம். (யுத் : 578)

வறந்து – வற்றி. (யுத் : 108)

வறள் – வரண்ட தன்மை. அலைகடல் வறளாக. (யுத் : 1552)

வறள்படல் – வற்றுதல். பெருவலியரக்கர் கூடி நின்றவக் குறைகடல் வறள்படக் குறைத்தான். (ஆ : 519)

வறளல் - வற்றுதல். வாயினும் பல்லினும் புனல் வறந்துலறினர். (யுத் : 108)

வறளாக – வரண்ட தாகும்படி. அலைகடல் வறளாக உண்ணகிற்பன. (யுத் : 1552)

வறளாதல் – வரண்டதாதல். (யுத் ; 1552)

வறளிற்றுக - வறண்டு போக. இலங்கையூர் வறளிற்றுக. (யுத் : 3607)

வறளுதல் - வறண்டு போதல். வறளிற்றுக. (யுத் : 3607)

வறிஞன் – ஏழை. வையக முழுவதும் வறிஞன் ஓம்புமோர் செய்யெனக் காத்து. (பா : 179) [பா : பே]

வறிது - 1. வீண். வீணே. வறிது விழ்த்தனே வாழ்க்கையை. (சு : 1134) வாழ்க்கை நாள் வறிது விழ்ப்பான். (ஆ : 894) இளமையும் வறிதே ஏக. (யுத் : 1366)
2. வெறுமனே. படைக்கலமின்றி. ஏதும் மறியான் வறி தேகினனல். (யுத் : 1722)

வறியவர் – வறுமைப்பட்டவர். மண்ணிறை வேந்தன் செல்வம் வறியவர் முகந்துகொண்டார். (பா : 788) (யுத் : 638) (யுத் : 1109)

வறியள் - கையில் ஒன்றும் இல்லாதவள். உறுசுடர்ச் சூடைக் காசுக்கரசினை உயிரெப்பானுக் கறிகுறியாக விட்டாள் ஆதலான் வறியள் அந்தோ. (சு ; 735)

வறியன் ஓம்புமோர் செய் — ஒர் ஏழைகாக்கின்ற ஒரேவயல். (பா : 179)

வறியன அணுகும் நாவாய் — வறியனவாய்த் திரும்புகின்ற ஓடங்கள். சேனை எறிகடன் முகந்த ஏகி அக்கரை அடைய வீசி வறியன அணுகும் நாவாய். (அ : 1049)

வறியன வழங்குதல் - பயனில்லாத வற்றைச் சொல்லுதல். மனக் கொடன்றியும் வறியன வழங்கினை. (யுத் : 115)

வறியோர் - 1. அறிவிலார்- கெடுவார்கள்... வறியோர். (யுத்:2206)
2. ஏழைகள். வறியோர் தனமே என்னும். (அ : 326)

வறியோர் தனம் — ஏழைகட்குச் செல்வமாக இருப்பவன். (அ:326)

வறுத்தல் — சூடு பெற வறுத்தல். வறுத்துவித்திய அனையன வல்ல யிற் பரல்கள். (அ : 729)

வறுத்து வித்திய அனையன — வறுத்துப் பரப்பிவைத்தன வற்றை ஒத்து. (அ : 729)

வறுநிலம் — நீரற்ற நிலம். (யுத் : 3415) [பா : பே ]

வறுமை—1. இல்லாமை. தரித்திரம். தூண்டும் இன்னலும் வறுமையும் தொடர்தர. (அ : 169)
2. நுகரப்படுவன யாவும் இன்மை. இம்மையே வறுமை எய்தி. (கி : 622)
3. எளிமை. சேவகன் தனியே பாரிற் செல்கின்ற வறுமையைப் பார்த்தனன் பரிந்தான். (யுத் : 1777) (அ : 581)

வறுமை நோய் — தரித்திரமாகிய வியாதி. மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய் அண்ணல். (பா : 419)

வறுமையின் முற்றினோர் - வறுமையின் முதிர்ந்தவர்கள். முன் பிழைத்த வறுமையின் முற்றினோர் பொன் பிழைக்கப் பொதிந் தனர் போலவே. (அ : 308)

வறை — வறுத்தல். வறைக்கமைந்தன வூன். (யுத் : 1277)

வறைக்கமைந்த - வறுத்தல் பொருந்திய. (யுத் : 1277)

வன் — வலிமை. வன்படைத்த வரிசிலை. (யுத் : 1030)

வன்கட்புலம் - வன் கண்மை. ஈந்து வைத்து இல்லையென்ற வன் கட்புலம் தாங்கிய மன்னவன். (அ : 424)

வன்கண் - கொடுமை. கிளர்வான் இன்றேயுடைய மாட்டேரு கிலன்றே வன்கண் என்கண் மைந்தா. (அ : 369) வன்கண் அரக்கர். (யுத் : 1008)

வன்கண்மை - கொடுமை. மகனை நீத்த வன்கண்மை எந்தை தீர்ந்தான். (அ : 605)

வன்கணர் - கொடியவர். தின்ற வன்கணர். (யுத் : 722)

வன்கணன் - கொடுங்கண்ணினன். (இராவணன்) திருதரை வன் கணன் ஓட நோக்கி. (யுத் : 1052)

வன்கணுலோபர் - வன்கண்மையையுடைய உலோபிகள். வன் கண் உலோபர் கடைத்தலைப்புலர்ந்து நிற்கும் பரிசிலர். (அ : 815)

வன்காற்று - வலியகாற்று. கொடியகாற்று. வன்காற்றின் நாயகன். (யுத் : 3624) கழலுன் வன்காற்றெனும் விசையோர். (அ:3265)

வன்கேகயர் கோன்மங்கை - வன்னெஞ்சுடைய வன்கேகயர்கோன் மகள். வன்கேகயர் கோன்மங்கை துறந்தான் துயரந்தன்னை. (அ : 331)

வன்கைவேல் - வலியகைவேல். (அ : 200)

வன்சிறைப்பறவையூரும்வானவன் - திருமால். (யுத் : 619)

வன்தறுகண்ணினள் - கொடியதறுகண்மையுடையவள். வன்தறு கண்ணினள் வயிர்த்துக்கூறுவாள். (ஆ . 825)

வன்பகை - 1. கடின இருதயமுள்ளபகைவன். வன்பகை நிற்க. (யுத் : 880)

2- வலியபகைமை. வன்பகை மனிதனின்வைத்த அன்பினை. (யுத் : 311)

வன்பகைப்புலன்-வலிய பகையாகிய ஐந்துபுலன்கள். என்பு தோலு டையார்க்கும் அஃதிலார்க்கும் வன்பகைப்புலன் மாசற மாய்ப்பதென். (அ : 113(

வன்படை - வலியபடை. ஆழிவன்படை. (யுத் : 1825)

வன்பழி - கொடிய பழிச்சொல். என்பால் வன்பழி தருதிபோலம். (யுத் : 908)

வன்பு - வலிமை. வன்படைத்த வரிசிலை. (யுத் : 1030)

வன்புலக்கரி - வன்புஉலக்கரி, வலியதிரண்டகல்போன்ற யானை. (உலம் - திரண்டகல்) திசையின்வாழ் வன்புலக்கரி மடிந்தது கொலோ. (கி : 180)

வன்புலக்கன்மன மதியில் வஞ்சனேன் - கொடிய பொறிகளையும் கல் போலும் மனத்தினையுமுடைய வஞ்சகனாகிய யான். (அ : 559)

வன்புலங் கடத்தல் - பகைவனிடத்துச் சென்று வெல்லுதல். வன் புலங்கடந்து மீளும் தம்பி. (யுத் : 313)

வன்புலம் - 1. குறிஞ்சியும் முல்லையும். (கலா)(உ.வி)
2. கொடிய புலன்கள். (கலா) கொடிய பொறிகள். (அண்) புலம் இங்கு கொடுஞ் செய்தியைக் கூறவேண்டிய வாய் என்னலாம். புலம் பொறிக்கு இலக்கணை. (வை.மு) வன்புலக் கன்மன மதியில் வஞ்சனேன். (அ : 559)

வன்புலித் போத்து - வலிய புலிப் போத்து. காத்தோர் மரம் விசுறு கைக்கதம் வன்போத்தோர் புலிபோற் பனசன் புரள. (யுத் : 234)

வன்மம் - வலிமை. துயரென்ப தோர் வன்மக் கடல். (பா:1351) உன்மத்தன் வயிர மார்பினுருமொத்த கரஞ் சென்றுற்ற வன்மத்தைக் கண்டும். (யுத் : 1904)

வன்மாயக் கைகேசி - வலிய வஞ்சனையுடைய கைகேசி. வன் மாயக்கைகேசி வரத்தால் என்தன்னுயிரை முன்மாய்விப்பத் துணிந்தாள். (அ : 367)

வன்முகங் கண்டதோர் வாள் - வலிய வாயுடன் காணப்படும் ஓர் வாள். (அண்) வலிய முகத்தைக் கொண்டு பொருவதான வாள். வன்முகங் காண்பதோர் வாளும் வாங்கினன். (யுத்:1517)

வன்மை - 1. வல்லமை. வலிய அழுக்கு (துரு) ஆவரும் வன்மை நேர் அறிந்து திட்டலால். (பா : 179)
2. கொடுமை. காமனென் றொருவன் செய்யும் வன்மையைக் காத்தி என்றாள். (ஆ : 269) தீயவல்லரக்கிமார்கள். (சு : 487)
3. உறுதி (யான எண்ணம்) வாங்கினன் சீதையை என்னும் வன்மையால். (யுத் : 1070)
4. கடினம். வன் பகை. (யுத் : 880)
5. கருத்து. வாரா தொழியான் எனும் வன்மையினால். (சு;494)

6. கடுமை. வன் தபோதனன். (பா : 652) நெஞ்சுரம். (கலா) கொடுமை. (அண்) (வை.மு) மறத்துறை நமக்கௌ வலிக்கும் வன்மையோர். (கி : 544)

7. வலிமை. வன்மை தரித்தோர் மானிடர். (ஆ : 733)

வன்மைதரித்தோர் – வலிமை யோராயினர். (ஆ : 733) வலிமை பூண்டார்கள். (யுத் : 974)

வன்மையோர் – 1. வலிமை யுடையவர். மெலியர் வன்மையோர். (யுத் : 318)

2. நெஞ்சுர முள்ளவர். (கலா) கொடியவர். (அண்) (வை.மு) (கி : 544)

வன்றபோதனன் – கடுந் தவத்தவன். (சதானந்தன்) ஈறிலா வன்றபோதனன். (யுத் : 1002)

வன்றலையேற்றை – வலிய தலையையுடைய கடா. துளக்கிலா வரி மருப்பிணை வன்றலை யேற்றை. (பா : 61)

வன்ருள் - 1. வலிய பாதங்கள். வன்ருள் மீபுர மடங்கலென. (யுத் : 860) நெடுங்கடனீர் தான் வன்ருள் அலம்ப முடிவான் முகடு வௌவ. (சு : 79)

2. வலியதாள். (அடிப்பாகம்) வன்ருள் மரம். (யுத் : 1928)

வன்றிசை – வலிய திசைகள். வன்றிசை பேர்வுற. (யுத் : 1002)

வன்றிண்கை – வலிய திண்ணியகை. வன்றிண்கைச் சிலை நெடுந் தோள் மரகதத்தின் மலை வந்தான். (ஆ : 338)

வன்றிண் சிலை – வலிய திண்மையுள்ள வில். வன்றிண்சிலை நங்குரிசில் வருமே வருமே என்ருன். (அ : 366)

வன்றிண் டோள் வரை – வலிய திண்ணிய மலைபோன்ற தோள். வன்றிண்டோள்வரை யன்ன மாருதி. (கி : 983)

வன்றிறல் – மிக்க வலிமை. வன்றிறல் வாலிசேய். (யுத் : 939)

வன்றுணை வயிரத் திண்டோள் மாருதி – போர்த்தொழிற்கு வலிய துணையாந் தன்மையும் உறுதியும் திண்மையும் வாய்ந்த தோளை யுடைய அனுமன். (கி : 621)

வன்றுயில் – வலிய உறக்கம். வன்றுயில் எழுப்பலம். (யுத்:1265)

வன்றூண் – வலிய தூண். வன்றூணிடைத் தோன்றிய மாநரசிங்கம் என்ன. (கி : 266)

வன்றொடர் - வலிய சங்கிலி. களிற்றினம் வன்றொடர்ப் படுக்கும் வனவாரி சூழ்குன்று. (பா : 63)

வன்றொழில் - வன்மையான தொழில். வலிய செய்கை. கொடிய தீச்செயல். வன்றொழிற் கொரு வரம்புண்டாய் வரவற்றே. (யுத் : 2587) (சு : 537)

வன்றோள் - வலிய தோள். பருவரை புரைவன வன்றோள். (சு : 775)

வன்னசரம் - பல நிறமுள்ள நவமணி மாலை. மண்மகள் தன் மார்பிலணி வன்னசர மென்ன. (பா : 910)

வன்னம் - 1. வர்ணங்கள், வண்ணங்கள். வன்னங்கள் பலவுந் தோன்றும் மணியொளிர் மலை. (பா : 951)
2. அழகு. வன்னமேகலை. (பா : 1062)

வன்னி - 1. வர்ணீ என்பதன் விகாரம். பிரமசாரி. நித்திய பிரம சாரியாகிய முனிவர். வன்னிதானிடு சாபவரம்புடைப் பொன் மலை. (கி : 335)
2. நெருப்பு. கொற்றவன் நெற்றிக்கண்ணின் வன்னியுங் குளிர்ந்ததன்றே. (சு : 1171) (உ.வி) (யுத் : 2713)
3. ஒரு படைத்தலைவன். புட்கரத் தீவுக்கு மன்னன். (யுத்:3243)
4. ஒரு மலர். (கலா) வன்னி நாட்டிய பொன் மௌலி வானவன். (யுத் : 2713)

வன்னிகூவுதல் - அக்கினியைப் பிரதிட்டைசெய்தல். (ஆவாஹனம்) நெருப்பு உண்டாக்குதல். வன்னிகூவி வரன்முறை சொன்ன ஈம விதிமுறையால் தொகுத்து. (யுத் : 3915)

வன்னெஞ்சம்-வலிய நெஞ்சம். வன்னெஞ்சின் என்னை. (யுத்:1661)

வனகரி - காட்டுயானை- வனகரி தண்டத்தைத் தடவி. (பா:902)

வனங்கொள்வாய்என - காட்டிற்குப்போகின்றாய் என்றுசொல்ல. நீ வனங்கொள்வாயென ஏறின வெகுளியை. (அ : 451)

வனத்துழாய் - அடர்ந்துள்ளதுளசி. வனத்துழாய்க் கணவற்கும் வணக்கம் போக்கினாள். (யுத் : 4004) [பா:பே]

வனதேவதைகள் - காட்டில்உறையுந் தெய்வங்கள். மஞ்சேபொழிலே வனதேவதைகாள். (ஆ : 890)

வனபரப்பு - காட்டிடம். (யுத் : 683)

வனப்பின்தலை - பேரழகில். உருத் தேவரால் வனையவும் அரியாள் வனப்பின்தலை நினைவும் நோக்கமும் நீக்கலன். (பா : 1011)

வனப்பு - 1. பெருந்தோற்றம். வளர்ச்சி. வாலியுங்கடப்பரும் வனப்ப வானுயர் தாலியம் பெருமலை தயங்கக் காண்டியால். (பா : 661)

வனம் - 1. அழகு. வனமுலை. (பா :836) யுத் : 3414)
2. தண்ணீர். வனம் மொண்டிடும் ஓசை. (அ : 378)
3. தொகுதி. அடர்ந்த வலியதொகுதி. இடிவனம் மிடைந்தன. (கி : 685) வாளின் வனம். (ஆ:533)
4. காடு. தாமரைவனம் விட்டு. (பா : 480) வனத்தவல்ல அருந்தலில் வாழ்க்கையான். (யுத் : 4127)

வனமாலை - 1. பலவகைத் தழைகளைக் கொண்டு தொடுத்த மாலை. திருமாலுக்குரியது. அவன் அடியார்களுக்கும் உரியது. வன மாலை மார்புபுரள. (யுந் . 2200)
2 துளசி மாலை. (உ.வி) (கலா) (யுத் : 2200)

வன மாள்வது - காட்டில் வாசஞ்செய்ய வேண்டுவது. (வை.மு) காடு ஆள்வது. (அண்) சீதை கேள்வன் ஒன்றால் போய் வன மாள்வது எனப் புகன்று நின்றாள். (அ : 195)

வனமுலை - அழகு வாய்ந்த முலை. (யுத் : 1479)

வனமுலைகள் - அழகிய முலைகள். (யுத் : 3414)

வனமுலைக்கொடி - அழகிய தனங்களையுடைய நங்கை. வனமுலைக் கொடியே. (அ : 762)

வனயானை - காட்டுயானை. தொல்வனயானை அங்கை விலாழி நீர்த்துவலை. (யுத் : 2362)

வனவாரி - காடுகளிலுள்ள யானையகப்படுத்துமிடம். யானை படுக்குங் குழி. வனவாரி சூழ் குன்று. (பா i 63)

வனிதை - பெண். நீ ஈண்டவ் வனிதையை நாடிக் கோடி. (கி : 366)

வனிதையர் - பெண்கள். வனிதையர்க்காக நல்லறத்தின் மாண் பெலாம். (சு : 403)

வனிதையர் திலகம் – பெண்களுக்கெல்லாம் திலகம் போன்ற அழகு செய்தலாற் சிறந்த பிராட்டி. வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையோ. (சு : 398)

வனைகடிப் பேரி – புனையப்பெற்ற மணமுரசு. சனகனதூர்க் கெனமுன்னஞ் சாற்றிய வனைகடிப் பேரியும் ஒத்தவாமரோ. (யுத் : 4189)

வனைகழல் – புனைந்த வீரக்கழல். வனைகழல் வரிசிலை மதுகை மைந்தர். (ஆ : 187) வார்க்குறு வனைகழல். (யுத் : 372)

வனைகழலவன் – வீரக் கழலையுடையவன். (இரணியன்) வனைகழலவனும் மற்றம் மடங்கலின் வரவு நோக்கி. (யுத் : 273)

வனைதல் – 1. ஓவியத்தில் வரைதல். வனைந்தனைய திருமேனி வள்ளல். (பா : 774)
2. அலங்கரித்தல். வனைபவர் இல்லையன்றே வனத்துள் நாம் வந்த பின்னை. (கி : 800)
3. செய்தல். வனைந்தன அல்லா வேதம். (யுத் : 3486)
4. தரித்தல். வனையும் மாலையை நீட்டலும். (பா : 490)
5. சஞ்சரித்தல். வனையுங் காலிற் செல்வன. (யுத் : 3795)
6. கட்டுதல். வனைகழல் வரிசிலை மதுகை மைந்தர். (ஆ : 187)
7. அழகு செய்தல். செவ்வி பெறல். வனைந்தில வைகறை மலரும். (ஆ : 683)
8. அணிதல். வனையும் வார்கழற் கருணை வள்ளல். (கி : 142c)
9. சூழ்தல். வனையுங் காலிற் சென்று. (யுத் : 3796)
10. இயற்றல். செய்யப்படுதல். மணியினும் பொன்னினும் வனைந்த வல்லது பணிபிறிதி யன்றன பாங்கும் இல்லையே. (பா : 125)
11. சித்திரம் போன்று அழகுறப் புனைதல். வனைந்ததா மன்ன திருமேனி. (யுத் ; 218)
12. இயங்குதல். வனையுங் காலிற் செல்வன. (யுத் : 3796)

வனைந்தன அலலாவேதம் – ஒருவராற் செய்யப்படாதன வான வேதப். (யுத் : 3486)

## வா

வா – வருதலைச்செய்க. வாரலையோ. (யுத் : 3663) மன்னும் நகர்க்கே இவன் வந்திடின் வா. (அ : 444)

வாக்கிய–வார்த்த வாக்கிய நறைக்குடங்கள் பெருன். (யுத்:1277)

வாக்கினுள் – கலைமகள். மலரயன் வாக்கினுளுடன அந்தரம் புகுந்தனன். (பா : 1327)

வாக்கு – 1. வாய். உற்றதை வாக்கினலன்றியே உணர்ந்த மாதவன். (அ:937)
2. சொல் முனிவரால் காக்கலாவது காமன் கைவில் எனும் வாக்குமாத்திரம் அல்லது. (பா : 1009)

வாக்குதல் – வார்த்தல். வாக்குந்தேனுகர் மாக்களை மானுமே. (பா : 21) வாக்கிய நறைக்குடங்கள். (யுத் : 1377) வீணையின் நரம்பிடை விளைந்ததேமறை வாணியின் நாரதன் செவியின் வாக்கவே. (ஆ : 572) [பா : பே]

வாக – அழகாக. வாகமால் ஐயன். (உ.வி) (பா : 960)

வாகு – 1. கை. (உ.வி)
2. அழகு. (வை மு) (உ.வி) வாக மாலையுளாரென லாகுமால் (பா : 960) [பா:பே]

வாகை – 1. வெற்றி. மனத்துறை காதலே வாகை கொண்டதே. (பா : 1107)
2. வென்றோர் சூடும் மாலை. வஞ்சி சென்றிருத்தவன் வாகை மீக்கொள. (அ : 901) வாகை வேய்ந்தன. (ஆ : 403)

வாகை கொள்ளுதல் – வெல்லுதல். ஈன்றுளை வாகை கொண்டோ. (அ : 431) வாகை கொண்டது. (பா : 1107)

வாகை சூடுதல் – வெற்றி மாலை சூடுதல். வாகை சூடினுன் இராமன் பாதஞ்சூடிய தோன்றல் தம்பி. (யுத் : 2044) வாகை சூடிய சிலையிராமன். (பாயி : 23)

வாகை புனைதல் - வாகை மாலை புனைதல். வானவர் பல்வகையூர் புகையாடிய நாள் புனை வாகையினுன். (யுத் : 1738)

வாகைமாலை – வெற்றிமாலை. (யுத் : 3622)

வாகை மீக்கொள – வெற்றிமாலை சூடுமாறு. (அ : 901)

வாகை வழுவுதல் - வெற்றி தவறுதல். சேகுறப் பன்முறை தெருட்டிச் செய்தபின் வாகையென்றொரு பொருள் வழுவற் பாலதோ. (சு : 543)

வாகைவில் - வெற்றியைத்தரவல்ல வில். ஆரியன் வாகை வில்லும். யுத் : 2124)

வாகை வெஞ்சிலை - வெற்றிமாலை சூடிய கொடியவில். வாகை வெஞ்சிலைக்கை வீர. (யுத் : 800)

வாகை வேய்தல் - வாகைப் பூமாலை சூடுதல். இமையவர்க்கெலாம் வேதனை கொடுத்தன வாகை வேய்ந்தன. (ஆ : 403)

வாங்கரும் பாதம் நான்கு - கோடாத நான்கு அடிகள். வாங்கரும் பாத நான்கும் வகுத்த வான்மீகி என்பான். (பா : 32)

வாங்கல் - பின்வாங்குதல். வாங்கல் செல்லா... நம்பிதன் ஆணை யாலே. (அ : 434)

வாங்கல் செல்லா - பின்வாங்க இயலாத. (அண்) நிலைபெற்ற. (வை.மு) (அ : 434)

வாங்கிய துயர் - நீங்கிய துயர். வாங்கிய துயருடை மன்னவன். (பா : 280)

வாங்கு சிந்தையர் - சிந்தை நீங்கப் பெற்றவர். (வை.மு) ஓய்ந்த மன முடையவர். (வாங்குதல் - தளர்தல்; ஓய்தல்) (கலா) வாங்கு சிந்தையர் செய்கை மறந்துளார். (யுத் : 3703)

வாங்குதல் - 1. வளைதல். வளைத்தல். வில்லி வாங்கிய சிலையென. (அ : 749) வரிசிலை வளையவாங்கி. (யுத் : 1098)
2. நீங்குதல். வாங்கிய துயருடை மன்னவன். (பா : 280) வாங்கரிய இன்னற் சிறை. (அ : 616)
3. வெளிப்படுத்தல். வெளியே இடுதல். வாங்கும் உயிர்ப்பினர். (சு : 262) [பா : பே]
4. கைக் கொள்ளுதல். எடுத்தல். விரும்பி எடுத்தல். கவலை கல்லி வாங்கிய குழிகள். (அ : 749)
5. உள் இழுத்தல். அமுதெழத் தேவர் வாங்கிய வெள்ளெயிற் றரவந்தான். (ஆ : 1148)
6. பிடித்தல். நள்ளி வாங்கு நடையிள நவ்வியர். (கி : 935)

7. மீட்டல். பெறுதல். (அண்) வாங்கினன் சீதையை என்னும் வன்மையால். (யுத் : 1070)
8. கேட்டல். செவி மடுத்தல். கொல்லி வாங்கிய குன்றவன். (அ : 749)
9. கவர்தல். பறி கொடுத்தல். மலைகளிற் புரண்டு வீழ வள்ளுகிர் நுதியால் வாங்கித் தலைகளைக் கிள்ளும். (யுத் : 271)
10. பின் வாங்குதல். தோல்வியால் தளர்தல். வாங்கிய மருங்குல் மாதர் (யுத் : 2232) வாங்கலில் ஏவும் வெஞ்சிலை நாணிடை இற்றன. (யுத் : 3687)
11. நீக்கிக் கொள்ளுதல். வாங்கிய மருங்குல். (யுத் : 2230) மனத்து மாசு என்னுயிரொடும் வாங்குவேன். யுத் : 4137)
12 பறிகொடுத்தல். வாங்கு சிந்தையர். (யுத் : 3703)
13 போக்குதல். வாங்கரிய இன்னற்சிறை. (அ : 214)
14. தோண்டுதல். மண்ணொடு மறைந்தன வாங்கிப் பொய்த்து ளோர் கொளத் திகைத்து நின்றானையும் போன்றான். (ஆ : 971)
15. மறிதல். தன்பால் வாங்கிக்கொள்ளுதல். தரையினைத் தள்ளித் தள்ளி வாங்கிய கடல். (யுத் : 1939)
16. அறுத்தல். திரு வாங்கலம். (கி : 1047)
17. பறித்தெடுத்தல். ஆங்கோர் மராமரம் கையின் வாங்கி (யுத் : 1099) வேரொடும் வாங்கி. (யுத் : 574)
18. அழித்தல். (கலா) இகற்படையை மறுகாவகை புரிந்தான் அது வாங்கும்படி. (யுத் : 3051)
19 எடுத்தல் வாங்குஞ் சரம் வாங்காவகை யறுத்தான். (யுத் : 1121)
20. அடக்குதல். உலப்பில் யாக்கையை வாங்குதி விரைந்தென மன்னன் வேண்டினான். (யுத் : 4179)
21. கொள்ளுதல். வன்னெடுஞ் சூலத்தை வலத்து வாங்கினான். (யுத் : 1312)

வாங்குதல் விடுதல் - வளைத்தலையும் தொடுத்து விடுதலையும். வரி சிலை நாணிற் கோத்து வாங்குதல் விடுதல் ஒன்றுந் தெரிகிலர் அமரரேயும். (யுத் : 1239)

வாங்குநர் – வளைக்கப் போகின்றவர்கள். வாங்குநர் யாவரோ எனுக்கைத்தலம் விதிர்த்தனர். (பா : 759)

வாங்கு வெங்கழை – வளைந்த வலிய மூங்கில். (அ : 725)

வாங்கு வேய்ங்கழை – வளையுந்தன்மையுள்ள மூங்கிலின் கழிகள். வாங்கு வேய்ங்கழை துணித்தனன். (அ : 725) [பா : பே]

வாசக்குழல் – நறுமணமுள்ள கூந்தல். கோள்புரை இருள் வாசக் குழல்புரை இருள் காறாய். (அ : 706)

வாசகம் – சொல். வார்த்தை. உரைத்த வாசகம் கேட்டலும். (ஆ : 441) வள்ளல் மொழி வாசகம். (யுத் : 1213) (கி : 30) (யுத் : 431)

வாசகம் வல்லார் – நன்கு பேசவல்லவர்கள். வாசகம் வல்லார் முன்னின்று யாவர் வாய் திறக்க வல்லார். (பா : 980)

வாசகமென்னும் அனல் – சொல் ஆகிய நெருப்பு. ஆங்கவ் வாசக மென்னும் அனல் குழை தூங்குதன் செவியிற்றொட ராமுனம்.

வாசச்சேற்றுல் விளையாத செந்தாமரைக் கைகள் – சேற்றில் தோன்றுதனவாகிய மணம் பொருந்திய செந்தாமரை போலும் கைகள். வாசச்சேற்றுல் விளையாத செந்தாமரைக் கைகள் நீட்டி..(பா : 993)

வாசத்தேனகத்திரு திலோத்தமை – நறுமலரிலுறையும் திருமகளை ஒத்த திலோத்தமை. (யுத் : 810)

வாசநகை மங்கையர் – புன்சிரிப்பையும் இயற்கை மணத்தையு முடைய மகளிர். வாசநகை மங்கையர் மு·ங்கள். (பா : 915) [பா:பே]

வாசநாண்மலர் – வாசனை பொருந்திய அன்றலர்ந்த தாமரைப்பூ. வாசநாண் மலரோன் அன்ன மாமுனி. (பா : 417)

வாசநாறுகுதியாள் – இயற்கை நறுமணம் வீசுகின்ற கூந்தலை யுடையவள்- (சீதை) இவ்வாசநாறுகுதியாளைக் கண்டனன் வவ்வலாற்றுன். (630)

வாசநெய் – புழுகு. சாந்தமும் சுண்ணமும் வாசநெய்யும். (பா:785)

வாசப்பூ – வாசனையுள்ள மலர்கள். தருப்பையென்னும் புல்லினுற் றெடுத்து வாசனைப்பூவினுன் வேய்ந்துபோனுன். (யுத் : 767)

வாசம் – 1. ஆடை. பூநகு மணிவாசம், (பா : 1263)
2. வாசனையிள்ள நறுஞ்சுண்ணம் முதலியனவாம். (உ.வி) (பா : 1263)

3. நறுமணம். வாசங்கலந்த மரைநாள நூலின் வகையென்ப தென்னே. (யுத் : 2215)

வாசமன்றல் – மிகு மணம். ஒரு பொருட் பன்மொழி. வானிழுக்கும் ஏலவாச மன்றல் நாறுகுன்றுமே. (கி : 236)

வாசமூட்டிச்சார்த்திய தண்ணீர் - வாசனைப் பொருள்களையிட்டு வைத்த தண்ணீர். தசும்னில் வாசமூட்டிச் சார்த்திய தண்ணீர் ரென்ன. (யுத் : 636)

வாசமென் கலவைக்களி – மணமும் மென்மையும் வாய்ந்த சந்தனக் குழம்பு. வாசமென் கலவைக்களி வாரி மேல் பூசப்பூசப் புலர்ந்து புழுங்கினள். (பா : 643)

வாசமென் கலவைச் சாந்து – வாசனைப் பண்டமும் மெல்லிய கலவைச் சாந்தும். வாசமென் கலவைச் சாந்தென் றிணையன மயக்கந் தன்னுற் பூசினர்க் கிரட்டியானுர் பூசலார் புகுந்துளோரும் (யுத் : 4291)

வாசல் – வாயில். கோபுர வாசலில்தூவினுன். (யுத் : 960)

வாசவன் – இந்திரன். அஷ்டவசுக்களின் தலைவன். வாசவன் தன் கை வனையு மாலையை நீட்டலும். (பா:490) (சு:879) (யுத்:1602 வரத்துவாவசன். (யுத் : 4101)

வாசவன் திசை – கிழக்கு. இத்திரனுக்குரிய கீழ்த்திசை. வாசவன் இடதிசைக்கண் வினதன். (கி : 753)

வாசவன்திரு – தேவேந்திரனுடைய செல்வம். வாசவன் திருவுங் கொண்டான். (யுத் : 923)

வாசவன் வயக்குலிசம் – இந்திரனுடைய வலிய வச்சிராயுதம். வாசவன் வயக்குலிசமும் வருணன் வன்கயிறும். (சு : 879)

வாசவனம் – வாசனையுடைய ஆச்சிரமம். மரவங்கிளர் கோங் கொளிர் வாசவனம். (ஆ : 74)

வாசவாடை–நறு மணமுடைய இளங்காற்று வாசவாடை விசு சீத நீர் பொதிந்த மென் சேக்கை. (ஆ : 649)

வாசி - 1. குதிரை. வாவு வாசி பின் சென்றனன். (பா : 513)

2. அம்பு. வாஜம்–சிறகு. சிறகு கட்டப்பட்டது பற்றி அம்பு வாஜி எனப்படும். வாசி எனத் திரிந்தது. வீரனை வாசி பிடித்தவனை. (யுத் : 2336)

3. போர். (உ.வி) (யுத் : 2336)

4. சிறப்பு. வாசியும் மானமும் மறத்துறை வழுவாத கொற்ற நீதியும். (யுத் : 1546)

5. வேறுபாடு. முன் நடந்த நாளுடை வாசியைப் பார்க்கும். (யுத் : 1516)

6. தகுதி. வாசியும் மானமும்... குடியாகப் பெற்ற நுங்கள். (யுத் : 1546)

7. தன்மை. (உ.வி) (யுத் : 1546)

8. வாசிக்க. படி. மாறதிர் கழலினுன் வாசி என்றனன். (பா : 818)

வாசிகள் நிரைத்தல் – குதிரைகளை வரிசையாகக் கட்டுதல். மாருத நிரைத்த என வாசிகள் நிரைத்தார். (பா : 911)

வாசிச் சிரிப்பு – குதிரையின் களைப்பு. வாசிச் சிரிப்பு தேரிடிப்பு. (யுத் : 2399)

வாசிப்பாடு – பெருமிதம் வாசிப்பாடும் நாணும் அடர்த்திட. (சு : 431)

வாசி பேசி – விசேஷார்த்தங்களைப் பேசி. (வை.மு) வேறுபட்ட மொழிகளைப் பேசி. (அண்) நன்ருகப் பேசி. (கலா) நீயடா வாசி பேசிக் கல்லெடா நின்ற தென்னே. (யுத் : 2981)

வாசிப்பொறி - குதிரை யந்திரம். போர் மேலினன் வாசியெனும் பொறியான். (யுத் : 2346)

வாசியின் பந்தி – குதிரைகள் உள்ள சாலைகள். வாசியின் பந்தி தோறும் காத்துறு சோலை தோறும். (சு : 196)

வாசிவாய் நுரை – குதிரைகளின் வாயினின்று வெளிப்படும். விலாழி எனப்படும் நுரை. வான யாறுகள் வாசிவாய் நுரை யொடு மயங்கி. (யுத் . 2493)

வாசுகி – வாசுகி என்னும் நாகம். வாசுகி கடை கயிறு. (பா : 498) மேருள் உம்பர் மீதில் நிமிர் வாசுகி. (யுத் : 807)

வாட்கண் – வாள் போன்ற கண். வாட்கண் விழிப்பது முகிழ்ப்ப தாக. (யுத் : 2233) கொலை வாட்கண் அரக்கியர். (யுத் : 1953) (சு : 289)

வாட்களை - கூரிய அம்புகள். (யுத் : 2945)

வாட்கை – வாளேந்தியகை. । வாட்கை அரக்கர். (யுத் : 2231)

வாட்டடங்கண்கள் – வாள் தடம் கண்கள். ஒளி வாய்ந்த பெரிய கண்கள். (கி : 197) பெரிய வாட்டடங்கண்ணி. (யுத் : 2315)

வாட்டந்தரு — வாடிய. வாட்டந்தரு நெஞ்கினனாய் நின்றான் வணங்கா. (அ : 377)

வாட்டம் — மெலிவு. வாட்டமில் வைத்தலை வயங்கு வாளிகள். (யுத் : 1505)

வாட்டலை நேமி – கூரிய நுனியையுடைய சக்கரப்படை. கமலக் கண்ணன் வாட்டலை நேமி தோன்றி மறைந்தது. (யுத் : 2717)

வாட்டாரை — ஒளிமிக்க கண்கள். வாட்டாரை நெருப்புக வாய் மடியா. (ஆ : 915)

வாட்டுதல் — 1. அறுத்தல். உங்கை கொங்கை மூக்கும் வாட்டினார் மானுடர் என்ற வார்த்தை. (ஆ : 896)

2. குறைத்தல். வழியில்வந்த வருத்தத்தை வாட்டினர். (அ : 631)

3. அழித்தல். காட்டுவாரின்மையாற் கடிகாவினை வாட்டினேன். (சு : 1144)

வாட்டொழில் — வாளெடுத்துப் போர்செய்யும் தொழில். வாட் டொழில் இளவல். (கி : 193)

வாட்டொழில் விஞ்சையர் — வாட்போர்த் தொழில் வல்ல வித்தியா தரர். வலங்கொள் வாட்டொழில் விஞ்சையர் பெரும்புகழ் மறைத் தான். (யுத் : 504)

வாட்படை — வாளாகிய படை. தாமரத்தாற் பொராத் தகைகொள் வாட்படை காமரத்தாற் சிவன்கரத்து வாங்கினான். (யுத் : 3827)

வாட்பெருந்தோள் — ஒளியையுடைய பருத்ததோள். வாட்பெருந் தோளினாய் மறைகள் சொல்லுமால். (யுத் : 4012)

வாடன்மென்மலர் — வாடிய மெல்லிய மலர். மழலைவெவ்வுரையு மெல்லாம் வாடன் மென்மலரே ஒத்த ஆர்ப்பொலி வருதலோடும். (யுத் : 2790)

வாடாப்பெருந்தவம் - கெடாத பெரிய தவப்பயன். வாடாப்பெருந்தவ முடையஐயா என்னுற்றபெற்றி என்றான். (யுத் : 1231)

வாடிப்போதல் — மெலிவடைந்து போதல். தேடிப்போன என் பொருட்டினால் உலகுடைச் செல்வன் வாடிப்போயினன். (யுத் : 3527)

வாடுதல் - 1. ஓய்ந்திருந்தல். வாடிய கையராகி. (யுத்:1270)
2. உலர்தல். உதிர்ந்த வேர்களும் வாடின இல்லையால் (யுத் : 4007)

வாடை - 1. கொடிய காற்று. பெருங்காற்று. வானிலா நெடு வாடையும் மெய்யராவிட. (அ : 239)
2. வடகாற்று. தழல்வீச உலாய் வருவாடைதழீஇ அழல்வீர். (சு : 493)
3. சாயை. ஊளி வாடை பொங்க. (யுத் : 899)
4. தென்றல். மீனெயிற்று வாடை உயிர்ப்பின் வளர் செக்கர்ப் பை வாய் அந்திப்பட அரவே. (பா : 629) (அ : 1079)

வாடை வந்த பசும்பனி - வடதிசைக் காற்றுடன் வந்த குளிர்ந்த பனி. பருவத்தால் வாடை வந்த பசும்பனி அனங்கன் வாளி உருவிப் புக் கொளித்த புண்ணில் குளித்தலும் உளைந்து விம்மி. (ஆ : 658)

வாடொடு தானையான் - வாளைப பற்றிய சேனையையுடைய தயரத மன்னன். வாடொடு தானையான் வானில் வைகிட. (அ : 886)

வாண் முகம் - ஒளி சிறந்த முகம். அனுமன் வாண் முகம் நோக்கி னன். (யுத் : 2563) வண்டுறை கமலச் செவ்வி வாண்முகம் பொலிய. (ஆ : 226) வாண் முகத் தொருதனி மயன் மகள் மணி மாடம். (சு : 290)

வாண்முக்கு - கூரிய முக்கு. பரிமள கந்தம்...... மாதிரக் களிற்றின் வரிக்கைவாண் மூக்கிடைமடுப்ப. (சு : 408) [பா : பே]

வாண்மை - வாள் வீரம். வாண்மையே பெற்றவன், திறல் ஆடவர். (பா : 398)

வாணுட் கெல்லை - ஆயுளின் முடிவெல்லை. இன்ருகும் நீ படைத் துடை வாழ் நாட்கு எல்லை எல்லை. (சு : 1017)

வாணுள் - வாழ்நாள். ஆயுள். வாணுள் அளித்தி. (யுத் : 2206] (சு : 1017) (கி : 269)

வாணுள் வேண்டேன் வேண்டேன் - இவ்வுடம்போடு கூடி வாழும் நாளை விரும்பேன் விரும்பேன். அடுக்கு வெறுப்பு மிகுதியை உணர்த்திற்று. இனி நான் வாழ்நாள் வேண்டேன் வேண்டேன் என்ருன். (அ : 353)

வாணி – 1. (வேத) வாக்கு. மருளில் வாணியும். (அ : 108)
2. சொல். வாணிமுந்தின பாணியின் பங்கியம்பர மெங்கும் விம்மின. (அ : 245)
3. கலைமகள். (வை.மு) வாக்கு நாவீறு. (அண்) தேமறை வாணியின் நாரதன் செவியின் வார்க்கவே. (அ : 572)

வாணித்தில வெண்ணகை – ஒளி பொருந்திய முத்தை ஒத்த வெள்ளிய பற்கள். வாள் நிலத்தில வெண்ணகை ஆர்தர. (அ : 441)

வாணிலா நகை மாதராள் – ஒளி பொருந்திய பற்களையுடைய கைகேசி. வாணிலா நகை மாதராள் செயல்கண்டு. (அ : 231)

வாணிலா முறுவல் – ஒளி கொண்ட சந்திரகாந்தி போலும் புன் முறுவல். வாணிலா முறுவல் கனி வாய்மதி காணலாவதோர் காலம் உண்டாங் கொலோ. (அ : 706)

வாணுதல் – 1. ஒளி தங்கிய நெற்றி. வாணுதல் நங்கை. (பா : 777)
2 ஒளி பொருந்திய நெற்றியை யுடைய பெண். ' வாணுதற் சீதை கண்ணின் மணியென வயங்கு வானே. (யுத் : 440

வாணுதற் சுற்றத்தார் – மனைவிமார்கள். மந்திரச் சுற்றத்தாரும் வாணுதற் சுற்றத்தாரும். (யுத் : 1223)

வாதம் – காற்று. வயங்குகிரி வாதவிசையிற் பஞ்சுபட்டதுபட. (ஆ : 7)

வாதவி – வாதாவி. ஓர் அவுணன். மாய வினை வாளவுணன் வாதவி. (ஆ : 155)

வாதவிசை – காற்றின் வேகம். மஞ்சு சுற்றிய வயங்கு கிரிவாத விசையிற் பஞ்சுபட் டதுபடப் படியின் மேன் முடுகியே. (ஆ:7)

வானரத்தச்சன் – நளன். வந்தனன் வானரத்தச்சன். (யுத்:621)

வானரம் – குரங்கு. (யுத் : 966) வழுவில செய்தற் கொத்த வானரம் வானின்நீண்ட. (க : 521)

வானரமாப்படை – வானரப் பெருஞ் சேனை. மடங்க லன்ன அவ் வானர மாப்படை. (யுத் : 966)

வாம்பரி – தாவுகின்ற குதிரை. வாம் பரித்தானை யோடு வளைத்து. (சு : 812) (யுத் : 2009)

வாம்புனற் பரவை ஏழு - தாவுகின்ற நீரையுடைய ஏழு கடல்கள். வாம் புனற் பரவை யேழும் இறுதியின் வகிர்ந்த தென்ன. (யுத் : 3207)

வாம கூடச்சுடர் மணி - அழகுமிக்க தொகுதியான ஒளியுடைய மாணிக்க மணிகள். வாம கூடச்சுடர் மணி வயங்குறும் ஏம கூடத் தடங்கிரி. (கி : 828)

வாமநறை - கள். தீமைதரும் மது. வாமநறையின்றிற நுகர்ந்தவர் மறந்தார். (சு : 256)

வாமம் - 1 அழகு. வாமவேல் வருணன். (பா : 1393)
2. தீமை. வாமநறை. (சு : 256)
3 இனிமை. (உ.வி) (சு : 256)
4. நேர்மையற்றது. வாமப்போர் வயப்பிசாசன். (யுத் : 2301) வாமமந்திர தொழில் மறந்து. (யுத் : 2947)
5. சக்திவழிபாடு. (கள்) வாமத்தால். (சு : 1139) [பா:பே]

வாமமேகலை - அழகிய மேகலை. வாமமேகலை மங்கையர். (அ:118)

வாமமேகலையார் - அழகிய மேகலாபரணத்தையணிந்த பெண்கள். வாமமேகலையாரிடை வாலதி பூமிதோய் பிடிசிந்தரும் போயினர். (பா : 855)

வாமவில் - அழகியவில். தண்டெழுவாமவில். (யுந் : 1323)

வாமவேல் - அழகிய வேற்படை. வாமவேல் வருணன். (பா:1393)

வாய் - 1. இடம். மிடையுடற்குவைகள் வாய் நர்டினர். (சு:974)
2. கூர்மை. பகழிவாயூடு ஒழுகிய குருதி வெள்ளம். பா:416)
3. வாய்மை. (வாக்கு) வாய்தந்தேனென்றேன். (அ:214) வாய் தெரிந்துணரா வண்ணம். (யுந் : 723)
4 நுனி. கூர் நுனி. வல்வாய் மடியா. (ஆ : 86) வைவாய் எஃகுறுத்துளைக்க. (யுத் : 1227)
5. பஞ்சேந்திரியங்களையும் பொதுவாகக்குறிக்கும். துவாரம் என்ற பொருளையுணர்த்தும் வாய்என்ற பொதுப்பெயர் நவத் துவாரங்களைச் சேர்ந்த காதையுணர்த்திற்று. (வை.மு வாயிடை இதழும் மூக்கும் வலிந்தவர் கொய்ய. (ஆ : 625)
6. மேல்வாய். (அண்) (ஆ:625) சிவந்த வாய்ச்சியர். (அ : 503)
7. உண்மை. வாய் தெரிந்துணரா வண்ணம். (யுத் : 723)

வாய் எறிதல் - வாயினால் நெருப்பினை உமிழ்தல். வாயெறிந் தோடிக் குலக்கயங்களிற் குளித்தன. (யுத் : 1428)

வாய்க்கடை – வாயினது இரண்டு ஓரங்கள் உண்டது தெவிட்டிப் பேழ்வாய்க் கடைகள் தோறெழுகிப்பாயும். (சு : 307)

வாய் கயப்புற – (சொன்ன) வாயுங் கசக்குமாறு வாய்கயப்புற மந்தரை வழங்கிய வெஞ்சொல். (அ : 160)

வாய் கறித்தல் - வாயுதடுகளைக் கடித்தல். கோபத்தின் மெய்ப்பாடு. பவள வாய்கறிக்கும். (யுத் : 2176)

வாய் குழறல் – வாய் குளறுதல். அழுது வாய்குழறி (ஆ : 4)

வாய் கொண்டு சொற்றல் – வாய் கொண்டு சொல்லுதல். வாயாடித் தனமாகச் சொல்லுதல். வாய்கொண்டு சொற்றற் கேற்ற வலி கொண்டு. (யுத் : 1908)

வாய் சோர்தல் - வாய்திறத்தல். மறங்கிளர் மானயானை வயிற்றின வாக வாய் சோர்ந்துறங்கின. (யுத் : 639)

வாய்த்தல் – தப்பாமற் சேர்தல், மன்னவர் நெஞ்சினில் வேடர் விடும் சரம் வாயாவோ. (அ : 1008)

வாய் தந்தன – வாயில் வந்தவை. வாய்தந்தன சொல்லி வணங்கி னனால். (யுத் : 243)

வாய் தந்தன கூறுதல் – வாய்க்கு வந்தவற்றைக் கூறுதல். நின் தன் வாய்தந்தன கூறுதியோ மறை தந்த நாவால். (அ : 428)

வாய்தந்தேன் – வாயால் தந்தேன். வாய்மையாகத் தந்தேன். வாய் தந்தேன் என்றேன் இனி யானே அதுமாற்றேன். (அ : 214)
வாய் தரல் - வாய் தருதல்; வாய்தல்; சிந்தித்தல். (வெ.ப) வாயில் வந்தன. வாய் தரத்தக்க சொல்லி என்னை உன் வசஞ் செய்வாயேல். (யுத் : 948)

வாய்தல் – 1 வாயில். யமன் கொற்ற வாய்தல் செயல் குறித்த வாயினான். (ஆ : 1156) (யுத் : 1045)
2. சேர்தல். பாய்தல். மன்னவர் நெஞ்சினில் வேடர் விடுஞ் சரம் வாயாவோ. (அ : 1008)
3. அடைதல். மதியவன் குளிர் வாய்ந்தன. (யுத் : 680)

வாய் தெரிதல் - உண்மையறிதல். வாய் தெரிந் துணரா வண்ணம் குழறுவார். (யுத் : 723)

வாய்ப்புடை வயவர் - போர் செய்யத் தகுதி பொருந்திய வீரர். வாய்ப்புடை வயவர் ஓதை. (யுத் : 3672)

வாய்ப்புறம் புடைப்பு - வாயின் புறத்திலே புடைத்துக் கொள்ளுதல். வாயிலறைந்து கொள்ளுதல். போனகம் நுகரும் பேய்கள் வாய்ப்புறம் புடைப் போடார்ப்ப. (யுத் : 2265)

வாய்ப் பெய்தல் - வாயிற் கொள்ளுதல். மன்னும் பல்லுயிர் வாரித் தன் வாய்ப்பெய்து தின்னும் புன்மை. (பா : 406)

வாய் புதைத்தல் - வாய்பொத்தல். வாயை மூடுதல் அடக்கத்திற்கு அறிகுறி. மண்ணுறப் பணிந்து மேனிவளைத்து வாய்புதைத்து நின்ருன். (அ : 657) வாய்த்த சிந்துரப்பவளச் செவ்வாய் செங் கையிற் புதைத்து. (அ : 289)

வாய்புலர்தல் - வாயின் ஈரம்புலர்தல். அச்சம், துக்கத்தின் விளைவு. நின்ற வீரர் வாய்புலர்ந்த. (யுத் : 3336)

வாய்மடித்தல் - 1. கோபத்தின் அறிகுறி. கரங்களைப் புடைத்துக் கண்களை நெருப்பெழ விழித்து வாய்மடித்து நிற்கின்ருர்.(ஆ:586)
2. வாயைமூடுதல். அஞ்சித்தம் வாய் மடித்தொடுங்கின மகர வேலையே. (யுத் : 1766)

வாய் மடித்தெயிறுதின்னுதல்-வாயைமடித்துப் பல்லினுற் கடித்தல். கடுஞ்சினத்தின் அறிகுறி. அமரரீந்தார் மன்னெடுந்தே ரென்றுன்னி வாய் மடித்தெயிறுதின்ருன். (யுத் : 3670)

வாய்மடுத்தல் - 1. வாயிற்படிதல். கொம்பொடு பகழிகள் குருதி வாய் மடுப்பக் கணிப்பரும் புனல் கடையற மடுத்தலில். (யுத் . 562)
2. வாயில். இடுதல். வையமும் வானும் வாய் மடுத்துண்டவன். (பா : 1290)

வாய்மடுத்து அயிலுதல் - வாயிற்கொண்டு உண்ணுதல் வயின்ரெும் வைகினர் ஒன்றும் வாய்மடுத்தயின்றிலர். (அ : 540) [பா:பே]

வாய்முகம் - முகத்துவாரம். குருதிவெள்ளம் வாய்முகத்தில் தேக்கி உமிழ்வதே ஒக்கும் வேலை ஓதம். (யுத் : 3603)

வாய்முழை - குகைபோன்ற வாய். வாய்முழை திறந்து உதிர ஆறெழுக. (கி : 190) பகுவாய் முழைதிறந்து. (பா : 392)

வாய்மை – 1. வார்த்தை. நின்ற நன்னெறி நீ யறியாநெறி ஒன்றுமின்மை உன்வாய்மை யுணர்த்துமால். (கி : 348) (உ.வி) நல்வாய்மை. (யுத் : 762)

2. உறுதிமொழிகள். நல்வாய்மை பொதுநெறி நிலையதாகப் புணர்த்தல் புலமை என்னு. (யுத் : 762)

3. வலிமை. மழுவாள் நேமிகுலிசத்தின் வாய்மை துடைத்த மார்பானை. (சு : 311)

4. பொய்யாமையாகிய அறம். வாய்மையும் மரபுங்காத்து. (கி : 313) வாய்மை வளர்ப்பான்வரம் நல்கிப் பரிந்தாலென்னும். (அ : 228)

வாய்மையிலா விதியே – சத்தியத்தினிடத்திலே ஒரு தலையான பற்றில்லா ஊழ்வினையே. வாய்மையிலா விதியே கொடியாய் வினையாடுதியோ. (யுத் : 2634)

வாய்மொழி – 1. சொல். அந்த வாய்மொழி ஐயன் இயம்பலும். (அ : 789)

2. மெய்யுரை. (அண்) உறுதிமொழி. (கலா) இனையவாய் மொழிபுகன்றான். (சு : 80) (ஆ : 799)

வாய் வழி – வாயில். வாய் வழிப்புக்கதேன். (பா : 1054)

வாய்வாய்தோறும்–ஒவ்வொரு வாயினிடமாகவும். வாய்வாய்தோறும் மாகடல்போலும் விடவாரி. (யுத் : 3806)

வாய்விடா. மலராமல். இனமலர்க்குலம் வாய்விடா இளமாருதம் வீச. (அ : 237) [பா:பே]

வாய்விரித்து – மலர்ந்து. (அ : 237)

வாய் விளித்தல் – வாயிற்றாற் போருக்கு அறை கூவியழைத்தல். (அண்) விளித்தெழு பஃறலை. (யுத் : 3392)

வாய் விளித்தெழு பஃறலை வாளி - வாய்ப்புறத்திற் சத்தித்துக் கொண்டு எழுகின்ற பல தலைகளையுடைய அம்புகள். (யுத் : 3392)

வாய் வெரீஇ – பிதற்றி. ஆய்வரும் பெருவலி யரக்கர் நாமமே வாய்வெரீஇ. (ஆ : 122)

வாய் வெருவுதல் – வாய் குழறுதல். பொம்மல் பொங்க வாய் வெரீஇ நின்ற வென்றி வானர வீரர். (கி : 1249)

வாய் வைத்தல் – வாயில் வைத்து ஊதுதல். வாசவன் சங்கை மாதலி வாய் வைத்தான். (யுத் : 3698)

வாயம்பு – கூர் துனியை யுடைய அம்பு. ஒளித்து நின்று வரிசிலை குழைய வாங்கி வாயம்பு மருமத் தெய்தல். (கி : 230) வாயம் போர் ஆறுவாங்கி. (யுத் : 2375)

வாயமுது – வாயமுதம். வேரேர் மருந்தில்லை மையல் நோக்கு சுந்தரக் குமுதச் செவ்வாய் அமுதலால். (யுத் : 1597)

வாயால் – வாசல். வாயலின் மன்னர் வணங்கி நிற்ப. (அ : 187) [பா : பே]

வாயால் உயிரோடுந்தின்று – வாய்ச்சொல்லால் உயிரோடு அழித்து. ஒன்றும் பொய்யா மன்னனை வாயால் உயிரோடுந்தின்றும். (அ : 869)

வாயாலருளினையென்னின் - வாய்திறந்து இன்னுன் என்று அருளிச் செய்வாயாகில். (கலா) வாயினுலும் அருள் கொண்டு வரந்தந்தா யென்ருல். (வை.மு) வாயாலருளினை யென்னின் எய்த அரியன வுளவோ ஐய. (யுத் : 2220)

வாயாறு - வாய் வழி. வாயாறு குருதியுக. (சு : 425)

வாயிட்டுவிழுங்கல் – வாயிலே இட்டு விழுங்குதல். வேண்டு மீனெடு மகரங்கள் வாயிட்டு விழுங்க. (யுத் : 3264)

வாயிடுதல் – வாயிலிட்டு உண்ணுதல். மால்யானையை வாயிடும் பசியார். (யுத் : 3266)

வாயிடை இதழ் – காதின் மேலிடம் (வை.மு) மேல் வாயில் உதடு. (அண்) இன்னே வாயிடை இதழும் மூக்கும் வலிந்தவர் கொய்ய, (ஆ : 625) பவளவாயிதழைத் தற்பொதி முத்தினு லமுக்கி விம்மினுன். (யுத் : 338)

வாயிடை நெருப்புக்காலுதல் – வாயில் நெருப்பு வெளிப்படுதல். வாயிடை நெருப்புக்கால உடல் நெடுங்குருதி வார. (யுத்:2073)

வாயிடை மொழிந்த சொல் – வாயினுற் சொன்ன சொல். அத் தெய்வக் கற்பினுள் வாயிடை மொழிந்தசொல் மறுக்கவல்லமோ. (யுத் : 93)

வாயில் – 1. இல்வாய். வாசல். வச்சையர் நெடுமனை வாயில். (ஆ : 684)

2. கதவு. நீளெழுந்தொடர் நெடுவாயிலைத் தாளுறுத்தி. (கி : 597)
3. வழி.

வாயில் காப்பான் – வாயில் காவலாளன். வாயில் காப்பான்...... ஏயவன் எய்தினன் என்று அரசனை இறைஞ்சிச் சொன்னான். (யுத் : 894)

வாயில் காவலன் – வாயில்காப்போன். வாயில் காவலன்கூறி வணங்கலும். (யுத் : 745)

வாயிலடைத்தல் – வாயிலை மூடிக்கொள்ளுதல். வாழி இலக்குவ னென்னின் மறுக்குற்று அழி யரக்கர்தம் வாயிலடைப்பார். (யுத் : 2265)

வாயிலர் – தூதுவர். முன்னு வாயிலர் விரவினுரை. (யுத் : 1225) [பா : பே]

வாயிற்கனல் வெங்கடு வாளியினம் – வாயில் நெருப்பைக் கொண்ட வெவ்விய கொடிய அம்புகளின் தொகுதி. வாயிற்கனல் வெங்கடு வாளியினம் பாயப் பருமக்குலம் வேவனவால். (யுத் : 2929)

வாயிற்புகையுண்டதுமிழ்வான் – முன்பு உண்ட புகையை வாயினு லுமிழ்கின்றவன். பூவுண்ட கண்ணன் வாயிற் புகையுண்ட துமிழ்வான் போல்வான். (யுத் : 2374)

வாயு - காற்றுக்கடவுள். வாயு மற்றெனது கூறு மாருதி எனலும். (பா : 207)

வாயு ஒருபத்து – தசவாயுக்கள். அவை பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன்,கூர்மன், கிருகரன், தேவ தத்தன், தனஞ்சயன் என்பன. ஒழுங்கு குணமூன்றுமுழல் வாயு வொருபத்தும். (யுத் : 3654)

வாயுவின் தோன்றல் - வாயுவின் குமாரனான அனுமன். சோதியான் மகன் வாயுவின் தோன்றல் மற்றேதில் வானர வீரரொடேகி. (யுத் : 3922)

வாயுவேகன் – இராவணன் தூதருள் ஒருவன். மனகதி வாயு வேகன் மருத்தன் மாமேகன் என்றிவ் வினையறி தொழிலர் முன்னா. (யுத் : 1225)

வாயைத்தின்றல் – உதட்டைக்கடித்தல். தின்று வயை விழிவழி தியுக. (யுத் : 739)

வார் – 1. நீர். வாரியங்கு மழையின் குரல் மானும். (யுத் : 816) தெள்வார் மழையும். (பா : 165)

2. கச்சு. வார்முகங் கெழுமு கொங்கை. (பா : 1122) வார் மழை. (அ : 182)

3. நீட்சி. வார் குழல். (பா : 867) வார்குழி. (யுத் : 2922)

4. தோற்கயிறு. வார்விசிக் கருவியோர். (ஆ : 589) வார்ப் பொலி முரசின் ஓதை. (யுத் : 3872)

5. கவசம். வாரொடு தொடர் கழல்மைந்தர். (அ : 134)

வார்க்குறு – வார்த்துச் சொல்லப்பட்ட. வார்க்குறுவணிகழல் தம் முன். (யுத் : 372)

வார்க்குன்றுமுலை – கச்சணிந்த மலைபோன்ற தனங்களையுடையாய். (சு : 435)

வார்கடாம் – ஒழுகுகின்ற மதநீர். கைம்மலை வார்கடாமல்ல தம் மன்னன் சேனையே. (980)

வார்கழல் – நீண்ட வீரக்கழல். வார்கழல் இளையவீரன். (கி : 68)

வார்குழற்கற்றை மழைக்குலம் - நீண்டகுழற் றெகுதியாகிய மேகக் கூட்டம்.மங்கை வார்குழற் கற்றை மழைக்குலம் தங்கு நீரிடைத் தாழ்ந்து குழைவன. (அ : 640)

வார்குழி – நீண்டகுழி. வாமக்கரி தானழிவார் குழி. (யுத் : 2922)

வார்ச்சிறைக் கொங்கை – கச்சாகிய சிறைக்குள்ளிருக்குங் கொங் கை. (பா : 875)

வார்சிலை – நன்கு கட்டமைந்தவில். நீண்டவில். வார்சிலைத் தடக் கை வள்ளல். (அ : 1031 (யுத் : 550)

வார்சிலைத் தடக்கை வள்ளல் - நீண்டவிற்பிடித்த நெடிய கையினையுடைய வள்ளலான இராமன். (அ ; 1031)

வார்த்ததன்னமதில் – உலோகத்தை உருக்கிவார்த்தாற்போன்ற மதில். (யுத் : 975)

வார்த்தல் – 1. செலுத்தல். தேமறை வாணியின் நாரதன் செவி யின் வார்க்கவே. (ஆ : 572

2. வார்ப்புச்செய்தல். தார்க்குறுவணிகழல். (யுத் ; 372)

வார்த்தை – 1. செய்தி. ஏத்தும் வென்றி இளையவற் கீதொரு வார்த்தை கூறுதி. (சு : 637) (யுத் : 769)

2. உலகத்திற் சொல்லப்படும் பேச்சு. கார்த்தவீரியனுற் கட்டுண் டான் என்னக்கற்கும் வார்த்தையுண்டு. (யுத் : 3875)

3. சொல். வார்த்தை அஃதுரைத்தலோடும். (யுத் : 449)

4. விருத்தாந்தம். (உ.வி) (யுத் : 3875)

5. புகழ். பேச்சு. ஆசுரப் படைக்கலம் அமரர் வார்த்தை யுண்டது. (யுத் : 3763)

6. விண்ணப்பம். வீரர் வார்த்தை முகந்தொறும் செவியின் மூழ்க. (யுத் : 934)

வார்த்தை இடுதல் – சொல்லுதல். தருமத்தின் தலைவர் தாமே மானிட வடிவங்கொண்டார் என்பதோர் வார்த்தையிட்டார். (யுத் : 769)

வார்த்தையை நிறுத்துதல் – வார்த்தை உண்டாக்கி விடுதல். இமை யாமுன்னம் விசும்பிடைப் பாய்ந்தானென்னும் வார்த்தையை நிறுத்திப்போனன். (யுத் : 3073)

வார்த்தொழில் புணருந்தெய்வ மங்கலமுரசு – வாராற் கட்டுதல் தொழிலமைந்த தெய்வத்தன்மை பொருந்திய மங்கலமுரசம். (தேவதுந்துபி) (யுத் : 455)

வார்த்தல் – 1. ஒழுகுதல். உண்கள் வார் கடைவாய் மள்ளர். (பா : 41)

2. நீள ஒழுகுதல். நீளுதல். வார் புனற் சரயு. (பா : 91)

3. இழுத்துக்கட்டுதல். வார் முரசம். (பா : 165) (கி : 455)

வார்ப் பொலிமுரசு – வாரினுற் விளங்குகின்ற முரசு. பொலிவு பெற்ற முரசங்கள். (யுத் : 3672)

வார் பொழில் – நீண்ட சோலையிடங்கள். மாளிகை வார் பொழி லோடு எல்லா முளவாயினும். (பா : 1262)

வார்மணிப் புனல் – ஒழுகுகின்ற முத்துப்போன்ற கண்ணீர். வார் மணிப் புனலான் மண்ணை மண்ணு நீராட்டுங்கண்ணுன். (அ : 1031)

வார்மதப்பூட்கை – ஒழுகுகின்ற மதத்தையுடைய யானைகள். வார் மதப் பூட்கைகள் நிறைந்த புண்திறப்ப போன்றவே. (கி : 448)

வார்மிசைப்பம்பை – வாரினுற் கட்டப்படுதலைக்கொண்ட பம்பை என்னும் பறை. வார்மிசைப் பம்பையும் துடியும். (அ : 960) [பா:பே]

வார்விசிக்கருவியோர் - மத்தளக்காரர் தோற் கயிற்ருற் கட்டப்பட்ட ஒிசைக் கருவிகளையுடையவர். வார் வசிக் கருவியோர் இசைத்த பாணியின். (அ : 581)

வார் விசி பம்பை – வாரால் கட்டப்பட்ட பம்பை. (அ : 916)

வாரணங்களை வென்றவன் – திக்குயானைகளை வென்றவனுன இராவணன். வாரணங்களை வென்றவன் வார்சிலை ஆரணங்கை இருதுணியாக்கினுன். (யுத் : 3853)

வாரணங்காக்கவந்தான் – கசேந்திரனைக் காக்கவந்த பரம்பொருள். வாரணங்காக்க வந்தான் அமரரைக் காக்கவந்தான். (சு:1121)

வாரணப்பாகர் – யானைப்பாகர். தொல்லை வாரணப் பாகருஞ் சுற்றினுர். (அ : 805)

வாரணம் – கோழி. கூட்டுடைத்தலைத் தூநிற வாரணம். (பா:58)

2. யானை. வாரணத் துரிவையான். (பா : 343)

வாரணம்பொருத்துவார். கோழிகளைச் சண்டைக்குப் பொருத்து கின்றவர்கள். விரவாழ்க்கை மறுப்பட ஆவிபேணு வாரணம் பொருத்து வாரும். (பா : 47)

வாரண மரற்ற – கசேந்திரன் கூவியழைக்க வாரணமரற்ற வந்து கராவுயிர் மாற்றுநேமி நாரணன். (அ : 275)

வாரணவுரி – யானைத் தோல் வாரண உரித் தொகுதி நீவி தொடர. (ஆ : 15)

வாரம் – 1. தாழ்வாரம். வாரம் துகள் படச் சாய்ந்தவே. (சு:724)

2. உரிமை. உரிமை பூண்ட செயல். (அண்) கல்வியின் மெய்ந் நெறி வாரமாவதும். (கி : 336)

3. உயர்வு அல்லது எல்லை. (கலா) (உ.வி) (கி . 336)

4. பக்கம். பகுப்பு. பங்கு. மெய்ம்மையின் வார மன்று. (கி:321) (உ.வி) (கி : 336)

5. அன்பு. வாரம் என்னினிப் பகர்வது. (அ : 39)

6. குடி இறைப்பொருள். நடை யல்லா வாரங் கொண்டார். (அ : 740)

வாரல் இலாமை – வாராமை. வாலி சேனை மடந்தை வைகிடம்நாட வாரலிலாமையோ. (கி : 508)

வாரலிரா மெனின் – வாராமற் போவீரானுல். நேர்ந்த நாள் வாரும் வாரலிரா மெனின் வானரப் பேருமாளும். (கி : 570)

வாரலென் – வாரேன். அந்நின்ற நிலத்தவன் ஆக்கையை நீக்கி யல்லால் மன்னின்ற நகர்க்கினி வாரலென். (யுத்:1961) [பா·பே

வாரலேயோ–திரும்பிவர மாட்டாயோ. வஞ்சமோ எனும் வாராலேயோ எனும். யுத் : 3163)

வாரளித்தழை – நீண்ட குளிர்ந்த தழைகள். வாரளித் தழை மாப்பிடி வாயிடை. (கி : 34)

வாரா – வர. மாற்றுத் தேரவண் வந்தன வந்தன வாரா விற்று வீற்றுக வெயிலுமிழ் கடுங்கணை விட்டான். (யுத் : 1206)

வாரா அமர்–இதுவரை நிகழ்ந்திராத போர். ஆராழிய அண்ணலும் அஃதிசையா வாரா அமர் செயவந்தனனுல். (யுத் : 1744)

வாராதே வருதல் - வருதற்கு அரியவன் போல் இருந்து எளியனுய் வருதல். வாராதன்போல வருதல். மாயை இது என் கொலோ வாராதே வரவல்லாய் (ஆ : 55)

வாரா தொழியான் – வராமலிருக்கமாட்டான். வாரா தொழியான் எனும் வன்மையினுல் ஓராயிரகோடி இடர்க்குடைவேன். (சு : 494)

வாரா நின்ருர் – வந்து கொண்டிருபவர். (சு : 956)

வாரார் முலேயார் – கச்சணிந்த கொங்கையுடைய பெண்டிர். வாரார் முலேயாரும் மற்றுள்ள மாந்தர்களும். (அ : 389)

வாராழிக் கலசக் கொங்கை – கச்சு அணிந்த சக்கரவாகப் பறவை யும் கலசத்தையும் ஒத்ததனங்கள். (கி : 780)

வாரி – 1. நீர். கண்ணீர். அஞ்சனவாரி சோர. (பா : 938) வாரிக்குரைகடல். (யுத் : 1837)
2. வெள்ளம். உதிரவாரி. (அ : 469) மதவாரிய. (யுத் : 1717)
3. யானையை அகப்படுத்தும் குழி. களிற்றினம் வன்ருெடர்ப் படுக்கும் வனவாரி சூழ் குன்று. (பா : 63)
4. யானைகட்டும் தறி. (வாரி–யானேகட்டும் இடம்) சென்றனன் கரியின் வாரிக்கெதிர் படர்சிய மன்ஞன். (யுத் : 2386)
5. கடல். வரங்களின் வாரி யன்ன தாளிணை. (யுத் : 446)
6. திரள், தொகுதி. படைக்கலவாரி. (யுத் : 430)

7. திருடிவைத்த மாநிதி. மண்ணொடு மறைத்தனர் வாரிப் பொய்த்துளோர் கொள. (ஆ : 971) [பா : பே]

8. வெள்ளம் பெருகிவரும் ஆறு. தேனிழுக்கு சாரல் வாரி செல்ல மீது செல்லு நாண்மீன் இழுக்கும். (கி : 236)

9. வாயில். (அண்) (உ.வி) வரங்களின் வாரியன்ன தாளிணை. (யுத் : 446)

வாரிக்குடித்தல் – அள்ளிப்பருகுதல். அங்கையால் வாரி அலைகொள் வேலையைக் குடிக்கவன்று. (யுத் : 3642)

வாரி கலுழ்தல் – நீர் பெருகப் பெறுதல். கலங்கலில் கருங் கணிணை வாரி கலுழ்கின்றார். (ஆ : 603)

வாரித் துடைத்தல் – ஒரு சேரத்துடைத்தல். கிடைத் தாருடலிற் கிழி சோரியை வாரித் துடைத்தார். (யுத் : 1914)

வாரிதி – கடல் நீர். குடங்கையில் வாரிதியணைத்து. (யுத் : 4200)

வாரி நீர் – கடல் நீர். வாரி நீர் நின்றெதிர் மகரம் பட. (யுத்: 3838)

வாரியின் எழும் சுடர்க் கடவுள் வானவன் – கடலில் தோன்றுகின்ற ஆயிரங் கிரணங்களையுடைய சூரிய பகவானான தேவன் வாரியி னெழுஞ் சுடர்க்கடவுள் வானவன் தேரினை நிகர்த்தன புரவித் தேர்களே. (சு : 902)

வாரி வாரி – அள்ளி அள்ளி. மண்டிய செருவில் மானத் தேர்களால் வாரி வாரி உண்டது தெவிட்டி. (சு : 306)

வாரிவானம்–ஏனைய நான்கு பூதங்களும் வருதற் கிடமானஆகாயம். நிமிர் நெடுங்காலும் வாரி வானமும் வழங்கல தாகுந் தம் வளர்ச்சி. (சு : 115) [பா : பே]

வாருடை வனமுலை – கச்சணிந்த தனங்களையுடைய சீதை. (அ:662)

வாருணம் – வருணமந்திரம். வாருணம் நினைந்தனர். (ஆ : 1130)

வாருதல் – 1. பருகுதல். புனல்வாரும் மேகம். (சு : 712)

2. நீக்குதல். வாழி வெஞ்சுடர் பேரிருள் வாரவே. (யுத்:3863)

வாரும் வாரும் – வாருங்கள் வாருங்கள். இகழ்ச்சிக்குறிப்பு. வாரும் வாரும் என்றழைக்கின்ற அனுமன் மேல்வந்தான். (சு:1014) (யுத் : 3334)

வாரேறுகழல் – கச்சினாற் கட்டிய வீரக்கழல். வாரேறு கழற்சின வாளரி. (யுத . 1732)

வால் – 1. தூய்மை. முக்குறும் பறவெறிந்த வினைவான் முனிவனை. (ஆ : 3) வாலருவி. (கி : 550)
2. வெண்மை. வாலுளைப் புரவி. (பா : 160)
3. காற்றுடி வால். வாலோடு ஆகாய முற்ற கதலிக்குவமை யானுன். (சு : 85)

வால்நிறம் – வெண்மைநிறம். வானிறத் தாளப்பந்தர். (யுத்:797)

வால்மதியம் – வெண்த்திங்கள். வால்மதியம் குன்றில் தோன்றிய தென்ன. (கி : 678)

வாலகில்லர் – பிரமன்உடலிலுள்ள ரோமத்தில் தோன்றியனவராகிய வாலகில்யர் கட்டை விரலளவு வடிவினர், அறுபதினுயிரர், சூரிய னேடு திரிகின்றவர் என்று புராணங் கூறும். பண்டைய அயன் பாலகில்லரும் முண்டரும் மோனரும். (ஆ : 120)

வாலதி – வால். வாலதி பூமி தோய்பிடி. ( : 855)

வாலம் – பிண்டிபாலம். வாலமுதலாயுதம். (சு : 164)
[பா:பே] சக்கரம் தோமரம் வாலம் வாளி. (யுத் : 1019)

வாலமேதரித்தவன் – வால் அம் தரித்தவன். தூய்மையான நீரை (கங்கையை) முடியிற் கொண்டவன். வாலமேதரித்தவன் வெரு வும் பான்மையர். (சு : 387) [பா:பே]

வாலருவி – தூயமலையருவி. ஆசில்சுனை வாலருவி ஆயிழையர் ஐம்பால் வாசமணம் நாறலி வான. (கி : 550)

வாலறிவன் – மெய்யுணர்வினையுடையவன் காசிபனென்னும் வாலறிவற் கதிதிக் கொருமகவாய். (பா : 439) [பா : பே]

வாலறிவான்–மெய்யுணர்வினையுடையவனுன சரபங்கன். அல் லேன் என வாலறிவான் அறைவான். (ஆ : 90)

வாலறிவு - மெய்யுணர்வு. தத்துவஞானம். (ஆ : 90)

வாலி – சுக்கிரீவன் அண்ணன். இந்திரன் மகன். வாலியென்ற ளவிலா வலியினுன். (கி : 80)

வாலிகாதலன் – அங்கதன். (யுத் : 2037)

வாலிகாலன் – வாலிக்கு யமன். இராமன். நேடினும் வாலிகாலனை எனு. (கி : 178)

வாலிசேய் – அங்கதன். (யுத் : 1379)

வாலிதன்று - சிறப்புடையதன்று. (யுத் : 400) [பா : பே]

வாலிமைந்தன் - வாலிமகன். அங்கதன் வாலி மைந்தன். (சு : 525)

வாலிய செல்வம் - ஒளியுள்ள அரசச்செல்வம் வாலியாருயிர் காலனும் வாங்க விற்கோலி வாலிய செல்வங் கொடுத்தவர். (கி : 594)

வாலியானதோர் வெவ்விடத்தின் - வாலியாகிய கொடிய நஞ்சுடனே. வாலியானதோர் வெவ்விடத்தின் வந்து போர்விளைக்கும் எல்லை. (கி : 238)

வாலுக ஆறு - மணற்பரப்பினையுடைய ஆறு. யாருமின்றி எழில் இல வீதிகள் வாரி இன்றிய வாலுக ஆற்றினே. (அ : 827)

வாலுகப்பரப்பு - மணற்பரப்பு. பயின்றுயர் வாலுகப் பரப்பில் பைம் புலில் வயின்றொறும் வயின்றொறும் வைகினர். (அ : 540)

வாலுகம் - 1. வெண் மணல். வெண்மணற்குன்று. மணற்பரப்பு. வெண்ணிலவின் கதிர் வாலுகத்தூடு. (பா : 969) வாலுக ஆறு. (அ : 82)

2. நிலாப் பரந்த வானம். (உ.வி) (பா : 969) (யுத் : 469)

வாலுகம் வளர்க்கும் அம் பவளவல்லி - மணற் பரப்பு வளர்க்கின்ற அழகிய பவளக் கொடிகள். (அ : 546)

வாலுடை நெடும் படை - வாலையுடைய மிக்க குரங்குச் சேனை. வாலுடை நெடும்படை இரிந்து மாய்ந்ததால். (யுத் : 1523)

வாலுணர்வு - தூய்மையான தத்துவ ஞானம். மெய்யுணர்வு. முற்ற வாலுணர்வு மேல் முடுகினர் அறிவு சென்றுற்ற வானவன், (பா ; 344) (அ : 557)

வாலுளைப்புரவி - வெள்ளிய பிடரியைக் கொண்ட ஒப்பற்ற குதிரை. காலையும் மனத்தையும் பிறகு காண்பதோர் வாலுளைப் புரவியன். (யுத் : 2285)

வாலுளை மடங்கல் - வெள்ளிய பிடரி மயிரையுடைய சிங்கம். (அண்) நீண்ட பிடரி மயிரையுடைய சிங்கம். (கலர) சுத்தமான பிடரி மயிரையுடைய சிங்கம். (வை.மு) மின்னும் வாலுளை மடங்கலை முனிந்தன வேழம் துன்னினு லென. (ஆ : 442)

வாலெயிறு - வெள்ளிய பற்கள். சங்கபால குளிகாதி வாலெயிறு தந்த தீவிட முமிழ்ந்துசார் வெங்கண் நாகமென. (யுத் : 2014)

வாவல் – தாவுதல். வாவலுற்றுன். (யுத் : 2867) குரங்கு வாவுவ. (யுத் : 2000)

வாவா – வருவாய் வருவாய். நல்லே போர் வாவா என்றுன். (யுத் : 2981)

வாவி - 1 பொய்கை தடாகம். வாவி உரைத்தியாமன்றே. (கி:26)
2. குளம். நீர் நிலே. வாவி மாமலர்ப் பாதம். (அ : 93)

வாவி கொண்ட புண்டரீக மன்ன கண்ணன் – தடாகத்தில் உள்ள செந்தாமரை மலர் ஒத்த கண்ணேயுடைய இராமபிரான். வாவி கொண்ட புண்டரீக மன்ன கண்ணன் வாளி யொன்றேவி நூறு கோடி கொல்லும். (யுத் : 3347)

வாவி மலர்ப் பாதம் – தாடகத்திற் பூத்த சிறந்த தாமரை மலர் போன்ற பாதம். (அ : 93)

வாவுதல் – 1. தாண்டுதல். தாவுதல். வாம்பரி. (பா : 273) வாவுவான். (கி : 117) வாவுவ. (யுத் : 2000)
2. செல்லுதல். (கலா) வள்திறற் சாம்பனேடு வாவினர் ஏவ. (யுத் : 4210)
3. உலாவுதல். வாவுவர். (யுத் : 3156)

வரவும் வாசி - தாவுகின்ற குதிரை: வரவும் வாசி நடுங்கின. (யுத் : 3687)

வாழ்க்கை – 1. செல்வம். ஆரவாழ்க்கையின் வணிகராய் அமைதிரோ. (ஆ : 514)
2. உயிர் வாழ்க்கை. வாழ்க்கை கெடாது நற்கிளியனுளே விட்டிட எண்ணியோ நான் பிடித்தது. (யுத் : 2803)

வாழ்க்கை நாள் – ஆயுள். வாழ்க்கை நாளும் மெலியுங்கடை சென்றுற்ற தாகலின். (ஆ : 940) (ஆ : 894)

வாழ்க்கையூர் – வாழுமூர். குரங்கு நம் வாழ்க்கையூர் கடந்து. (யுத் : 47)

வாழ்கிலான் - இறப்பான். வாழ்ந்திருக்க மாட்டான். கற்றடங் காணுதி என்னில் மற்றடந்தாளே யான் வாழ்கிலான் என்றுன். (அ : 458)

வாழ்த்தல் – வாழ்த்துதல். வீரன் வணங்கலும் குழைந்து வாழ்த்தி (அ : 298) இவனேவாழ்த்தித் தொழுதியோ. (யுத் : 3060)

வாழ்த்தொலி – வாழ்த்துரை. இமையோர் பனி மலர்த்தொகை பொழிந்தனர் வாழ்த்தொலி பரப்பி. (யுத் : 2478)

வாழ்தர - வாழ்த்தற்கு. (ஆ : 971)

வாழ்தல் – 1. உயிரோடு இருத்தல். வாழ்கிலான். (அ:258) உயிர் வாழ்வெனே. (அ : 305)

2. சிறப்பாக வாழ்க்கை நடத்தல். ஒன்றென வாழ்திபோலாம். (யுத் : 1600) வாழுதி பின்னை. (யுத் : 1607)

வாழ்மனை – வாழும்வீடு. வாழ்மனை புகுந்த தாண்டோர் மாசுணம் வரக்கண்டன்ன கோளுறக் குதித்து. (ஆ : 323)

வாழ்மை – நல்வாழ்க்கை. வாழ்மைதானறம் பிழைத்தவர்க்கு வாய்க்குமோ. (யுத் : 317)

வாழ்விடம் – இருப்பிடம். தீவினைதனக்கு வாழ்விடம். (யுத் : 3956)

வாழ்விக்கும் தாழ்வில் – தாழ்விலே வாழச்செய்யும். வேள்விக்கு வேண்டற்பால தருப்பையும் விறகு நெய்யும் வாழ்விக்கும் தாழ்வில் என்னும் வானவர் மறுக்கம். (யுத் : 2888)

வாழ்விடம்–இருப்பிடம். தீவினைதனக்கு வாழ்விடமாகிய சழக்கியர். (யுத் : 3956)

வாழ்வித்தல் – வாழும்படிசெய்தல். வாழ்வித்திர்எனை. (கி : 992)

வாழ்வியாது–வாழ்வுறக் செய்யாது. அனையர் தம்பால் வாழ்வியாது அயல் எவ்வழிப்புறங்கொண்டு வாழ்வார். (யுத் : 185)

வாழ்விற்செல்வம் – முறைப்படி வாழ்ந்தமையான் உளதாய செல்வம். தோலாமனு நூலின் வாழ்விற் செல்வம் துய்த்திகொல். (அ:599)

வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள் – முடிபுனைதலாகிய வாழ்வைக் கருதி உறுதிசெய்த மங்கலத்துக்குரிய நாளில். வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள் தாழ்வினையதுவரச் சீரைசாத்தினன். (அ:457)

வாழ்வினைநோக்கி – உயிர்களின் நல்வாழ்வையே கருதும் சீதா பிராட்டி. வாழ்வினைநோக்கியை வணங்கி நோக்கினன்.(அ:569)

வாழ்வு – 1. செல்வம். வாழ்வார் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பன். (பாயி : 2)

2. இன்பவாழ்வு. வாழ்வின் வைகினேன். (கி : 695)

3. வாழ்தற்குரிய இடம். அருளின் வாழ்வே. (சு : 560) புகழின் வாழ்வே. (அ : 197) (சு : 21)

4 மகிழ்வு. முனிவரும்... அந்தணாளரும் வருந்துதலின்றியே வாழ்வின் வைகினர். (பா : 183)

5. அரச வாழ்வு. வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள். (அ : 456)

6. வாழ்நாள். வாழ்வினிச் சமைந்ததன்றே. (யுத் : 803)

7. செல்வவாழ்வு. நின் வாழ்வெலாம் சுட்டாய். (ஆ : 906)

வாழ்வு சமைந்தது - வாழ்நாள் முடிவுற்றது. வாழ்வினிச் சமைந்த தன்றே. (யுத் : 803)

வாழி – அசை நிலை. முன்னிலையசை. என்னிற் பிறந்தவருளரோ வாழி. (அ : 291) பின் வாழி மாதவன் சொலால் மனந் தெருட்டுவாய். (அ : 567) சுருதியன்ன வாழி மாதவற் பணிந்து. (பா : 718)

2. தீதிலதாக வாழ்க. வாழி என. (ஆ : 41)

3. சாவாது வாழ்ந்திருக்கும் நிலை. அது வாழிகாட்டுமென்று உண்டு. (சு : 1076)

வாழிய - 1. முன்னிலை யசைச்சொல், துணையிலேன் பரிவு தீர்த்த வாழிய வள்ளலே. (சு : 561)

2. வாழ்ச்சி பெற்ற. வாழிய வேதநான்கும். (யுத் : 2131)

வாழியர் - 1. அசை. வாழியர் உலகினை வளைத்து. (யுத் : 591)

2. வாழ்பவர். வாழியர் இயங்குவழி. (சு : 162)

வாழியார் – நெடிது வாழுந்தன்மை யுள்ளவர். உயிருக்கின்னல் வாழியார்க்கில்லை, (யுத் : 2648)

வாழி வாழி–வாழ்க வாழ்க. ஆழிமாப் பரித்தேரவன் காதலனடிகள் வாழி வாழி யென்றுரைத்தலர் தூவினர் வணங்கி. (கி : 730)

வாழியானவன் – நல்வாழ்வுக்குரிய பேறுடைய அவன். வாழ்ச்சியை யுடைய அவன். பிரகலாதன். வாழியானவன் தனைக்கண்டு மண மகிழ்ந்துருகி. (யுத் : 150)

வாழுநாள் – ஆயுள் நாள். வாழ்நாள். வாழு நாளுள என்றபின் மாள்வரோ. (அ : 522) வரஞ்சுடும் வலிசுடும் வாழுநாள் சுடும். (யுத் : 3430)

வாழை – வாழை மரம். மங்கையர் குறங்கென வகுத்த வாழைகள். (அ : 127) பிறங்கிய வாழை யரிய மாக்கனி. (அ : 769) (அ : 596)

வாழைமடல் சூழ் ஈரத்தண்டு – வாழைமரத்தின் பட்டை சூழ்ந்த குளிர்ந்ததண்டு. வாரத்தண் குலைவாழை மடல் சூழ் ஈரத்தண் டென இற்றன எல்லாம். (யுத் : 227)

வாள் – 1. கூர்மை. வாளெயிற்றரக்கர். (யுத் : 418)
2. கொடுமை வாளரக்கர். (பா : 417) வாளரி. (யுத் : 500) வாள்நிருதர். (ஆ : 169) (யுத் : 1732)
3. ஒளி. வாள் விரிக்கும் வெள்ளி மாமரம். (பா : 116)
4. வாட்படை; வாள்போன்ற கண். சுடர்முகத் துலவுகின்ற வாளையே சொல்லுகேனோ. (ஆ : 632)
5. கொலைத்தொழில். வாளரவம். (சு : 545)

வாள் கொள் நோக்கி – வாளின் தன்மை கொண்ட கண்களை யுடைய சீதாபிராட்டி. (யுத் : 530)

வாள்செறி வித்தகர் - வாட்போரில் தேர்ந்த வாள் வீரர். (அ : 805)

வாள் தொழில் – வாளெடுத்துப் போர் செய்யுந் தொழில். வாட் டொழில் இளவலை இதனை மைந்த நீ ஒட்டெனா. (கி : 194

வாள்புரை விழி – வாள் போன்ற விழி. வாள்புரை விழியாளே. (அ : 706)

வான்முலம் வாளின் அடி. கைப்பிடி. வாள் மூலமற்றன. (ஆ : 444)

வாள் விரிக்கும் – ஒளியைப் பரப்பும். மணிக்குலம் வில்லிடக் குயிற்றி வாள் விரிக்கும். (பா : 116)

வாள் விழிச் சனகி – ஒளியையுடைய கண்களையுடைய சீதாபிராட்டி. வாள் விழிச் சனகியை வணங்கிக் கூறுவான். (அ:569) [பா:பே]

வாள் வீரன் – வாளையுடைய வீரன். இராமன். வாள் வீரற் கன்பனு நின்றனன். [அ : 1016)

வாள் வேந்தர் – வாட்படை தாங்கிய வேந்தர். வாள் வேந்தர் எந்தை புகுதற் கிடையூறுண் டாயதோ... தெளிவி என்றுரைத் தார். (அ : 386)

வாள் வேந்தன் - வாட்படையுடைய வேந்தன். சிபி. துலைபுக்க லைக்கடங்கார் வாள் வேந்தன் வழிவந்திர். (யுத் : 1574)

வாளம் - சக்கரவாளப் பறவை. சக்கரவாளம் என்பதன் முதற் குறை. சக்கரவாகம் என்ற வட சொல்லின் திரிபு. (கலா) மங்கைமார் தடமுலை யெனப்பொலிவன வாளம். (கி:21) (கி:863)

வாளமர் - கொடிய போர். (வை.மு) வாட்போர். (அண்) ஏழையர் சிறு வலிக்கு வாளமர் தாழுமே இராகவன் தனிமை. (ஆ:818)

வாளரக்கர்-வாளேந்திய அரக்கர். வெங்கண் வாளரக்கர் (ஆ:865)

வாளரக்கன் - கொடிய அரக்கப் பிறவியையுடையவன். மற்றுடையார் தாமுளரோ வாளரக்க னன்றியே தவத்தின் வாய்த்தார். (யுத் : 408) (சு : 113)

வாளரக்கியர்-வாளேந்திய அரக்கியர் வன் மருங்குல் வாளரக்கியர். (சு : 332)

வாளரம் - ஒருவகையான அரம். ஒளி பொருந்திய அரம். வாளரம் பொருத வேல். (பா : 577)

வாளரவு - கொடிய பாம்பு. கறுத்த வாளர வெயிற்றினூட முதுகக் களித்த. (அ : 729)

வாளரி - ஒளியுள்ள சிங்கம். கொடிய சிங்கம், வாளரி திரிவ தென்னத் திரிந்தனர். (பா : 927) (ஆ : 871) (யுத் : 2087)

வாளா - வீணாக. பின்னே வாளா பேதுறுவீரேற் பிழை என்றாள். (சு : 487) எம்மோயினை வாளா முனியல். (யுத் : 4032)

வாளாகிடத்தல் - ஒரு நிலையாக இருத்தல். ஒன்றேடொன்று மாறு மாருகி வாளா கிடக்கிலா மறுகிற் சென்றார். (பா : 570)

வாளாண்மை - வாளினாற் காட்டும் ஆண்மை. வாளாண்மையும் உலகேழினொடுடனே யுடை வலியும். (யுத் : 1126)

வாளாலெறிதல் - வாளினால் வெட்டுதல். இன்று நீ இவனை வாளா லெறிந்து போய். (யுத் : 3204)

வாளாற்றுகண்ணாள் - வாளின் செயலைச் செய்யும் படியான கண்களை யுடையவள்; சீதாபிராட்டி. வாளாற்றுகண்ணாளை வஞ்சித்தான். (சு : 314)

வாளி – 1. அம்பு. ஆசலம்புரி ஐம்பொறி வாளியும். (பா : 12)
2. வட்ட வடிவமாய் ஓடுதல். வட்டமான கதி. பாய்மா... மட்கலத்திகிரி போல வாளியின் வருவ. (பா : 576)
3. குதிரை. (ஆகு) மாப்புண்டர வாளியின் வட்டணைமேல் ஆப்புண்டவனொத்தவன். (யுத் : 2349) வாளியார்த்தன தேர். (யுத் : 2086)

வாளி இரையுண்ணல் – அம்புகள் தைத்து உணவை யுண்ணுதல். அம்புகள் மருமத்தில் தைத்து மாமிசத்தைக் கவ்விக்கொண்டு தங்கியிருத்தல். வள்ளல் வாளி இரையுண்டு துயிலச் சென்றூர். (யுத் : 2120)

வாளிக் கடு வல்விசை – அம்பு போன்ற மிக அதிகமான வேகம். வாளிக் கடு வல்விசையால் எதிர் மண்டி. (யுத் : 1919)

வாளிக் குழு – அம்புகளின் கூட்டம். வாளிக்குழு வழுவில் புட்டிலொடு கோடி யென நல்கி. (ஆ : 172)

வாளிக்குழு வழுவில் புட்டில் – அம்புகளின் கூட்டம் குறைபடாத தன்மையுடைய புட்டில் அக்ஷய தூணீரம். (ஆ : 172)

வாளிணை – இரண்டு வாள் போன்ற கண்கள் பின்னெழில்கொள் வாளிணை பிறழ்ந்தொளிர் முகத்தாள். (ஆ : 256)

வாளிப்புட்டில் – அம்பறுத்தூணி. விற்ருங்கி வாளிப் பெரும்புட்டில் புறத்து வீக்கி. (அ : 411)

வாளிப் பெரும் புட்டில் – பெரிய அம்பறுத்தூணி. (அ : 411)

வாளி பெய் புட்டில் – அம்புகளை நிரம்ப வைத்துள்ள அம்பறுத்தூணி. வாங்கி வாளொடு வாளி பெய் புட்டிலுந் தாங்கி. (ஆ : 385)

வாளி மழை – அம்பு மழை. துன்று நெடு வாளி மழை மாரியினும் மேலன துரந்து. (யுத் : 3412)

வாளி மாமழை – மிக்க அம்பின் தொகுதிகள். (அண்) (யுத்:3440)

வாளியினம் – அத்திரத் தொகுதி. அம்புகளின் தொகுதி. வாயிற் கனல் வெங்கடு வாளியினம் பாய. (யுத் : 2929)

வாளியினரணம் – அம்பினுல் அமைக்கப்பட்ட சரக்கோட்டை. அடுத்த கூர் வாளியினரணம் நீங்கலோம். (யுத் : 3436)

வாளிவட்டில் – அம்புகளைத் தன்னுள் கொள்ளத்தக்க அம்புப்புட்டில் வாளிவட்டில் புறம் வைத்தனன். (யுத் : 3644)

வாளியிற் பொருவது நாணம்போலாம் – வாளினுற் போர்செய்வது வெட்கமாகும் போலும். தங்குலப் பகைவர் தம்பாற் போவது குற்றம் வாளிற் பொருவது நாணம்போலாம். (ஆ. 897)

வாளி வாளி – அம்புகள் அம்புகள். இகழ்ச்சிக் குறிப்பு. மானவன் வாளி வாளி என்கின்ற மழலைவாயார். (யுத் : 2252)

வாளின் ஏருமென்னும் வன்துயர் – வாளினுல் ஏறுண்ட புண் பட்டாற்போன்ற வலியதுன்பம். கூறுபடுக்கும் கொலைவாளின் ஏருமென்னும் வன்துயர் ஆகத்திடை மூழ்க. (அ : 230)

வாளின்மேல்வரு மாதவம் – வாளின்மேல் நின்றுசெய்யும் பெரிய தவம். அன்னது வாளின்மேல் வரும் மாதவம் மைந்தனே. (அ : 111)

வாளினைத்தொழுதல் – வாளினை வெற்றியுற்றபின் வணங்குதல். தோளொடு தாளும்நீக்கி வாளினைத் தொழுவதல்லால் வணங்குதல் மகளிர் ஊடல் நாளினுமுளதோ. (யுத் : 276)

வாளுடையுழவன் – (போர்க்களமாகிய கழனிகளில்) வாளாகிய ஏர் கொண்டு உழுபவன். வாளுடையுழவனேர் மன்னன்பால் வைத்தனன். (பா : 763)

வாளும் வேலும் விட்டளாயின அனையகண் – வாளின் தன்மையும் வேலின் தன்மையும் அவ்வாளினையும் வேலினையும் விட்டு நீங்கி வந்து கலந்தாற் போன்ற கண். (அண்) வாளையும் வேலையும் சேர்த்து ஒன்ருகக் கலந்து வைத்தாற் போன்ற கண். (வை.மு) வாளும் வேலும் சேர்த்து ஒன்ருகக்கட்டியது போன்ற கண். (கலா) வாளும் வேலும் விட்டளாயின அனைய கண்மயிலே. (அ : 738)

வாளுருவுதல் – வாளை உறையினின்றும் உருவுதல். சுரிகை வாளுருவிக் கொண்டான். (யுத் : 1651) (ஆ : 534)

வாளுலாம் நுதல் – ஒளி பொருந்திய நெற்றி. வாளுலாம் நுதலியர். (அ : 981)

வாளுழவன் – 1. வாளேருழவனுகிய அரசன். (தசரதன்) வாளுழவன் பாதபங்கயம் பணிந்தனன். (அ : 59)
2. வீரன். மாற்று வேந்தரை நலிந்த வாளுழவன். (பா : 1083)

வாளுறையுறுதல் – வாட்படைகள் உறையிற் செருகப்படல். வாளுறையுற்றென மறைந்த மின்னெலாம். (கி ; 549)

வாளெயிறு - 1. ஒளியுள்ள பற்கள். வெள்ளியபற்கள். வாளெயிறு வாயில் தின்றனன். (யுத் : 77) (யுத் : 2038)
2. வாள்போற் கூரிய விஷப்பற்கள். வளைந்த தாமன்ன மேனியினன் தன்மேல் வாளெயிறு உற வன்றி சினந்தமீக் கொளக் கடித்தன. (யுத் : 218)
3. கூறிய பற்கள். வாளெயிற்றிலங்கை வேந்தன். (யுத் : 460)

வாளை - ஒரு வகை மீன். வலி நடத்திய வாளைகள். (கி : 22) (கி : 232) (யுத் : 1218) வாளைகள் பாய. (கி : 22)

வாளை மீன் - வாளை மீன்கள். வாளை மீனுகள அஞ்சி மைந்தரைத் தழுவுவாரும். (பா : 1017)

வாளொளி - மிக்க ஒளி. மறுப்பொலிய வாளொளியிழந்து. (யுத் : 105)

வான் - 1. பெருமை. மகிமை வண்ணவான் பொன்றிணி நெடு மரப் பொதும்பர். (சு : 406)
2. மிகுதி. வானுயர்ந்த வரம். (யுத் : 1338) பொறி வானுத தீயென. (யுத் : 1926)
3. வலிய. வான்பகழி. (அ : 1103)
4. பெரிய. வான் சிறையில் வைத்த தூயவன். (சு : 464)
5. சிறந்த. மேலான. மற்று நுந்தைக்கு வான் பகை பெரிதுளது. (அ : 172) வான் கரி. (யுத் : 2236)
6. வானம். நெடிய காலும் நிமிர் வானும். (யுத் : 76) தேவர் வானைக் காவலும் மானமும் மாற்றிய மறவர். (யுத் : 523)
7. மழை. வான் பிலிற்றும். (பா : 216)
8. மேகம். வான் ஏழும் நடுங்கிட. (யுத் : 247)
9. உயர்வு. உயர்ச்சி. (உ.வி) வானுயர்ந்த வரத்தினன். (யுத் : 1338) வான் கழுத்த வான ஒட்டகம். (யுத் ; 799)
10. மூலப் பிரகிருதி. வானின் நிமிர்ந்து வரம் பிகந்த மா பூதத்தின் வைப் பெங்கும். (அ ; 1)
11. தேவலோகம். வானுடையாய். (ஆ ; 93)
12. மேலான. சிறந்த. வான் பெரும் படைக்கலம். (யுத் : 214) வான்புகழ். (யுத் : 1297) வான் புகைக் கண்ணன். (யுத்:2264)
13. வானுலகிலுள்ளோர். வான்விடின் விடாது. (யுத் : 2189) வான்தடாது. (யுத் ; 2517)

வான் கடவுள் - சிறந்த கடவுள். மேயவான் கடவுளும் பிறவும் வேறு நீ. (பா : 180)

வான் கழுத்தவான ஒட்டகம் - நீண்ட கழுத்த வான ஒட்டகம். (யுத் : 799)

வான் காப்போர் - மேலுலகத்தைப் பாதுகாக்கின்ற தேவர்கள். வான் காப்போர் மண் காப்போர். (ஆ : 350)

வான் சுடர் - பெரிய ஒளி. நேமி வான் சுடர். (பா : 133)

வான் சுடர்ச் சோதி வெள்ளம் - மிக்க பள பளப்பையுடைய ஒளியின் மிகுதி. (வை மு) விண்மிசை விளங்கும் ஞாயிற்றின் பேரொளி போன்ற ஒளிப்பரப்பு. (அண்) உருவ தாறும் வான் சுடர்ச் சோதி வெள்ளம் வந்திடை வயங்க நோக்கி. (ஆ : 282)

வான் செய்த சுடர்வேலோய் - வானுலகையும் வாழச் செய்த விளங்கும் வேலையுடையவனே. (பா : 240)

வான் செவி - சிறந்த செவி. (யுத் : 3247)

வான்தரு சேனை - பெருமையுடைய சேனை. தவத்து ளோர்களும் வான்தரு சேனையும். (அ : 1202)

வான்தரு வள்ளல் - தனது அடியார்களுக்குப் பரமபதத்தைக் கொடுத்தருள்கின்ற உதார குணமுடையவனான பிரான். நரசிங்கமூர்த்தி. (யுத் : 282)

வான்துணைச்சுற்றம் - சிறந்த துணைச்சுற்றத்தவர்கள். வான்றுணைச் சுற்றத்து மக்கள் தம்பியர். (யுத் : 21)

வான்தெழிப்பு - பெரியகர்ச்சனை. இடித்த வான்தெழுப்பினால் இடிந்தகுன்றெலாம். (யுத் : 1498)

வான்தொடர்தல் - 1. மேலுலகஞ் செல்லுதல். ஆன்ற பேருலகுளோர் அறைதன் முன்னம்யான் வான்தொடர்குவேன். (கி : 958)

2. வானளாவுதல். வான்தொடர் மாடகோடி. (சு : 192)

வான்தொடர்திரு - வானளவு உயர்ந்த செல்வம். (அண்) சுவர்க்கம் போன்ற இராச்சியம். (கலா) பேரரசன் சுவர்க்கம் சென்றதனால் நேரிட்ட இராச்சிய சம்பத்து. (வை.மு) வான்தொடர் திருவினை மறுத்தி. (அ : 952)

வான்தொடர் பேரரசு ஆண்ட மன்னன் - வானுலகம் வரையில் தொடர்புள்ள (கோசல நாட்டுப்) பெரிய அரசாட்சியை ஆண்ட அரசன் (அண்) மிக்கபற்றுக்கு இடமான பெரிய அரசாட்சியை (சிறிதும் பற்றில்லாமல் ஆண்ட அரசன். (வை.மு) பரமபதத்தை அடைதற்கு எளிய வழியாகிய (பாரதந்திரியம் என்னும்) பெரிய அரசினை எவ்விதப்பற்றுமின்றி ஆட்சிபுரிந்த அரசன். (கலா) பரதன். (யுத் : 4253)

வான்தொடர் மழை - மேகத்தினின்றும் இடைவிடாது பெய்யும் மழை. உருமின் வெங்கணை வான்தொடர் மழையென...... தூவினன். (ஆ : 495)

வான்தோய் குடுமிச் சுடர்த்தொகைய - ஆகாயம் அளாவிய ஒளி மிக்க சிகரங்களின் தொகையையுடைய. வான்றோய் குடுமிச் சுடர்த் தொகைய தொழுதோர்க்கெல்லாம் வரனதிகந் தருந் தகைய அருந்ததிமா நெடுமலை. (கி : 767)

வான்பகழி - வலிமையுடைய அம்பு (அ : 1103)

வான்பகை - சிறந்த பகைகள். நுத்தைக்கு வான்பகை பெரிதுள. (அ : 172)

வான்பிலிற்றல் - மழைபெய்தல். கலைக்கோட்டு முனி வரின் வான் பிலிற்றும். (பா : 216)

வான்பிறங்கிய புகழ் மன்னர் தொல்குலம் - மேலுலகத்திலும் விளங்கிய புகழையுடைய அரசர் தோன்றிய சூரியகுலம். வான் பிறங்கிய புகழ் மன்னர் தொல் குலம் யான் பிறந்தறத்தினின் இழுக்கிற்றென்பவோ. (அ : 561)

வான்புகுதல் - மாண்டு மேலுலகஞ் செல்லுதல். ஓரம்பினெடு மரக்கி மக்களிலங் கொருவன்போய் வான்புக்கான். (பா:747

வான்புனை இசை - வானளாவும் புகழ். வான்புனை இசையினய். (அ : 446)

வான் பெருவழி - வானத்தின் பெரிய வழி. (அ : 1103)

வான் மழை - மேகத்தின் மழைத்தாரை. விஞ்சுவான் மழையின் மேல் அம்பும் வேலும்பட. (பா : 348)

வான்மீகன் - வான்மீகி முனிவன். இயம்பு வான்மீக னென்னும் நன்னுன் மறையான். (யுத் : 1976)

வான்மீகனென்னும் நன்ருன் மறையான் - வான்மீகி எனப்படுகின்ற சிறந்த நான்கு வேதங்களையும் அறிந்த முனிவன். (யுத் : 1976)

வான்மீகி - வான்மீகி என்னும் முனிவன். வாங்கரும் பாதநான்கும் வகுத்த வான்மீகி என்பான். (பா : 32)

வான்முகடு - ஆகாயமுகடு. வானத்தின் மேல்முகடு. வான்முகடு எட்ட நின்ற மதில். (யுத் : 976) (யுத் : 298)

வான்மேலேறுதல் - உயிர் நீத்தல். வான் மேலேறினர் மிசையாளர்கள். (யுத் : 1831)

வான்வழங்கல் - மழை பெய்தல். மாதானம் கொடுக்கினும் வான் வழங்காதாக. (பா : 216)

வான ஆறு - ஆகாய கங்கை, அசும்பற வறந்தன வான ஆறெலாம். (யுத் : 478)

வானக்கங்கை தாங்கினுன் - ஆகாச கங்கையைத் தன் சடைமுடியில் தரித்தவனுன சிவபிரான். (யுத் : 2138)

வானகங் காண்டல் - இறத்தல். கயவனும் வானகங்கண்டான். (யுத் : 2570)

வானகத்தமுது உருப்பசி - வானுலகிலுள்ள அமுதம்போன்றவளாகிய உருப்பசி. (யுத் : 810)

வானக நாடு - தேவலோகம். வானகநாட்டு மாதர். ((யுத்:3962)

வானக மணிநீர்க்கங்கை தாங்கினுன் - தெளிந்த நீரையுடைய வானகக் கங்கையையைச் சடையில் தாங்கியவனுகிய உருத்திர மூர்த்தி. (யுத் : 2138)

வானகங் கவித்த அவனி - ஆகாயத்தாற் கவியப்பட்ட பூமி. ஆதி வானங்கவித்த அவனிவாழ் மன்னர். (பா : 1196)

வானங்காருறு குறிகாட்டுதல் - கார் காலம் வருங்குறியை வானம் தோற்றுவித்தல். ஆரியன் வரலோடும் அமுதளவிய சீதக் காருறு குறி வானங் காட்டியது அவணெங்கும். (அ : 790)

வானகம் - வானுலகம். முன்னம் புகுவேன் உயர்வானகம் யான் என்ருன். (அ : 836)

வானகம் ஏறுதல்-விண்ணுலகத்தையடைதல். இறத்தல். தேனமர் தெரியலான் தேவர் கைதொழ வானகம் ஏறினுன். (அ : 836)

வானகம் பற்றுதல் - இறந்துபோதல். அகம்பற்றிய துயரொடு இன்னும் போய் வானகம் பற்றிலா வலிமை கூறென்ருன் (அ : 574)

வானகமகளிர் - வானுலகத்து மகளிர். தெய்வ வானகமகளிர். (யுத் : 2775)

வானடைத்தல் - வானத்தை மறைத்தல். கிளர்வான் அடைத்தா னென மீதுயர் ஆக்கையினைப் படைத்தானே. (யுத் : 2343)

வானடைதல் - இறத்தல். வானுலகடைதல். காவலநீ தரியாது வானடைந்தாய். (அ : 1130)

வானத்தச்சன் - தெய்வத்தச்சன். விசுவகர்மா. வானத்தச்சன் சொல்லினுலமைத்ததாண்டோர் கொடுமுனைத்தண்டு கொண் டான். (யுத் : 2525)

வானத்தாரகை - விண்ணிடமாக விளங்கும் நட்சத்திரங்கள். நாகத்தண்மலரென்று வானத்தாரகை தாவுமன்றே. (பா : 930)

வானத்திடி - வானத்துத் தோன்றும் இடி. மராமரம் வேரோடும் ஈட்டி வானத்திடியென எற்றலும். (யுத் . 1034)

வானதி - வான் நதி. ஆகாய கங்கை. வானதி கடிதனுகி என்பு தோயுமேல் இருங்கதி பெறுவர். (பா : 525)

வானநாடியர் - வானுலகத்து அமர மகளிர். அம்பு போய் வான நாடியர் மார்பினுந் தைத்தவே. (பா : 1181) (யுத் : 2595)

வானநாடு - 1. அந்தரம். வானநாட்டுமிக் காரிழிந்தாலெனக் கணைகள் சிந்தினுன். (ஆ : 498) [பா : பே]
2. விண்ணுலகம். வான நாட்டுறைகின்ருர். (யுத் : 2692) வான நாட்டுறைவார் இசையுஞ் செல்வமும் இருக்கையுமிழந்த திங்கிவரால். (யுத் : 3216) வான நாட்டுத் திலோத்தமை. (யுத் : 3413)
3. விண்ணுலகத்தவர். வான நாட்டை வருகென. (யுத் : 3581)

வானநிலை - ஆகாயத்தினிடம். வான நிலைகளிற் பரக்க வேலை நீரினில் நிரம்பத் தூர்க்கும். (யுத் : 271)

வானநீர் - ஆகாய கங்கையின் நீர். (கலா) வானத்தினின்று கிடைத்தநீர். (வை.மு) வாருணம் நினைந்தனர் வான நீருண்டு. (ஆ : 1130)

வானநீர் ஆறு – ஆகாய கங்கை. வானநீர் ஆறு பாய்ச்சி ஜவனம் வளர்ப்பர் மாதோ. (பா : 931)

வானப்பரப்பு – தேவலோகம். வானப்பரப்பிலே பட்ட வெல்லாம் போரிலே பட்டுவிழப் பொருதநீ. (யுத் : 957)

வானப்புள் – ஆகாயத்திற் சஞ்சரிக்கும் பறவைகள். நீக்கொன மறிந்தன கரிந்தன வானப்புள்ளெலாம். (யுத் : 571)

வானம் – 1. பறித்த குழி. (சகரரால் தோண்டப்பட்ட கடல்) சிந்து அவானம் திரிந்துக. (சு : 72)

2. ஆகாயம். வானநிலே. (யுத் : 271)

3. தேவலோகம். வான நாடியர். (யுத் : 1181)

வானமகளிர் – தேவமாதர். வானமகளிரும் தம்வாய் திறந்து மாழ் கினர். (யுத் : 1951)

வானமழை – விண்ணினின்று கீழே விழும்மழை. மங்குலினதிர்வு வானமழையொடு மலேந்ததன்றே. (யுத் : 2539)

வானமாரி – விண்மழை. அரக்கர்விட்ட படைக்கல வானமாரி. (யுத் : 2639)

வானமானம் – வானத்துச்செல்லும் விமானம். வானமானம் வாடையிற் சுழித்துவத்து விழ்வவென்ன. (யுத் : 3355) வான மானங்கள் மறிற்தென. (யுத் : 2451)

வானமீன் – ஆகாயத்து விளங்குகின்ற நட்சத்திரங்கள். வானமீன் கையின்வாரி மணிக்கழங் காடுவாரும். (சு : 278) வானமீன் குலம் வழங்கும் வரைப்பு நீங்கி. (யுத் : 2991) (யுத் : 2934)

வான மீன் குலம் வழங்கும் வரைப்பு – நட்சத்திர மண்டலத்தின் எல்லே. (யுத் : 269)

வானமுகடு – அண்டகடாகம். விண்டு காலினல் அளந்த வான முகட்டையுங் கடக்க. (சு : 34)

வானமுங் கானமும் மாறுகொள்ளல் – ஆகாயமும் காட்டிடமும் ஒன்று மற்றென்ருக மாருடுதல். இருசிறை வீச்சின் ஏறலால் வானமுங் கானமும் மாறுகொள்ளவே. (ஆ : 902)

வானயாறு – ஆகாய கங்கை. வானயாறிம்பர் வந்தது மானுமால் (யுத் : 687) வானயாறு மீன் மலர்ந்தன வெனப்புனல்வறந்த. (அ : 755) (கி : 235) (பா : 1027) (யுத் : 1066)

வானரக் கடல் - வானர சேனை. அலர்ந்த தாமரைக் கண்ணனும் வானரக்கடலும். (யுத் : 4243)

வானரக் கோன் - வானரத் தலைவனான சுக்கிரீவன். மாருதியோடு நீயும் வானரக் கோனும். (யுத் : 3319)

வானரங்கள் - குரங்குகள். வானுளோர் அனைவரும் வானரங் களாய்... அவதரித்திடுமின். (பா : 300)

வானரங்கு - வான மாகிய நடனசாலை. வானரங்கின் நடம்புரி வாளிரவியான கண்ணுதல் வானவன். (பா : 716)

வானரச் சேனை - வானரப்படை. (கி : 706)

வானரத் தச்சன் - நளன். வந்தனன் வானரத் தச்சன். (யுத்:621)

வானரத் தலைமை - வானரங்கட்குத் தலைமைப்பதவி தந்தனன் நினக்கு யானே வானரத்தலைமை. (யுத் : 944)

வானரத்தலைவர் - வானரர்களுக்குத் தலைவர். மறுவற்ற அலங்கல் மார்பர் வானரத் தலைவர் போனார். (யுத் : 4283)

வானரத் தொழில் - குரங்குச் செயல். எங்கள் வானரத்தொழிலுக் கேற்ற புன்பகை காட்டும் யான் ஓர் புகழ்ப் பகைக் கொருவன் போலாம். (யுத் : 880)

வானப்புள் - ஆகாயத்திற் சஞ்சரிக்கும் பறவைகள். தீக்கொள மறிந்தன கரிந்தன வானப்புள்ளெலாம். (யுத் : 571)

வானரம் - குரங்கு. வானரஞ் சுட்ட தென்றுணர்தல் மாட்சியோ. (யுத் : 87)

வானர மகளிர் - வானரமாதர். வானர மகளி ரெல்லாம் வானவர் மகளிராய் வந்து. (யுத் : 4285)

வானராதியர் - வானரத்தலைவர். (கி : 705)

வானரேசர் - வானவீரர்கள். பாதுதானவர் வலித்தனர்.(யுத்:1393) (யுத் : 4086)

வானரேசன் - சுக்கிரீவன். வானரேசனும் விடணக்குரிசிலும். (யுத் : 4108)

வானரேந்திரன் - சுக்கிரீவன். மாருதி சாம்பவன் வானரேந்திரன். (யுத் ; 1982)

வானவர் – தேவர். பூவின் வானவர் கொண்டனர் போகவே. (அ : 825

வானவர்க்கிறை – தேவர்கட்கு அரசன். வானவர்க்கும் நீயே இறை தொன்மறை வல்லோய். (யுத் : 302) (யுத் : 3474)

வானவர்க்கிறைவன் – 1. இந்திரன். வானவர்க்கிறைவன் திறை தந்தன. (யுத் : 3574) (பா : 1015)
2. இராமபிரான். வானவர்க்கிறைவன் முறுவல்செய்து.(கி:159)

வானவர் களைகண் – தேவர்களை இரட்சிப்பவன் – (பிரகலாதன்) கனகனும் அவனில்வந்த வானவர்களைகணுன அனகனும். (யுத் : 273)

வானவர்தங் கோமான் – வானவர்தம் தலைவன். இந்திரன். மாமாலியு நீலனும் வானவர்தங்கோமானெடு தானவர் கோனி கலே ஆமாறு மலைந்தனர். (யுத் : 2331)

வானவர்தச்சன்–விசுவ கருமன். அரிதினிற் படைத்தான் சொன்ன வானவர் தச்சனும். (சு : 123)

வானவர்தலைவன் - இராமபிரான். தேவாதி தேவன். வானவர் தலைவனை வரவெதிர் கொண்டான். (ஆ : 106)

வானவர் தனிமுதல் – தேவர்களுக்கு ஒப்பிட்ட தனித்தலைவனுன திருமாலின் அம்சமான இராமன். வானவர் தனிமுதல் கிளை வொடும் வளர. (பா. : 307)

வானவர் தேவியர் – தேவமகளிர். யாவரும் வானவர் தேவியர் கோதில் செல்வத்து வைகினர். (அ : 1078)

வானவர் நாடு–தேவலோகம். வானவர் நாட்டினும் மழை பொழிந்த வால். (யுத் : 534)

வானவர் புகழுண்ட பாரவில் – வானவரின் புகழைக் கைப்பற்றிய பெருமைபெற்ற வில். ஒறுத்து வானவர் புகழுண்ட பாரவில் வளைய அறுத்து நீங்கினுன். (யுத் : 1154)

வானவர் பெருமான் – இராமன். வானவர் பெருமானும் மனநினை வினனுக- (பா.: 1263)

வானவர் மகளிர் – தேவமாதர். வானவர் மகளிர் ஊரும் மானம். (அ : 1051) ஆட்டுவார் அமரர் மாதர் ஆடுவார் அரக்கர் மாதர். (சு : 198)

வானவர் மண்டிலம் - தேவர் உலகம். வானவர் மண்டிலந் தூளி யார்த்திலதால். (யுத் : 2086) [பா : பே]

வானவில்லேறு - மேகத்திலுள்ள வலிய இடியேறு. வயப்புலி வான வல்லேற்றேடுயங்கும் ஆர்ப்பினன். (கி : 290)

வானவன் - 1. சிவபெருமான். வானவன் களனமர் கடுவெனக் கருகி. (பா : 225)

2. வானத்தை இடமாகக் கொண்டு உலாப்போகும் சூரியன்; வானிற் சஞ்சரிக்கும் கடவுளாகிய சூரியன். வானவர் குலத் தெமர். (பா : 822)

3. தேவனான இராமபிரான். என் துணை வானவன் வைத்த காதல். (சு : 60)

வானவார் மழை - வானத்திலுள்ள நீண்ட மேகம். வானவார் மழை நுழைதரு மதி. (அ : 182)

வான வாறு - வான ஆறு பார்க்க. (யுத் : 1066)

வானவில் - இந்திர தனு. (பா : 19) மண்டில வரிசிலை வான வில்லொடும் துண்ட வெண் பிறையெனத் தோன்ற. (யுத் : 3745)

வானவில்விடுதல் - வானவில்லைப் போலப் பலநிற ஒளி வீசுதல். (கி : 236) வடங்களுங் குழைகளும் வானவில்லிட. (பா : 805)

வானவேறு - இடியேறு. தொன்மனை நீண்டதால் வான வேறெறியக் கீழைநாள். (சு : 37)1

வானுட்டுமயில்கள் - விண்ணுலகத்திலுள்ள மயில்போன்ற சாயலை யுடைய தேவமாதர். (யுத் : 2628)

வானுடியர் - தேவமகளிர். வானுடியர் கண்ணெனும் வாளுடை யான். (ஆ . 85)

வானுடு - வான் நாடு. விண்ணுலகம். வான் நாட்டு மயில்கள். (யுத் : 2627) (யுத் : 3890)

வானுள்பவன் - சுவர்க்கத்திலிருந்து அவ்வின்பத்தை ஆள்பவனான தசரதன். வானுள்பவன் மைந்தன் வளைத்த விலான் தானே வரின் இன்று தடுப்பரிதால். (ஆ : 914)

வானுறு - தேவகங்கை. மாடத்திடையாடு கொடிகள் மீப்போய் வானுறு நண்ணிப் புனல்வற்றிட நகரும் மன்னே. (பா : 162)

வானிடு நீலவில் - மேகம் இயல்பாக இடுகின்ற நீல நிறமுடைய வில். (யுத் : 3706)

வானிடை மீன் - ஆகாயத்தில் நட்சத்திரங்கள். குருவிந்தக் கற்க கள் வானிடை மீனென விழுவன காணாய். (அ : 253)

வானிடையான கங்கை - ஆகாயத்தில் ஓடக்கூடிய கங்கையாறு. நளிர் வானிடையான கங்கை யரும் புனலாட்டினார் (அ : 1074)

வானிடை வைத்தல் - கொல்லுதல். வாலியை வானிடை வைத்து. (யுத் : 2800)

வானியங்கு தேரினன் - வானின் கண்ணே இயங்கும் (ஓராழித்) தேரினையுடைய கதிரோன். வானி யங்கு தேரினன் மகன். (கி : 239)

வானியங்கு தேரினன்மகன் - சுக்கிரீவன். (கி : 239)

வானில் வரும் பழங்கார்முகம் - இந்திர தனுசு. வழங்கா சிலை நாணொலி வானில் வரும் பழங்கார் முகமொத்த. (யுத் : 2911)

வானிற் செலுத்தல் - மேலுலகிற்குச் செல்லவிடல். செற்று வானிற் செலுத்தலுற்றான் எனா. (ஆ : 805)

வானிறத்துகில் - வெண்ணிறத்தையுடைய ஆடை. உடுத்த வானிறத் துகில் ஒழிந்த போன்றவே. (கி : 550)

வானிறம் - வால் நிறம். வெண்மை நிறம். வானிறத் தாளப் பந்தர். (யுத் : 797)

வானிற வெள்ளம் - வெள்ளிய நிறமுடைய நீர்ப்பெருக்கு. தாங் கொலியாற்றுத் தன் விழியிற் சேலுகள் வானிற வெள்ளத்து முழுகித் தோன்றுகின்றாள். (அ : 641)

வானின் உம்பரான் - வானுலகிற்கும் மேலான பரமபதத்துக்கு உரியவன். இராமன். மண்ணிடை விழுந்தனன் வானின் உம்பரான். (அ : 1123)

வானின் மீன்விழுதல் - வானினின்று நாண் மீன்கள் விழுதல். நள்ளின் வீசின வானின் மீன் விழுமென்ன. (யுத் : 2815)

வானின்ற பெரும்பதம் - பெரிய சுவர்க்கம். வானின்ற பெரும்பதம் வந்துருவாய் மேனின்றென நின்றுளிர் வெண் குடையான். (ஆ : 80)

வானினும் ஒப்புறழா – வானுலகத்தினும் ஒத்த பொருளைப் பெறுமல். உம்பர் நெடுவானினும் ஒப்புறழாப் பம்பும் மணி தாரணி பாய் பரிமா. (யுத் : 1718)

வானீர் – மழைநீர். வானீர் சண்டி மண்ணற வற்றிமறு குற்றமீன். (அ : 594)

வானுக்கப்புறத்துலகம் – முத்தியுலகம். இறந்த வாலி அந்நிலை துறந்து வானுக்கப்புறத்தலகனுனன். (கி : 388)

வானுகம் – வான்நுகம். பெரிய நுகம். தொளைகொள் வானுகச் சுடர் நெடுந்தேர். (யுத் : 1448)

வானுடையண்ணல் – சத்தியலோகத்துக்குத் தலைவனான பிரம தேவன். வானுடையண்ணல் செய்த மங்கையர் மருங்கு சென்றார். (யுத் : 2235)

வானுயர் அனுமன் – மிக உயர்ச்சியுள்ள அனுமன். வானுயர் அனுமன் முன்னே வாளினுற் கொன்று. (யுத் : 2809)

வானுயர் உவகை–மிகவும் ஓங்கிய (மிகப்பெரிய)மகிழ்ச்சி. வானுயர் உவகை வைகும் நெஞ்சினனுகி. (யுத் : 2887)

வானுயர் கற்பு – மிகச் சிறந்த கற்பு. குலத்துக்கேற்ற வானுயர் கற்பின் மாதரீட்டமும் காண்டல் மாட்சி. (யுத் : 3960) வானுயர் கற்பினுள். (சு : 1311)

வானுயர் தேர் – வான மண்டலத்திலே உயர்ந்த ஒற்றையுருளைத் தேர். வானுயர் தேரின் வைகும் நந்தா விளக்கின் வரும் எங்குல நாதன். (சு : 578)

வானுயர் தேரின் வைகும் நந்தாவிளக்கின் வரும் எம் குலநாதன் – வான மண்டலத்திலே எழுந்த ஒற்றை யுருளைத் தேரையுடைய சூரியனிடத்துப் பிறந்த எங்கள் கூட்டத்தரசனுன சுக்கிரீவன். (சு : 578)

வானுயர் தோற்றம் – மிகச் சிறந்த பிறவி. (வை.மு) நிலத்தின் எல்லையைக் கடந்து வானுறவுயர்ந்த புகழ்த்தோற்றம். (அண்) மைந்தரைப் பெற்று வானுயர் தோற்றத்தின் மலர்ந்தார். (யுத் : 4039)

வானுயர்ந்த – மிக மேம்பட்ட. வானுயர்ந்த வரத்தினுன். (யுத்:1338)

வானுயர் நிலை – உயர்ந்த பெருநிலையாகிய வீட்டுலகம். வானுயர் நிலையை வள்ளல் எய்தவர் பெறுவ ரென்றால். (கி : 370)

வானுலகந்தாய அடி – சத்திய லோகத்திலே தாவிய திரிவிக்கிர மனான திருமாலின் திருவடி. (யுத் : 4313)

வானுளமறம் – விண்ணையும் அளாவியுள்ள கொடுமை. வானுள மறத்திற் றேன்றுஞ் சொல்வழி வாழும். (யுத் : 1601)

வானுளோர் – தேவர்கள். மன்னு நம் பகைஞராம் வானுளோர். (யுத் : 110)

வானுளோர் வானுளான் - வானுலகத்திற்கு தேவனான இந்திரன். தேவர் தேவர். போர் வாலிபால் ஏகெனு வானுளோர் வானு ளான். (கி : 184)

வானுற நிவந்த செங்கேழ் மணி மரம் – ஆகாயத்தை யளாவ வளர்ந்த அழகிய ஒளியுள்ள இரத்தின மயமான மரங்கள். (ஆ : 656)

வானுறை கலுழன் – மேலுலகத்தில் வசிக்கின்ற கருடன். வானுறை கலுழன் வந்தான். (யுத் : 2216)

வானுறை தச்சன் – விசுவகர்மன். வந்தான் நெடுவானுறை தச்சன். (ஆ : 715)

வானெடு – ஒரு பொருட் பன்மொழி. மிக்க. வன் திசை பேர்வுறத் தொத்தி மீண்டில வானெடுந் தூளியே. (யுத் : 1003)

வானேறுதல் – இறத்தல். வானேறினர்கள் தேரும். (யுத் : 3474)

வானை முட்டுதல் – மிக உயரமாதல். முட்டியது வானை. (யுத்:3648)

வானை வென்றான் – இந்திரசித்து. வயிரச்சிலை வாங்கினன் வானை வென்றான். (யுத் : 1966)

வானோர் – தேவர்கள். வானோர் அந்தரத் தொலியிற் றீர்ந்த. (யுத் : 4276)

வானோர் உலகின் மேலுலகு – வைகுந்தம். வானோருலகின் மேலுலகோ வழியிறுதியின் உறையுளோ. (பா : 94)

வானோர் ஈட்டம் – தேவர்கள் கூட்டம். வானோரீட்டம் எதிர் வந்திடவே. (அ : 377)

வானோர் மருத்துவர் – அசுவினி தேவர்கள். வானோர் மருத்துவர் மைந்தர் வலிக்கண் மிக்கார். (யுத் : 833)

## வி

விக்கல் - 1. வீக்கல். அழித்தல். வீக்கல்என்பதன் விகாரம். கொல்லுதல். விக்கற்கொரு வெவ்வுரைத் தூதுவனென்று விட்டாய். (யுத் : 1960)
2. தடைப்படல். தொண்டை விக்கல். விக்காநின்றுர். (சு : 862) (யுத் : 2667)

விக்காது விழுங்குதல் - தடைப்பட்டு விக்கல் எழாமல் விழுங்குதல். பெருவாய் திறந்து விக்காது விழுங்க நின்ருள். (சு : 71)

விகடம் - வேறுபாடு. விகடமுற்ற மராமரம். (யுத்:2098) [பா:பே] விகடமுற்ற மரன். (யுத் : 2098)

விகடமுற்ற மரன் - பலவேறு வகைப்பட்டமரங்கள். (யுத் : 2098)

விகடவேடம் - நகைவிளைக்கும் கோலம். வெருவரு தோற்றத்தர் விகட வேடத்தர். (சு : 386)

விகற்ப உலகம் - வேறுபட்ட உலகம். அதாவது அதலம் முதலிய உலகங்கள். விண்ணினில் நிலத்தினில் விகற்ப உலகில். (ஆ:159)

விகற்பம் - 1. மாறுபாடு. விண்ணிடைப்படர்தல் விட்டெழு விகற்ப நினையா. (ஆ : 44)
2. சமர்த்தியம். (பழையவுரை) விதங்களின் நடித்திடு விகற்ப வழிமேவும் மதங்கியர். (கி : 522)
3. பலதிறப்பட்ட தன்மை. கி : 522)

விகற்பவழி - பலவேறுவகைப்பட்ட மார்க்கம். விதங்களின் நடித்திடு விகற்பவழிமேவும் மதங்கியர். (கி : 522)

விகாரப்பாடு - காரியப்பாடு. விகாரப் படுதலையுடையது. (அண்) மாறுபட்டுத் தோன்றும் வேறுபாடு. (கலா) விகாரப்படுதல் - ஒரு நிலையில் நிலைத்திராது இருத்தல், பிறத்தல், வளர்தல், பருத்தல், தேய்தல், அழிதல் என்ற உடலுக்குண்டாகின்ற அறுவகையான விகாரப்பாடு. (வை.மு) பொய்ம்மை அரவென விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம். (சு : 1)

விகுதி - விக்ருதி. விகாரம். மூலப்பகுதியினின்றும் பலவாய் வேறு பட்டு விரிந்த பொருள்கள். (அண்) விகுதியின் மிகுதிகள். (யுத் : 199) பகுதி யென்றுளது யாதினும் பழையது பயந்த விகுதியால் வந்த விளைவு. (யுத் : 4000) (யுத் ; 199)

விகுதியின் மிகுதிகள் – மூலப்பிர கிருதியின் விகாரமான மிக்க பொருள். (வை.மு) விகாரத்திற் பிறந்த கூட்டங்கள். (கலா) எவ்வகைப் பொருளும் அம்மூலப் பகுதியினின்றும் வேறுபட்டு விரிந்தன. (அண்) பகுதியினுட் பயன் பயந்தது அன்னதின் விகுதியின் மிகுதிகள். (யுத் : 199)

விச்சை – வித்தை. வில்லின் விச்சையின் கணவன். (யுத் : 3110) (யுத் : 3087)

விசயஞ் சொல்லல் – வெற்றி வாழ்த்துக் கூறுதல். ண்ணவர் விசயஞ் சொல்ல. (யுத் : 1857)

விசயத் தோள் – வெற்றி பொருந்திய தோள். வெற்புன்ன விசயத் தோள். (யுத் : 2194)

விசயந் தீர்த்தல் – வெற்றியை ஒழித்துக் கட்டுதல். இவன் விசயந் தீர்த்தானென உவந்தாடினர். (யுத் : 1140)

விசயப்பாடல் – வெற்றிப் பாடல். இலங்கை மூதூர் செற்றவன் விசயப் பாடல். (பாயி : 14)

விசயப் பாவை – வெற்றி மங்கை. விசயப் பாவை தூர்த்தன். (யுத் : 2545)

விசயப்பாவை தூர்த்தன் – விசயமங்கையைக்கூடி மகிழ்ந்தவன். (அனுமன்) (யுத் : 2545)

விசயம் – வெற்றி. வீரனும் எதிரே நின்றான் விண்ணவர் விசயம் வேண்ட. (யுத் : 1857)

விசயம்மென இயம்பும் பெண் – வெற்றிமகள். (அண்) விஜயலட்சுமி எனும் மாது. விசயம்மென இயம்பும் பெண்ணூர்த்தனள். (யுத் : 305)

விசயம் வைகும் விலங்கற்றோள் – வெற்றி தங்கியுள்ள மலை போன்ற தோள். விசயம் வைகும் விலங்கற்றோள் அலங்கல்வீர. (சு : 15)

விசாகம் – ஒரு நட்சத்திரம். விசை கொடு விசாகத்தை நெருக்கி ஏறினன் குசன். (யுத் : 3748)

விசாலை – ஒரு நகரம். விசாலை வாழ் சிகரக்குன்று போற் புயத் தரசன் வந்தடியிணை குறுக. (பா : 539)

விசி – கயிறுவகை. தேரும் விசிதுறந்த. (சு : 1161)

விசிகம் – அம்பு. விட்டனன் விசிகம். (யுத் : 2046) (யுத் : 2465)

விசிட்டம் – மேன்மை. அருமறை வழக்கு நீங்கா விசிட்டன். (பா : 256)

விசிட்டர் - பெரியோர். அருமறை வடிவு போன்ருளிர் விசிட்டரும். (பா : 256) [பா : பே]

விசிட்டன் - பெரியோன். (கலைக்கோட்டு முனி) (பா : 256)

விசித்த – தொடக்கிய. பூட்டப்பெற்ற. பெரும்பரம் விசித்த தொய்யன் மாநிலச்சுமை. (அ : 62)

விசித்தல் – 1. கட்டுதல். இறுக்கிக்கட்டுதல். வார்விசிக்கருவி. (ஆ : 581) வீக்கினன் அவ்வுடல் விசித்த பாம்பினே. (சு : 1110) எள்ளக்கட்டி எடுத்து விசித்து. (யுத் : 229) (யுத் : 2884)
2. எழுப்புதல். தோள்புடை விசித்த காற்றினே. (கி : 243) [பா : பே]
3. இணைத்தல். நெடுமுக டொழுக்கி ஊழுற விடுங்கலில் கைவிசித்தேற்றி. (அ : 780)
4. வீசுதல். (உ-வி) விசித்த காற்றினே. (கி : 243)

விசித்துக்கட்டுதல் - இறுகக்கட்டுதல். பெருஞ்சயிலத்தொடு எள் ளக்கட்டி யெடுத்து விசித்து. (யுத் : 229)

விசித்தெறிதல் - கட்டித்தூக்கி யெறிதல். எற்றி மாருதி தடக்கை களான் விசித்தெறிய. (சு : 792)

விசிப்பு – கட்டு. பிணிப்பு. பாசவிசிப்பு. (யுத் : 2176)

விசிறுதல் – விசிறியுதறுதல். கடிது கன்றிவிசிறம். (ஆ : 33)

விசும்படைதல் - வானஞ்சேர்தல்; இறந்து படுதல். போயே விசும் படைவாய். (யுந் : 3036)

விசும்பிடை – வானிடையிலே. அவ்வழி இமையவர்... கவ்வையர் விசும்பிடைக் கழறன் மேயினர். (அ : 1195)

விசும்பின் ஊர் – வானவரின் ஊர். படர் விசும்பின் ஊரிற் செல எறியும். (யுத் : 1837)

விசும்பின் வில் – வானவில். விசும்பின் வில் வெள்க வாங்கினுன் நெடுவடவரை புரைவதோர் வரிவில். (யுத் : 1451)

விசும்பினூருஞ்சுடர் – ஆகாயத்திற் செல்லுகின்ற ஞாயிறு. மின்னொளி மகுடகோடி துளக்கொளி விசும்பினூருஞ் சுடரையு மறைத்த. (அ : 260)

விசும்பு - 1. வான், ஆகாயம். ஆசையும் விசும்பும் நின்றமரர் ஆர்த்தெழ. (பா : 285)
2. தேவலோகம் எடுத்தாய் விசும்பை. (சு : 598)

விசும்பு தூர்த்தல் – ஆகாயத்தை மறைத்தல். விசும்பு தூர்ப்பன வாமென வெயிலுக விளங்கும் பசும்பொன் மானங்கள் போவன வருவன பாராய். (அ : 772)

விசும்புறைவோர் - வானத்தில் வாழ்பவரான தேவர்கள். ஆர்த்தார் விசும்புறைவோர். (யுத் : 1140) மேவாதவிரில்லை விசும்புறைவோர். (யுத் : 2918)

விசேடம் - சிறப்பு. விண்ணும் நிலனும்மென விசேட மிலது. (யுத் : 3661)

விசை – 1. மதத்தினுலுண்டாகிய வேகம். திசையானை விசை கலங்கச் செருச் செய்து மருப்பொசித்த இசை. (ஆ : 334)
2. வேகம். நடக்கின்ற அன்றி எழுகின்ற வேகம். விசையாடற் பசும்புரவி. (பா : 714) மிதியாற்பல விசையாற்பல கொன்முன். (யுத் : 1835) குருடர்கள் சோர விசையற்ருர். (யுத் : 2052)
3. வலி. பலபோர் விசைகட்டழிதானவர்.

விசைத்தல் - 1. விரைதல். விசைத்தெழுந்தான். (சு : 8)
2. வீசுதல். மாகால் விசைக்க வட மண்ணிலுற வாலோடா காயமுற்ற கதலி. (சு : 80)
3. வேகமாக வீசுதல். விசைத்தகல். (யுத் : 925) கைவிசைத் தெறிந்த தோமரம். (யுத் : 2292)

விசைத்துவிடுதல் – உரத்து எறிதல். (அண்) வேகமாய் எறிதல். (வை.மு) பருப்பதமெலாம் வேரொடுங்கடிதெடுத்து விசைத்து விடலும். (ஆ : 29)

விசைதிறத்தல் – வேகத்துடன் பிளத்தல். (அண்) மிகவேகமாக வெளிப்படல். விசைதிறந்துருமு வீழ்ந்தென்னவே தூணின்...... எற்றினன். (யுத் : 257)

விசையம் - விசயம் என்பதன் போலி. வெற்றி. மால்வரைகள் ஏழின் வலிசால் விசைய வார்சிலை. (ஆ : 27) அதன்மேல் விசையம் இல். (யுத் : 111)

விசையுறு பகழிமாரி - வேகம் பொருந்திய அம்பு மழை. கொற்ற வன் குவவுத் தோள்மேல் விசையுறு அம்புமாரி விழ்த்தினான். (யுத் : 3681)

விசையுறுபறவை - விரைவாகப் பறக்குந் தொழிலையுடைய பட்சிகள். விசையுறு பறவையும் விலங்கும். (யுத் : 22)

விசையுறு முரசு - விரைந்து பரவுகின்ற முரச வாத்தியங்கள். ஆழி ஏழு மொத்தார்த்ததென்ன விசையுறு முரசும்.(யுத் : 4276)

விஞ்சை - 1. வித்தைகள். வித்தை என்பதன் திரிபு. நின் மகற் களவில் விஞ்சைவந் தெய்து காலம்இன்றெதிர்ந்ததென்னவே. (பா : 332)
2. கல்வி. விஞ்சைகள் ஒன்றலாதன உதவிற்றுண்மையால். (அ : 1189)
3. மந்திரம். (அண்) வேதம். (கலா) முஞ்சியன் விஞ்சை கற்ப தொர் நாவன். (பா : 440)
4. தொழில்வன்மை. மலையை மாக்குரங்கு எஞ்சுறக் கடிதெடுத் தெறியவே நளன்விஞ்சையில் தாங்கினன். (யுத் : 628)
5. வித்தியாதரர். விஞ்சை மன்னவர். (சு : 280)
6. பிரம வித்தை. விஞ்சைதனையறிந்தும் அறியாதான்போல் நடிக்கின்ற யோகி. (சு : 1154)
7. சாஸ்திரம். விஞ்சை தெள்ளிய கடவுள் தச்சன். (சு: 1181)

விஞ்சைக் குஞ்சரம் - போர்க்கல்வியில் வல்ல யானை. கோடுயர் நெடு விஞ்சைக்குஞ்சரமதுபோல ஆடவர் திரிவாரும். (பா:1277)

விஞ்சைகள் - விஞ்சைகளாகிய மந்திரங்கள். நான்முகன் ஆக்கிய விஞ்சைகள் இரண்டும் அவ்வழி ஆக்கினன். (பா : 359)

விஞ்சை கற்பதொர் நாவன் - மந்திரங்களை உருச்சொல்லும் நாவினையுடையவன். (பா : 440)

விஞ்சைப் பூவையர் - வித்தியாதர மங்கையர். பொன்னகர் மடந் தையர் விஞ்சைப் பூவையர். (சு : 144)

விஞ்சைமன்னர் – காமநூலில் வல்ல ஆடவர். விஞ்சைமன்னர் பால் விரகமங்கைமார் நஞ்சுவிணையின் நடத்து பாடல். (கி:912)

விஞ்சை மாதர் – வித்தயாதர மகளிர். அரம்பையர் விஞ்சை மாதர். (யுத் : 2774)

விஞ்சையர் – வித்தியாதரர். மலைகளில் வாழும் தேவகணத்தாருள் ஒருசாரார். அன்பொத்த இருவராக இருத்தல் இவரியல்பு. கமருறு பொருப்பில் வாழும் விஞ்சையர். (பா : 925)

விஞ்சைவந்தெய்து காலம் – வித்தைகள் விரைந்து வந்து சேரும் காலம். ஐய நின் மகற்கு அளவில் விஞ்சை வந்தெய்து காலம் இன்று எதிர்ந்த தென்னவே. (பா : 332)

விஞ்சை வினை செய்தல் – மந்திரத்தை உச்சரித்தல். ஒரு விஞ்சை வினை செய்தான். (சு : 489)

விஞ்சை வேந்தர் – மாலிகாஞ்சனம் முதலிய மாயவித்தைக்குத் தலைவர்; வித்தியாதரர். மின்னவிர் சடை முடி விஞ்சை வேந்தர் கள். (ஆ : 567)

விட்ட ஆயின ஆக்கி – வைக்கப்பட்டன வாகச் செய்து. சேர்த்து விட்டு. அவை உறையுள்! விட்ட ஆயின ஆக்கி. (யுத் : 2656)

விட்டருளுதி – விட்டிடுவாய். அசைவில் கற்பின் அவ் வணங்கை விட்டருளுதி. (யுத் : 111)

விட்டவர் – துறந்தவர். செல்வம் ஈண்டென விட்டவர். (அ : 20)

விட்ட விட்டமலை – மேன் மேல் விட்ட மலைகள். விட்ட விட்டமலை மீள அவன் மெய்யின் விசையாற் பட்ட பட்ட விட மெங்கு முடலூறு படலும். (ஆ : 30)

விட்டழைத்தல் - வெளியிட்டுக் கூப்பிடுதல். வாயினுல் அட்ட திக்கினும் அப்புறமும் புக விட்டழைத்து ஒரு குன்றென வீழ்ந்தனன். (ஆ : 807)

விட்டன விட்டனவிடுகணை – பல முறை விட்டன வான எய்யப்படும் அம்புகள். விடாமல் எய்த அம்புகள். விட்டன விட்டன விடுகணை படுதொறும் பட்டன பட்டன படர்மத கரிபல. (யுத் : 1813)

விட்டனை போயினையோ – விட்டுப் போயினையோ. தமியேனுடனே போந்தாய் விட்டனை போயினையோ. (ஆ : 1110)

விட்டான் - நீளவிட்டான். (உ.வி) பற்றில்லாதவன். விட்டானுலகு யாவையும் மேலொரு கீழ் எட்டா ஒருவன் இடத்துடையை. (யுத் : 1750)

விட்டிட்டானலன் - விட்டுவிடவில்லை. (சு : 229)

விட்டிடல் (விட்டிடுதல்) - 1. விட்டுவிடுக. வெம்பகையாவது லோபம் விட்டிடல் என்று விலக்கினர்தாமே. (பா : 450)
2. மேற்கொண்ட ஒன்றைக் கைவிடுதல். விட்டிட்டானலன். (யுத் : 230)

விட்டில் - விட்டிற்பூச்சி. விளக்கெதிர் வீழ்ந்த விட்டிற் பான்மையை வியக்க வேண்டா. (யுத் : 1608) எரியிடை வீழ்ந்த விட்டில் அல்லரோ. (யுத் : 1649)

விட்டீதல் - விட்டொழிதல். விட்டீய. (யுத் : 3451)

விட்டீய - விட்டொழிய. (வை.மு) விண்ணிடம் தீய்ந்து போம்படி. (அண்) விண்தீய. (கலா) விட்டீய வழங்கிய வெம்படையில். (யுத் : 3451)

விட்டு-ஆகாயம். விண்டு என்பது விட்டு என ஆயிற்று. (விண்டு-வானம்) விட்டுயர் விஞ்சையர். (சு : 1243)

விட்டெழுபுரவி - விட்டுத்தாவிச் செல்லுகின்ற குதிரைகள். களிற்றின் மேலும் விட்டெழு புரவி மேலும். (யுத் : 1106)

விட்டெற்றுதல் - நெட்டித்தள்ளுதல். சுற்றி வால்கொடு தூவும் துவைக்கும் விட்டெற்றும். (யுத் : 2092)

விட்டேறு - வீசி எறியும் படை. கூர்மையான முனையை யுடைய எறிகோல். ஈட்டி வாளெழு விட்டேறு. (சு : 940)

விட்பகத்துறை கோளரி - மலையினது குகையினுள்ளே வசிக்கின்ற வலிய ஆண்சிங்கம். (யுத் : 4104)

விட்பு - மலையிற் பிளப்புள்ள இடம். மாமேரு விட்பகத்துறை கோளரி. (பா : 4104)

விடக்கயிறு - விடம்போன்ற பாசம். ஒருகாலன் விடக்கயிறெனப் பிறழும் வாள்வலன் விசித்தான். (யுத் : 3642)

விடக்கு - ஊன். சுவை கிடக்கும் விடக்கு அரிதெனக் கருதியோ. (பா : 393)

விடங்கிளர் விழியினுள் - நஞ்சுபோலும் கரிய விழிகளையுடையவள். (சுமித்திரை) விடங்கிளர் விழியினுள் மீட்டும் என்றனள். (பா : 287)

விடங்கொள் நோக்கி - நஞ்சுத்தன்மையுள்ள கண்களையுடையவள். (அ : 772, b)

விடந்துடிக்கின்ற கண்டத்தண்ணல்-விஷம் ததும்புகின்ற கண்டத்தையுடைய பெருமானான சிவன். (யுத் : 2967)

விடநாகம் - விஷத்தையுடைய பாம்புகள். விடநாகமுழைத்தலை விம்மலுழந்து. (சு : 51)

விடநுங்கிய கண் - விஷத்தையுட்கொண்டகண். விடநுங்கிய கண்ணுடையாரிவர் மெல்ல மெல்ல மடமங்கையராய். (ஆ : 703)

விடம் - நஞ்சு. ஆலகாலவிடம். விடவாரி. (யுத் : 3806) (யுத் : 1294)

விடமல விழியெனும் வெகுளிக்கண்ணினர் - விடமல்ல கண் விழியே என்று சொல்லுமாறு வெகுளிதோன்ற உக்கிரமாக விழிக்கும் கண்களையுடையவர்கள். (யுத் : 489)

விடர் - தீயொழுக்கமுடைய காமுகர். சுரதநூல் தெரிவிடர். (கி : 401)

விடரகம் - மலை. விடரகங்களும் வேய் செறி கானமும். (ஆ:144)

விடல் - விடுதல். விடலம். (யுத் : 3953)

விடலம் - விடமாட்டோம். அன்னை நின் பாதமே விடலம் மெய்ச் சரண் என்று விளம்பலும். (யுத் : 3953)

விடலை - ஆண்பாற் சிறப்புப் பெயர். விறப்பொடு வணக்கஞ் செய்த விடலை. (பா : 687)

விடவரா - விஷப்பாம்பு. விடவரா வாய்பிளந்துக்க செம் மணி. (பா : 349)

விடவாரி - விஷ நீர். மாகடல் போலும் விடவாரி போய்வார் கின்ற. (யுத் : 3806)

விடவிட - 1. விடுந் தோறும். அனிக ராசிமேல் விடவிட விசும் பிடை மிடைந்து வீழ்வன. (யுத் : 1773)

2. எய்து கொண்டேவர. கற்றன படைகள் யாவும் விடவிட முனிவன் தண்டம் விழுங்கி. (பா : 665)

விடவேர் - நஞ்சினது வேர். வெந்திற லரக்கர் விடவேர் முதலறுப் பான் வந்தனன் மருத்துவன் எனத்தனி வலிப்பான். (ஆ:161)

விடற்கரும்வினை - விடுதற்கு முடியாத இருவினைகள். விடற்கரும் வினையறச் சிந்தி. (யுத் : 1787)

விடன் - நஞ்சு. விடனெக்கும் நெடிய நோக்கின் அமிழ்தொக்கும் இன் சொலார். (பா : 1056)

விடாத - நீங்காத. விடாத குலத்த கால்வயம். (யுத் : 107)

விடாது - கைவிடாது. (யுத் : 373)

விடாய் - தாகம். விண்ணின் மேகத்தை வாரி வாய்ப்பிழிந்திடும் விடாயர். (யுத் : 3266)

விடிதல் - கழிதல். விடியப் பார்ப்பதோர் வெள்ளிடை கண்டிலர். (யுத் : 3279)

விடி நாள் - விடியலாகிய நாட்காலை. முதுகங்குல் விடி நாள் கண்டும். (ஆ : 1067)

விடியல் - பொழுது விடிதல். விடியல் காண்டலின் ஈண்டு தன் னுயிர் கண்ட வெய்யாள். (ஆ : 312) சாருதி விடியல். (அ:660)

விடியா இருள் - என்றும் புலராத இருள்; பெருந் துயராகிய இருள். விடியா இருள்வாய் எனை விசினையே. (யுத் : 2635)

விடியாய் - தெளிவுபடுத்தாமல் நிற்பாய் என்னெக்கும் இன்ன செயலோ இதென்னின் இருளொக்கு மென்று விடியாய். (யுத் : 2205)

விடிவதன் முன்னம் - பொழுது விடியுமுன்பு. மேற்றிசை வாயில் சேர்தி விடிவதன் முன்னம் வீர. (யுத் : 911)

விடிவு - வருத்தம் தீரும்வகை, நீங்கும் வழி. வினையேற் கினி என் விடிவாகு மென்ன. (ஆ : 712)

விடுக்குதல் - அனுப்புதல். ஈண்டெனை விடுக்குனவ யாதெனின். (யுத் : 39)

விடுகணை - ஏவப்பட்ட அம்புகள். விற்றொடையின் விடுகணையால் வெந்தொழியும். (யுத் : 408) (யுத் : 3478)

விடுகாது - தொங்குகின்ற காது. இவள் தன் விடு காதும் கொடிமூக்கும். (ஆ : 344)

விடுகிற்கின்றிலன் - விடாதவன். நாயகன் நாமம் விடுகிற்கின்றிலன் ஆகலின். (யுத் : 230)

விடுஞ்சுவற்புரவி - கத்தரித்து விடப்பட்ட பிடரி மயிரையுடைய குதிரை. விடுஞ் சுவற் புரவியோடும் வேறு வேறேற்றிச் சென்ற. (அ : 1044)

விடுத்தல் - 1. அனுப்புதல். நீ வினையவன் விடுத்தான் என்னை. (சு : 525) அந்தணர் வேள்வியின் ஆக்கி... விடுத்ததோர் வய வெம் பூதமோ. (சு : 1114) எனை விடுக்குவையா மெனின். (யுத் : 39)
2. விடை கொடுத்தனுப்பல். உறையுள் அவ்வழி விடுத்தபின். (யுத் : 461)
3. விடுதலை செய்தல். அமரர் தங்களை விடுத்தனை. (பா : 1301)

விடுதல் - 1. தங்குதல். சோலையின் புறத்துப் போர்த்தென விட்டது குரிசிலை விடாத சேனையே. (அ : 539)
2. தொங்குதல். விடுகாதும். (ஆ : 344) தாழவிட்ட செத்தோலன். (அ : 648)
3. விடுவித்தல். மேய தெய்வப் படைக் கலத்தை மீட்டான் அமரர் போர் வென்றுன். (சு:1164) விட்டிலையோ. (யுத்:1298) வான் விடின் விடாது. (யுத் : 2189)
4. ஏவுதல். கொடியோன் விட்டான் அவர் வீசினாரால். (யுத் : 245) சாபம் விடுந்தனையே. (ஆ : 913)
5. கைவிடுதல். நாம் விடாது வேட்டுமோ. (யுத் : 373)
6. செல்லுதல். விடுதிசை. (யுத் : 3473)
7. அனுப்புதல். உறுபடர்சுடைக் காசுக்கரசினை உயிரொப்பானுக் கறிகுறியாக விட்டாள். ( 735) விரைந்து விட்டார். (யுத் : 4303)
8. துறத்தல் - கைவிடுதல். விட்டவரல்லரேல் யாவர் விடுவார். (பா : 20) (உ.வி) (யுத் : 245) விட்டது கண்டு நாம் விடாது வேட்டுமோ. (யுத் : 373)
9. உடன் சேர்தல். வாளும் வேலும் விட்டனாயின அனைய கண்மயிலே. (அ : 738)

10. தொடங்குதல். விளைந்தது பெரும் போரென்ன விட்டது விடாது நம்மை. (யுத் : 902)

11. விட்டிடுதல். விடாது நம்மை. (யுத் : 902) விடுவிடு. (கி : 251) விடுகிலீர். (சு : 847) விட்டமாயினும். (யுத் : 3256)

12. எறிதல். செறுத்து விட்டன படையெலாம் கணைகளாற் சிந்தி. (யுத் : 1192)

13. பெருகுதல். நெடுங்கணை பாய்தலினால் விடுமாறுதிரப் புனல் வீழ்வனவால். (யுத் : 2925)

14. பரத்தல். சொல்லப்படுதல். விடுதிசை செவிடு பிளந்தன. (யுத் : 3473)

15. கக்குதல். அகடு தீவிடச் சுழலும் வேலை. (கி : 116)

16. சோரவிடுதல். நாயகன் நாமம் விடுகின்றிலன். (யுத்:235)

17. துளித்தல். தேன் விடுதுளபத்தாராய். (யுத் : 2189)

விடுதல் கண்டாய் - விட்டாய். விடுதலைச் செய்தனை. முற்று மோர்ந்தார் விளைவன சொன்ன போதும் கொள்கிலாய் விடுதல் கண்டாய். (யுத் : 1251)

விடுதிசை - பரந்த திசைகள். (யுத் : 3473)

விடு தேர் - செலுத்திய தேர். (சு : 912)

விடும் பாக்கிய முடையார் - பாக்கியமில்லாதவர்கள். (அரக்கர்) நீர் குறை தேர விடும் பாக்கிய முடையார்களைக் குலத் தோடற வீட்டி. (யுத் : 3034)

விடுவது - விடுவிப்பது. விடுவதோர் தயாவு தாங்கலால். (ஆ:685)

விடுவிடு - விரைவில் விட்டுவிடு. விரைவுபற்றி வந்த அடுக்கு. விலக்கலை விடுவிடு. (கி : 251)

விடை - 1. காளை. இடபம். விடையன்னதொர் நடையான். (அ : 612) விடை பிணிப்புண்டது போலும் வீரனை. (சு : 1067) 2. அனுமதி. உத்தரம். போகென்று விடையுமீந்தான். (யுத் : 1346) விடை தந்திக. (அ : 572) (பா : 1378)

விடைக்கிளையான் - இடபம் போன்ற இராமபிரான் தம்பியாகிய இலக்குவன். மீளா வினை நூறும் விடைக் கிளையான். (யுத்:2334)

விடை கொள்ளுதல் - உத்தரவு பெற்றுக்கொள்ளுதல். வேகின்ற சிந்தையான் விடை கொண்டேகினுன். (ஆ : 828) கானம் இன்றே போகின்றேன் விடையுங் கொண்டேன். (அ : 295) விடை கோடிர் கடிது. (கி : 775)

விடை கோடிர் - விடை கொள்ளுங்கள். (கி : 775)

விடைத்தல் - 1. பெருஞ்சினங் கொள்ளுதல். உருமேறென விடையா. (பா : 1364) விடைத்தான். (ஆ : 748)
2. செருக்கடைதல். உற்றெதிர் விடைத்தடர்த் தெதிர்ந்தவர். (ஆ : 470)

விடைத்தெழுதல் - வெகுண்டெழுதல். விடைத் தெழுந்தன யானை தேர் பரிமுதல். (யுத் : 3780)

விடைதந்தீக - விடைதருக. வேறிலா அன்பினுன் விடைதந்தீ கென. (அ : 572)

விடைதருக - விடை கொடுக்க வேண்டும். நீ விடை தருகென நிறுவினன் நெறியால். (அ : 110)

விடைதல் - ஓடுதல். தெவ்விடை வில்லவன். (ஆ : 1075)

விடை நல்குதல் - விடை கொடுத்தல். என்றே விடை நல்க இறைஞ்சியெழா. (யுத் : 1695)

விடைப்பாகன் - ஆனேறுயர்த்த சிவபிரான். வானிற வருவியம் மழவிடைப்பாகன். (அ : 743)

விடை பொரு நடையினுன் - காளையை ஒத்த நடையினை யுடையவன். (தசரதன்) விடை பொரு நடையினுன் சேனை வெள்ளம். (பா : 825)

விடை போலிளைய வீரன்-காளை போன்ற இளையவீரன். (இலக்குவன்) வெவ்விடை போலிளைய வீரனை இவ்விடை நாடினை நீர் கொணர் கென்றுன். (ஆ : 1071)

விடைமேல் வருவிமலன் - சிவபெருமான். (யுத் : 3014)

விடை மேலவன் - இடபவாகனனுன சிவபெருமான். விடை மேல வன் சிரிப்பொத்தன. (யுத் : 3005)

விடையருளுதிர் - விடை தருக. அந்தணர் தமையெல்லாம் அருளுதிர் விடை என்னு. (அ : 676)

விடையவன் - சிவன். வெருவுமாலமும் பிறையும் வெவ்விடையவற் கீந்து. (பா : 503)

விடையன்னதோர் நடையான் - காளையின் நடைபோலும் நடையினை யுடையவன். (இராமபிரான்) வெளியன்னதோர் இடையாளொடும் விடையன்ன தோர் நடையான். (அ : 619)

விடையா - பெருஞ்சினங் கொண்டு. (பா : 1364)

விடையின்பாகன்-விடையேறிச் செலுத்துபவனான உருத்திரமூர்த்தி. வெள்ளியங்கிரியினை விடையின் பாகனொடு அள்ளி விண்தொட எடுத்தார்த்த ஆற்றலாய். (யுத் : 37) (யுத் : 2240) (யுத் : 3996)

விடை யேறினர் - காளையின் தன்மைமிக்கவர். தேரேறினர் பரி யேறினர் விடை யேறினர். (யுத் : 2512) விடையையூரும் நாரி யோர் பாகன். (யுத் : 4217)

விடைவருபாகன் - விடைமேலேறிச் சஞ்சரிப்பவனான உருத்திர மூர்த்தி. விடைவரு பாகனைப் பொருவு மேன்மையோர். (யுத் : 481)

விடைவலோன் - உருத்திரன். (கி : 61)

விடைவலோன் - விடையையேறிச் செலுத்துபவனான உருத்திர மூர்த்தி. தார்கெழு மௌலிபத்தின் தனிமணி வலிதிற்றந்த வீரதை விடை வாலோற்கு முடியுமோ. (யுத் : 885)

விண் - 1. தேவலோகம். வெள்ளநீர் உலகினில் விண்ணில் நாகரில். (அ : 18)
2. வானம். மழைகும் விண்துளங்கிட. (ஆ : 8) விண்மதி. (பா ; 1063)

விண் கலத்தல் - இறத்தல். இடபன் விண் கலந்தான். (யுத் : 2569)

விண்குலாம் வாயில் - ஆகாயம் வரையில் ஓங்கி வளர்கின்ற நான்கு வாயில். மேயசேனை விரிகடல் விண்குலாம் வாயிலூடு புறப்பட்டு வந்ததே. (யுத் : 998)

விண்டதாமென - தோன்றினாற் போல. வெளிப்பட்டாற் போன்று. ஆயிரம் அருக்கர் விண்டதாமென விசும்பிடைத் திசையெலாம் விளங்க. (யுத் : 4065)

விண்டலத்துறையும் நல் வேந்தன் - விண்ணுலகத்தில் இருக்கின்ற நல்ல தேவேந்திரன். விண்தலத் துறையும் நல் வேந்தற் காயினும் உண்டிடர் உற்றபோது என் உறுதன.(அ : 477)

விண்டலம் - ஆகாயம். விண்டலமிருபுடை விளங்கும் மெய்ம்மைய. (சு : 591) (கி : 377) (யுத் : 645)

விண்டலம்புக நீங்கிய வெண்புனல் - திருமாலின் திருவடிகளைப் பிரமன் கழுவியதனால் தோன்றி வானத்தினின்று இறங்கி வந்த வெண்மையான நீரையுடைய கங்கையாறு. (வை.மு) (கலா) ஆகாய கங்கையின் அலைகின்ற நீர் நீங்கும்படி. (அண்) விண்டலம் புகநீங்கிய வெண்புனல் விண்டு அலம்புக நீண்மரம் வீழ்ந்தவே. (சு : 722)

விண்டல மேவுதல் - இறந்து வீர சொர்க்கத்தை யடைதல். வஞ்சர் மாயையால் விண்டலமதனில் மேயினர் கொல். (சு : 1280)

விண்டவர் - 1. பகைவர். விண்டவர் வலத்தையும் விரித்துரை செய்கேனே. ( சு: 613) [பா : பே]
2. பிரிந்தவர். விண்டவரோடு உடன் வியாது. (சு : 322)
3. மாறுபட்டவர். விண்டவர் நம்புகல் மருவி வீழ்வரோ. (யுத் : 396)

விண்டவன் - உலைந்தோடியவன். (ததிமுகன்) விண்டவன் நம்மெதிர் மீண்டுளானெனின். (சு : 1295)

விண்டவாய் - முன்நிற்க இயலாது தோற்றவாய். விண்டவாய்ச் சிறு மின் மினி என்னவும் விளங்கா. (சு : 111)

விண்டார் - பகைவர். ஆண்மை நீங்கினவர். (அண்)மனம் வேறுபட்டவர், விண்டாரே யல்லாரோ வேண்டாதார். (ஆ : 355)

விண்டிட-நீங்கும்படி. அண்டர்கள் துயரமும் அரக்கர் ஆற்றலும் விண்டிடப் பொலிதரும் வினைவலானை. (பா : 252)

விண்டிறந்திட-ஆகாயம் பிளவுபடும்படி. புண்டிறந்தன நெஞ்சன் பொருமலன் விண்டிறந்திட விம்மியாற்றினுன். (யுத் : 3178)

விண்டு - 1. திருமால். விண்டு காலினால் அளந்த வான்முகடு. (சு : 33) அடல்விண்டு வென. (யுத் : 1762)
2. ஆகாயம். விண்டுறைதேவர். (அ : 1203)

3. பிளந்து. விண்டு அலம்புக நீண்மரம் வீழ்ந்தவே. (சு:722)
4. வெளிப்படுத்தி. வீசின நறும்பொடி விண்டு வாடையே, (சு : 553)
5. காற்று. (உ.வி) வாடைவிண்டு. (கி :553)
6. மலை. (உ.வி) (கி : 553)
7. வேருகி. வெடித்தன மலைகள் விண்டு. (யுத் : 2054)

விண்டுவின் உலகு – விட்டுணுலோகம். பரமபதம் புண்டரீகத் தனி முதற்கும் போக்கரு விண்டுவின் உலகிடை விளங்கினுனரோ. (அ : 1142)

விண்டுவின் நாட்டவர் – நித்திய சூரிகள். விண்டுவின் நாட்டவர் பைம் பொன்மாரி சொரிந்தார். (ஆ :.941)

விண்டுவின்படை – திருமாலின் படைக்கலம். வைஷ்ணவாஸ்திரம். விண்டுவின் படையே யாதிமேவயன் படையிருக. (யுத் : 3482)

விண்டுவின் படைக்கலம் – நாராயணஸ்திரம். வீடணன் சொல விண்டுவின் படைக்கலம் விட்டான். (யுத் : 3517)

விண்டுவின் மார்பிற் காந்தும் மணி – கௌத்துவம். (யுத் : 4297)

விண்டுழி – பிரிந்தகாலத்தில். விண்டுழி ஒருநிலை நிற்பர். (யுத் : 376)

விண்டொட நிவந்த கோயில் – ஆகாயம் அளாவ உயர்ந்த அரண்மனை. விண்டொட நிவந்த கோயில் வேந்தர் தம் வேந்தன் தன்னைக் கண்டிலன். (அ : 264)

விண்ணகம் – 1. சுவர்க்கம். உறையும் விண்ணகம் உடலொடும் எய்தினர் ஒத்தார். (அ : 75) மேருவை உருவிப்போய் விண்ணகத்தையுங் கடப்பன. (யுத்:1552)
2. விண். மேகம்.விசும்பிடம். மழைத்த விண்ணகமென முழங்கி. (கி : 947) விண்ணகத்தினை மறைத்தன. (கி : 286)

விண்ணடைதல் – இறந்து மேலுலகஞ் செல்லுதல். விண்டானடைந்தான் அதிகாயனும் வீர. (யுத் . 1956) விண்ணடைதும் என்றுரை. (சு : 323)

விண்ணருள வந்ததொரு மெல்லமுதம் – தேவலோகம் கொடுக்க வந்ததான ஒப்பற்ற இனிய அமுதம். விண்ணருள வந்ததொரு மெல்லமுதமென்ன வண்ணமுலை கொண்டிடை வணங்கவரு போழ்தத்து. (அ : 259)

விண்ணவர் – தேவர்கள். விண்ணவர் விமானம். (ஆ : 12)

விண்ணவர்தரு – கற்பகம். விண்ணவர் தருவும் விஞ்சை நாகமும் சுரந்த நீந்தேன். (ஆ : 573)

விண்ணவர் படைகள் – தேவர்களின் அஸ்திரங்கள். விண்ணவர் படைகள் வீசி மூடுதும் இவனை. (யுத் : 3481)

விண்ணவன் – ஒரு தேவன். நெறிநின்று பொறி களைந்தும் வென்றவன் அல்லானுகில் விண்ணவனுதல் வேண்டும். (சு : 515)

விண்ணுட்டவர் – விண்ணுட்டிலுள்ள தேவர்கள். விண்ணுட்டவர் மண்ணவர் விஞ்சையர். (அ : 415)

விண்ணுடியர் – வானுலகப் பெண்கள். விண்ணுடியர் விஞ்சையராஞ்சொலினுர். (யுத் : 1715)

விண்ணுடு – சுவர்க்கம். வீர சொர்க்கம். வேண்டரு விண்ணுடு. (சு : 2)

விண்ணுடேற்றுதல் – வீர சொர்க்கத்தில் ஏற்றுதல். இன்றிவன் தன்னை விண்ணுடேற்றி. (யுத் : 2511) (யுத் : 2521)

விண்ணிடு வில் – இந்திரவில். மிடல் கொள் வெஞ்சிலை விண்ணிடு வில் முறிந்தென்னக் கிடந்தது கண்டார். (அ : 983)

விண்ணிடைப் படர்தல் – மேலுலகடைதல். சாதல். விண்ணிடைப் படர்தல் விட்டு எழுவிற்ப நினையா. (ஆ : 44)

விண்ணிடையுலகம் – வானத்திலுள்ள தேவலோகம். விண்ணிடை யுலகமென்னும் மெல்லியல். (சு : 92)

விண்ணிற் சுடர் - ஆகாயத்தில் விளங்கும் இளஞ்சூரியன். விண்ணிற் சுடருங்கெட மெய்யினீர் விரிப்ப. (அ : 409) [பா : பே]

விண்ணின்மீன் – ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்கள். விண்ணின் மீனினைக்குணிப்பினும். (யுத் : 838)

விண்ணிருடு - சுவர்க்கலோகம். நண்ணினுர் இமையவர் நங்கை மாரொடும் விண்ணிருடுறைவிடம் வெறுமை கூரவே. (யுத்:1989)

விண்ணுநீர் - மாரிநீர். விண்ணுநீர் மொக்குளின் விரியும் யாக்கை. (அ : 1144)

விண்ணுலகம் - தேவலோகம். விண்ணுலகம் முதலாக எவ்வுலகு முடையான். (ஆ : 341)

விண்ணுளோர் - விண்ணுலகத்தவரான தேவர்கள். (கி : 81)

விண்ணுளோர்கள் - விண்ணுலகத்தவரான தேவர்கள். (கி : 239)

விண்ணுறுதல் - சுவர்க்கமடைதல். வேற்றடங்கலர் விண்ணுற வென்றிடும் ..... தோளினுய் (அ : 829) [பா : பே]
2. ஆகாயத்திலே பொருந்தல் மிக உயரமாக இருத்தல். விண்ணுறு கலுழன்மேல். (சு : 678)

விண்ணுறைவோர்கள் - விண்ணுலகத்து வாழும் தேவர்கள். (யுத் : 4293)

விண்ணேறுதல் - தேவலோகமடைதல். உய்விடத்துதவற்குரியானும் தன் மெய்விடக் கருதாது விண்ணேறினுன். (ஆ : 210)

விண்ணைக்கல்லுதல் - விண்ணைப் பேர்த்தெடுத்தல் விண்ணைக் கல்லுமாற்றலேன். (யுத் : 116)

விண்ணைக்கல்லும் ஆற்றலேன் - விண்ணுலகத்தையும் பெயர்க்கும் வல்லமையுடையேன் யான். (யுத் : 116)

விண்ணை விழுங்குதல் - ஆகாயத்தையும் உட்கொள்ளுதல். விண்ணை விழுங்கிய தூளி. (யுத் : 2275)

விண்ணோர் - தேவர்கள். விண்ணோர் ஏத்த. (அ : 609) விண்ணோர் வர்புக அமைத்த படுகால் கொல். (சு : 161)

விண்தருதல் - வீட்டுலகு தருதல். தமக்குவிண் தருவான் விசும்புதூர்ப்பனவாமென. (அ : 772)

விண்பாலவர் - தேவர்கள். (சு : 82)

விண்பாலவர் நாயகன் - தேவர் தலைவனுன இராமபிரான். (சு . 82)

விண்புகுதல் - விண்ணுலகுபுகுதல். போயது தாதை விண்புக்க பின்னரோ ஆயதன் முன்னரோ. (அ : 854)

ண்பெறுதல் - இறத்தல். விண்பெற்ருயெனினும் நன்ரும். (யுத் : 1620)

விண்முழுதாளி – இந்திரன். விண்முழுதாளிசெய்த வினையென வெகுண்டு. (பா : 670)

வித்தக – அறிஞனே. தூதனே. (உ.வி) வித்தகசேறி என்ருர். (சு : 14)

வித்தகம்– 1. ஞானம். அறிவு, விவேகம் வித்தகமுனிவர். (பா:283) போர்கெழுபடையுங்கற்ற வித்தகப் புலவர். (சு : 824)

2. திறமை. சாமர்த்தியம். வித்தகமும் விதிவசமும் வெவ்வேபுறங்கிடப்ப. (பா :768)

3. சின்முத்திரை. வித்தகம் தரித்த செங்கை அமலே. (பா.மி:32)

4. ஆற்றல் – சமர்த்து. வித்தக வில்லினன். (யுத் : 448)

5. வியக்கத்தக்கத்தன்மை. வித்தக வில்லினன். (யுத் : 2133)

வித்தகர் – 1. ஞானிகள். அது தம்மைத் தாமுணர் வித்தகர் அறிகுவர். (யுத் : 191)

2. அறிவாளிகள். திறமையுள்ளவர். எத்துணைபோதும் கையென்றியம்பினல் எண்ணற்கேற்ற வித்தகருளரே. (யுத் : 262)

வித்தகவில்லினன் – வியக்கத்தக்க வில்திறமுடையவன். (இந்திரசித்து) வித்தக வல்லினனைக் கொல்வது விரும்பி. (யுத் : 2183)

த்தகன் – 1. எல்லாம் வல்லவன். பேரறிவுடையவன். வல்லமை பெற்றவன். [வித்திகன்] நீதிவித்தகன் தன்னருள் நேர்ந்தனிர் யாதுமக்கரிது. (பா : 700)

2. அறிஞன். தேரிடை வித்தகன் சேறன் மேயினன். (அ:576)

3. எடுத்துக்கொண்ட காரியத்தைத் திறமையாகச் செய்பவன். சாமர்த்தியசாலி. வித்தகன் விடிந்ததென்ன முடிந்ததென்வேக மென்ருன். (யுத் : 2709) வித்தக யாரினி விரம் வினைப்பார். (யுத் : 2263)

வித்தாய் நடத்தல்–முக்கியமாம் பொருட்டு (ஆதாரமாம் பொருட்டுப்) பணிவாய் நடத்தல். (வித்து–மரமுண்டாதற்குக் காரணமாகிய விதை; இலக்கணையால் இங்கு காரணம் என்ற பொருளில் வந்தது (வை.மு) வினைவிற்கெல்லாம் நல்வித்தாய் நடந்தான் முன்னே என்பரோ. (யுத் ; 2162)

வித்தியாதர்-வித்தியாதரர். பராவரும் வித்தியாதர் பன்னியான். (ஆ : 276) [பாபே]

வித்து – விதை, ஆதாரம். முதற்காரணம். வினைவிற்கெல்லாம் நல் வித்தாய். நடந்தான் முன்னே என்பரோ. (யுத் : 2162)

வித்துதல் – 1. பரப்புதல். (அண்)
2. கீழே விழுத்துதல். விதை விதைத்தல். (வை.மு) வறுத்து வித்திய அனையன வல்லயிற் பரல்கள். (அ : 729) வித்திய வாளியான். (யுத் : 2573)
3. தூவுதல். விதையிட்டாற்போன்று விடுத்தல். கொற்றவன் குவவுத்தோள்மேல் விசையுறு பகழிமாரி வித்தினுன். (யுத்:3681) வேலை மீனெலாம். பகழியாக வித்தினன் வெகுளி மிக்கோன். (யுத் : 1873)
4. விதைத்தல் – மீனெனலாம் பகழியாக வித்தினன் வெகுளி மிக்கோன். (யுத் : 1873)

விதர்ப்பநாடு – விதர்ப்பதேசம். விதர்ப்பநாடு எளிதின் எய்தினர். (கி : 906)

விதர்ப்பம் – விதர்ப்பநாடு. விங்குவேலி விதர்ப்பம். (கி : 759)

விதர்ப்பர்கள்-விதர்ப்ப நாட்டரச பரிவாரங்கள். விலாடர் விதர்ப்பர் கள். (பா : 1195)

விதர்ப்பை – விதர்ப்ப நாட்டரசன் மகள். சகரன் மூத்த மனைவி. விறல்கொள் வேந்தனுக்குரியவர் இருவரில் விதர்ப்பை பொறை யின் நல்கிய அசமஞ்சன், (பா : 511)

விதனவெங்கணிராக்கதர் – கண்டோர்க்கு விசனத்தை யுண்டாக்க வல்ல கொடுங்கண்ணைக் கொண்ட இராக்கதர். யாவையும் புக் குற்று முற்றின விதனவெங்கண் இராக்கத வெள்ளமே. (யுத் : 994)

விதனம்-விசனம். துயரம். விதன வெங்கண் இராக்கத வெள்ளம். (யுத் ; 994)

விதான நிழல் – மேற்கட்டியின் நிழல். தான் அவ்விண்ணிழிவ தொப்பதொர் விதானநிழல் வந்தாள். (பா : 1227)

விதானம் – மேற்கட்டி. (பா ; 1227)

விதி - 1. ஊழ்வினை. விதிகொடுந்தப்படக்கருதியோ பகர்மின் வந்த பரிசு. (பா : 393) விதி காயினும் வீரம் வெலற்கரியான். (யுத் : 1683)

2. அருள். புகலுறு விதியான் மேயினை. (ஆ : 113)

3. பிரமன். விதியினை நகுவன அயில்விழி. (பா : 75) விதிக்கு மேலுளாய். (யுத் : 366) விதிதருவிமானம். (யுத் : 4231)

4. கட்டளை. நியமனம். முனிவிதியை மேற்கொண்டு நின்றவன். (பா : 410) (சு : 616)

5. முறைமை. வீர நின் விதியின் எம்மை ஏவின செய்து நிற்றும். (பா : 421)

6. நூல்களில் கூறப்பட்ட விதிமுறை. வீரமன்று விதியன்று. (கி : 321)

விதிக்கு நாயகன் - ஊழ்வினைக்குத் தலைவன். விதிக்கடவுளைத்தன் திருவுள்ளத்தின்படி நடத்துபவன். (இராமபிரான்). விதிக்கு நாயகன் தான்விட்ட தூதன் யான். (யுத் : 940)

விதிக்கும் விதியாகும் என் விற்றொழில் - விதிக்கும் விதிபோல்வதாய் உள்ள என் விற்றொழில். முதல் வானவர்க்கும் வலிஇதாம் விதிக்கும் விதியாம் என்விற்றொழில் காண்டி என்றான் (அ : 427)

விதிக்கு மேலுளாய் - விதியின் ஆற்றலுக்கும் மேம்பட்டுள்ளவனே. (யுத் : 366) (கலா)

விதிகைம்மிகல் - விதி உருத்தெழுதல். விதிதூண்டுதல். (வை.மு) ஆதி அனந்தனையும் விதிகைம்மிக முட்டிய வெம்மையினார் (யுத் : 1743)

விதிகொடு காட்டுதல் - விதிகொண்டு தோற்றுவித்தல். கருக்கொள் காலம் விதிகொடுகாட்டிட. (யுத் : 980)

விதிகொடுந்தல்-ஊழ்வினை பிடரியைப்பிடித்துத் தள்ளுதல். பதங்கம் ஆரழல் விளக்கினில் வீழ்ந்தென விதிகொடுந்தலால்.(யுத்:3437) தம்மைப்படுப்பதோர் விதிகொடுந்த. (யுத் : 743) (பா : 393)

விதிசெய்த வினை - விதிசெய்த செயல். வந்த வேத முனிவன் விதிசெய்த வினையை நோக்கி விம்முவான். (அ : 604)

விதித்தல் - நியமித்தல். மெய்யைத்தான் சிறிதுணர்ந்து நீ விதித்த மன்னுயிர்கள் உய்யத்தானாகாதோ. (ஆ : 59)

விதிதரு நவை – ஊழான் விளைந்த தீங்கு. நற்றவ முனிவன் அந்தோ விதிதரு நவை என்பான். (சு : 714)

விதிதருவிமானம் - பிரமனால் (குபேரனுக்குக்) கொடுக்கப்பட்ட விமானம். விதிதரு விமானமேவி. (யுத் : 4239)

விதிநிலை - விதியின் இயல்பு. (யுத் : 3894)

விதிநெறி நிலை – (விதிநெறி – ஊழ்நெறி) விதியின் முறை நிற்றல். விதியின் வழியிலே நிற்றல். விதிநெறி நிலையதாக விளம்புகின்றோரும் ஈண்டு சேதுநெறி நிலையினாரே. (யுத் : 762)

விதிமுறை – நியதிப்படி. வினவன விதிமுறை வினைக்க வேண்டுவான். (யுத் : 620)

விதியதுவலி – விதியின்வலி. விதியது வலியினுமிசைந்தார். (அ : 33)

விதியார் – 1. படைத்தற் கடவுள். ஈட்டுவார் தவமலான் மற்றீட்டினுலியைவதின்மை காட்டுவார் விதியார். (சு : 198)

2. ஊழ்வினை. என்னை விதியார் முடிப்பதென எண்ணி. (ஆ : 964) விதியார் வினைவாற் போதாநெறி எம்மொடு போதுறு நாள். (யுத் : 2641)

விதியார் வினைவு – தீவினையின் பயன். (யுத் : 2641)

விதியின் கொட்பு – விதிசூழ்தல். விதியின் வசம். வெவ்விய விதியின்கொட்பால் விடினன் கழுகின் வேந்தன். (சு : 570)

விதியின் துணிவு – ஊழ்வினையின் வலிமை. தஞ்சுற்றனனே விதியின் துணிவால். (ஆ : 1102)

விதியின் பிழை – விதியால் நிகழ்ந்த பிழை. மகன் பிழையன்று மைந்த விதியின் பிழை. (அ : 426)

விதியின் முயற்சி – தீவினையின் வினைவு. விதியின் பயன். மன்னிமைத்ததும் மைந்தனிமைத்ததும் முன்னிமைத்த விதியின் முயற்சியால். (யுத் : 4149)

விதியின் வெம்மை – விதியின் கொடுமை. ஆவதை இசைந்திலன் அழிவதென்வயின் மேவுதலுறுவதோர் விதியின் வெம்மையால். (யுத் : 2728)

விதியினார் – ஊழ்வினை. அருமையென் விதியினாரே உதவுவான்-

அமைந்த காலை இருமையும் எய்திஞய். (கி : 371) இத்தலை யின்ன செய்த விதியினர். (யுத் : 1611) (ஆ : 1006)

விதியினை நகுதல் – பிரமனைப் பழித்தல். விதியினை நகுவன அயில் விழி. (பா : 75)

விதியுளி – விதிப்படி. விதித்தபடியே. வேத நான் முறையின் யாவும் விதியுளி நிறுவி. (ஆ : 1024)

விதியென்தீ – ஊழ்வினை என்னப்படும் நெருப்பு. விதியென் றீயினில் எண்ணிய விளக்கு. (அ : 1140)

விதியே அழைத்தல் – விதியின் செயலே அழைத்தல். பிழைக்க லாற்ருன் அழைத்தது விதியேயாகும். (யுத் : 2978)

விதியேயோ – விதியே ஓ. இரக்கக் குறிப்பு. செவ்வியருள் நோக்கம் அந்தோ பிரிதுமோ ஆவிதியே யோ என்பார். (அ : 407)

விதியைத் தீர்த்தல் – விதியைத் தவிர்த்தல். செய்திறனினிவேறுண் டோ விதியை யார் திர்க்ககிற்பார். (யுத் : 1389)

விதியோன் – பிரமதேவன். திங்கள் மண்டில வதனமென்று வைத்தனன் விதியோன். (கி : 801) [பா : பே]

விதிர்த்தல் – 1. அசைதல். அசைத்தல். வாளுறை விதிர்க்கின்று ரும். (சு : 764) விதிர்த்தனன் வீசினன் விசும்பின் மீனெலாம் உதிர்ந்தனன். (யுத் : 1520)
2. உதறுதல். கைத்தலம் விதிர்த்தனர் கண்ட வேந்தரே.
3. நடுக்குதல். காலனும் கைவிதிர்த்தான். (யுத் : 936) விதிர்ந் தன அமரர் கைகள். (யுத் : 2045)

விதிர்த்திட விதிர்த்திட – அசைக்குந்தோறும். பிடித்ததின் படை விதிர்த்திட விதிர்த்திட. (யுத் : 2494)

விதிர்த்து – அசைத்து. ஈரும் வாளின் வால் விதிர்த்து.( பா : 110)

விதிர்ப்புறல் – 1. நடுக்கமடைதல். வள்ளலும் மலர்க்கரம் விதிர்ப் புற்ருன். (யுத் : 1541)
2. கையை யசைத்தல். (அண்) (உ.வி) (யுத் : 157)

விதிரெதிர்ந்தது – விதிர் விதிர்ப்புற்றது. விதிரெதிர்ந்தது அண்ட கோளம். (யுத் : 2696)

விதிவசம் – விதியின் வசம். வித்தகமும் விதிவசமும் வெவ்வேறே புறங்கிடப்ப. (பா : 768)

விதிவயம் – ஊழ்வினை வசத்தன. இன்பதுன்பந்தான் விதிவயம். (ஆ : 1005)

விதிவலி – ஊழ்வலி. அரிதுபோகவோ விதிவலி கடக்கவென் றஞ்சி. (சு : 338)

விதிவலி கடத்தல் – ஊழ்வினையின் வலிமையை மீறுதல் (சு:338)

விதிவிளைவு – ஊழ்வினையின் பயன். யார் விதிவிளைவை ஓர்வார். (ஆ : 768)

விதுப்பு – நடுக்கம். (அண்)விரைந்த விருப்பு.(கலா) மனமசைதல். (கு) ஆசை. (வெ.ப) விருப்பம். (வை.மு) மைந்தர் விதுப்புற நோக்கும் மின்னார் மிகுத்யை விளம்பலாமோ. (பா : 42)

விதுப்புற – ஆசைமிக. (பா . 42)

விதுவிதுப்பாற்றல் – இளைப்பாறுதல். வலிமை ஆற்றுதல் கணையெலாம் முறையின் வாங்கி விதுவிதுப்பாற்றலுற்றான் (யுத் : 2140)

விதுவிதுப்பு – இளைப்பு. (யுத் : 2140)

விதேக நாடு – சனகனுடைய நாட்டின் பெயர். அகன் பணை விதேக நாடடைந்தார். (பா : 540) [பா : பே]

விதைத்த – விதைக்கப்பட்ட. விதைத்த மென் காதலின் வித்து மெய்ந்நிறை இதைப்புனல் நனைத்திட. (பா : 1082)

விதைத்தல் – வித்துதல். விதைக்கின்றன பொறி பொங்கின விழியும் முடை வெய்யோன். (யுத் : 3713) (பா : 1082)

விதைபடு முயிரர் விழுந்தார் – தூவி விதைக்கப்பட்ட உயிர்கள் போலச் சிதறி விழ்ந்தார். விதைபடு முயிரர் விழுந்தார் விளியொடு உயிருமிழந்தார். (சு : 778)

விந்த நாகம் – விந்தமலை. விந்த நாகத்தின் மாடெய்தினார். (கி : 820)

விந்தம் – விந்தியமலை. விந்த மன்ன தோள். (யுத் : 2571) விந்தமெனும் விண்டோய் நாகம். (ஆ : 156)

விந்தமலை – விந்தியமலை. நீண்ட நேமி கொலாமென நேர்தொழ வேண்டும் விந்தமலையினை மேவுவிர். (கி : 755)

விந்தன் – வானரப்படைத்தலைவருள் ஒருவன் விந்தன் துவந்தன் மதனென்போன். (சு : 605)

விந்தை - வீரமகள். விந்தை சேர்புயன் சகரன். (பா : 510)

விந்தை நாகம் - விந்திய மலை. விந்தை நாகத்தின் பாலெய்தினர். (கி : 820)

விநதை - காசிபன் மனைவி. மழைபுரையுங்குழல் விநதை. (ஆ:203)

விபண்டகன் - காசிபன் மகன். கலைக்கோட்டு முனிவன் தந்தை. காசிபனருளும் மைந்தன் விபண்டகன். (பா : 211)

விபரீதம்-மாறுபாடான நிலை. (வை.மு) பிரதிகூலமான அவச நிலை. (கலா) ஒவ்வாத துயர்நிலை. (அண்) ஐங்கணை அரியத்தக்க புண்ணெலாம் எனக்கேயாக்கி விபரீதம் புணர்த்து விட்டீர். (யுத் : 1593)

விபரீதம் புணர்த்துவிட்டீர் - ஒவ்வாத துயர்நிலையை உண்டாக்கி விட்டீர். (யுத் : 1593)

விபாண்டகன் - விபண்டகன். (பா : 211) [பா:பே]

விம்ம - 1. மேலேயெழ. குழல்வண்டு பொம்மென விம்மவே. (அ : 241)

2. தேம்புதலால். விம்மல்நோய் விம்மத் தாவில் ஐம்பொறி மறுகுற. (அ : 509)

3. மிக்கு. இருக்க. படையோர் புடைவிம்ம. (யுத் : 815)

4. அஞ்சிக்கலங்க. விண்ணுளோர்கள் விம்மமேல் ஆர்த்த ஓசை. (கி : 239)

விம்மல் - 1. மகிழ்ச்சி. பூரிப்பு. வீடினர் அரக்கர் என்றுவக்கும் விம்மலால். (பா : 194) (பா : 288)

2. வேதனை. துன்பம். சோகம். குமுறு பாலுக விம்மி விம்மி நின்றழுது விங்கினள். (அ : 911)

3. வருந்துதல். அழுதல். (விம்முறவு - வருத்தம்) நாயகன் வனம் நண்ணலுற்றானென்றும் மேய மண்ணிழந்தானென்றும் விம்மலள். (ஆ : 515)

4. ஏக்கம். விழுங்குவெனோ என விம்மலுமுன்றாள். (ஆ : 1078) மேக்கு நிமிர் விம்மலள் விழுங்கலுறுகின்றாள். (சு : 556)

5. துடித்தல். பதைத்து விம்ம. (யுத் : 1227)

விம்மல்நோய் - தேம்பியழுதற்குரிய பெருந்துன்பம். விம்மல்நோய் விம்ம. (அ : 509)

விம்மறுதல் – ஐயம் நீங்குதல். வானவர் வேலையென்றனிக மென் றேங்கி விம்மற. (அ : 1085) [பா : பே]

விம்மா வெதும்பா - தேம்பியழுது உடல் வெதும்பி. ஓர்ஏழை விம்மா வெதும்பா வெயரா முகம் வெய்துயிர்த்தாள். (பா : 991)

விம்மி – மிகுந்து. கலங்கி. உலைந்து விம்மி. (ஆ : 658) கோளுறக் கொதித்து விம்மி. (ஆ : 724) விம்மி நிற்கும் நோக்கிது என் பயத்தது (ஆ : 978)

விம்மியரற்றுதல் – விம்மிப்புலம்பல். விண்டிறந்திட விம்மியரற்றி னான். (யுத் : 3178)

விம்மி விம்பி – தேம்பித் தேம்பி. கொம்மைவெம் முலை குமுறு பாலுக விம்மி விம்மி நின்றழுது தேம்பினாள். (அ : 911)

2. மிகப் புலம்பி. வெந்துயர் தொடர்தர விம்மி விம்மி. (அ : 1149)

விம்மி விம்மியே – பெரிதும் விம்மலுற்று. உள்நைந்து நைந்து இரங்கி விம்மி விம்மியே... இடரின் மூழ்கு போழ்தின் வாய். (பா : 804)

விம்முதல் – 1. ஒலித்தல். பேரொலி செய்தல். பாணியின் பங்கி அம்பரம் எங்கும் விம்மின. (அ : 245)

2. தேம்பியழுதல். பொருமுதல். மனம் விங்கினாள் விம்மினாள் விழுந்தாளரோ. (அ : 304) விம்மா அழுவாள். (அ : 338)

3. ஏங்குதல் விற்கையினின்றிடை விழ விம்முற்று நின்றொழிந் தான். (அ : 1021)

4. ஏங்கிய முதல். விழுதல் விம்முதல் மெய்யுற வெதும்புதல். (சு : 334)

5. கலங்குதல். விம்மா நெறியின் விதியின் விளைவும் தளர் வின் தொடர்பும். (அ : 384) [பா : பே]

6 துரிதப்படுத்தல். (உ.வி) முளரித்தாள் தொழ வேண்டி னென் எய்தினன் உள்ளம் விம்முமால். (அ : 835)

7. விஞ்சுதல். மிகுதல். ஆழிகண்டார் அயலப்பால் வேறுசென்ற நெறிகாணர் விம்மாநின்ற உவகையராய்... மாநகரம் எய்தினர். (அ : 614) சுடரோனின் ஒளி விம்மும் வான். (சு : 709)

8. எழுந்து சொலித்தல். விம்முதி வாதுவன் துருத்தி. (ஆ:650)

9. சோகித்தல் துயருறல். ஏங்கிய நெஞ்சினன் இரங்கி விம்மு வான். (கி : 205)

10. பூரித்தல். எழுந்து பேருவகையேற வெய்துறலொடுங்கும் மேனி வானுற விம்மி ஓங்க. (சு : 526)

11. வாய்விட்டுப் புலம்புதல். (உ.வி) விழுதல் விம்முதல்- (சு : 334)

12. கண்ணீர் பெருக்குதல். தொழுதனன் எழுந்து விம்மிச் சுமந்திரன் நிற்றலோடும். (யுத் : 4273)

13. விசாரித்தல். எந்தாய் விழுந்திலனன்றோ மற்றவ் விடணன் என்று விம்மி. (யுத் : 3585)

14. மிக்கிருத்தல். வில்லிலங்கு படையோர் புடைவிம்ம· (யுத் : 815)

15. நிறைதல். விழுப்புகைப் படலம் விம்ம. (யுத் : 600)

விம்மும் – மிக்கொலிக்கும். (பா :.153)

விம்முறல் (விம்முறுதல்) – 1. வருந்தல். துன்புறல். மன்னவன் பிரிவெனும் விம்முறு நிலையால். (அ : 32) உள்ளம் புண்தானென நோயுற விம்முறுகின்ற போழ்தின். (சு : 579) காண்டலோ அரிதென்று என்று விம்முறும் கலங்கும். (சு : 342)

2. ஒலித்தல். தண்ணுமை வாரொலி மழையின் விம்முறும். (அ : 500)

3. கலங்குதல். ஏங்கிச் செயலறுதல். விற்கையினின்றிடை விழ விம்முற்று நின்றெழிந்தான். (அ : 1021)

விம்முறும் – உள்ளம் வருந்தும். இப்பிறப்பிற் காண்டலோ அரி தென்றென்று விம்முறும் கலங்கும். (சு : 342)

விம்முறும் உவகை - மிகுகின்ற மகிழ்ச்சி. விம்முறும் உவகையர் வியந்த நெஞ்சினர். (பா : 224)

விமலம் - குற்றமற்ற தன்மை. விமலத்தின் சிலையன். (யுத் : 784)

விமலன்–மலமற்றவன். தூயோன். (இராமபிரான்) விமலன் வெந் துயரின் எழ. (கி : 42) பிரகலாதன். (யுத்: 156)

விமலன் உந்தியிற் பூத்தவன் – திருமாலின் உந்தித் தாமரையிற் பூத்தவனாகிய பிரமன். விமலனுந்தியிற் பூத்தவன் முதலிய புவியுள் தோன்றினர். (அ : 949)

விமலை - குற்றமற்ற செயலையுடையவள். ஞானவித்தகம் தரித்த செங்கை விமலையை. (பாயி : 32)

விமானம் - ஆகாயத்திற்செல்லும் விமானம். ஏறுகசேனையெல்லாம் விமானமிதென்று. (யுத் : 4274)

வியத்தல் - 1. ஆச்சரியப்படல். வியந்தனர் பெரியோரெல்லாம் வீரத்திறமிது நன்றென வியவா.(யுத் : 1135) வியக்கவேண்டா. (யுத் : 1608) சுரர்கள் வியக்கவான்செலும் புட்பக விமானம். (யுத் : 4064)
2. செருக்குறல். ஏற்றினைப் புலியேறென்ன வியந்தெழுபதாதியீட்டம். (சு : 816)
3. மகிழ்தல். மெய்யிேனாடு அருந்துறக்க முற்றுரென வியந்தார். (யுத் : 4076)

வியப்பு - ஆச்சரியம். வியப்பால் மிக்குநின்ற குடைமிது விளங்க. (யுத் : 808)

வியப்புறுதல் - ஆச்சரியப்படுதல். விண்டுவின் தடமார்பினின் மணியொத்ததிதுவென வியப்புற்றுன். (சு : 291)

வியம் - 1. சிறப்பு. வியங்கருப்பூரம். (ஆ : 577) [பா:பே]
2. பெருமை. மேவியம்படை படப்படக் குருதியின் வீழ்ந்த. (யுத் : 3501)

வியர்த்தல்-வேர்த்தல். வெற்பிடை மதமென வியர்க்கும் மேனியன். (அ : 838)

வியர்ப்பு - வியர்வை. இமையவர் இமைத்தனர் வியர்ப்பு மெய்தினர். (யுத் : 572)

வியல் - பெரிய. (வை.மு) வியனகர்மீதுபோது நெஞ்சிலன். (ஆ : 665)

வியலிடம் - அகன்ற இடம். வியலிட மறைய விரிந்தார். (சு:779)

வியன் - பெரிய. வியனகர். (சு : 297) (ஆ : 665) மேவியம் பயைப் படப்பட. (யுத் : 3501)

வியனகர் - பெரிய நகரம். (இலங்காபுரி) (சு : 297)

வியாளம் - பாம்பு. வெருட்டியெழும் கணபணப்பை வியாளமெலாம். (அ : 204)

வியோமகூடம்-ஆகாயத்தினிடம். பொடியால் எங்கும் குமிழ்த்தன வியோமகூடம். (யுத் : 3328)

வியோமம் – ஆகாயம். (யுத் : 3328)

விரகம் – பிரிவு. விரகமங்கைமார். (கி : 912)

விரகிலார் – அறிவில்லாதவர்கள். (அண்) கபடமில்லாதவர். (வை.மு) விருந்தினர் இவ்வழி விரகிலாரென. (ஆ : 848)

விரகின் எய்தினர் – பணிவுடன் எய்தினர். (அ : 934)

விரகு – 1. திறமை. சூழ்ச்சித்திறன். (வை.மு) (அ : 934)
2. பணிவு. (அண்) விரைவின் வந்தெய்தினர் விரகின் எய்தினர் பரதனை வணங்கினர். (அ : 934)
3. கபடம். (உ.வி) விருந்தினர் இவ்வழி விரகிலார் என. (ஆ . 848)
4. உபாயம். உடற்கணை ஒன்றொன்றுக...... மெல்லென விரகின் வாங்கி. (யுத் : 2648)
5. அனுபவ அறிவு. இவ்வழி விரகிலாரென. (ஆ : 848)

விரசுக – வருவீராக. விரைந்து வருக. (கி ; 438)

விரசுகான் – செறிந்த காடு. விரசு கானிடைச்சென்றனன் வேட்டைமேல். (பா : 655)

விரசுதல் – 1. நெருங்குதல். முத்த வெண்குடை விரசிமேல் நிழற்றிட. (பா : 277) ஏனையோர் கலந்து காண்பான் விரசுறின் விலக்குவாரோ. (யுத் : 3973)
2. சேர்தல். சேணைக்கடலொடும் திங்கள் நான்கின் விரசுக என்பால். (கி : 433)
3. பொருந்துதல். விரசு கோலங்கள் காணவிதியிலேன். (சு : 642) (பா : 317)

விரசுவார் – கலந்து வாழ்வார். விரசுவார் முனிவர் விண்ணவர் இயக்கர். (பா : 99)

விரசுறுதல் – பொருந்தி நிற்றல். அகிலம் யாவையும் விரசுறு தனிக்குடை விளங்க. (பா : 317)

விரஞ்சு – விரைந்து. விரஞ்சொரு நொடியினில் இவ்வனிக வேலையை உரஞ்சுடு வடிக்கணை ஒன்றில் வென்று. (அ : 1106)

விரத நூல்முனிவன் – விரதங்களை அனுட்டிக்குந் தன்மைவாய்ந்த நூல்களில் வல்ல வசிட்ட முனிவன். (யுத் : 4320)

விரதம் – தவம். விரதவேடம். (யுத் : 4050) விரதமுற்றறத்தின் நின்றார்க்கு. (யுத் : 1627)

விரத மாதவம் – விரதத்தோடுகூடிய பெரிய தவம். (வை.மு) மாட்சிமைப்பட்ட பெரிய தவம். (கலா) சனகியென்றுலகஞ் சாற்றும் விரத மாதவத்தின்மிக்க விளக்கினால். (கி : 961) விரத மாதவஞ்செய விடுதல் நன்று. (அ : 154)

விரதமாதவன் – விரதங்களைக்காக்கும் பெருந்தவ முனிவன் வசிட்டன். (யுத் : 4354)

விரதமுற்று – விரதத்தை மேற்கொண்டு. நோன்புகொண்டு. விரத முற்றறத்தின் நின்றார்க்கு இவைகொலாம் வினைவ மென்மேல். (யுத்: 1627) விரதமுற்றிருந்தவன் மேல் வந்தான். (அ : 1092)

விரத வேடம் – தவவேடம். முடியினைப்பறித்து இவ்விரத வேட மற்றுதவிய பாவி. (யுத் : 4050)

விரதியர் – விரதம்பூண்டவர். தவக்கோலத்தார். விரதியர் இருவர். (யுத் : 3181) எம்போல் விரதியர் விழைதற்கு ஒவ்வா.(கி : 429)

விரல் – கைவிரல்; கால்விரல். பஞ்சிவர் விரலினார். (பா : 1157) (யுத் : 1212) மாளவிரல்களிற்பிசையும். (யுத் : 267) தூணெறிந் தனைய விரல்கள். (யுத் : 2013)

விரல்நிலம் கிளைத்தல் – நிலத்தைக்கீறுதல். நாணத்தின் செயல். நிறங்கரிந்திட விரல் கிளைத்திட நின்றான். (யுத் : 1212)

விரவல்–சிக்கிப் பொருந்துதல் வினையுறு தொழிலிடை விரவலும். (யுத் : 3760)

விரவலர் – பகைவர். விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டுளோன். (அ : 891)

விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டுளோன் - பகைவர் தன்னுடைய புறமுதுகைப்பார்க்குமாறு போரில் தோற்றோடினவன். (அ : 891)

விரவார் – பகைவர். இனிய நண்பர் அயலவர் விரவாரென்று மூவகை இயலோராவர். (கி : 419, யுத் : 1169)

விரவினர் – கூடினர்; கூடினராய். இளையோரும் விரைசெறி குழலாரும் விரவினர் விரைகின்றார். (பா : 1264)

விரவுதல் – 1. படுதல். வெங்கணை விரவாமுன்னம் உள்ளுயிர்க் குறுதி நோக்கி ஒளித்தியால் ஓடி. (ஆ : 882)

2 கலத்தல். சேர்தல். கவந்தன் மெய்யின் மேற்கொடு கிழக் குறப் பெருநதி விரவும். (ஆ : 117) அரவிணுமத்தை எலியிருந் தோதினல் அதற்கு விரவு நன்மை என். (யுத் : 180) விராவின குவிந்தன. (பா : 1291)

3. தொகுதியாகக் கூடுதல். விராவின கவிக்குலம். (யுத்:1772)

விரற்புட்டில் – விரல்களில் அணியும் கவசம். தளைவுறு திரைவிரற் புட்டில் தாங்கினன். (யுத் : 1075)

விரா – விராவுகின்ற, பொருந்திய. சிகை விரா மழுவினன். (கி:87)

விராதன் – ஓர் அரக்கன். விராத னெனும் அக்கோர வெங்க ணுருமே றெனக் கொடுந் தொழிலினன். (ஆ : 19)

விராவரும் – விராவு அரும். அடைதற்கரிய. துன்பம் மிகும். நீ குறித்த நாளினே விராவருங் கொடுஞ் சிறை மீட்கலானெனின். (சு : 680) விராவரு வனம். (அ : 616)

விராவி – நெருங்கி வந்து. அராவணையிற் றுயில்வோ யெனஅந் நாள் விராவி யளித்தருள் மெய்ப்பொருள். (பா : 299)

விராவின குவிந்தன – கலந்து திரண்டன. (பா : 1291)

விராவுதல் – 1. பொருந்துதல். விராவு நல்லமர் விளைக்குதும் யாம். (யுத் : 1452) சிகாமணி விராவுற எடுத்தாலென்ன வெய்யவனு தயஞ் செய்தான். (யுத் : 4225) நெடுஞ்சிகை விரா மழுவினன். (கி : 87)

2. கலந்து வாழ்தல். விராவரும் புவிக்கெலாம் வேதமேயன இராமன். (அ : 144)

3. சேர்தல். கலத்தல். (வெ.ப) (உ.வி) விராவருங் குழலி. (சு : 680)

4. நெருங்கிவருதல். (பா : 299)

5. அடைதல். விராவருங் கொடுஞ்சிறை. (சு : 680)

விரிகடல் தட்டான் – பரந்த கடலில் அணைகட்டியவன். நளன். (யுத் : 2385)

விரிகொள் பாயல் – விரிக்கப்படும் பாயாகவுள்ள ஆதிசேடன். வடவைதர விளைதரு கடுவுடை விரிகொள் பாயல். (பா : 202)

விரிச்சு மூட்டல் - பரப்பி இணைத்தல். எங்கணும் முடங்கலில் வரிச்சு மேல்விரிச்சு மூட்டியே. (அ : 780)

விரிஞ்சன் - பிரமன். வன்மை எய்தும் வென்றியாவதென்று விரிஞ்சனை வினவ. (பா : 1375) (யுத் : 3891)

விரிஞ்சன் மகன்-சாம்பன். நீர் இக்கடல் தாவும் வேக மமைந்தீர் என்று விரிஞ்சன் மகன் விட்டான். (கி : 1027)

விரிஞ்சுற - விரிந்து. விரிந்துற· விரிவாக. விரிஞ்சுறப்பற்றிய பிறவி வெஞ்சிறை. (ஆ : 124)

விரித்தல் - 1. சொல்லுதல். விளங்கச் சொல்லுதல். இதற்குமேல் வேறோர் காரணம் விரிப்பதுண்டோ. (சு : 474)
2. வரிசையாகப் பரப்புதல். விரித்த நாணல். (அ : 665)

விரித்துரை செய்தல் - விவரித்துச் சொல்லுதல். விண்டவர் வலத்தையும் விரித்துரை செய்கேனோ. (சு : 613) [பா:பே]

விரிதல்-1. பரத்தல். விளங்குதல், (வை.மு) விரிமுகக் கமலபீடம். (அ : 285) (பா : 827)) ஆவிவிரிபால் நுரையின் ஆடை. (அ : 541)
2. பிளவுபடுதல். பிளத்தல். குடுமிக்குன்றம் வெரிநுற விரியும் வேலை. (சு : 7) விரியவன்மேரு வென்னும் வெற்பினின்மீது செல்லும் பெரியவன். (யுத் : 2714)
3. மிகுதல்- விரிகின்ற கதிரவாகி மிளிர்கின்ற மணிகள். (யுத் : 789) நாவி விரி கூழை. (அ : 541)
4. மலர்தல். விரிந்த செந்தாமரைக் காடு. (யுத்:4133) பானுவீ விரிந்ததென்னப் பரந்த நீர் உந்துவாரும். (பா:1017) வாவிவிரி தாமரை. (அ : 545) காவிவிரி நாண் மலர்கள். [பா : பே] (அ : 541)

விரிதிரைப் புனற்கங்கை - விரிந்த அலைகளையுடைய நீர்ப்பெருக்குள்ள கங்கையாறு. தோமிலர் சுற்றும் விரிதிரைப் புனற் கங்கையை மேவினர். (அ : 626)

விரிநீர் - கடல். கரை சிந்தின விரி நீர். (யுத் : 1137)

விரிமலர்த்தவிசினன் - பிரமதேவன். (யுத் : 4117)

விரி மலர்த்தவிசோன் - மலர்ந்த தாமரையாகிய பீடத்திலிருக்கிற பிரமன். விரிமலர்த் தவிசோன்தன்பால் விழுத்தவம் செய்து மீண்டான். (பா : 431)

விரிமுகம் – சிங்கம். விரிந்த முகமுடைமையால் வந்த பெயர். [பஞ்சானனம்] (அண்) விரி முகக் கமல பீடத்து ஓங்கிய மகுடம் சூடி. அரசு வீற்றிருப்பக் காணுன். (அ : 285)

விரியமைத்த நெடு வேணி – விரித்தல் பொருந்திய (விரிந்த) நீண்ட சடை முடி. விரியமைத்த நெடு வேணி புறத்தசைந்து விழ்ந்தொசிய மேனி தள்ள. (யுத் : 4148)

விரியிருள் – பரவிய இருள். விரியிருட் பகையை யோட்டித் திசைகளை வென்று. (அ : 664)

விரியும் வார்புனல் மருதம் – பரவி ஒழுகுகின்ற மிக்க நீர்வளமுள்ள மருதநிலம். விரியும் வார்புனல் மருதஞ்சூழ் மிதிலை. (பா : 477)

விரிவு – பரப்பு. வெந் தொழில் தானையின் விரிவும். (யுத் : 748)

விருக்கம் மரம். விம்முறுமுள்ளத் தன்னமிருக்கு மவ்விருக்கமொன்றும் .. நின்றது. (சு : 734)

விருகம் – செந்நாய். கொடுவிலங்கு. மையார் விருகந்துருவி. (அ : 376) [பா:பே]

விருத்தமாதர் – பெருந்தவத்தினரான முதியோர். வீரன் விருத்தமாதவரை நோக்கி முறுவலன் விளம்பலுற்ருன். (அ : 658)

விருத்தர் – முதியவர். வயதுசென்றவர். வேதியர் அருந்தவர் விருத்தர். (அ : 938) (யுத் : 78)

விருத்தன் – வயது முதிர்ந்தவன். (சாம்பவான்) விருத்தனிட்ட விசையின் வீசிய திருத்தம். (யுத் : 660)

விருத்தி – தொழில். சீவனம் ஆறு தொழில். வளர்ச்சி. விருத்தி வேதியரோடெதிர் மேவினுன். (அ : 1064)

விருத்திவேதியர் – ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறுதொழிலையுடைய வேதியர். (அ : 1064)

விருது – 1. வீரர்க்குரிய பட்டம். விருதுடை நிருதர்கள். (யுத் : 1087)

2. பராக்கிரமத்தின் சின்னம். (வை.மு) வெற்றி. (அண்) காலன விருதைச் சிந்தும் வில். (யுத் : 3804)

விருந்தமைத்தல் – விருந்திட்டு உபசரித்தல் இனிது நிற்கு விருந்தினி அமைப்பென் என்று. (பா : 656)

விருந்தினர் – புதியவர். விருந்தினர் இவ்வழி விரகிலார். (ஆ:848) விருந்தினையாகி. (யுத் : 4142) விருந்தினர்கள் நின்னுடைய வேள்விகாணிய வந்தார். (பா : 720)

விருந்தினன் – விருந்தாளி. வேதியர் விருந்தினனானான். (அ:773)

விருந்தினையாகி – விருந்தாளியாகி. (யுத் : 4112)

விருந்து – 1. விருந்தினர். தாமும் விருந்தொடும் தமரினோடும் அந்தணர முதருண்டி அயில்வுறும் அமலைத் தெங்கும். (பா : 50)
2. விருந்தோம்பல். வருந்தி வந்தவர்க் கீதலும் விருந்து மன்றி வினைவன யாவையே. (பா : 67)

விருப்பிற்று – விருப்பமுள்ளது. எனக்கும் மூத்த வேந்தர்க்கும் விருப்பிற்றுரும். (ஆ : 278)

விருப்பு - விருப்பம். விருப்பின் எய்தினன். (அ : 832)

விருபாக்கன்–விருபாட்சன். இராவணன் படைத்தலைவருள் ஒருவன். தொன்னெடு நகரிகாக்க விருபாக்கன் என்னச் சொன்னான். (யுத் : 912)

விரும்பலர் – பகைவர். விரும்பலர் முகத் தெதிர் விழித்து நிற்கயான். (அ : 908)

விரும்பிய – விரும்பும் பொருட்டு. விரும்பு வந்தடைந்த. விரும்பிய மூப்பெனும் வீடு கண்ட யான். (அ : 16)

விரை – 1. வாசனை. விரைக் கருங்குழலி. (பா : 1152)
2. நறுமணம். விரைத்தடந் தாமரைக்கண். (அ : 453) (யுத் : 200)
3. தேன். விரையருந்தும் சிறைவண்டும். (யுத் : 3464)
4. நறுமணங் கலந்த தூள்.

விரைக்குழல் – மணமுடைய கூந்தலையுடையவள். (தாரை) விரைக் குழல் பின்னுரை விளம்ப அஞ்சினள். (கி : 264)

விரைசுதல் – பொருந்துதல். கலத்தல். விரைசும் பல்லியம் வில்லாவத்தொடும் திரைசெய் வேலைக்கோர் ஆகுலஞ் செய்தவே. (யுத் : 997)

விரைசெய் கமலப்பெரும்போது – மணங்கமழும் பெரிய தாமரை மலர்கள். விரை செய்கமலப் பெரும்போது விரும்பிப் புகுந்த திருவினெடும் குரை செய்வண்டின் குழாம் இரிய. (பா : 638)

விரை செய்தல் – மணம் கமழுதல். (பா : 638)

விரைசெய்தார் – மணம் வீசுகின்ற வெற்றி மாலை. விரைசெய்தார் வாலி. (கி : 80)

விரை செய்பூஞ் சேக்கை – மணம் வீசுகின்ற பூக்களாலாகிய படுக்கை. விரை செய்பூஞ் சேக்கையி னடுத்த. (பா : 1073)

விரை செறிகுழலி – நறுமணம் நிறைந்த கூந்தலையுடைய பண். விரை செறிகுழலி மாட்டளித்த மெய்யனை. (அ : 573)

விரைதல் – 1. வேகமாகப் பாய்தல். என் வெப்புறு வாளிகள் இன்று விரைந்தால். (யுத் : 2834)
2. விரைந்து செய்தல். விரைவினின் நீயே சென்று கொண்டணை திருமகள் கேள்வனை என்ருன். (அ : 48)

விரைப்பொன் – தெய்வ மணங்கமழும் பெண்.

விரைவது - விரைவினை மேற்கொள்வது. விரைவது வெல்லற் கொல்லா. (யுத் : 2975)

விரைவு – வேகம். உடனே விரைவொடு சென்ருன். (அ : 49) அம் மாதவனும் விரைவோடு அவலந்தரு நெஞ்சினனுய். (அ : 384) வீரனும் விரைவதானுன். (சு : 15)

வில் - 1. ஒளி. விட்டு விட்டுப் பிரகாசிப்பது. நகையும் தோடும் வில்லிட வாள்வீச. (பா : 787) விற்பகலின்றியே இரவு விண்டற. (சு : 373) அழியா வில்லைச் செலுத்தி. (யுத் : 2198)
2. மின்னல். விற்கொண்ட மழையனுன். (பா : 418)
3. அம் பெய்யும் வில். விற்கொம்புமுண்டு. (கி : 568)
4. வில்லின் நாணேசை. வீரன் வில்லென இடிக்க. (சு : 828)

வில்மறைக்கிழவர் – தனுர் வேதத்துக் குரியவர்கள். வில் மறைக் கிழவர் நாஞ விஞ்சையர். (கி : 822)

வில் மாண் கொலை வாளி – வில்லினுல் எய்யப்படுகின்ற மாட்சிமை யுடைய கொல்லுதல் தொழிலில் வல்ல அம்பு (சு:576) [பா:பே]

வில் மான் கொலைவாளி - வில்லுக்கு ஒத்த கொலைத் தொழிலைச் செய்கின்ற அம்பு. நுந் நாமமும் மாய்ப்பெனின்றே வின் மான் கொலைவாளியின். (சு : 576)

வில்லணைத் துயர்ந்த தோள் வீரன்-வில்லை அணைத்துக் கொண்டுள்ள உயர்ந்த தோளையுடைய வீரன். (இராமபிரான்) வில்லணைத் துயர்ந்த தோள் வீரன் வைகிய புல்லணை. (அ : 991)

வில்லறந்துறத்தல் - போரில் விற்பிடித் தியற்றும் முறைமையைத் தவிர்த்தல். (கலா) விற் போர் முறையாகிய அறநெறியை விட்டொழித்தல். (அண்) (வை.மு) வில்லறந் துறந்த வீரன். (கி : 309) போரின் வில்லறந் துறந்தும் வாழ் வேற்கு (கி:432)

வில்லவன் - வில்லைத் தாங்கியவன். தெவ்வினை வில்லவன். (ஆ : 1075)

வில்லன் - வில்லையுடையவன். வென்றி வில்லன். (யுத் : 1033)

வில்லார் தோளான் - வில்லை யேந்திய தோளையுடையவன். (இராமன்) வில்லார் தோளான் மேவினன் வெங்கானக மென்ன. (அ : 874)

வில்லாள் - வில்லை ஆள்பவன். வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ. (அ : 1007)

வில்லாளர் - வில்வீரர். வில்லாளரை எண்ணில் விரற்கு முன்னிற்கும் வீரன். (யுத் : 1957) (யுத் : 3129)

வில்லாள ரானோர்க் கெல்லாம் மேலவன் - இந்திரசித்து. (யுத்:3129)

வில்லாளன் - வில்லாளி. (இராமபிரான்) வில்லாளன் இளங் கிளையோன் வினவ. (யுத் : 1724) வில்லாளனுமது கண்டு அவை விலக்குந் தொழில் வேட்டான். (யுத் : 3718)

வில்லி - விற்றொழில் வல்லோன். வில்வீரன். வில்லி வாங்கிய சிலையெனப் பொலி நுதல்விளக்கே. (அ : 749) வில்லிதன் தூதன் யான். (சு : 1116)

வில்லிகல் - விற்போர். (கி : 327)

வில்லிகல் வல்லது - விற்போரில் வல்லவனுவது. நேரும் அன்று மறைந்து நிராயுதன் மார்பின் எய்யவோ வில்லிகல் வல்லதே. (கி : 327)

வில்லிட் டுயர்ந்த நெடு மேகம் – இந்திர வில்லைத் தோற்றுவித்துக் கொண்டு வானத்திலே எழுந்த பெரிய மேகம். சிலை வாயின் வாங்கி வில்லிட் டுயர்ந்த நெடு மேகமெனப் பொலிந்தான். (ஆ : 926)

வில்லிடுதல் - 1. ஒளிவீசுதல். வடங்களும் குழைகளும் வான வில்லிட. (பா : 805) இலங்கு பன்மணிக் குலம் வில்லிடக் குயிற்றி. (பா : 116 வில்லிடும் எயிறு. (சு :825)
2. இந்திர வில்லைத் தோற்றுவித்தல், வில்லிட் டுயர்ந்த நெடு மேகம். (ஆ : 926)

வில்லியர் திலதம் – வில்லாளரானார்க் கெல்லாம் திலகம் போன்றவன். இலக்குவன் (யுத் : 1858)

வில்லியர் – வில்லாளிகள். (இராமலக்குமணர்) வெற்றிநாணுடை வில்லியர். (சு : 622)

வில்லியல் தோளவன் – விற்றழும்பையுடைய தோளினனாகிய இராமன். (கலா) வில்லோடு பழகும் இயல்புவாய்ந்த தோளை யுடைய இராமன். (அண்) கோதண்டம் பொருந்திய தோளை யுடைய இராமன். (வை.மு) அவ்வில்லியல் தோளவற் கீண்டு வேண்டுவ ஒல்லையினியற்றி. (அ : 100)

வில்லியல் மொய்ம்பு – வில்லை யுடைய தோள், (கோதண்டம்) வில்லியல் மொய்ம்பினுய் வீறு காண்குமோ. (ஆ : 130)

வில்லியார் – வில்லையுடையவர். முப்புரங்களை எய்த வில்லியார். (ஆ : 1007) (கி : 405)

வில்லிறுத்தது - வில்லை ஒடித்ததன் காரணம். சேமத்தார் வில்லிறுத்தது தேருங்கால்... கல்வியினுல் என்றுள். (பா : 1187)

வில்லின் கல்வி - தனுர் வேதம். வில்லின் கல்வியான். (அ : 1000)

வில்லின் செல்வன் – வில்வித்தையைச் செல்வமாக ஏற்றவன். (வயமத்தன்) வெய்யனென்றுரைக்கச் சாலத்திண்ணியன் வில்லின் செல்வன். (யுத் : 1905) இலக்குவன். (யுத் : 2549) இராமன். (யுத் : 3975)

வில்லின் மாரி – வில்லினின்றும் வெளிப்படும் அம்பு மழை. ஓர் கல்லின் மாரியைக் கைவகுத்தாள் அது வில்லின் மாரியின் வீரன் விலக்கினன். (பா : 412)

வில்லின் விச்சையின் கணவன் – வில்வித்தைக்குத் தலைவனான. இலக்குவன். வில்விச்சையின் கணவனானன். (யுத் : 3110)

வில்லின் வேதியர் – வில் நூல் உணர்ந்தவில் வீரர். வில்லின் வேதியர் வாள் செறிவித்தகர். (அ : 805)

வில்லினம் – தொகுதியாகிய வில். வில்லின முளென். (அ : 683)

வில்லினற்சுருக்குண்ணல் – வில்லினற் சுருக்கிடப் பெறுதல். நமனைச் சென்றுற்றுன் சம்புமாலியும் வில்லினற் சுருக்குண்டு தலைவ. (யுத் : 525)

வில்லினற் சொல்லுதல் – வாய்ப்பேச்சினுல் அல்லாமல் வில்லின் செயலால் வீரத்தைக் காட்டுதல். வில்லினற் சொலினல்லது வெந்திறல் வெள்கச் சொல்லினற் சொலக்கற்றிலம் யாம். (யுத் : 1454)

வில்லினன் – வில் வீரன். (இராமபிரான்) வில்லினற் கிருக்கை செய்யும் விருப்பினல். (யுத் : 707)

வில்லுடைமேரு – வில்லைக்கொண்ட மேருமலை. இவனை இன்று விலக்குவன் என்ன வந்தான் வில்லுடைமேரு வென்ன. (யுத் : 1103)

வில்லுமிழ் உண்டை – வில்லால் வெளிப்படுத்திய உண்டை. பண்டைநாள் இராகவன் பாணி வில்லுமிழ் உண்டையுண்ட தனைத் தன்னுள்ளத் துன்னுவாள். (அ : 129)

வில்லோன் – வில்வீரன். மெய்யற மூர்த்தி வில்லோன். (சு:1120)

வில்வலன் – வில்லாற்றலில் வல்லவன். வில்வல. (யுத் : 1723)

வில்வலோன் – விற்றிறம் மிக்கவன். சித்திர வில்வலோன். (யுத் : 2129)

வில்வினையுரிமை – வில்லினற்போர் செய்யவல்ல நல்ல உரிமை. வில்வினையுரிமையும் அழகும் ஆற்றலும். (அ : 159)

வில்வினையொருவன் – விற்றொழிலில் ஒப்பற்றவனான இராமபிரான். வில்வினை யொருவனும் இவனை விட்டுதற்கு ஒல்வினை இது வெனக் கருதி யூன்றினன். (யுத் : 1533)

விலக்கற் பாற்றோ – யாராலும் தடுக்குந்தன்மையதாகுமோ. அன்றெனில் தனு ஒன்றாலே மின்னைக் கண்டனையாள் தன்னை நாடுதல் விலக்கற்பாற்றோ. (கி : 636)

விலக்கீர் – விலக்குங்கள். வேறிடத்துக்கு நீக்குங்கள். துறை ஓடம் விலக்கீரோ. (அ . 1011)

விலக்குண்டு – நீங்கி விலக்குண்டெல்லாம் இற்றுடைந்திறுதல் மெய்யே. (சு : 450)

விலக்குதல் – 1. மாற்றுதல். விலக்குண்டு. (சு : 450)
2. தடுத்தல். விலக்கலை விடுவிடு. (கி : 251) விலக்குவன்னென விடையவன் விலக்கினும். (யுத் : 2456) விலக்கினை. (யுத் : 313) விலக்கி மீள்கிலிர் (யுத் : 1678)

விலகிடுதல் – வீசுதல். (வை.மு) வியாபித்தல். (கலா) விளங்குதல். (அண்) விலகிடு நிழலினன்.

விலகுதல் – தடுத்தல். உலகமேழினோடேழும் வந்து அவனுயிர்க் குதவி விலகு மென்னினும். (கி : 148)

விலங்கல் - 1. மலை. விலங்கற்றோள் அலங்கல்வீர. (சு : 15) விலங்கல் மேல்வர விலங்க வீசிய விலங்கல் நீறுபடு வேலையில். (யுத் : 2033)
2. யானை. (ஆகு) விலங்கல் வலி கொண்டெனது வேள்வி நலிகின்றாள். (பா : 385)
3. குறுக்கிடுதல். விலங்கல் ஆரையை. (யுத் : 1505)
4. நீங்கல். செவ்விலங்கலில் சிந்தையிற்றிருமோ. (யுத் . 648)
5. மாறுபடல். விலங்க வீசின. (யுத் : 2033)
6 தோள். விலங்கல் மேல்வர. (யுத் : 2033)
7. திண்மை யுடைமை. விலங்கல் மேரு. (சு : 295)
8. மலைபோன்ற தோற்றமுடையவன்; அனுமன். விலங்கல் வீசிய விலங்கல் நீறுபடு வேலையில் (யுத் : 2033)

விலங்கல் ஆகம் – குறுக்கே அகன்ற மார்பு. மால்வரை வெருவுற விரிந்துயர் விலங்க லாகத்தைப் பிரிவற நோற்றனள் என்னில். (சு : 535)

விலங்கல் ஆரை – தடுத்தலைச் செய்த (அம்பு)மதில். விலங்கல் ஆரையை மூட்டற நீக்குவான் முயன்ற வேலையில். (யுத் : 1505)

விலங்கல் இலங்கை – திரிகூடமலையிலுள்ள இலங்கை. (சு : 62)

விலங்கல் மாளிகை – மலைபோன்ற மாளிகைகள். விலங்கல் மாளிகை வீதியின் விரைவொடு சென்றான். (அ : 49)

விலங்கல்மேரு – திண்மைமிக்க மேருமலை. கடைக்கால் விலங்கல் மேருவும் வேர்பறிந்தாலென வீழ்ந்தான். (கி : 295)

விலங்கல்மேல் இலங்கை – திரிகூடமலையின்மீதுள்ள இலங்கை நகர். வீடுவென் மற்றிவ்விலங்கல்மேல் இலங்கை வீட்டி. (சு : 330) (சு : 1225) (யுத் : 769)

விலங்கல் வலி – மலையின் வலிமைபோன்ற வலிமை. விலங்கல் வலிகொண்டெனது வேள்வி நலிகின்றாள். (பா : 385)

விலங்கற்றிண்டோள் – மலைபோன்ற திண்ணியதோள். விலங் கற்றிண்டோள் கைவிரக்களிறனைய காளை. (அ : 1058)

விலங்கானேன் – விலங்காயிருக்கின்றேன். விலங்கானேன் ஆதலினால் விலங்கினேன் இன்னுமுயிர் விட்டிலேனால். (ஆ : 198)

விலங்கிப்போதல் – விலகி அப்புறஞ் செல்லுதல். புடைபட வலங் கொடு விலங்கிப்போகுமால். (யுத் : 2432)

விலங்கின்னியல் – விலங்குகளின் தன்மை. நன்று தீதுஎன்று இயல்தெரி நல்லறிவின்றி வாழ்வதன்றோ விலங்கின்னியல் (கி : 348

விலங்கினர் – 1. விலங்கு போன்ற இராக்கதர். (வை.மு)
2. குறுக்கிட்டவர்கள். (அண்) எதிர்தடுப்பான் விலங்கினரை நூறி. (சு : 611)
3. பகைவர், மாறுபட்டவர். விலங்கினர் உயிர் கெட. (யுத்:32)

விலங்கினேன்–தவறினேன். தவறினவனாகி. விலங்கினேன் இன்னுமுயிர் விட்டிலேனால். (ஆ : 198)

விலங்கு – 1. குறுக்கு. மேருவை விலங்குருவும். (ஆ : 534)
2. இயற்கையுருவம் மாறுதல். விலங்கு நாட்டவன் என்றுளன். (யுத் : 504)
3. மிருகம். விலங் கெனப் புரிந்து இருந்தவர் இவர் என இனைய செய்தனன். (பா : 220)

விலங்குதல் – 1. ஒளி வீசுதல். விளங்குதல். வெங்கண் அங்க வலயங்களும் விலங்க. (ஆ : 16)

2. தடுத்தல். சாரவந்தயல் விலங்கினன். (ஆ : 19)
3. உயிர் நீங்குதல். வெங்கரத்தினும் காலினும் விலங்கிச் சங்கரற்கழி முப்புரத் தவரெனச் சமைந்தார். (யுத் : 524)
4. விலகுதல். விலகிச் செல்லுதல். நீங்குதல். ஆதலினால் விலங்குதிர். (கி : 772)
5. சேர்தல். இளவல் நின்ற பாணியின் விலங்கா முன்னம். (யுத் : 3677)
6. தனியேயிருக்குந் தன்மை விடுதல். நீங்குதல். (வை.மு) (வெ.ப) பூதங்கள் ஒன்றினோடொன்று வெவ்வேறு அளவில் கலத்தல். (அண்) தம் நிலையினின்று வேறுபட்டுத் தோன்றுதல். (கலா) பூதமைந்தின் விலங்கிய வேறுபாடு. ((சு : 1)
7. நிலையினின்றும் மாறுபடுதல். ஊடுருவிக்கலத்தல். வளைதல். விலங்கலயில் எயிற்று வீரன். (சு : 37)
8. பின்வாங்குதல். சொல்விலங்கலன் சொல்லினன். (யுத்:2452)
9. குறுக்கிடுதல். எதிர் தடுப்பான் விலங்கினரை நூறி. (சு : 611)
10. இயற்கையுருவம் மாறுபடுதல். விலங்கு நாட்டவன் என்றுளன் வெயிலுக விழிப்பான். (யுத் : 504)
11. எதிர்ந்து வருதல். கொடுந்தொழில் குறித்து நம்மேல் விலங்குவாரென்னின் தேவர் விண்ணையும் நிலத்து வீழ்த்தும். (யுத் : 2866)
12. தவிர்தல். மேலை நெடும்புனல் வாரின மேன்மேற் போக விலங்கின உண்டன போலாம். யுத் : 2279)
13. கொல்லுதல். விலங்கினர் உயிர்கெட விலங்கி. (யுத் : 32)

விலங்குருவும் – குறுக்கே உருவும். (ஆ : 534)

விலங்கு நாட்டத்தன் – விருபாட்சன், விலங்கு நாட்டம். – நேர் நோக்கமின்றிக் குறுக்குப் பார்வை. விலங்கு – குறுக்கு. (கலா) விலங்கு நாட்டத்தன் என்றுளன். (யுத் : 504) [பா : பே]

விலங்கு நாட்டவன் – விருபாட்சன். (இயற்கை யுருவம் மாறுபட்டவன்). (யுத் : 504)

விலங்கெனப் புரிந்து - விலங்குகளாகவே உணர்ந்து. விலங்கெனப் புரிந்து இருந்தவரிவரென இனைய செய்தனன். (பா : 220)

விலாழி – 1. குதிரையின் வாய்நுரை. அப்பரிக் கலினமா விலாழி. (சு : 871) (யுத் : 4260)

2. உமிழ்நீர் யானை யங்கை விலாழி நீர்த்துவலை சுற்றச் செல்வன கவியின் சேனை. (யுத் : 2362)

விலை - 1. ஈடு. உலகமூன்று முதவற்கொரு தனி விலையிலாமை யும். (யுத் : 3948)

2 பொருளுக்குரிய விலை. விலைக்கோட்டும் பேரல்குல். (பா : 735)

விலைக்கோட்டுதல் - விலைக்குக் கொடுத்தல். (பா : 735)

விலைமகள் - பொதுமகள். விலைமகளனைய நீயும் கல்வியலாதி. (பா : 556)

விலைமகளிர் - பொதுமகளிர். பொன்விலை மகளிர் மனமெனக் கீழ்போய். (பா : 106)

விலைமங்கை - விலைமாதர். விலையின் ஆய்வளை மங்கையர் வடிவென. (கி : 12)

விலைமாதர் - வேசையர்கள். நிலையாமன வஞ்சனை நேயமிலா விலைமாதர்கள். (ஆ : 774)

விலையருமணிப்பூண் - விலைகள் தீராத (விலைமதிப்புடைய) மணிகள் பதித்த அணிகலன்கள். (யுத் : 3116)

விலையிலாமை - விலையின் தன்மை இல்லாமை. மேல் அவை விலையிலாமை முன்னினன். (யுத் : 3948)

விலையின் ஆய்வளை மங்கையர் - சிறந்த வளையல்களையணிந்த விலைமாதர். (கி : 12)

விலையின் மாதர் - விலைமாதர். விலையின் மாதரை ஒத்ததவ் வெள்ளமே (பா : 17)

விழவிடுதல் - கீழே விழும்படிதள்ளுதல். இரவியை விழவிடு மென்றால். (சு : 767)

விழவு - திருவிழா. விழவொலி. (அ : 501) (பா : 596)

விழவொலி - விழாவில் எழுகின்ற ஒலி. இமைப்பில் கண்ணினர் விழவெழு மொலியில. (அ : 501)

விழா - மகிழ்ச்சி. மீன்கொண்ட கொடியினார்க்கு விழாப் பரிந் தலகமேத்த. (ஆ : 638) [பா:பே]

விழாப்போதல் – விழாக்களின் உலாக்கள். பேரிமுழ விழாப்போது கின்றில பொன்னணி வீதியே. (அ : 811)

விழாவணி - 1. பவனிச்சிறப்பு. உவகை விழுங்குமாவரும் விழா வணி கண்டு. (பா : 489)

2. போர்க்கோலக்காட்சி. வெற்றிவிழாக் கோலம். பருந்தொடு கழுகும் பேயும் பசிப்பிணி திருமாறு விருந்திடு வில்லின் செல்வன் விழாவணி விரும்பி நோக்கி. (யுத் : 3975)

விழி - கண் வயங்கொளி வந்து பொடித்திழிந்த விழி. (யுத்:822) விழிகள் நீர் ததும்ப. (யுத் . 4073)

விழிக்கனல் – கண்களாகிய தீ. விழிக்கனல் இலங்க (யுத் : 2448)

விழிக்குங்கண் – திறந்து பார்க்கின்ற கண். விழிக்குங்கண் வேறில்லா... என்கான்முளை. (அ : 344)

விழிக்கொரு விழவுமாயவர்–கண்களுக்கு ஒரு சிறந்த திருவிழாவை ஒத்து உற்சாகத்தை யுண்டாக்குகின்ற அழகுடைய மங்கையர். வெங்களிவிழிக்கொரு விழவு மாயவர் கண்களிற் காணவே களிப்பு நல்கலான். (பா : 594)

விழிகள் – கண்பார்வைகள். நஞ்சுசூழ் விழிகள் பூமழையின் மேல் விழ. (பா : 1145)

விழிகள் ஆயிரமுங்கொண்ட வேந்து – இந்திரன். விழிகளாயிரமுங் கொண்ட வேந்தை வென்ருனுமல்லன். (சு : 6949) [பா : பே]

விழிகாணேன் – கண்ணுக்குப் புலஞகாதவனும். மின்னிலைய வேலானே யானுன் விழிகாணேன். (யுத் : 166)

விழிகொள்ளா – கண்விழிக்கமாட்டா. கூடிய நறை வாயிற் கொண்டன விழிகொள்ளா முடிய. (அ : 702)

விழிச்சியர் – கண்களையுடைய மங்கையர். வேலை வென்ற விழிச்சி யர். (பா : 55) [பா : பே]

விழித்தல் – 1- பார்த்தல். அகலவிழித்தல். சிறுகண் தீயுக விழித்தனள். (அ : 150)

2. உறக்கமின்றி விழித்திருத்தல். வெம்பி வெந்தழியா நின்ற நெஞ்சினன் விழித்த கண்ணன். (அ : 666)

3. பார்வைக்கு நேர்படுதல் விருப்புறு முகத்தெதிர் விழிக்கின் வென்னிடும். (ஆ : 411)

விழித்திமையாத முன்னம் – கண்மூடித்திறப்பதற்குள்ளாக. விழித்திமையாதமுன்னம் வில்லொடும் விசும்பிற் சென்றான். (யுத் : 2134)

விழித்தெழுந்து – கண்கள் திறந்த வண்ணம் மேலே கிளம்பி. வாளியோளியால் விழித்தெழுந்து வானினூடு மொய்த்த பொய்யர் மெய்யெலாம். (யுத் : 3355)

விழிதருநெற்றியான் – நெருப்புக்கண் பொருந்திய நெற்றியையுடைய சிவபிரான். விழிதரு நெற்றியான்தன் வெள்ளி வெற்பு. (ஆ : 789)

விழிதுயில் – அறிதுயில். விழிதுயில் வளரும். (பா : 185)

விழிதுயில் வளர்தல் – விழித்துக்கொண்டு தூங்குதல். (பா : 185)

விழிப்பு – (கண்களால்) திறந்து நோக்குதல். கண்கள் விழிப்பு இலன். (யுத் : 2226)

விழிபுதைத்தல் – அச்சத்தாற் கண்களை மூடுதல். கூற்றுந்தன் விழிபுதைத்ததே. (அ : 861)

விழிபோயிற்று – கண் போய்விட்டது. விழி போயிற்று இன்று என்றார். (அ : 379)

விழிமான் – விழியால் மானை ஒத்த சீதாபிராட்டி. விழிமானை மானவன் மலர்க்கழலில் வைத்துமிலன் என்றால். (சு : 692)

விழியஞ்சி வாழ்தல் - கண்ணெதிரே நிற்கமாட்டாது மறைந்து வாழுதல். விழியஞ்சி வாழ்கின்றார் தன்னெஞ்சம் தாமே தடவாரோ தானவர்கள். (யுத் : 1600)

விழியில் தழல்மாரி சொரிதல் – கண்களின்று நெருப்புமழை பொழிதல். கிழிசோரியை வாரித்துடைத்தார் விழியிற்றழன் மாரி சொரிந்தார். (யுத் : 1914)

விழியெதிர் நிற்றியேல் – கண்ணெதிரில் நிற்பாயானால். விழியெதிர் நிற்றியேல் விளிதி என்றனன். (யுத் : 315)

விழிவழி – கண்களின் வழியாய். பொங்கரத்தம் விழிவழிப் போந்துக. (ஆ : 380)

விழு – மேலான விழுத்தனிப் பல்லிதழ் விரையுலாம் முகிழ். (யுத் : 200)

விழுக்கல் – எடைக்கல். நிறுக்கும் படிக்கல். மேரு விழுக்கலால் நிறுக்க நேர்வரு விரர். (யுத் : 977)

விழுங்குதல் – அடங்குதல். விழுங்கலுறுகின்ருள். (சு : 556)
2. கடத்தல். எண்ணை விழுங்கிய சேனை. (யுத் : 2275)
3 இடத்தை மறைத்துக்கொண்டு நெருங்குதல். தாவில் வானகம் விழுங்கினர் விண்ணவர் வெளிஇன்றென்னவே. (பா : 265)
4. உயிர்ப்பினை உட்கொள்ளுதல். புகை வெய்துயிர்க்கும் விழுங்கும் புழுங்குமால். (அ : 306)
5. வெல்லுதல். வெம்பு காலினை விழுங்கிடமேனுள் உம்பர் மீதில் நிமிர் வாசுகி ஒத்தான் (யுத் : 807)
6. உட்கொள்ளல். இடைவெளியில்லாமற் செய்தல் விண்ணை விழுங்கிய தூளி. (யுத் . 2265)
7. முற்றுதல். விழுங்கவுணர்ந்திலர். (யுத் : 2275)
8. முடுதல். விண்ணை விழுங்கியதூளி கண்ணை விழுங்குதலிற் கரைகாணுர். (யுத் : 2275)
9. உள்ளத்துக் கொள்ளல். பண்ணை விழுங்க உணர்ந்திலர். (யுத் : 2275)

விழுத்துதல்-தள்ளுதல். கரபத்திரந்தீர்த்து விழுத்தலாகி. (அ:697) கணையால் வேறுவேறு செய்து விழுத்தி. (ஆ : 32) விழுத்தினன் சிரம் எனும் வெகுளி மீக்கொள. (யுத் : 3822)

விழுத்தலை – சிறந்த தலைகள். முற்றிய விழுத்தலை முழுவதும் சிதறி வீழ்ந்தன. (யுத் : 1992)

விழுத்தவம் – சிறந்த தவம். விரி மலர்த் தவிசோன் தன்பால் விழுத்தவஞ் செய்து மீண்டான். (பா : 413)

விழுதல் – 1. அழியும் நிலையை அடைதல். இளக்கிமு தெஞ்சவிழும் எண்ணரு விளக்கை. (சு : 259)
2. கீழே விழுதல். விம்மினுள் விழுந்தாளரோ. (அ : 304) கைகயன் மகள் விழுந்தரற்றக் காண்டியால். (அ : 1106)
3. அழிவுறல். தீவினை வெம்பி விழுந்தது. (யுத் : 3839)

4. விரும்பிப்பற்றுதல். அமைதல். மின் றெரி எயிற்றின் ஒரு மேகம் விழுமென்ன. (யுத் : 861)
5. நீர் பெருகுதல். விழுகின்ற கண்ணெலாம் வெள்ள மாறி. (யுத் : 4167)

விழுது - ஆலமரத்தில் கீழ் நோக்கி வளரும் ஒருவகைக் கொடி. (யுத் : 1212)

விழுதுடை ஆல் – விழுதையுடைய ஆலமரம். வெறுங்கை நாற்றி னன் விழுதுடையாலன்ன மெய்யன். (யுத் : 1212)

விழுந்தரற்றுதல் – கீழே விழுந்து அழுது புலம்பல். கைகயன் மகள் விழுந்தாற்றக் காண்டியால். (அ : 1109)

விழுந்தழிதல் – பெருகிவழிதல். தன்வன்கதி பதிற்றின் முடுகிக் கொண்டெழுந்தனன் விழுந்தழி கொழுங் குருதியான். (ஆ : 36)

விழுந்து புரள்தல் – பெருந்துன்பத்தால் பூமியில் விழுந்து புரளுதல். விழுந்து புரள் நீவிலை நிலத் தொடுவெதும்ப. (யுத் : 3667)

விழுந்து போதல் – இறந்து போதல். மெய்யெடுத்தகவி வெள்ளம் யாவையும் விழுந்து போன வெறும் விம்மலால். (யுத் : 2020)

விழுநதி – சிறந்த ஆறு. (சரயு) சரயுவென்றே மேன்முறை அமரர் போற்றும் விழுநதி யதனினேடும். (பா : 423)

விழுப்பம் – சிறப்பு. மெலியவர் பாலதேயோ ஒழுக்கமும் விழுப்பந் தானும். (கி : 317)

விழுப்புகைப்படலம் – மிக்க புகைத்திரள். (யுத் : 600)

விழுமம் – 1. துன்பம். வெளிப்படு முணர்வினன் விழுமம் நீங்கியே. (பா ; 1390)
2. சீர்மை. விழுமலர்க்கண்ணீர். (யுத் : 4266)

விழுமிது - 1. சிறந்தது. நல்லது. உடன்பாட்டை யுணர்த்துஞ்சொல். மிக்குயர் மகுடஞ் சூட்டச் சூடுதல் விழுமிதென்றார். (அ : 287) வீரனும் விழுமிதென்றான். (கி : 107) (யுத் : 759)
2. இகழ்ச்சிக்குறிப்பு – எதிர்மறை இலக்கணை. விரசுகவல்லை யென்பான் விழுமிதென்றிகழ்ந்து நக்கார். (பா : 678)

விழுமிய-சிறந்த நற்குணங்களையுடைய. நிறைந்த சிறப்பையுடைய. விழுமிய குணத்தோய். (சு : 562) விழுமிய குணத்து வீரன். (யுத் : 4080)

விழுமியது – சிறந்த கருத்து. விழுமியது சொற்றனை. (ஆ : 172)

விழைத்திறம் – விரும்பிய படியே செய்தல். இயல்பல இத்துணை விழைத்திறத் தொழில். (கி : 340) [பா : பே]

விழைதல் – 1. விரும்புதல். விழையுந் தண்டளிர் சூழலும். (சு : 718) விழைத்திறம். (கி : 340) [பா : பே]

2. ஆசை கொள்ளுதல் விழைந்த வெவ்வினை வேரற வீசினான். (சு : 264)

விழைவது – விரும்புவது. யான் நின்னைவேண்டி எய்திட விழைவ தொன்றுளதென விளம்பும். (அ : 61) [பா:பே]

விழைவன்று – விரும்பத்தக்கதன்று. வேண்டுமெனலாம் விழை வன்றிதென. (ஆ : 781) (பா:பே)

விழைவிடம் – விரும்பியிருக்குமிடம். முரண்வெங்காலும் மென் தழை துடிப்புறச்சார்வுருது அவன் விழை விடத்தின்மேல் விளி வையஞ்சலால். (கி : 125)

விழைவு–1. உலகப்பற்று. விழைவு நீங்கிய மேன்மையராயினும். (சு : 293)

2. விருப்பம். விழைவுறு மாதவம் வெஃகினோர். (பா :376) தெய்வவேதியர் விழைவும் அஃதே. (யுத் : 2131)

விள்ளல் (விள்ளுதல்) – 1. மலர்தல். விள்ளும் வீயுடையப்பானல். (பா : 653)

2. சிதைதல். கெடுதல். கள்ளமாய வாழ்வெலாம் விள்ள ஞானம் வீசுதாள். (ஆ : 63)

3. வேறுபடுதல். அரக்கர் எங்கள்மேல் விண்டனர். (ஆ : 235) வெடித்தமலைகள் விண்டு. (யுத் : 2054)

4. பிரிதல். விண்டுழி ஒருநிலை நிற்பர். (யுத் : 376)

5. பிளவுபடல். துண்டமாதல். விள்ளாது செறிந்து மேலுற வீங்கி. (ஆ : 699) விண்ட வாளரக்கன். (யுத் : 1092)

6. நீங்குதல். மரகதத்தின் விள்ளா முழுமாநிழற் பிழம்பும் வேண்டவேண்டும் மேனியதோ. (சு : 543)

7. பகைமைகொள்ளுதல். விண்ட வானவர்கள். (சு : 730)
8. முறிதல். உடைதல். தோற்றல். விண்டங்கது நீர்ந்தது. (யுத் : 1915) விண்டவாய்ச்சிறு மின்மினி. (சு : 111)
9. திறத்தல். மேருவின் விளங்கி விண்ட நாற்பெரு வாயில். (யுத் : 3211)
10. வெளிப்படல். ஆயிர மருக்கர் விண்டதாமென விசும்பிடைத் திசையெலாம் விளங்க. (யுத் : 4605)

விள்ளாநிலை சேரன்பு – பிரியாத நிலைமையை யுடைய பேரன்பு விள்ளாநிலை சேரன்பால் மகன்மேல் மெலியின் உலகம் கொள்ளா தன்றே. (அ : 348)

விளக்கங்கண்ட விட்டில் – விளக்கைப் பார்த்த விட்டிற் பறவை. வார்வன பறப்பவெல்லாம் விளக்கங்கண்ட விட்டில் போல் வீழ்வகாணாய் (ஆ : 789)

விளக்கம் – விளக்கு. தீபம். மொய்ந்நிலத் தகளியின் முழங்குநீர் நெயின் வெய்யவன் விளக்கமா மேருப்பொற்றிரி மை அடுத் தொடுத்தது. (கி : 445) விளக்கொரு விளக்கந்தாங்கி. (பா:1587)

விளக்கின் வீழ்விட்டில் – விளக்கிலே விழுகின்ற விட்டிற் பறவை. விளக்கின்வீழ் விட்டிலன்ன மனையிடை யரக்கன். (யுத் : 2865)

விளக்கின்றி விளங்கும் மாடம் – விளக்கு இல்லாமலே விளங்குகின்ற மாளிகை. எரிசுடர் மணியின் செங்கேழ் இளவெயிலிடை விடாது விரியிருள் பருகி நாளும் விளக்கின்றி விளங்குமாடம். (சு : 275)

விளக்கினம் – விளக்கு வகைகள். விளக்கினம் இருட்டினை விழுங்கி ஒளிகால. (சு : 166) (யுத் : 3810)

விளக்கு – தீபம். எண்ணிய விளக்கவை இரண்டும் எஞ்சினல். (அ : 1140) (யுத் : 1608)

விளக்குதல் - தெளிவித்தல். வீரனுள்ளம் விளக்குவல். (கி : 607)

விளக்கு வான்கணைகள் – ஒளிமிக்க பெருமை வாய்ந்த அம்புகள். விளக்கு வான் கணைகளால் விளிந்து. (யுத் : 1796)

விளக்கெதிர் ந்த விட்டிற் பான்மை – விளக்கு முன்னேதிரண்டு வந்த விட்டிற்பூச்சியின் தன்மை. விளக்கெதிர் வந்த விட்டிற் பான்மையை வியக்க வேண்டா. (யுத் : 1608)

விளக்கையும் விளக்கு மேனி – விளக்கையும் விளங்கும்படி செய்ய வல்ல (மகளிரின்) மேனி. ஒண் பொன் விளக்கையும் விளக்கு மேனி மிளிர் கதிர் பரப்பும். (யுத் : 2777)

விளங்கிலை வேல் – விளங்குகின்ற இலைவடிவான வேல். அரக்கர் கரங்களால் விதிர்த் தெறிந்த விளங்கிலை வேல். (யுத் : 986)

விளங்கிழை – 1. ஒளிமிக்க அணிகலம். விற்கொள் வாணுதல் இளந்தளிர்க் கொழுந்தே. (அ : 753)

2. விளங்குகின்ற ஆபரணங்களையுடைய பெண். (சீதாபிராட்டி) விமான மேவி விளங்கிழையோடும் கொற்றம் முதிர்தரு துணைவரோடும். (யுத் : 4239)

விளம்பல் – 1. காலந் தாழ்த்தல். விளம்பார் மண்ணினை ஒடி வளைந்தார். (சு : 1234)

2. ஒலித்தல். ஒன்றொடொன் றெடுப்பில சோர்வில விளம்பு புள் துவன்றுகின்றது. (கி : 14)

3. சொல்லுதல். விளம்பலை. (யுத் : 186) இவை இவை விளம்பும். (சு : 470)

விளம்பலாதீர் – சொல்லா திருக்கப்போகின்றீர். (அவசியம் சொல்லுங்கள்). (யுத் : 724) விளம்புதல் பார்க்க.

விளம்புதல் - சொல்லுதல். விளம்புவான் உடன்று மிக்கார். (சு:481) காலந்தாழ்த்த வில்லினர் வந்தாரென்றும் விளம்புதிர் விளம்பலாதிர். (யுத் : 724) விளம்பிடுவாய். (யுத் : 1708)

விளர்க்குதல் – வெளுப்புற்றுச் சோர்தல். மேருஎங்ஙனம் விளர்க்குமோ முழுமுற்றும் வெள்கி. (சு : 115)

விளர்த்தல் - வெண்ணிற மடைதல் மேரு எங்ஙனம் விளர்க்குமோ (சு : 115) ஆடுமங்கையர் கருங்குழல் விளர்த்த. (யுத் : 556)

விளரி – ஒரு பண். இரங்கினோர் பாடும் பண். விளரிச் சொல்லியர். (சு : 128) விளரி நல்யாழ். (கி : 392)

விளரிச் சொல்லியர் – விளரி என்ற பண் போன்ற பேச்சையுடையவர். விளரிச் சொல்லியர் கோதையால். (சு : 128)

விளரி நிரம்பு பாடல் – விளரி என்னும் இசை நிறைந்த பண்ணோடு கூடிய பாடல். விளரி நிரம்பு பாடலோ டாடினர் வீதிகள் நெருங்க. (யுத் : 487)

விளி - 1. இசை. தெள்விளி சிறியாழ்ப்பாணர். (பா : 378) தெள் விளி யாழ். (யுத் : 205)
2. ஒலி. ஓசை. தண்ணுமை வீக்கித் தாக்குறும் விளியும். (பா : 88)
3. அழை. அதிர்த்து எதிர் விளித்து மாண்டவே. (பா : 378)
4. கூப்பிடும் சக்தி. விளியற்ருர். (யுத் : 2051)

விளிகின்றிலே - அழிவு எய்தமாட்டாய். (ஆ : 906)

விளிகுற்ருர் - கெடுதலுற்ருராய். மாரவேள் மெல்வில்லுக்காற்ரு ராய் தாமெம்மை விளிகுற்ருர் போர்செய்யத் தொடங்கினுர். (பா : 770)

விளிசங்கம்-ஒலிக்கின்ற சங்கு. அழைக்கின்ற சங்கு. (அண்) விளி சங்கம் கொன்னே ஊதி. (யுத் : 3446)

விளிஞர் - கொல்லத்தக்கவராகிய பகைஞர். (வை.மு) கோபிப் பவர். (வெ.ப) போர்களத்திற் பொருகின்ற பகைவர். (அண்) கோபிக்கத்தக்க பரம விரோதிகள். (கலா) வேறுபடுபவர். மிகைப் புலத்து விளைகின்றதொரு பொருளைக் காதலிக்கின் விளிஞராவார். (யுத் : 410)

விளித்தல் - 1. அழுதல். எற்றி எற்றி விளிப்ப போன்றன கோழியே. (அ : 232)
2 சொல்லுதல். வில்லாளனையாதும் விளித்திலிரோ. (சு : 492) விளித்தான் அதுகேட்டு. (கி : 988)
3. ஆரவாரஞ்செய்தல். பேராரவாரஞ்செய்தல் வீரத்திறமிது நன்றெனவியவா மிகவிளியா. (யுத் : 1135) விளித்துப்பின் வேலை தாவும் வீரன். (சு : 34)
4. அழித்தல். வெஞ்சின அரக்கரை விளித்து வீயுமோ. (சு : 454)
5. ஒலித்தல். கீழ்விளி ஓதமென் சிலம்பொடும் உதிரச்செக்கரும். (பா : 626)
6. கொல்லுதல். (உ.வி) (சு : 454)
7. அழைத்தல். கூப்பிடுதல். உன்னை வென்றவம் உம்மை யெல்லாம் விளிப்பெனே. (யுத் : 1907) விட்டபேருணர்வினை விளித்த என்கெனே. (கி : 201) வல்லை நீ பொருவாயென்று விளிக்கின்ருன். (யுத் :2968)

விளித்திடு தீபம் – கலங்கரை விளக்கம். பேய்களிப்ப நடிப்பன விளித்திடு தீபம் நிகர்த்தவால். (யுத் : 3392)

விளிதல் – 1. இறத்தல். விளிவித்துளது. (யுத் : 1662) விழியெதிர் நிற்றியேல் விளிதி. (யுத் : 315) விட்டேகுதியால் விளிகின் றிலையால். (ஆ : 906) விளிதும். (யுத் : 3088)
2 அழிதல். விண்ணுநீர் மொக்குளின் விளியும் யாக்கை. (அ : 1144) விளிகின்றிலையால். (ஆ : 906)
3. அடங்குதல். கழிதல்· நீங்குதல். விளியாது விரியும் பசி. (ஆ : 11)
4. குறைதல். மெலிதல். என் நெஞ்சு முலந்தேன் விளிகின்றேன். (ஆ : 735)

விளிந்திலா உணர்வினோர் – அழியாத அறிவையுடைய தத்துவ ஞானிகள். விளிந்திலா உணர்வினோரும் வேதமும் விளம்பவேயும். (கி : 655)

விளிந்துருள – இறந்து விழும்படி. வேலிகற் சினவு தாடகை விளிந்துருள விற் கோலி. (கி : 84)

விளிப்பாணி – வாய்ப்பாட்டிசை. விருந்தென மகளி ரீந்த தெள் விளிப்பாணித் திந்தேன். (பா : 575)

விளிப்பு – ஓசை. விண்ணினை வேலை விளிப்பார் மண்ணினை ஓடி வளைந்தார். (சு : 1234) [பா : பே]

விளிம்பு – ஓரம். சுற்றிடம். விளிம்பும் வெள்ளமும் மெய்தெரியாது. (சு : 249)

விளியொலி – உரத்துக் கூபபிடுவதன் ஒலி. வயவர் ஆர்க்கும் விளி யொளி. (யுத் : 2401)

விளிவது – சினங்கொள்வது. (அண்) இறப்பது. (வை.மு) விளிவார் விளிவது. (பா : 1368)

விளிவார் விளிவது - சினங்கொள்வார் சினங் கொள்வது. (அண்) இறத்தற் குரியராய் இறப்பது. (வை.மு) விளிவார் விளிவது தீவினை விழை வாருழை யன்றே. (பா : 1368)

விளிவித்தல் – இறக்கும்படி செய்தல். மானுடவன் வில்லொன்று நினனை விளிவித்த தென்னும் சொல்லன்றே என்னைச் சுடு கின்றது தோன்றல். (யுத் : 1662)

விளிவித்துளது - இறக்குமாறு செய்துளது. மானுடவன் வில்லொன்று நின்னை விளிவித்துள தென்னும் சொல். (யுத் : 1662)

விளிவிலாதோர் - அழிவில்லாதவர். யார்க்கும் மேலவர் விளிவிலாதோர் என்றேரும் இருப்ப. (சு : 474)

விளிவு - கோபம். பாவிமேல் விளிவு சாதம் நீங்கலதாம். (யுத் : 4050)

2. அழிவு. யார்க்கும் மேலவர் விளிவிலாதோர் என்றேரும் இருப்ப. (சு : 474) விளிவிலேன். (யுத் : 1630) விளிவுற்ற பதாகைய. (யுத் : 1540)

3. வீர கோஷம். விளிவொடு விழியுமிழந்தார். (சு : 768) [பா:பே]

4. கூப்பிடுகை. கூப்பிடும் ஆற்றல். மெய்யற்ருர் குடல்கள் சோர விசையற்ருர் விளிவு மற்ருர். (யுத் : 2051)

விளிவுற்ற பதாகைய - அழிவுற்ற பெருங்கொடி யுடையன. (யுத் : 1540)

விளை - கருவிளை மலர்கள். காண்போர் விழியொத்த விளையின் மென்பூ. (கி : 475)

விளைக்குறும் - விளைக்கும். மறப்பயன் விளைக்குறும் வன்மை. (அ : 560)

விளைகட்டி - கருப்பஞ்சாற்ருல் உண்டாக்கிய வெல்லம். விளை கட்டியின் மதுரித்தெழு கிளவிக்கிளி. (அ : 622)

விளை காமம் - விளைகின்ற காமவொழுக்கம். விளை காமநிறை வாசத் தேனின் மொழியுற்று. (ஆ : 257)

விளைத்தல் - 1. உண்டாக்குதல். வெற்றி யுனதாக விளையா தொழியின். (யுத் : 72)

2. செய்தல். விராவு நல்லமர் விளைக்குதும். (யுத் : 1452)

விளைதல் - 1. வளர்தல். விளையுந்தன் புகழ்வல்லியை. (அ : 183)

2. பலித்தல். பின்னை விளைந்தது விதியின் வெம்மை. (சு: 364)

3. நிகழ்தல். விளைந்தவா (கி : 618) (அ : 457)

4. மிகுதல். உருவிளை பவளவல்லி. (யுத் : 3965)

5. பயன்படுதல். மிகைப்புலத்து விளைகின்றதொரு பொருளைக் காதலிக்கின் விளிஞராவார். (யுத் : 410)

6. முதிர்தல். விளைந்த மூப்பினிர். (ஆ : 852)

விளைந்ததேயுமன்று – விளைந்ததுமன்று. வெவ்வினை அவள்தா விளைந்த தேயுமன்று. (அ : 457)

விளைப்பது – இனி விளைக்க இருப்பது. வினைத்திறம் யாதினி விளைப்பது. (அ : 852)

விளையாட்டு – அநுயாசமான செயல். விளையாட்டுத் தன்மை. அகிலாவிளையாட்டுடையார். (பா : 1) வெல்வதும் தோற்றல் தானும் விளையாட்டின் விளைந்தமேனுள். (சு : 471) (யுத்: 877)

விளையாடல் – விளையாடுவது. விளையாடல் தொழிலோ. (ஆ : 41)

விளையாடிப் பிழைப்பசெய்தாய் – விளையாடியவண்ணம் தவறான காரியத்தைச் செய்துவிட்டாய். (யுத் : 877

விளையாடுதல் – 1. பொழுதுபோக்காக விளையாடல். பொருப் பேந்திய தோளானொடு விளையாடினள் போனுள். (அ : 623) விளையாடினுய். (யுத் : 2025) விளையாடுதியோ. (யுத் : 239)
2. உக்கிரமாகக் காய்தல். வேனில் விளையாடு சுடரோனின் ஒளி விம்மும். (சு : 709)

விளையாத துன்பம் – நேரிடத்தகாத துன்பம். மிகக்கொடிய துன்பம். விளையாததுன்பம் விளைவித்த தெய்வம் வெளிவந்த தென்ன வியவா. (யுத் : 2218

விளைவதோர்தல் – மேல்விளைவதை ஆராய்தல். விளைவதையுணர் தல். வெறிது நம் வெற்றியென்ருன் மாலி மேல் விளைவதோர் வான். (யுத்:2801) வீடணன் விளைவதோர்வான். (யுத் : 3109)

விளைவித்தல் – விளையும்படி செய்தல். என் விளைவித்தாய். (அ:875)

விளைவு – 1. காரியங்களின் விளைபயன். விளைவினையறியும் வென்றி வீடணன். (யுத் : 451)
2. சம்பவம், காரியங்கள், தத்துவம். (கலா) விதியது வலியினு லும். (ஆ : 645)
3. நிகழவேண்டிய செயல். என்னதாகும் மேல்விளை வென்றி ருந்தான் இராமன். (யுத் : 12)
4. தீப்பயன். விளைவிற்கெல்லாம் நல்வித்தாய். (யுத் : 2162)

விளைவு கண்டுணர்தல் – எங்ஙனம் முடியுமோ அதனைப்பார்த்துத் தெரிந்துகொள்ளல். விளைவு கண்டுணர்வதல்லால் வென்றிமேல் விளையுமென்னவுளையதன்று. (யுத் : 2241)

விளைவு நோக்குதல் – பயனை ஆலோசித்துக்கொள்ளுதல். விளைவு நோக்குவாய். (யுத் : 367)

விற்கடந்த நுதல் – வில்லின் வளைவையும் வென்ற நெற்றி. விற்கடந்த நுதற் சிலர் வீடினார்: (சு : 1200)

விற்கலை நுதலினர் – ஒளியுள்ள பிறைபோலும் நெற்றியையுடைய மகளிர். விற்கலை நுதலினரும் மைந்தரும் வெறுத்து நீத்த பொற் கலன். (பா : 569)

விற்கால் – தனுர்த்தண்டம். வில்லின்முனை. சேமவிற்கால் கோட்டும் மளவில். (ஆ : 922) வயிரப்போர் விற்கால். (யுத் : 1909)

விற்கூடு நுதல் – வில்லையொத்த புருவம். விற்கூடு நுதல்திரு. (சு : 582)

விற்கை வடவரை – வில்லைக்கையிலேந்திய மேருமலைபோன்ற இலக்குவன். விற்கை வடவரை பாங்கு நிற்ப. (யுத் : 438)

விற்கொண்ட மழையன்னான் – இந்திரவில்லைக்கொண்ட மேகம் போன்ற இராமபிரான். (கலா) வில்லையேந்திய மேகத்தையொத்த இராமபிரான். (அண்) விற்கொண்ட மழையன்னான் மேல் பூமழை பொழிந்து வாழ்த்தி. (பா : 418)

விற்கொண்டான் – வில்வீரரிற் சிறந்தவன். விற்கொண்டானிவனே யென்று வெருக்கொண்டார் முனிவர் மேலோர். (யுத் : 2068)

விற்கொம்பு – வில்லாகிய மூங்கில். வில்லாகிய தண்டம். வில்லுத் தடி. விற்கொம்பு முண்டருங் கூற்றுமுண்டரோ. (கி : 568)

விற்கொள் வாணுதல் – வில்லின் தன்மையைக் கொண்ட விளங்கும் புருவம் விற்கொள் வாணுதல் விளங்கிழை இளந்தளிர்க் கொழுந்தே. (அ : 753)

விற்சேவகன் – வில்லையுடைய வீரன். உழுவைப் போத்தையுழை யுயிருண்பதே செழுவிற் சேவகனே யெனுமோர் சிரம். (யுத் : 3161)

விற்பகல் – ஒளியோடு கூடிய பகற்பொழுது. விற்பகலின்றியே. (சு : 373)

விற்படி திரள் தோள் – வில் படிந்துள்ள திரண்ட தோள். விற்படி திரடோள் வீர. (யுத் : 792)

விற்படுகணை – வில்லினின்றும் பிரயோகிக்கப்பட்ட அம்புகள். விற் படுகணைபட விழும் வீரர். (யுத் : 1992)

விற்படை – வில்லேந்திய வீரர்படை. விற்படை பெரிதென் கேனே. (சு : 136)

விற்பணி - வில்லின் தொழில். அரக்கர்தம் வருக்கம் ஆசறவிற் பணிகொண்டு. (சு : 508)

விற்பிடித்த அறம் – வில்லை யேந்திய தருமதேவதை. இவர் குலத் தோன் விற்பிடித்த அறமென்ன ஒரு தனியே திரிந்து அமராபதி காத்தான். (பா : 726)

விற்பிடித்த வேலை – வில்லேந்திய படைக்கடல். விற்பிடித்த வேலை யினன். (அ : 1018)

விற்புயல் – வில்லாகிய மேகம். விற்புயல் அண்ட கோளம் கீற்றுற் றுடையப்படு நாணுறுமேறு கேட்டான். (அ : 417)

விற்றங்கு புருவம் – வில்லின் தன்மை பொருந்தின. வளைந்த புருவம் விற்றங்கு புருவநெற்றி வியர்வர. (பா : 1160)

விற்றல் – ஒழித்தல். தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு. (சு : 567)

விற்றிரு நுதல் - ஒளியுள்ள அழகிய நெற்றி. விற்றிருநுதன் மாதே. (அ : 701)

விற்றுண்டல் – விலைப்படுத்தி வாழ்தல். பாவியேன் உம்மை யெல்லாம் விற்றுண்டேன். (யுத் : 1621)

விற்றொடையின் விடுகணை – வில்லிலிருந்து வரிசையாக விடுகின்ற அம்புகள். விற்றொடையின் விடுகணையால் வெந்தொழியுமெனக் கருதி. (யுத் : 408)

விற்றொழில் – 1. வில்வித்தை. வில்லின் வலிமை. ஒருவன் கற்ற விற்றொழில் என்னே. (யுத் : 1875) தனிவிற்றொழில். (யுத் : 1826) விற்றொழில் வீரம் விளைத்தார். (சு : 1242)
2. போர்த்தொழில். வில்லியர் விற்றொழில் முற்ற. (சு : 622)

விற்றொழிலாற்றல் – விற்றொழிலின் வலிமை சோர்ந்து நாம் வீழ்ந்தழுவதே நன்று நந்தம் விற்றொழிலாற்றல் அம்மா. (யுத் : 2861)

விற்ருெழிற் கல்வி – விற்ருெழிலைக் குறித்த கல்வி. வானவர் கண்ணிறைந்தன விற்ருெழிற்கல்வியே. (யுத் : 3385)

விறகு – எரிப்பதற்குரிய கட்டை. விறகிடை வெந்தீமூட்டி. (யுத் : 418) மீனும் நாகமும் விண்டொடு மலைகளும் விறகாய் (யுத் : 553) (யுத் : 1615) விறகின் வெந்தன. (யுத் : 2466)

விறப்பு – அச்சம். விறப்பொடு வணக்கஞ்செய்த விடலை. (பா : 687)

விறல் – 1. மெய்ப்பாடு. விறலியர். (பா : 158)

2. வெற்றி. பராக்கிரமம். மீன்வரு கொடியவன் விறலடு மறவோன். (ஆ : 112)

3. வலிமை. வல்லமை. மறலியஞ்சுறு விறலர். (கி : 51)

4. வீரம். வில்லுடையேன் நின்றேன் விறலுடையேனல்லேனே. (அ : 998)

விறல்மொய்ம்பு – வலியதோள். விறன்மொய்ம்பீர். (கி : 1017)

விறலி – விறலியர். விறலிக்கு ஈவாளொத்து. (பா : 1001)

விறலியர் – விறல்படப்பாடும் மகளிர். விறலியர் பாடல் கேட்கவும் (பா : 158)

வின்மலைவல்லவன் – வில்லினுற் பொரவல்லவன். (ஆ : 239)

வின்மறைக்கிழவர் – தனுர் வேதத்துக்கு உரியவர்கள். வின்மறைக் கிழவர் நானுவிஞ்சையர் வரத்தின் மிக்கார். (சு : 822)

வின்மாண் கொலைவாளி – வில்லினுல் எய்யப்படுகின்ற மாட்சிமையுடைய கொல்லுதல் தொழில் வல்லஅம்பு. (சு: 576) [பா:பே]

வின்மான் கொலைவாளி – வில்லுக்கு ஒத்த கொலைத் தொழிலைச் செய்கின்ற அம்பு. நும் நாமமும் மாய்ப்பென் வில்மான் கொலை வாளியின் என்று வெகுண்டு நின்ருன். (சு : 576)

வின்னலம் – வில் நலம். வில்லின்பெருமை. கால்வரீ வின்னலம் புகழ்ந்தேத்துவாள். (சு : 351)

வினதன் – வானரப்படைத்தலைவன். சுசேடணன் வினதன் கெந்தமாதனன். (யுத் : 2571)

வினயம் பண்ணுதல் – சூழ்ச்சிசெய்தல். படைத்ததோர் உவகை தன்னை வேருெரு வினயம்பண்ணி உடைத்தது விதியே. (யுத் : 1627)

**வினய வார்த்தை** – வணக்கத்தோடுகூடிய வார்த்தை. மாருதி வினய வார்த்தை செவிமடுத்தமிழ்தின் மாந்தி. (யுத் : 412)

**வினவாதவர்** – உசாவாதவர். வினவாதவர் பால்விடை கொண்டிலேயோ. (பா : 1260)

**வினவிய** – கேட்டறிய. விம்மலுற்றனையானேவ வினவியவந்தேன் என்றான். (கி : 59)

**வினவுதல்** – கேட்டல். உசாவுதல் உசாவியறிதல். வினவிய காலையின் மெய்ம்மையல்லது புனைமலர்த்தாரவர் புகல்கிலாமையின். (ஆ : 193) வினவியவந்தேன். (கி : 59) வினவுதற்குரியன் (சு : 517) வினவாதவர். (பா : 1260) வினவ. (பா : 481) வினவுவல். (கி : 607) [பா : பே]

**வினுயினன்** – வினவினன். தாரை சேயினைத்தனி வினுயினன். (கி : 899)

**வினை** – 1. தொழில். செயல். எதுவினை. (பா : 314)
2. தந்திரம். அருந்துயர்ப் பெரும் பரம் அரசன் வினையின் என் வயின் வைத்தனன் எனக் கொளல் வேண்டா. (அ : 69)
3. வஞ்சனை. கபடம். (கலா) வினைகளைக் கற்பின் வென்ற விளக்கு. (யுத் : 1585) வினை நிரம்பிய கூனி. (அ : 176)
4. உபாயம். கடுஞ்சினத் தரக்கர் காய ஓர்வினை பிறிதின்மையின். (ஆ : 121)
5. பரிகாரச் செயல் தீர்வு. வீடணன் முகத்தை நோக்கி வினையுண்டே இதனுக் கென்பர். (யுத் : 2146)
6. முறைமை. ஊழ்வினை. நல்வினை. வினையிற்றிரள் தெள்ளருவித்திரள். (சு : 50)
7. பாவம். தீவினை. நிலை நின்று வினையிற் றீர்ந்தார். (சு : 459) தாய்வினை செய்யவன்றோ. (யுத் : 1362)
8. போர்த் தொழில். நிருதக்குல முடித்து வினைமுற்ற. (சு : 614)
9. கெடுதி. மெய்யா வினை யெண்ணி விடுத்த கொடுங் கைகேசி. (யுத் : 2438)
10. தீவினை. வினை வென்றேன். (சு : 483) (யுத் : 1585)
11. பரிகாரமான செயல். வினையுண்டே இதனுக் கென்பர். (யுத் : 2146)

வினைக் கொடும்பகை - கொடிய தீவினைப்பயனுகிய பகை. (வை·மு) வந்தடுத்ததோர் வினைக்கொடும் பகையுண்டென விம்மினுன் (யுத் : 4134)

வினைக்கொடுமை – செயலின் கொடுமை. தீவினைக்கொடுமை. புன்மைச் செய்தொழில் என்வினைக் கொடுமையால் புகழோய் என்னைப்போல்பவர் ஆருளர். (யுத் : 2586)

வினைகடந்தோர் – நல்வினை தீவினைகளினின்றும் விடுபட்டோர். வினைகடந்தோர் ஆராயினுந் தெரியாததொர் நெடுமாயையின கத்தார். (யுத் : 3031)

வினைகடியான் – கொடுந்தொழிலான். கடிதெதிர் குத்துதி என்றுன் வினைகடியான். (யுத் : 1134)

வினைகளைக் கற்பின் வென்ற விளக்கு – கொடு வினைகளாகிய இருளைக் கற்பின் சுடரால் வென்று விளங்கும் நற்குல விளக்காகிய சீதை. (அண்) தீய செயல்களைத் தனது கற்பினுற் பொருட்படுத் தாதிருந்த குல விளக்காகிய சீதாபிராட்டி. (வை.மு) எழுந்து போனுன் வினைகளைக் கற்பின் வென்ற விளக்கினை வெருவல் காண்பான். (யுத் : 1585)

வினைசெய்தல் – 1. ஒப்பனைசெய்தல். வினைசெயக் குழன்ற அல்ல. (கி : 800)
2. உச்சரித்தல். ஒருவிஞ்சை வினைசெய்தான். (சு : 489)
3. தீவினைசெய்தல். தாய் வினைசெய்ய அன்றே. (யுத் : 1362)

வினைஞர் – தொழில்வல்லவர். செயலாற்றும் தீரர்கள். விருத்தர் மேதகையர் வினைஞர் மந்திரத் திருத்தியோ. (யுத் : 79)

வினைத்திறம் - வினையின் வலிமை. வினைத்திறம் யாதினி விளைப்பது. (அ : 852)

வினைத்துவக்கு - இருவினையின் பிணிப்பு. வினைத்துவக்குடை வீட்டருந் தளைநின்று மீள்வார். (யுத் : 4022)

வினைத்தொழில் – தீவினைக்காரணமான செயல். கசட்டறு வினைத் தொழிற் கள்வராயுழல் அசட்டர்கள் ஐவர். (பா : 256)

வினைதேர்தல் – செய்ய வேண்டிய செயல் இன்னதென்று அறிதல். வினை தேரா நம்பியர் இருக்க என. (யுத் : 59)

வினை நிரம்பிய கூனி – வஞ்சகம் நிறைந்த கூனி. (அ : 174)

வினை நூறும் விடைக்கிளையான் – வினைகளைப் போக்குபவனாகிய இடபம் போன்ற இராமபிரான் தம்பி. வாளி தூரந்தனனுல் மீளா வினை நூறும் விடைக்கிளையான். (யுத் : 2334)

வினைப்பகை - மெய்ஞ்ஞானம். வினைப்பகை விசைக்கொடு விசும்புருவி மான மனத்தின் விசை பெற்றுளது வந்ததென. (யுத் : 3656)

வினை முடித்தல் – கருமத்தை முடித்தல். வெற்றி மாதவன் வினை முடித்த அக்கொற்றவேல் நெடுங்குமரற் கூடினான். (அ : 932)

வினையச் செய்கை – வஞ்சகச் செயல். மாயையின் காரியம் வினையச் செய்கை பயந்தது (யுத் : 2840)

வினையம் – 1. பழவினை. தீவினை. வினையமதறுத்து மேலாம் விண்ணவன் பதத்திற் சேர்வார். (பாயி : 22)

2 உபாயம். நூலோர் வினையமும் வேண்டற் பாற்றே. (கி : 412) (ஆ : 279)

3. தந்திரம். சூழ்ச்சி. மீண்டனென் என்றனன் வினையம் உன்னுவான். (ஆ : 862) (உ.வி) (யுத் : 1584) (யுத் : 3868) (யுத் : 1628)

4. மாயம். தானே புணர்வதோர் மாயம் போற்றி. (யுத்:1584) வித்தகன் ஒருவன் செய்த வினைய மென் என்று சொன்னான். (யுத் ; 2381)

5 வஞ்சனை வினையம் வேண்டுவர். (யுத் : 380) வினையம் வீய. (யுத் : 3868)

6. வேலைப்பாடு. தொழில் திறன். வஞ்சக வேலைப்பாடு. (அண்) மருங்குடை வினையமும் பொறியின் மாட்சியும். (யுத் : 480) (கி : 913)

7. செய் தொழில். செயல். ஆண்டொழிற் கமைந்த வினையம் நீங்கிய மனத்தரை (ஆ : 508) வினையம் மற்றிலை. (யுத்:3259)

8. காரியம். உவகையோடு இனி நம் வினையம் முற்றிய தென்று கொண்டு ஏறினன். (யுத் : 4066)

9. பணிவு. வினைய மேவினர் இனிதினங்கிருந்ததோர் வேலை. (யுத் : 3238)

வினையற நோற்று நின்ற மேலோன் – இருவினைகளும் தொலையத் தவஞ் செய்து அத்தவ நெறியிலே நிலைத்த மேலோன். விசுவா மித்திரன். பின்னர் வினையற நோற்ற மேலோன் விளம்ப லுற்றான். (பா : 422)

வினையவர் - ஆராயுந் தன்மையுள்ளவர். வினையவர் நால்வரும் விரைவின் வந்தனர். (யுத் ; 320)

வினையவன் - முயற்சியுடையவன். (கலா) வீரச்செயலையுடையவன். (அண்) தீரா வினையவன் விடுத்தான் என்னே. (சு : 525) [பா:பே]

வினையவார்த்தை - வணக்கத்தோடுகூடிய வார்த்தை. மாருதி வினைய வார்த்தை செவிமடுத்து. (யுத் : 412)

வினையறு துறக்கநாடு - தீவினையற்றுர் எய்துதற்குரிய சுவர்க்க லோகம் (கலா) வினைநீங்குதலால் எய்தக்கூடிய விண்ணுலகம். (அண்) வினையறு துறக்கநாட்டு விண்ணவர் கணம். (பா:1014)

வினையறுதொழிலர் - குற்றமற்ற தொழிலையுடையார். வினையறு தொழிலர் முன்னு ஆயிரர் விரவினுரை. (யுத் : 1225)

வினையறு முனிவர் - வினைகளினின்று நீங்கிய முனிவர். வினையறு முனிவர் தூர்த்து நாண்மலர் சொரிந்தனர். (யுத் : 1164)

வினையிற்செய்த கைதவ மான் - தந்திரத்தாற்செய்த மாயமான். வெய்ய வல்லரக்கர் வஞ்சவினையிற்செய்த கைதவ மான் என்றண்ணல் காணுதி கடையின் என்ருன். (ஆ : 792)

வினையின் கூற்றுவன்-இருவினைகட்கு எமன்போன்றவன். (இராமன்) வினையின் கூற்றுவ கண்டருள் நீ. (கி : 731)

வினையின் வந்தது - பழவினை வயத்தால் வந்தது. மற்றது வினையின் வந்ததாயினும் மாற்றலாற்றும் பெற்றியர். (அ : 7)

வினையின் வெய்யன படைக்கலம் - போர்த்தொழிலிற் கொடுமையுடையனவாகிய படைக்கலம். வினையின் வெய்யன படைக்கலம் வேலைஎன்றிசைக்கும் சுனையின் நுண்மணற்றெகையன சுமந்தது தொக்க. (யுத் : 3627)

வினையினீங்கிய பண்பினர் - தீவினையினின்று நீங்கிய நற்குணம் வாய்ந்தவர். (வானரவீரர்) மனையின் மாட்சி குலாமலை மண்டலம் வினையின் நீங்கிய பண்பினர் மேயினுர். (கி : 942)

வினையினீங்கிய வேதியர் - வினையின் தொடர்பற்ற வேதியர். அருந்தவர் எதிர்வர வணங்கி வினையினீங்கிய வேதியர் விருந்தினனுனன். (அ : 773)

வினையினெய்துமோர் பிணி – தீவினையால் வந்த பெரும்பிணி. மர பின் வாழ்வினை வினையின் எய்துமோர் பிணியின் வெஃகலான். (அ : 930)

வினையினேன் – பாவியேன். தீவினை யாளனாகிய யான். வினையி னேன் உயிர் வாங்கினேன் இவ்வணி வருவித்தேயென (கி : 205)

வினையுடையரக்கர் – மறச் செயலுடைய அரக்கர். வினையுடைய ரக்கராம் இருந்தை வெந்துக. (சு : 665)

வினையுண்டது – வினை தன்னுள் அகப்படுத்துக்கொண்டிருப்பது. ஊழ்வினை சூழ்ந்து கொண்டிருப்பது. (வை.மு) ஊழ்வினை யுண்டா யிருப்பது. (அண்) தான் அந்நிலை யுறுவான் வினையுண்டது தவிரான். (பா : 1373)

வினையெலாமற நோற்றவன் – கரும பந்தங்களெல்லாம் ஒழியும்படி தவம் புரிந்த விசுவாமித்திரன். வினையெலாமற நோற்றவன் விளம்புவான். (பா : 481)

வினையேன் - தீவினை யுடையேன். வினையேற்கு உண்ணு நீராயுதவி (அ : 351)

வினைவர் – 1. சித்திரம் வல்லோர். ஓவியம் தீட்டுவோர். வினை வராலரிய கோதை பேதை. (கி : 778)
2. இருவினைகளைச் செய்து கொண்ட உயிர்கள். (அண்) வினை வர்க்கு முற்று முடனே படைத்தி. (யுத் : 2211) [பா : பே]

வினைவர்க்கம் – இருவினைகளின் தொகுதி. வினை வர்க்க முற்று முடனே படைத்தி. (யுத் : 2211)

வினைவருநெறி – தீவினைப் பயனாய்த் தொடர்ந்து வரும் நரகவழி. சிந்தை முண்டவினைவரு நெறியை மாற்றும் மெய்யுணர்வோர். (கி : 925)

வினைவென்றோர் – முனிவர். வினை வென்றோர் மேவிடம் என லோடும். (அ : 708)

வினை வென்றோன்-தீவினையை ஒழித்தவன். இராவணன்) (சு:483)

வினை வேரற வென்றெழிவான் – நல்வினை தீவினை என்னும் இரு வினைகளையும் வேரோடு அற வென்றவனாகிய வசிட்டன். மொய்ம் மாண் வினை வேரற வென்றெழிவான் மொழியா முன்னம். (அ : 338)

விநோதம் – பொழுது போக்கு. விளையாட்டு. ஆனுரைத்த சொல் விநோதம். (பா : 528)

## வீ

வீ – 1. மலர். பூளைவீ புரை பனிப்புயல். (பா : 610)
2. வீதல். இறத்தல். வீயுற. (சு : 903)

வீக்கம் – 1. மிகுதி. என்னினி வேறியாம் புகல்வது நிலவின் வீக்கமே. (பா : 1049)
2. திரட்சி. அந்தப் பாதகன் வீரத்தோள்களின் வீக்கம் நோக்கி. (சு : 601)
3. பெருக்கம். மின்னேரெயிற்று வல்லரக்கர் வீக்கம் நோக்கி. (சு : 601)
4. பரப்பு. மிகுதி. உன் பெருமாயையினால் வந்த வீக்கம். (யுத் : 4020)
5. மிக்க பிறப்பு, கட்புலனும்படி பருத்துத்தோன்றுகின்ற உடல். இலக்கணையால் பிறப்புக்கு ஆயிற்று – வீக்கம். சாதியொருமை. (வை.மு) மிகுதி. (அண்) மிகுதித்தோற்றம். (கலா) (சு : 1)

வீக்கிடுதல்–நிலையாகக்கொள்ளுதல். வனைகழல் அரசரின் வண்மை வீக்கிடும் சனகர் தங்குலம். (சு : 398) [பா:பே]

வீக்கின்றான் என – அழிக்கின்றவன்போல. ஏழுயர் உலகமும் வீக்கின்றானென. (யுத் : 1080)

வீக்கு – கட்டு. அது சிந்தி வீக்கிழந்தது வீழ்ந்தது. (யுத் : 1553)

வீக்கு இழத்தல் – கட்டுக்குலைதல். (யுத் : 1553)

வீக்குதல் – 1. கட்டுதல். வாளிப் பெரும்புட்டில் புறத்து வீக்கி. (அ : 411) இறுகவீக்கினன். (யுத் : 1073) வீக்கிய கனைகழல். (பா : 599) வீக்கின. (சு : 1110) வீக்கினன். (யுத் : 1292) வாளும் வீக்கி. (அ : 662a)
2. அடக்குதல். வெங்கனல் முழுகியும் புலன்கள் வீக்கியும். (சு : 401)

3. பூட்டுதல். நொறில் வயப்பரி வீக்குதேர். (யுத் : 1016)
4. அழித்தல். ஏழுயர் உலகமும் வீக்கின்ருனென (யுத் : 1080)
5. கொல்லுதல், விக்கல் என விகாரம் விக்கற்கொரு வெவ் வுரைத் தூதுவன் என்று விட்டாய். (யுத் : 1960 வீக்கின்றிலது (யுத் : 3038)

வீக்கு வெவ்விடம் – உயிரை அழிக்கவல்ல கொடிய விடம். வீக்கு வாய் அயில் வெள்ளெயிற்றரவின் வெவ்விடத்தை மாய்க்குமா நெடுமந்திரந் தந்து. (யுத் : 3789)

வீக்கொண்டு வீழ்தல் – மரணத்தையடைந்து விழுந்திடுதல். திசை முகன் பாசந்தீண்ட வீக்கொண்டு வீழ யானே பரதனும். (யுத் : 2877)

வீக – அழிக. வெற்றியே பெறுக தோற்கவீக வியாது வாழ்க. (யுத் : 414)

வீகல் – இறத்தல். இன்று வீகலாது எவரும் எம்முடன் நின்று வாழுமா நெடிது நல்கினுய். (யுத : 2769)

வீங்கிய பொருள் – எங்கும் விரிந்து பரந்துள்ள பொருள். வீங்கிய பொருளெலாம் வேறுகாண்பன. (யுத் : 190)

வீங்கிய வீக்கம் – செருக்கு மிகுதலால் உண்டாகிய பூரிப்பு. நல் லுணர் உம்பரை வென்று வீங்கிய வீக்கம் மிகுத்தலால். (சு : 1136)

வீங்கிய வுயிர்ப்பு – மிக்க பெருமூச்சு. தாங்கி வீங்கிய உயிர்ப்பர். (யுத் : 2232)

வீங்கிருங் காதல் – மிகப் பெரிய விருப்பம். வீங்கிருங் காதல் காட்டி விரி முகக் கமல பீடத் தோங்கிய மருடஞ்சூடி உவகை வீற்றிருப்பக் காணுன். (அ : 285)

வீங்கிருள் – மிக்க இருள். வீங்கிருள் வேறிருந்த மால்யானை ஈட்டம் மெனவந்து பரந்த தன்றே. (பா : 967)

வீங்குதல் – 1. மிகுதல். சீதம்வீங் குவரியைச் செகுக்கு மாஞெரு காதி காதலன் தருகடலின் அன்னது. (கி : 5) [பா : பே]
2. பூரித்தல். வீங்கினர்கள் தோள் வீரரை யார் வியவாதார். (கி : 304)
3. பருத்தல். வளர்தல். வீங்கு தோள் தம்பி. (கி : 147)

4. பேருருவங் கொள்ளுதல். வீங்கினன் உலகை யெல்லாம் விழுங்கினன் என்ன. (சு : 1247) மீயுயர் விசும்பையும் கடக்க விங்கினான். (சு : 891)

5. மயக்கம் மிகுதல். திகைத்தல் மனம் விங்கினள் விம்மினள். (அ : 304)

6. செருக்கு. விங்கிய விக்கம். (சு : 1136)

7. ஓங்குதல். ஓதிமந் துயில்வ கண்டு உயிர்ப்பு வீங்கினான். (யுத் : 335

8. பொங்குதல் – சினம்விங்க. (யுத் : 1157)

9. விரிந்து பரத்தல். பரவுதல் மேலுறவிங்க (ஆ 699) வீங்கிய பொருளெலாம். (யுத் : 190)

10. மிகஉயர்ந்து விளங்குதல். ஆரம்விங்க. (யுத் : 4322)

11. பெருகுதல் – விங்கிய புகழ். (யுத் : 884)

வீங்குதோளண்ணல் – பெருத்த தோள்களையுடைய இராமபிரான். உம்பரின் உலம்போல் விங்குதோள் அண்ணல் தேவியொடு இனிது விற்றிருப்ப. (அ : 725)

வீங்குநீர் – கடல். விங்குநீர் வான்படிந்துலகிடைக் கிடந்த மாண்பது (கி : 2)

வீங்குநீர் நாரம் – மேலும் மேலும் பெருகுந்தன்மையுள்ள (வற்றாத) நீர்வளம். இவ்விங்குநீர் நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவேன். (சு : 631)

வீங்கொலி – பேரொலி. வீங்கொலி வேலை. (யுத் : 34841

வீச்சு – 1. வாள்வீச்சு. வெவ்விடமென்னப் பொங்கியவனிடை யெறிந்த விச்சுத்தவ்விட. (யுத் : 1889)

2. வீசுங்காற்று. இருசிறை விச்சினேறலால் வானமும் கானமும் மாறுகொள்ளவே. (ஆ : 902)

வீச்சுத்தவ்விட – வாள்வீச்சு ஒழியுமாறு. அவனிடையெறிந்த விச்சுத்தவ்விட உருமிற்புக்கு வாளொடு தழுவிக்கொண்டான். (யுத் : 1889)

வீச – வீசுதலைச்செய்ய. மந்தி அருவி நீர்கொடு வீசத்தான் அப்புறத்தேறிக் கருவிமாமழை உதிர்ப்பதோர் கடுவனைக் காணாய். (அ : 750)

வீச வீச – வீசுந்தோறும். வீச வீச வெதும்பினள். (பா : 643)

வீசி வீசி – போகட்டுப் போகட்டு. விழுத்த பைந்தலைய வேணு மால் வரைகள் வீசி வீசியுடன் விழுமால். (யுத் . 2017)
2. விடாமல் வீசி. ஆய்மலர் வீசி வீசி வணங்கினர். (யுத் : 2082)

வீசுகாலர் - விடுகின்ற மூச்சுக் காற்றையுடையவர்கள். வெய்துறு படையின் மின்னர் வில்லினர் வீசுகாலர். (சு : 760)

வீசுதல் – தனக்கென்று கருதாது தாராளமாக வழங்குதல். நிரம்ப கொடுத்தல். வேண்டினர் வேட்கையின் மேற்படவீசி நீண்ட கையாய். (பா : 442) திருமறை புகன்ற தானம் வீசினன் இயற்றி. (யுத் : 3608)
2. வீசியெறிதல். கவிகள் வீசும் வெற்பினம் விழுவ. (யுத்:1893)
3. செய்யா தொழிதல். கைவிடுதல். உலகங்கள் யாவும் என் சொல்லினாற் சுடுவேன் அது தூயவன் வில்லினாற்றற்கு மாசென்று வீசினேன். (சு : 624)
4. பரப்புதல். இருஞ்சிறைப் பந்தர் வீசி. (கி : 54) [பா · பே]
5. ஈன்றல். வால்வளை வீசிய வெண்மணி. (கி : 935)
6. ஒழித்தல். போக்குதல். பாசம் வீசா. (சு : 11) வெவ்வினை வேரற வீசினான். (சு : 264)
7. பரவுதல். வீசின நிருதர் சேனை. (யுத் : 2534)
8. ஆடச்செய்தல். மழைக்குழுவை யெல்லாம் மீதுறுபதாகை யென வீசியது. (யுத் : 3650)
9. கைவிடுதல். தூயவன் வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன். (சு : 624)

வீட்டரசு – மோட்சமாகிய பேரரசு. வீட்டுலக அரசாட்சி. வெற்ற செய்தி எம்பி வீட்டரசு எனக்கு விட்டான். (கி : 362)

வீட்டருந்தளை – விடுதற்கரிய பாசக்கட்டு. விடுவித்தற்கரிய பாச பந்தம். வினைத்துவக்குடை வீட்டருந்தளை நின்று மீள்வார். (யுத் : 4022)

வீட்டல் – கொல்லல். வீட்டுண்டு. (அ : 377) வீட்டுங் காலத்தலறிய மெய்க்குரல். (சு : 440) என்னைக் கொல்ல வந்தார்களை வீட்டினேன். (சு : 1151)

வீட்டி - உயிரும் உடலும் வெவ்வேறாக விடுவித்து. கொன்று. வீட்டி வாளவுணரை. (ஆ : 182)

வீட்டுண்டு – (விட்டுண்டு. அம்பு விடப்பட்டு) கொல்லப்பட்டு. விட்டுண்டலறுங்குரலால் வேழக்குரலன்றெனவே ஓட்டந் தெதிரா. (அ : 377)

வீட்டுதல் – 1. அழித்தல். விடுவேன் மற்றிவ் விலங்கையை விட்டி. (சு : 330)

2. கொல்லுதல். கும்பகருணனை வீட்டினனை. (யுத் : 2800)

வீட்டுலகம் – மோட்சலோகம். மீண்டு வருந்தரமல்லா வீட்டுலகம் புகுமென்ருர். (யுத் : 2693)

வீடணப்பசு – பசுப்போன்ற விபீடணன். (யுத் : 3528)

வீடணப் புலவர்கோமான் – அறிஞர்களில் தலைசிறந்தவனை வீடணன். (யுத் : 4216)

வீடணப்பெயர் – வீடணன் என்னும் பெயர்பூண்ட. வீடணப்பெயர் நளிமலர்க்கையினுன். (யுத் : 358) வீடணப்பெயர் நளிமலை யாக்கையான். (யுத் : 358) [பா:பே]

வீடணன் – விபீடணன். நாயகன் தனிமலை நின்று நண்ணுதல் மேயினன் வீடணன் கோயில். (சு : 381)

வீடணனுர்–விபீடணன். அந்நாள் வீடணனுர் சொல் நினைவுற்ருன். (யுத் : 3801)

வீடிநின்றழிதல் – உயிர் கொல்லப்பட்டு நின்று அழிவது. வீடி நின்றழிவ தென்னே. (யுத் : 3481)

வீடிப் போதல் - அழிந்து போய்விடுதல். இன்று நீமாற்றம் சில விளம்பி வீடிப் போகாதே இம்மெய்வனத்தை விட்டகல ஓடிப்போ. (ஆ : 348)

வீடியல் வழி – உயிர்கள் வீட்டுலகிற் செல்லுதற்குரிய நெறி. வீடியல் வழியதாக்கும் வேரியங்கமலை. (பாயி : 23)

வீடில் வீடு – தடையில்லாத விடுதலை. வீடில் வீடு காண்குறுந் தேவரால் விழு நடங்காண்பார். (சு : 120) [பா : பே]

வீடினதன்று – அழிந்த தன்று. வீடின தன்றறன். (சு : 396)

வீடு – 1. அழிவு. வீடு சேர நீர் வேலை கான் மடுத்தூடு பேரினும். (பா : 92) (சு : 396)

2. நீங்குகை. (வை.மு) வெந் துயரினேடு மொரு வீடு பெற வில்லா திருந்தனள் எனப்பகரின். (சு : 612) [பா : பே]

3. விடுதலை. விட்டு நீங்குதற்கேற்ற வழி. பிறவி வெந்துயர்ப் பெருஞ்சிறை விடுபெற்றனைய பெற்றியார். (ஆ : 124) வீடு காண்குமோ. (ஆ : 130) பெருந்துயரினோடு மொரு வீடுபெற வில்லாது இருந்தனள் எனப்பகரின். (சு : 612) [பா : பே] வீடுமில்லை. (யுத் : 1301)

4. விடு பேறு. முத்தி. செல்வம் ஈண்டென விட்டவர் அல்ல ரேல் யாவர் வீடுளார். (அ : 20)

5. சுவர்க்கம். வீடெனும் உலகின் வீழ் விமானம் போன்றன. (அ : 131)

வீடுகண்டவர் – மோட்சத்தை யடைந்தவர். வினைகளை வென்று மேல் வீடுகண்டவர். (யுத் : 83)

வீடுகாட்டல் - முத்தியுலகத்தைக் கொடுத்தல். மேவாத இன்ப மவை மேவி மேவ நெடுவீடு காட்ட முடியாய் ஆவாய். (யுத் : 2303)

வீடுகாண்குமோ – விடுதலை பெறுவோமோ. (ஆ : 130)

வீடுகாண்டுமோ - விடுதலை பெறுவோமோ. (ஆ : 130) [பா : பே]

வீடு சேர்தல் – அழிதல். (வை.மு) விடுதலையடைதல். (கலா) வீடு சேர. (பா : 92) வீடுவதாயினை. (யுத் : 1545)

வீடுதல் – 1. இறத்தல். பின்னுரிய தொன்றில்லை வீடுவேன். (சு : 330) உயிர் வீடாதுரை செய்தாய். (யுத் : 1149) மின்னுதி யிடை யானினி வீடுவென். (யுத் : 4140)

2 அழிதல். வீடினர் அரக்கர் என்றுவக்கும் விம்மலால். (பா : 194) விளிந்து வீடுக. (சு : 502) வீடிப்போகாதே இம்மெய் வனத்தைவிட்டகல ஓடிப்போ. (ஆ : 347)

வீடு நண்ணுதல் – மோட்சமடைதல். வெங்குலப் புலன் கெட வீடு நண்ணினர். (அ : 17)

வீடு பெறுதல் – 1. நற்கதியடைதல். பைம்புள் வீடு பெற்றுயர்ந்த வார்த்தை வேதத்தின் விழுமிதன்றே (யுத் : 418)

2. விடுதலை யடைதல். பெருந்துயரினோடு மொரு வீடு பெற வில்லாது. (சு : 612) [பா : பே]

வீடு பேறு – முத்தியுலகத்தைப் பெறுதல். முத்தியை அடைதல். பித்தரு முளர் சிலர் வீடு பேறிலார். (யுத் : 194)

வீடு மீட்குறும் மேனகை – வீட்டுலகை வேண்டா மென்று மீட்டு வரும்படி இழுக்கவல்ல மேனகை. ஆடல் நோக்குறின் அருந்தவ முனிவர்க்கும் அமைந்த விடு மீட்குறும் மேனகை மேல் நகை விளங்க. (சு : 1090)

வீடுவது – இறப்பது. அழிவது. பெருந்துயில் நெடுங்காலம் உழைத்து வீடுவதாயினே. (யுத் : 1545) விண்பாலவர்க்கும் உயிர் வீடுவது மெய்யே. (சு : 82)

வீடுவென் – உயிர் விடுவேன். (யுத் : 4140)

வீடுளார் – வீட்டுலகத்தில் இருக்கின்றவர்கள் செல்வம் ஈண்டென விட்டவரல்லரேல் யாவர் வீடுளார். (அ : 20)

வீடுறுதல் - வீடுதல். அழிதல். இறத்தல். உயிர் வீடுறுதல் மெய்யே. (சு : 82) [பா : பே]

வீடுறு முலகம் – இவ்வுலகத்தை விடுதல் பொருந்திய சுவர்க்க லோகம் வீடுறு முலகினும் விளங்கு மெய்யது. (கி : 829)

வீடென்னும் இன்பம் – வீடு பேருகிய பேரின்பத்தை வழங்குபவள்; இலக்குமி. யாவர்க்குஞ் செல்வத்தை வீடென்னும் இன்பத்தை. (யுத் : 293)

வீணுள் – வீழ்நாள். இறந்து விழுந்தநாள். விணுளில் அறம் புவி மேவுதலால். (ஆ : 777)

வீணை – வீணையென்னும் இசைக்கருவி. வீணை தண்ணுமை யடைத்தன தழங்கிசை வழங்கும். (சு : 257)

வீணைக்களி – வீணையின் தேன். பாணி தாழக்கந்தார வீணைக்களி செஞ்செவி காது தூங்க. (சு : 75

வீணைக்கொடி - வீணையின் வடிவம் எழுதிய கொடி. நீண்ட வீணைக் கொடிபற்றியொடித்து. (ஆ : 919)

வீணை கொடேந்து பதாகை – வீணையைக் கொண்டு மேம்பட்டுள்ள துவசம். எழுதுவீணை கொடேந்து பதாகைமேற் கழுகுங்காகமும் மொய்த்தன. (யுத் : 3688)

வீணையின் கொடி – வீணை வடிவை எழுதிய துவசம். பாகவீணை யின் கொடியொன்று கிடந்தது பார்மேல். (ஆ : 979)

வீணையின் நடத்துபாடல் – வீணையினுல் எழுப்புகின்ற இசைப்பாடல். நஞ்சு வீணையின் நடத்து பாடலால். (கி : 911)

வீத்தல் – போக்குதல். துன்பம் வீப்பான் ஏன்றுற்று வந்தான் வலி எம்மை யுணர்த்துநீ. (சு : 66)

வீதல் – 1. இறத்தல். வீந்தனன். (யுத் : 1029) வீடினதன்றறன் யானும் வீகலேன். (சு : 396) வீந்தாளே இவ்வெய்யவள். (அ : 229)

2. ஒழிதல். வெஞ்சின அரக்கரை விளித்து வீயுமோ. (சு : 454) வீகிலது. (பா : 1259)

3. அழிதல். வீய,த பெரு மாயை விளையாட்டும் வேண்டுமோ. (ஆ : 52) வீவன. (ஆ : 91) வீக வீயாது வாழ்க. (யுத் : 414) வீந்தவால். (யுத் : 593) வீந்தது. வீந்ததால். (சு . 1136) வீயு மேல். (கி : 219)

4. இல்லையாதல். குற்றம் வீந்த குணத்தின் எங்கோமகன். (ஆ : 816)

5. சிதறுதல். பூளை வீய்ந்தன்ன. (சு : 1213)

வீதி – 1, தெரு. விலங்கன் மாளிகை வீதி. (அ : 49)

2. கடையெல்லை. ஒழுங்கு. (வை.மு) எல்லை. (அண்) புறமாதிர வீதியாரோ. (கி : 279)

வீந்த – இல்லாத. குற்றம் வீந்த குணத்தின் எங்கோமகன். (ஆ : 816)

வீந்தவர் – இறந்தோர். வீந்தவர் வீந்தவரல்லர். (பா : 448)

வீந்தறும் – அழிந்துபோம். வீந்தறும் என்பதோர் விம்மலுற்று. (யுத் : 1560)

வீந்தாள் – நிச்சயம் இறந்துவிடுவாள். வீந்தாளே இவ்வெய்யவள் என்னு. (அ : 229)

வீந்திலர் – இறந்திலர். விண்ணிடை வீழ்ந்தனர் வீய்ந்திலர். (அ : 522)

வீப்பான் – போக்கும் பொருட்டு. மூன்றுற்ற தலத்திடை முற்றிய துன்பம் வீப்பான் ஏன்றுற்று வந்தான். (சு : 66)

வீய்த்தல் – அழித்தல். வெஞ்சின அரக்கரை வீய்த்து வீயுமோ. (சு : 454) [பா : பே]

வீய்ந்து – சிதறி. (சு : 1213)

வீய்ந்துறும் – அழிவுறும். வீய்ந்துறும் விரிஞ்சன். (யுத் : 2649)

வீய - இறக்க. மரிக்க. வேந்தன் வீயவும் யாய் துயர் மேவவும். (அ : 135) தானைகள் வீய நின்ற தலைமகன் தனிமை யோரார். (யுத் : 2255)

வீயாது வாழ்க - அழியாது வாழ்க.

வீயுமுயிர் மீளும் மருந்து - இறந்த உயிர் மீண்டும் பிழைத்தற்குக் காரணமான மிருத சஞ்சீவினி என்னும் மருந்து. (சு : 556)

வீர - வீரனே. வீர நீயார்வன் என்ருள். (சு : 517)

வீரக்கவசம் - பகைவர் படைக்கலங்களாற் சிதைவு படாத கவசம். மின்னின்ற சிலையன் வீரக்கவசத்தன். (அ : 427) [பா : பே]

வீரக்கைப்பணை - வீரத்தை வெளிப்படுத்தும் கைச்சங்குகள். (யுத் : 3870)

வீரக்கொடி - வீரத்தின் அடையாளமாகிய கொடி. வீரக்கொடியையு மறுத்து. (யுத் : 2069)

வீரக்கோட்டி - வீரர் வரிசை. வீரக்கோட்டியீர். (யுத்:1 679) வீரக் கோட்டி பேசுவார் ஒருவர்க்காவி தோற்றிலேன். (யுத் : 1594)

வீரக்கோட்டி பேசுவார் - வீரர் வரிசையில் வைத்துச் சிறப்பித்துப் பேசப்படுவார் (யுத் : 1594)

வீரச் சிங்கமன்னவர் - வீரசிங்கம் போன்ற படை வீரர். வெங்கண் மாருதிமேல் வேறுள வீரச் சிங்க மன்னவர் ஆக்கைமேல் உலப்பில செலுத்தி எங்கும் வெங்கணையாக்கினன். (யுத்:2466)

வீரச்சுந்தரன்-வீரமும் பேரழகுமுடைய முருகன். வெந்திறல் வேல் கொடு சூரடும் வீரச்சுந்தர னூர்திரு தோகையு மொத்தாள். (ஆ : 1097)

வீர சூடிகை - வீரத்துக் கறிகுறியாக அணிந்த சுட்டி. வீர சூடிகை நெற்றியினயலிட்டு விசித்தார். (சு : 880)

வீரத்திண்டிறல் - மிகவும் அதிகமான வலிமை. வீரத்திண்டிறல் மார்பினில் வெண்கோடு ஆரக்குத்தியழுத்திய நாகம். (யுத்:227)

வீரத்திறம் - வீரத்திறம். வீரத்திற மிது நன்றென வியவா. (யுத் : 1135)

வீரத்திறலோர் - வீரத்தோடு போர்த்திறமையும் ஒருங்குடையோர். வீரத்திறலோர் இவையின்ன இயம்பும் வேலை. (கி : 273)

வீரத்தின் பன்மைதீர்ப்பான் - வீரத்தின் சிறப்பு பலரால் பங்கிட்டுக் கொள்ளப்பெருது தன் ஒருவனுக்கே உரிமையாக வுடையவன். பாழிமா மேரு ஒத்தான் வீரத்தின் பன்மை தீர்ப்பான். (சு:993)

வீரத்தின் பான்மை தீர்ப்பான் - வீரத்தன்மைக் குரிய கடமையைச் செய்து தீர்க்கப் புறப்பட்டவனுகிய இந்திரசித்து. (வை.மு) (சு : 993) [பா : பே]

வீரத்தே நிற்றல் - வீரத்தன்மையிலே நிலைபெற்று நிற்றல். வீரத்தே நின்ற வீரன் அன்றது கண்ட வாழியனுமனை அமரினுற்றல் நன்றென உவகை கொண்டான். (சு : 994)

வீரத்தோள்கள் வலிய புயங்கள் வீங்கின மெலிந்தன வீரத் தோள்களே. (ஆ : 839)

வீரதை - வீரத்தன்மை. வீரகுணம். [வீரதா] தார் கெழு மௌலி பத்தின் தனிமணி வலிதிற்றந்த வீரதை. (யுத் : 885) வேதனைக் கிடமாதல் வீரதை யன்று பேதைமை யாமரோ. (கி : 512) (யுத் : 2336) கரக்கும் வீரதை திமையை. (யுத் : 1441)

வீரந் தெரித்தல் - வீரச் செயலைச் செய்து காட்டுதல். சிந்தை மசப்பும் வீர முன் தெரித் தேனல்லேன். (யுத் : 2163)

வீரநாடு - வீரர்கள் சென்று சேரும் நாடு. வீர சொர்க்கம். வீர நாடுற்ருயோ. (யுத் : 3891)

வீரப்பார வெஞ்சிலை - வீரம் மிக்க பெரிய கொடிய வில். (யுத் : 2177)

வீரபட்டம் - வீரர் நெற்றியிலே அணியும் பொன் வீரபட்டிகை; முத்துக்களால் அமைந்ததோர் அணி. தான் சூர் சுடர்க்குல மெல்லாம் சூடினுனென வீர பட்டத்தொடு திலகம் மின்னவே. (பா : 1298) சுடர் மணி ஓடையை வீரபட்ட மென நுதல் வீக்கியே. (யுத் : 1292) வீரபட்டத்தர். (சு : 881)

வீரம் - 1. அஞ்சாமை.
2. பகையை வெல்லும் ஆண்மை. வீரியர் வீரம் விழுங்கி நின்றவேலோன். (அ : 207)

வீரம் விளைத்தல் - வீரத்தைக் காட்டி நிற்றல்; வெற்றி கொள்ளல். ஒன்னூர் வீரமே விளைப்பரேனும். (யுத் : 928) வித்தக யாரினி வீரம் விளைப்பார். (யுத் : 2263)

வீரமுனிவு - வீரத்தினுல் தோன்றுகின்ற சினம். சிறு தொழின் மனிதரோடே முற்றியதாய வீரமுனிவு என் கண் விளையாதேனும். (சு : 476)

வீரர் - 1. நெஞ்சுறுதி யுள்ளவர். வெம்மையைத் தாங்கி நீதி விடாது நின்றுரைக்கும் வீரர். (அ : 9)
2. படை வீரர். வீரரே பெரிதென் பாரும். (அ : 254)
3. அந்தணர். (உ.வி) (அ : 254)

- வீரர் ஆயவர் - வீரரானோர். வீரராயுள்ளவர். வீரராயவர் புரிவது ஆண்மைத்துறை யெனலாயிற்றன்றே. (கி : 319)

வீரர்க்கிரை போதாச்சேனே - வீரர் வலிமைக்கு இரையாதற்கும் பற்ருத இழிந்த சேனே. போனபடைத்தலைவீரர் தமக்கிரை போதாஇச் சேனேகிடக்கிடு. (அ : 1012)

வீரர்களாவார் - உண்மையான வீரர்கள் ஆவார். இடர்தலீனே வென்ருரன்ரே வீரர்களாவார். (ஆ : 1167)

வீரர் வீரன் - மகாவீரன் வீரர் என்பார்க்கட்கெல்லாம் முன்னிற்கும் வீரர் வீரன். (யுத் : 3103)

வீரரீட்டம் - வீரரின் கூட்டம் நற்குவடனேய வீரரிட்டத்தின் நடுவண் நின்ருன். (யுத் : 785)

வீரருள் வீரன் - வீரருள் சிறந்த வீரன். வீரர்க்கு வீரன். வீரருள் வீர மாமகன். (அ : 244) வெஞ்சின வீரருள் வீரன். (சு : 918) வில்லெடுத்துருத்து நின்ற வீரருள் வீரன். (யுத் : 2982) இந்திரற் ...வீரருள் வீரன். (யுத் : 2416)

வீரவாழ்க்கை - வீரத்தினுல் வாழ்க்கை நடத்துதல் வீரவாழ்க்கை அகம்பன். (யுத் : 2514)

வீரவாளி - வீரத்தை ஆள்பவன். வீரவாளி வேகவாளி யாயவே. (யுத் : 3352)

வீரவில் - வீரத்தைக் காட்டுதற்குரிய வில். வீரவில்லின் நெடு மானம் வெல்ல நாளும் மெலிவானே. (யுத் : 8)

வீரவெஞ்சிலேயினேர் - வீரத்தன்மையுடைய வெவ்விய சிலேயினே யுடைய இராமலக்குமணர். (ஆ : 19)

வீரவெந்தொழிலினுன் - கொடிய வீரச் செயலேயுடைய இலக்கு வன். (யுத் : 1980)

வீரவேத்திரத்தர் — வீரம்பொருந்திய பிரப்பங்கோலை ஏந்தியவர். கனலெழ விழிக்குங் கண்ணார் வீரவேத்திரத்தர். (பா : 880

வீரன் - 1. இராமன். வீரனுஞ்சிறிது வெண்முறுவல் வெண்ணிலவுக. (ஆ : 23) (யுத் : 3315) வீரன் எண்ணரும் பொருள்களெல்லாம் என்பது தெரிந்ததன்றே. (ஆ : 1014)
2 வீரத்தன்மையுடையவன் (சடாயு) விங்கியவலியினிருந்த வீரனை. (ஆ:185) (இலக்குவன்) (யுத்:1851) வீரன்... கண்கள் நீர் சோரக் கங்குல் எல்லை காண்பளவும் நின்றான். (அ : 1034) குகன். வீர. (அ:675) (பரதன்) அந்நெடுந்துயருறுமரிய வீரனே. (அ : 1150) (அனுமன்) வீர நீ யாவன். (சு : 517)

வீரனேல் — சுத்த வீரனானால். நீ வீரனேல். (ஆ : 896)

வீரா — வீரனே. பாழிநெடுந்தோள் வீரா. (சு : 599)

வீரிய —சௌரியமுடையவனே. வீரிய விரைவின் எய்தி... மாருதி உழிஞைமேல் வருவதானான். (யுத் : 896)

வீரியர் — வீரமுள்ளவர். சீர்த்த வீரியராயுள்ளார். (யுத் : 1243) (அ : 207)

வீரியர் வீரம் விழுங்கிநின்ற வேலான் — வீரர்களுடைய வீரத்தை விழுங்கி நிலைபெற்ற வேற்படையையுடைய தசரதன் (அ : 207)

வீரியன் — வீரம் செறிந்தவன். வீரிய. (யுத் : 896) அமரர்க்காகி அசுரரை ஆவியுண்ட வீரியன். (கி : 69)

வீரை — கடல். வல்வீரைத்துயில்வான். (யுத் : 225) நிழல் வீரையன்னாருடனே நெடுநாள் உழல்வீர். (சு : 493) நீர்வீரை. (யுத் : 2336)

வீவது—அழிந்தொழிவது. வீவது முடிவென வீந்ததல்லது தேவரை வென்றவர் யாவர் திமையோர். (அ : 82) வீவதற்கு ஐயம் யாவதே. (அ : 1140)

வீவினையுறுதல் — உயிரொழிதலை யடைதல். அழியுந் தொழிலைப் பொருந்துதல். அழிதல். தீவினை ஒருவன் செய்ய அவனுெடுந் திங்கிலாதோர் வீவினையுறுதல் ஐய மேன்மையோ கீழ்மை தானே. (யுத் : 1362)

வீவு — அழிவு. வீவினை நினைக்கிலான் ஒருவன். (சு : 138) வீவினை யுறுதல். (யுத் : 1362)

வீவுறுதல் – அழிதல். உலக மேழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி. (சு : 561)

வீழ் – 1. தோண்டுகருவி. கோல். (வை மு)
2. விழுதுகள். (கலா)
3. சங்கிலித் தொடர். (அண்) வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள். (பா : 15)

வீழ்த்த – வீழ்த்திற்று என்பதன் விகாரம். அவன் தலையில் பொன்னின் மாமணி மகுடத்தை வீழ்த்த. (யுத் : 1207)

வீழ்த்தல் – விழுத்துதல். அழியும்படி செய்தல் வாழ்க்கை நாள் வறிது வீழ்ப்பான். (ஆ : 894) அந் நெடுமரம் அறுத்து வீழ்த்தான். (யுத் : 1896)

வீழ்தல் – 1. விரும்பித் தொடர்தல். நிலைமாமன வஞ்சனை நேயமிலா விலை மாதர்கண் யாரும் விழுந்தெனவே. (ஆ : 774)
2. விரும்புதல். விரும்பிச் சேர்தல். வேறோர் வீழ் மதந் தோய்ந்து. (பா : 877)
3. மொய்த்தல். திரளுதல். மழலைத் தும்பி அதிசய மெய்திப்புக்கு வீழ்ந்தன அலைக்கப் போகா. (பா : 983)
4. இறந்து வீழ்தல். வீழ்நாளில். (ஆ : 777)
5. கீழே விழுதல். இழிந்த பூமழை மண்ணிடை வீழ்கில. (சு : 152)

வீழ்ந்தது வீழ்க – கழிந்தது கழியட்டும். வீழ்ந்தது வீழ்க வீர இனையல் நீ. (யுத் : 2807)

வீழ்ந்தென – வீழ்ந்தது போல. நவ்வி வீழ்ந்தென நாடக மயில் துயின்றென்ன. (அ : 185)

வீழ்வு – அழிதல் வீழ்விலாச் சிறையில் வைப்பென். (யுத் : 728)
வீழ்வுற்று – விழுந்து. தரையில் வீழ்வுற்று உணர்ந்திலேன். (யுத் : 2880)

வீழி – வீழிப்பழம். வீழியின்கனிவாயொரு மெல்லியல். (பா : 104) வீழியின் கனியிதழ்ப்பணை மென்றோள். (யுத் : 811)

வீழிக்கனி – வீழிப்பழம். வீழிக்கனிபோற்புயல் வீச. (யுத் : 2322)

வீழிக்கொழுங்கனி – வீழியாகிய கொழுவியபழம். வீழிச் செவ்விக் கொழுங்கனி வாய்தருவாய். (கி : 30) [பா:பே]

வீழியின் கனி — வீழிப்பழம். (பா : 104) (யுத் :811)

வீழிவெங்கண் — வீழிக்கனிபோலச் சிவந்த வெவ்வியகண். விழி வெங்கண் இராவணன். (யுத்:3702 வீழிவெங்கண் இராக்கதர்· (யுத் : 1018)

வீழும் பறவை—மேல்விழும் பறவைகள். வானம் வெளியறத்துவன்றி வீழும் பறவையிற் பெரிது பட்டார். (யுத் : 2049)

வீற்றிருத்தல் — 1. எழுந்தருளியிருத்தல். செம்மாந்து வீற்றிருக்கும் நந்தாவிளக்கை. (யுத் : 294)

2. இருந்து வாழ்தல். வீற்றிரு நலத்தால். (யுத் : 4069)

வீற்று — வேறுபாடு. வேறு. விற்றுச் செல்லும் வெளியோ இல்லை. (சு : 853)

வீற்றுச்செல்லும் — வேறு பிரிந்துபோகும். வேறுசெல்லும் (சு:853)

வீற்றுப்படல் — 1. துன்பப்படல்.

2. வேறுவேருதல். துண்டப்படல். வச்சிரமான ஒச்ச விற்றுப்பட நூறிய வேலையின். (சு : $5)

வீற்றுவீற்ருகி : 1. மிகவும் வேறுபட்டு. வெவ்வேறு விதமாக மாறி. அயல் நின்ற வயவர் நெஞ்சம் விற்று விற்ருகியுற்ற தன்மையும். (யுத் : 1105)

2. சின்னபின்னப்பட்டு அனைய குன்றம் எண்ணருந் துகளதாகி விற்று விற்ருகி ஒடி விழுதலும். (யுத் : 1406)

வீற்றுவீற்ருதல் — 1. மிகவும் வேறுபடல். (யுத் : 1105)

2. சின்னபின்னப்படல். (யுத் : 1406)

3. துண்டுபடல். (யுத் : 1963)

4. வெவ்வேருதல். (யுத் : 1887)

வீற்று வீற்ருய் — 1. தனித்தனி. வெவ் வேருக. விசின மரமும் கல்லும் விலங்கலும் வீற்று வீற்ருய் ஆசைகள் தோறும் சிந்த. (யுத் : 1887)

2. துண்டு துண்டாய். வானரத் தானையை விற்று விற்ருய்ப் பங்கமுற நூறி. (யுத் : 1963)

வீற்றுவீற்றுக - துண்டந் துண்ட மாகச் சிந்த சின்னபின்னப்பட்டுச் சிதற. தேரவண் வந்தன வாரா விற்று விற்றுக வெயிலுமிழ் கடுங்கணை விட்டான். (யுத் : 1206)

வீற்று வீற்றுற்று வீவுறும் – தனித்தனியாகப் பிரிபட்டு லயித்து அழிவடையும். பூதங்களவை சென்று கடைக்கால் வீற்று வீற்றுற்று வீவுறும் நீ என்றும் வியாய். (யுத் : 4027) [பா : பே]

வீற்று வீற்றுறுதல் – தனித்தனி பிரிவுபடுதல். சின்னபின்னமாதல். (யுத் : 4027)

வீற்றுறும் – சின்ன பின்னப்பட்டுக் கிடக்கும் கால் பொரா மறித்து வீற்றுறும் தண்டலையா மென (யுந் : 2943)

வீற – வீச. தேவர்கள் தேவன் தெய்வவாள் வீறப் போன்றினன் மெய்ம்மையோன். (கி : 987)

வீருக்கிய பொற்கலன் – பேரழகுடைய தாக்கிய பொன்னுல் இயன்ற அணிகலன். (அ : 418)

வீறிய – வீசிய. (வை.மு) பெருமை வாய்ந்த. (அண்) இகலி ராவணன் வீறிய வானிடை விளைந்ததாம் என்ருன். (கி : 977)

வீறு – 1. பெருமை. மீன் சூழ்வரு மம்முழுமதி வீறுகிற. (சு : 48)
2. இறுமாப்பு. இறுமாந்தெழுதல். (அண்) வீறு சேர் முலை மாதர். (பா : 1010) வீறளாவிய முகிழ்முலை. (1093)
3. பிறிதொன்றற் கில்லாத சிறப்பு. வீருக்கிய பொற்கலன் வில்லிட. (அ : 418)
4. சிறப்பு. வீறுபஞ்சின்றி அமுத நெய் மாட்டிய விளக்கே. (அ : 751)
5. அழகுக்குரிய தெய்வம். வீற்றுத் தெய்வம் (கலா) வீறுசேர் முலை மாதர். (பா : 1010)

வீறுகொள்ளுதல் – மேம்பட்டு ஒலித்தல். முரசுமிழ் ஓதையை வீறு கொண்டன வேதியர் வாழ்த்தொலி. (அ : 809)

வீறுதல் – 1. வீசியடித்தல். திண்டோள் வாடை வீறிய பொழுது. (ஆ : 872)
2. வீசுதல். இராவணன் வீறிய வாளிடை விளைந்ததாமென்ருன். (கி : 978) வாடை வீறிய பொழுது. (ஆ : 873)
3. பெருமை பெறுதல். (உ.வி) (கி : 987) வாள் வீறிப் போன்றினன். (கி : 987)

வீறுபஞ்சு – சிறந்த திரி. கோது போக்கிய உயர்ந்த வகைப் பஞ்சி ஞகிய திரி. (அ : 751)

## வெ

வெஃகல் – பிறர் பொருளை விரும்புதல், மேவின வெஃகலின்மை. (கி : 420) வெஃகலா. (ஆ : 863)

வெஃகலான் – விரும்பாதவன். மரபின் வாழ்வினை வினையின் எய்து மோர் பிணியின் வெஃகலான். (அ : 930)

வெஃகலின்மை – விரும்பாமை. (கி : 420)

வெஃகுதல் – விரும்புதல். அறநெறி ஆக்கியோன் பொருள் வெஃகிய மன்னன். (899)

வெஃகும் – விரும்பத்தக்க. வெஃகும் இறையறிந்து உயிர்க்கு நல்கும் இசைகெழு வேந்தன். (பா : 51)

வெகுள் – கோபம். வெகுளுற்ருல். (சு : 293) [பா:பே]

வெகுள்வு – சினம். கீழ்மையோர் வெகுள்வுற்ருல். (சு : 293)

வெகுள்வுற்ருல் – சினங்கொண்டால். விழைவு நீங்கிய மேன்மை யோராயினும் கீழ்மையோர் வெகுள்வுற்ருல் பிழைகொல் நன்மை கொல். (சு : 293)

வெகுளி – சினம். காடுறு தீயென வெகுளி பெற்றுடையார். (யுத் : 3217)

வெகுளித்தீ – கோபமாகிய நெருப்பு. நீவனங்கொள்வாயென ஏறின வெகுளித்தி. (அ : 451) [பா:பே]

வெகுளி பொங்குதல் – கோபங்கிளர்ந்தெழல். வேல்கொடு நம் மேல் எய்தார் என்பதோர் வெகுளி பொங்க. (யுத் : 3071)

வெகுளி வீங்குதல் – சினம் பெருகுதல். வெய்தினிற் கொன்று வீழ்ப்பல் என்பதோர் வெகுளி வீங்க. (யுத் : 2122)

வெகுளி வெந்தீ – கொடிய கோபாக்கினி. வெகுளி வெந்தீக் கிளர்ந்தெழும் உயிர்ப்பனுகி. (சு : 930)

வெகுளுற்ருல் – கோபத்துக்கு இலக்கானல். (வை:மு) கீழ்மையோர் வெகுளுற்ருல். (சு : 293) [பா:பே]

வெங்கடகரி – கொடிய மதயானைகள். (கி : 460)

வெங்கடம் – கொடிய சுரம். தாங்கு வெங்கடத்துலவைகள் தழை கொண்டு தழைத்த. (அ : 728)

வெங்கடுங்கணை–வெம்மையும் கடுமையுமுள்ள அம்புகள். (யுத்:274)

வெங்கடுப்பு–மிக்கவேகம். தம்பி வெங்கடுப்பிற் செல்லா. (யுத்:2904)

வெங்கண் – 1. கொடுந்தன்மை. வெங்கணாய். (சு : 455) வெங் கண் நாகக்கரத்தினன். (அ : 635) வெங்கண் அநங்கன். (ஆ : 303) (பா: 1186) (யுத் : 1963)
2 வெவ்விய தன்மை. வெங்கண் அங்கவலயங்களும் விலங்க. (ஆ : 16)
3. கொடிகண்களையுடைய. வெங்கண் அடல் நீலன். (உ.வி) (ஆ : 16) (யுத் : 2034)
4 கோபத்தால் வெம்மையுற்றகண். வெங்கண் மாருதி. ((யுத் : 2460) (ஆ : 748)
5. தறுகண்மை. வெங்கண் வாளரக்கர். (ஆ : 865)
6. வெம்மைமிக்க கண். வெங்கண் அரக்கி. (ஆ : 1076)

வெங்கண் ஆனை – கொடுமையுடைய யானை. வெங்கணானையினான். (பா : 1199)

வெங்கணாகம் – கொடிய கண்ணையுடைய பாம்பு. (அ : 635) (யுத் : 2014)

வெங்கணான் – 1. கொடுங்கண்ணையுடையவன். (இராவணன்) வெங்கணான் விம்மி. (யுத் : 1098) வெங்கணாய். (சு : 455)
2. கொடுமையுடையவன். கும்பகருணன். வெங்கணான் துயில் கின்றான். (யுத் : 1262)

வெங்கணைகள் - கொடிய அம்புகள். வெங்கணைகள் சிந்தினான். (யுத் : 2014)

வெங்கணை திறந்த மெய்யர் - கொடிய அம்புகளினாற் பிளக்கப்பட்ட உடம்பையுடையவர். வெங்கணை திறந்த மெய்யர் விளிந்திலர் விரைந்து சென்றார். (யுத் : 2117)

வெங்கதம் – கடுங்கோபம். முதிரும் வெங்கத மூண்டது. (யுத்:209) வெங்கத நீலன் (யுத் : 2230)

வெங்கதமா - யானை. தேருதன செங்களி வெங்கதமா நாருயிர மாயினு நுந்துவெனல். (யுத் : 1717)

வெங்கதவலி - கோபம் மிக்க பெரிய வலிமை. அக் கறைமிடற் றிறைவனே உங்கள் வெங்கத வலிக்கொருவன் என்றுரை செய்தான். (கி : 182)

வெங்கதிர் - சூரியன். வெங்கதிர் அங்கிகள் புக்கடங்கிய மேருப் புழையென. (யுத் : 1286) (யுத் : 3646)

வெங்கதிர் அங்கிகள் - சூரியனும் அக்கினியும். (யுத் : 1286)

வெங்கதிர்ச் செல்வன் - வெம்மையான கதிர்களைச் செல்வமாக வுடைய சூரியன். விசும்பு பூத்தன வெங்கதிர்ச் செல்வன். (ஆ : 1008)

வெங்கதிரவன் படை - சூரியாஸ்திரம். (யுத் : 3021)

வெங்கரி - 1. வெவ்வியகரி. தணல். மீயெழுமேக மெல்லாம் வெந்து வெங்கரியிற் சிந்தி. (யுத் : 1096)
2. கொடிய யானை. வெங்கரியின் ஏறனையான். (அ : 1017)

வெங்கழல் - வெவ்விய வீரக்கழல். வெங்கழல் அரக்கன் மௌலி மிசை விளக்கஞ் செய்ய. (யுத் : 890)

வெங்களி - மிக்க களிப்பு (யுத் : 4170)

வெங்களிமா - கொடுமையும் களிப்பும் வாய்ந்த யானைகள். (யுத் : 1717)

வெங்களி விழி - விருப்பத்தோடு கூடிய களிப்பையுடைய கண்கள். வெங்களி விழிக்கொரு விழவுமாயவர். (பா : 596)

வெங்கனல் - 1. கொடிய நெருப்பு. ஓதிமப்பெடை வெங்கன லுற்றென. (பா : 641)
2. கொடிய பஞ்சாக்கினி. வெங்கனல் முழுகியும். (சு : 401)

வெங்காம வெம்பிணி - கொடிய காமமாகிய கொடிய நோய். வெங்காம வெம்பிணிக்கு மாமருந்தே. (ஆ : 343)

வெங்கார் நிறப்புணரி - கொடிய கருநிறக்கடல். வெங்கார் நிறப் புணரி வேறேயுமொன்று பொங்கார் கலிப் புனல்தர. (சு:76)

வெங்காரம் - கொடிய வெகுளி. உக்கிரம். கொடிய வெறுப் புணர்ச்சி. (அண்) வெங்காரத்தான் முற்று முனிந்தான். (யுத் : 3799)

வெங்கான் - கொடிய காடு. வெங்கான் என் கான்முளையைச் சுழிக்கும் வினையால் ஏகச் சூழ்வாய். (அ : 344)

வெங்குருதிச் செம்புனல் வெள்ளம் - வெவ்விய இரத்தமாகிய செந்நீர் வெள்ளம். வெங்குருதிச் செம்புனல் வெள்ளத்து அழுந்தா நின்ருள். (அ : 137)

வெங்குருதிவேல் - கொடிய இரத்தந்தோய்ந்தவேல். வடித்த வெங் குருதி வேல் விழிக்கு மாதர். (பா 1068)

வெங்குலப்புலன் - கொடிய கூட்டமாகிய ஐம்புல ஆசை. வெங் குலப் புலன்கெட விடு நண்ணினர். (அ : 17)

வெங்கை-விரும்பத்தக்க கை. வெங்கைச் சிலையன் தூணியினன். (யுத் : 11)

வெங்கைமா - வெவ்விய கையினையுடைய யானை செங்கண் வெங் கைமாத் தான்படிகின்றது. (கி : 2) தீயுறு பொறியுடைச் செங் கண் வெங்கைமா. (சு : 901)

வெங்கொடுந்தீமை - மிகக் கொடிய தீயஎண்ணம். (யுத் : 2795)

வெங்கொடுந்துயர் - மிகக்கொடிய துயரம். வந்தனையவன் கழல் வைத்த போதலால் சிந்தை வெங் கொடுந்துயர் தீர்கலா தென்ருன். (அ ; 850)

வெங்கோபம் - கொடுங் கோபம். வெங்கோப நெடும்படை வெஞ் சரம்விட்டு ஏங்கேனும் வழங்குவர் ஏகுவரால். (யுத் ; 3468)

வெங்கோல் - 1. கொடிய அம்புகள். வெங்கோல் நொய்தவன் கவசங் கிறி நுழைவன பிழைப்பிலாத. (யுத் : 1870)
2. கொடுங் கோல். வெங்கோல் வஞ்சன் விளைத்த மாயை கொல். (கி : 988)

வெங்கோள் - கொடிய கோள். வாரிவைத்த வெங்கோளுடைச் சிறையினன். (ஆ : 859)

வெங்கோளரா - கொடிய தொழிலையுடைய (கேதுவென்னும்) பாம்பு பொங்கு வெங்கோளரா. (ஆ : 1008)

வெஞ்சமம் - கொடிய போர். ஆனதோ வெஞ்சமம். (யுத் : 1297) வெஞ்சமத் தொழிலர். (கி : 47) (சு : 919) வெஞ்சமம் விளைக்கும் வேலை. (யுத் : 875)

வெஞ்சரந் தெரிதல் - கொடிய அம்புகளை ஆராய்தல். வெஞ்சரந் தெரிந்து திறம்பலின்றி எய்து செய்கையான். (யுத் : 3332)

வெஞ்சரம் - கொடிய அம்புகள். வெஞ்சரங்கள் நெஞ்சரங்க வெய்ய காமன் எய்யவே. (பா : 798) வெஞ்சரம் நின்னெடுங் கோத்த போது. (சு : 619) (யுத் : 318)

வெஞ்சர வேலி - கொடிய அம்பினாலியன்ற மதில். தணிப்பில் வெஞ்சர வேலியைக் கடந்திலர். (யுந் : 3428)

வெஞ்சிலை - கொடிய வில். வெஞ்சிலையன். (யுத் : 11) வண்ண வெஞ்சிலைத் தூரிசில். (அ : 50)

வெஞ்சினத் தச்சன் - கொடிய கோபத்துடன் பயமுறச் செய்பவன். (யுத் : 2383)

வெஞ்சினத் தனுவலான் – கொடுஞ் சினங் காட்டவல்ல கோதண்ட பாணியான இராமன். வெஞ்சினத் தனுவலானும்... நேரிடைச் சென்று சேர்ந்தான் (பா : 1322)

வெஞ்சினம் - கொடுங் கோபம். வெஞ்சினந்தரு களிப்பினர் வானர வீரர். (யுத் : 2475)

வெஞ்சினவுருவிற்றென்னு மேனியர் – கொடிய கோபத்தின் உரு என்னும்படி சிவந்த மேனியர். (பா : 583) [பா:பே]

வெஞ்சுடர் - சூரியன். வெஞ்சுடருவுற்றென்ன மேனியர். (பா:583)

வெஞ்சுடர் உருவுற்றன்ன மேனியர் - வெப்பமுள்ள சூரியன் உருவ -மெடுத்தது போலும் பேரொளி கொண்ட மேனியர். (பா : 583)

வெஞ்டர்க் கடவுள் - வெம்மையுடைய சூரியன். (ஆ : 1019)

வெஞ்சுடர்ச் செல்வன் – வெவ்விய ஒளிமிக்க சூரியன். தாமரை தேரிற்றோன்றும் வெஞ்சுடர்ச் செல்வன் மேனி நோக்கின விரிந்த. (அ : 668)

வெஞ்சுற்றம் - விரும்புதற்கிடமான உறவினர். வெஞ்சுற்ற நினைந்துகும். (ஆ : 771)

வெஞ்சொல் - கொடுஞ்சொல். இட்ட வெஞ்சொல் எரியினில் என் செவி சுட்டது என்னுடைய நெஞ்சையுஞ் சுட்டதால். (யுத்:1053)

வெஞ்சொன் மாமுனி - கடுஞ்சாபமிட்ட துருவாச முனிவன். வெஞ் சொன் மாமுனி வெகுளியால் விளைந்தமை விளம்பி. (பா:497)

வெஞ்சோதி - விரும்பத்தக்க ஒளி. வானைத் தொட்ட வெஞ்சோதி மோலிச் சென்னியர். (யுத் : 4284)

வெட்டிய மொழியினன் - கடிய மொழிகளைக் கூறுபவன். (கூறி) கடித்த வாயினன் வெட்டிய மொழியினன். (அ : 1001)

வெட்டுதல் - 1. கடுமை. கடிந்து கூறுதல். வெட்டிய மொழியினன். (அ : 1001)
2. அறுத்தல். வெட்டுதி நாசியை. (யுத் : 2267)

வெடி - அச்சம். வெடிபடு கடல் நிகர் குருதி வெள்ளம். (யுத்:2447)

வெடித்தல் - உடைதல். வெடித்தன பூரணமங்கல கலசங்கள். (சு : 299)

வெடித்தல் – வடிதல் இல்லாதிருத்தல். நெடுந்திசை முழுதும் வெடியப் பார்ப்பதோர் வெள்ளிடை கண்டிலர். (யுத் : 3279)

வெடிபடச் சிரித்தல் - பேரொலி யுண்டாகும்படிச் சிரித்தல். வெள்கிடும் மகுடஞ்சாய்க்கும் வெடிபடச் சிரிக்கும். (கி : 310)

வெண்கவிகை – வெண் கொற்றக்குடை. தாவில் வெண்கவிகைச் செங்கோற்சனகன். (பா : 1204) வட்ட வெண்கவிகை. (யுத் : 1589)

வெண்குடை – வெண் கொற்றக்குடை. வெண் குடையும் சாமரையும். (பா : 843) (யுத் : 3565)

வெண்கோடு – வெண்ணிறம் வாய்ந்த தந்தம். (யுத் : 227)

வெண்சங்கு – வெள்ளியசங்கு. பாஞ்சசன்னியம். (யுத் : 3696)

வெண்சோறு – வெண்மையான சோறு. இன்சாலியின் வெண் சோறு. (அ : 873)
2. வெண்ணிறமான பாயச உணவு. (பா : 738)

வெண்டளக் கலவைச்சேறு – வெண்மையான பச்சைக் கருப்பூரச் சேறு. வெண்டளக் கலவைச் சேறும் குங்கும விரை மென் சாந்தும். (பா : 43)

வெண்டளக்களப மாடவீதி – 1. வெள்ளிய சுண்ணச் சாந்து தீற்றிய மாடங்களை யுடைய வீதி. (உ.வி)

2. வெள்ளிய தளவரிசையையுடைய யானைகள் செல்லுவனவு மாகிய மாடவீதி. (அண்) மதிலும் கொற்ற வாயிலும் மணியிற் செய்த வெண்டளக் களபமாட வீதியும் பிறவும் என்னு (சு : 3)

வெண்டளவப் போதாம்பல் – வெண்மையான முல்லையரும்பு போன்ற பற்கள். சேதாம பற் போதனைய செங்கனிவாய் வெண் தளவப் போதாம் பல்தோன்ற. (அ : 394)

வெண்டாமரை – வெண்தாமரை. தான்வேறோர் வெண்டாமரை யின் மலர் பூத்தது ஒத்தது வெண்டிங்கள். (பா : 634)

வெண்டிங்கள் – வெண்ணிறமுள்ள சந்திரமண்டலம். (பா : 634)

வெண்டிரை – வெண்ணிறமுள்ள அலை. மோதி வெண்டிரைவர. (யுத் : 335) (சு : 594)

வெண்டுகள் – வெண்ணிறப் புழுதி. நிருதர்க்கெல்லாம் வேந்தனும் வெண்டுகளாக்கி வீழ்த்தான். (யுத் : 1090)

வெண்ணகை – 1. புன்னகை. மின்னுமிழ் வெண்ணகை வேறு செயா நின்றான். (யுத் : 1753)
2. பரிகாசச்சிரிப்பு. இராமற்கு வெண்ணகைபேர உய்த்தனை (யுத் : 3845)

வெண்ணகைபேர்தல் – புன்சிரிப்புத்தோன்றுதல். யுத் : (3845)

வெண்ணிணம்-வெண்நிணம். வெண்மையாகிய நிணம்.(கொழுப்பு) தாழ்ந்த வெண்ணிணம் தயங்கு வெங்குழம்பு. (யுத் : 1540)

வெண்ணிலா – வெள்ளிய நிலா. வெண்ணூல் பஞ்சிடைப் படுத்தா லன்ன வெண்ணிலாப் பரப்பப்போனார். (அ : 582) (சு : 150)

வெண்ணிலா முரட்கணை - வெள்ளிய பிறைச்சந்திரன் போன்ற வலியகணை. (யுத் : 2469)

வெண்ணிலவு – வெள்ளிய நிலா. மீது மொய்த்தெழு வெண்ணில வின் கதிர். (பா : 641)

வெண்ணிறக்கங்கை–வெண்மைநிறமுடைய கங்கை. வெண்ணிறக் கங்கை வார்சடைக்கற்றையன். (அ : 635)

வெண்ணிறத்தருப்பை – வெண்மையான நிறத்தையுடைய தருப்பை. ஏற்றினான் வெண்ணிறத் தருப்பை விரித்தரோ. (அ : 120)

வெண்ணிற நகை – வெள்ளியபற்கள் தோன்றும்படிசெய்யும் புன் முறுவல். அக நிறையருள் மிக்கான் வெண்ணிற நகைசெய்தான். (அ : 675)

வெண்ணிற நிலவெனும் வலை – வெண்ணிறம் பொருந்திய நிலா வென்கின்றவலை. நெடுங்கடல் உலகமெங்கனும் வெண்ணிற நிலவெனும் வலையை வீசினன். (யுத் : 466)

வெண்ணிறப்பட்டு–வெண்பட்டு. வெண்ணிறப்பட்டொளி விளங்கச் சாத்தியே. (பா ; 1307)

வெண்ணிறம் – வெள்ளைநிறம். வெண்ணிறப் பட்டொளி. (யுத்:1370)

வெண்ணிறமேகம் – வெண்ணிறமாய் விளங்கும்மேகம். விண்ணிற் • பொலிகின்றதோர் வெண்ணிற மேகமொத்தான். (ஆ : 924) (பா : 788)

வெண்ணூற் பஞ்சு – வெள்ளிய நூலாடை. வெண்ணூற் பஞ்சிடைப் படுத்தாலன்ன வெண்ணிலாப் பரப்பப் போனர். (அ : 582)

வெண்ணெய் – 1. திருவெண்ணெய் நல்லூர் சடையன் வெண்ணெ யில் தஞ்சமென் ரேர்களைத் தாங்கும் தன்மை போல். (யுத் : 628)
2. பாலினின்றும் எடுக்கப்படும் வெண்ணெய். வெந்தழல் வெந்த செப்பகல் வெண்ணெய். (யுத் : 2270) (ஆ : 646)

வெண்ணெய் அண்ணல் – திரு வெண்ணெய் நல்லூரில் வாழும் பெருமையிற் சிறந்தோன். (சடையப்ப வள்ளல்) மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய் அண்ணல். (பா : 413)

வெண்ணெய்ச் சடையன் – திரு வெண்ணெய் நல்லூரில் வாழும் சடையப்ப வள்ளல். விரி நன்னீர்ப் பண்ணை வெண்ணெய்ச் சடையன் தன் புகழ் போல் எங்கும் பரந்துளதால். (பா : 636)

வெண்ணெய் நல்லூர் – திருவெண்ணெய் நல்லூர். சடையன் வாழ்வு நண்ணிய வெண்ணெய் நல்லூர். (பாயி : 6) (பாயி:2)

வெண்ணெய் மன் சடையன் - திரு வெண்ணெய்நல்லூருக்கு அதிபனான சடையப்ப வள்ளல். விரை செறி கமலத்தாள் சேர் வெண்ணெய்மன் சடையன் தங்கள் மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி. (யுத் : 4316)

வெண்ணெய் வாழ் கண்ணன் - திரு வெண்ணெய் நல்லூரில் வாழ்கின்ற சடையப்பவள்ளல். வெருவி யோடினர் வெண்ணெய் வாழ் கண்ணன் மேவாரின். (பா : 495) [பா : பே]

வெண் ணெருப்பு - திங்கள். கரு நெருப்பினிடையே எழுந்த வெண் ணெருப்பே. (பா : 639)

வெண்பலை மெல்வது - வெண்மையான பல்லை மெல்லுவது. வெறும் வாயை மெல்வது என்பது போன்ற பழமொழி. உணர்வுக்கும் வழியின்றிச் செயலற்று வறிதே இருத்தலைக் குறிக்கும். (அண்) குன்றனயாமெலாம் வெல்வ தேதுமிலாமையின் வெண்பலை மெல்வதே. (யுத் : 3387)

வெண்பிறை - வெண்மையான பிறைச்சந்திரன். பல்பிறை வெண் பல்லன் படை. :(யுத் : 2919) ((யுத் : 3382)

வெண்புனல் - ஆகாய கங்கை. விண்டு அலம்புகம் நீங்கிய வெண் புனல். (சு : 722)

வெண்பொருப்பு - கயிலாய மலை. எண்வகை மூர்த்தியை வெண் பொருப்போடு எடுத்த தோள்களுக் கெழுந்திலன் இராமனுக் கிளையான். (யுத் : 1172)

வெண்மதி - வெள்ளிய சந்திரன். வேருய் நின்ற வெண்மதி செங் கேழ் நிறம்விம்மி. (யுத் : 3563)

வெண்மதிக் கூன் - வெண்மதியாகிய கூனிய பிறை. வெண்மதிக் கூனிமுக்குமென்பவால். (கி : 236)

வெண்மதிப் பாதியான் - வெள்ளிய மதிப்பிளவைத் தரித்த சிவ பிரான். வெண்மதிப் பாதியான் பிடித்தவில் பற்றப்போதுமோ. (பா : 1385)

வெண்மதி வாணுதலாள் - வெண்மதி போலும் ஒளிநுதலாள். சந்திக்கலா வெண்மதி வாணுதலாள். (பா : 996)

வெண்முகில் - வெண்மையான மேகம். வெண்முகில் தடம்புனல் பருகிடத் தாழ்வ போன்றவே. (பா ; 828)

வெண்முளை - வெள்ளிய முளைகள். முப்பகல் திங்கள் வெண்முளை உற்றன விசும்பிடை பலவு மொத்தன. (யுத் : 1783)

வெண்மை - உள்ளீடில்லாத அறிவு. வெளிற்றுத்தன்மை. அறியாமை. வெண்மையில்லை பல் கேள்வி மேவலால். (பா : 84) வெள்ளியை யாதல் விளம்பினை. (பா : 447)

வெண்மை நீங்கிய புகழ் - வெண்ணிற மில்லாத புகழ். அஃதாவது கருநிற முள்ளபழி வெண்மை நீங்கிய புகழ் விரிந்த தென்னவே. (சு : 141)

வெதிர் - மூங்கில். வெதிர் பொரு தோளினுள் ஒருத்தி. (பா:1095) வெதிர் பொரு தோளினுள். (ஆ : 1195)

வெதிர் கொள் கோலினர் - மூங்கிலாற் கொண்ட திரிதண்டத்தை யுடையவர். எதிர் கொடு ஏத்தினர் இன்னிசை பாடினர் வெதிர் கொள் கோலினர். (அ : 629)

வெதிர்நெடுங்கானம் - நீண்ட மூங்கிற்காடு. (யுத் : 2152)

வெதிர் பொரு தோளினுள் - மூங்கிலை ஒத்த தோளையுடையவள். (பா : 1095)

வெதிரின் காடு - மூங்கிற் காடு. வெதிரின் காட்டெரி போற் சரம் வித்தினன். (யுத் : 2113)

வெதிரின் வன்னெடுங்கான் - மூங்கிலின் வலிய நெடிய காடு. வெதிரின் வன்னெடுங் கானென வெந்தன மீனம். (யுத் . 564)

வெதுப்பு - காம வெப்பம். குளிர்ப்பொடு காணவந்தாள் வெதுப் பொடு கோயில் புக்காள். (பா : 1163)

வெதுப்புதல் - 1. வாட்டுதல். வாட்டமுறச்செய்தல். வெதுப்பும் வேட்கையால். (யுத் : 464) வெற்பினை வெதுப்புந் தோளான். (யுத் : 868)
2. வருத்துதல். மீண்டு மீண்டு வெதுப்ப வெதும்பினுள். (ஆ : 1050)
3. மிகத்தபித்தல். இந்து காந்தத்தின் ஈர நெடுங்கலும் வெந்து காந்த வெதுப்புறு மேனியாள். (ஆ : 304)

வெதும்புதல் - 1. வாடுதல். அரக்கர் காய ஒர் வினை பிறிதின்மை யின் வெதும்புகின்றனர். (ஆ : 121) வெதும்பினுள். (ஆ:1050)
2. வெம்புதல். உள்ளம் வெதும்பினுன். (யுத் : 1610)

வெங் - முதுகு. வெந்நிடாத கொற்றத்து ஆவம். (கி : 389)

வெந்தகை - வெவ்விய தன்மை. வெந்தகையாழி தகைந்த தனுத் தொழிலான். (யுத் : 1738)

வெந்த புண் - (தீயினால்) வெந்த புண். வெந்த புண்ணிடை வேல் பட்ட வெம்மையான். (யுத் : 3154)

வெந்த போல - வெந்தது போல. பொறிவனம் வெந்தபோலச் சாம்பராய்ப் போயதல்லால். (யுத் : 2422)

வெந்தழல் – வெவ்விய நெருப்பு. வெந்தழல் வெந்த செப்பகல் வெண்ணெயின் நோன்மை தெரிந்தோய். (யுத் : 2270)

வெந்திறல் - வெம் திறல். கொடிய வலிமை. வென்றி வெந்திறலி னுனும் அவனடித்தலத்து வீழ்ந்தான். (யுத் : 1385) வெந் திறலனவன். (யுத் : 1347).

வெந்திறல் வேந்தன் – மிக்க வலிமையுடைய வேந்தன். வெந்திறல் வேந்தனை இருப்பு நல்லிட மெங்கெனுங் கண்டிலன். (அ : 832)

வெந்திறற் சித்தி - கொடிய வலிமையின் பயன் விளைதல். வெந் திறற் சித்தி கண்ட விடணன் வியந்த நெஞ்சன். (யுத் : 1884)

வெந்தீ – வெவ்விய கனல். கொடிய அக்கினி. வெந்தீயினுன். (அ : 1067). அகத்தெழு வெந்தீ. (யுத் : 294) (யுத் : 418)

வெந்தீவினை - கொடிய தீவினை. (யுத் - 3719)

வெந்து - 1. தவித்து. ஆருயிர் வெந்து புழுங்கு மாபோல் (ஆ : 301)

2. அழிந்து. முத்திறத்துலகும் வெந்து சாம்பராய் முடியுமன்றே. (யுத் : 2883)

வெந்துயர்க்கடல் – கொடிய துன்பக்கடல். ஐந்து மைந்து நாள் வழியாமென மைந்தன் வெந்துயர்க் கடலின் வைகினுன். (அ ; 931)

வெந்துயர் நரகம் - கொடிய துன்பத்தையுடைய நரகம். நிந்தனை தேவரை நிகழ்த்தினேன்புகும் வெந்துயர் நரகத்து வீழ்க யானுமே. (அ : 896)

வெந்து வெந்து - 1. மேலும் மேலும் வெந்து. வேதனை முற்றிட வெந்துவெந்து... வெய்துயிர்த்தான். (அ : 197)

2. வெந்து வெதும்பி. வெந்து வெந்து... உயிர்த்துயிர்த் துயங்கினுன். (ஆ : 650)

வெந்தொழில் - 1. கொடுந்தொழில். கொடிய போர்த்தொழில் (அண்) வெந்தொழிற்றீவினை பயந்த மெய்ம்மையான். (யுத்:344) வெந்தொழிற்ருனே. (யுத் : 48)

2. வெம்மைவாய்ந்த கொல்லுந்தொழில். வெந்தொழிற் செய்கை யன் விருந்துமாய் நெடு மைந்தரிற் கடையெனப் படுவன். (யுத் : 2433)

வெந்தொழிற் செய்கையன்-வெம்மை வாய்ந்த கொலைத் தொழிலைத் தன் இயல்பான செயலாகக் கொண்ட கூற்றுவன். (யுத் : 2433)

வெந்நாகம் - கொடிய நாகம். இலங்கையர் கோன் வெந்நாக உயிர்ப்பினன் விம்மினனுல். (யுத்:2355) உயிர்த்தென. [பா:பே]

வெந்நிடுதல் - அஞ்சி முதுகு காட்டி ஓடுதல். அமரர் மன்னனும் விருப்புரு முகத்தெதிர் விழிக்கின் வெந்நிடும். (ஆ : 411) விதி யென அன்னவன் வெந்நிட் டோடவே பொதியொடும் வாரிய பொலன் கொள் பூணினர், (சு : 882)

வெந்நெறி - கொடிய வழி. நிமிர்கானிடை வெந்நெறியிற் போயோ புகலோதவிரான். (அ : 341) [பா : பே]

வெப்பணை குத்து - வெம்மை பொருந்திய குத்து. வெம்பணை விகாரம். காலன் துப்பினை வயிரவாளி விசையினும் காலின் தோன்றல் வெப்பணை குத்தினுலும் வெரிநிடை போயவன்றே. யுத் : 3860)

வெப்பழியா நெடுவெகுளி வேலரக்கர் - உக்கிரத்தன்மை நீங்காத பெருங்கோபமுடைய ஆயுதப் பயிற்சியில் வல்லராகிய அரக்கர். (ஆ : 358)

வெப்பாரும் பாசம் - வெப்பம் பொருந்திய பாசம். (யுத் : 2153)

வெப்பு – 1. கொதிப்பு. மனக்கொதிப்பு. வெப்பழியாது என் நெஞ்சு முலந்தேன். (ஆ : 735)
2. உக்கிரம். வெப்பழியா நெடுவெகுளி வேலரக்கர். (ஆ:358)
3. தாபம் வெப்பம் வெப்பெழுதினலன்ன மெலிவுடையாள். (யுத் : 4146)
4. கொடுமை. வெப்பாரும் பாசம் வீக்கி வெங்கணை வளைக்கும் மெய்யன். (யுத் . 2153)
5. வெம்மை. உடற்சூடு. வெப்பினுற் புலர்ந்து ஒருநிலையுருத மென்துகிலாள். (சு : 337)
6. கொடிய நெருப்பு. நெருப்பின் வடிவம். வெப்போ எனவெயில் கால்வன. (யுத் : 1843)

வெப்புறுதல் - வேகுதல். உள்ளம் வெப்புறுகின்றது. (யுத் : 3318

வெப்பெழுதல் – தாபத்தினுல் அமைக்கப்படல். (யுத் : 4146)

வெம் – வெம்மை. வெங்கனல். (அ : 728)

வெம்பகலோன் – வெம்மையுடைய பகற்பொழுதைச் செய்யும் கதிரவன். (யுத் : 1696)

வெம்பகழி – கொடிய அம்புகள். (யுத் : 2030)

வெம்படை – கொடிய ஆயுதங்கள். பொழியும் வெம்படைப் போர்க்கடல் ஆர்த்ததால். (யுத் : 996)

வெம்பதி – கொடிய நகர். காலனும் வெருவிஓடும் அரக்கர்தம் வெம்பதி. (சு : 252)

வெம்பிணத்துதிரநீர் – வெவ்விய பிணங்களின் இரத்தப்பெருக்கு வெம்பிணத்துதிர நீர் வெள்ளத்திறேடி. (யுத் : 1171)

வெம்பு – 1. வெம்புதல், கொதித்தல், உக்கிரங்கொள்ளல். வெம் போடு அரவக்குலம் மேனிமிளிரும் கொம்போடும் விழுந்தன ஒத்தன. (யுத் : 3457) வெம்புகண்டகர். (கி : 568) வெம்பு வெஞ்சினமடங்கல். (யுத் : 2031)
2. வெதும்புதல். வெம்புதுயரம். (யுத்: 2627)

வெம்புண் – வெந்த புண். வன்கைவேல் வெம்புண் நுழைகிற்க. (அ : 200)

வெம்புனீர் – இரத்த நீர். தன் தழுகணூடு வெம்புனீர் சொரிய நின்ருன். (யுத் : 1372) (யுத் : 984)

வெம்புதல் – 1. சினத்தல். கொதித்தல். வெம்புவிற்கை வீர. (ஆ : 65) வெம்பிகல் அரக்கர். (யுத் : 59)

2. வேகுதல். வெம்பு வெந்தசை. (யுத் : 2557)
3. வெதும்புதல். வெம்பு துயரம். (யுத் : 2621) வெம்பு வெஞ்சினத் தரக்கர். (யுத் : 3241)

வெம்பு விற்கை வீர – வெப்பம் பொருந்திய வில்லை யேந்திய திருக்கையையுடைய வீரனே. (ஆ : 65)

வெம்பொழி அரத்தம் – வெம்மையோடு சொரிகின்ற குருதி. வெம் பொழி அரத்த நீர். (கி : 126)

வெம்பொறி – வெவ்விய நெருப்புப் பொறி. பொடித்தன வெம் பொறி. (யுத் : 494) (யுத் : 2054)

வெம்போர் – வெவ்வியபோர். வெம்போர் பட்டனர் ஒன்று படுத்த னர் ஒன்றே. (யுத் : 2271) கொடிய வெம்போர். (யுத் : 2045)

வெம்மடங்கல் – விரும்பத்தக்க சீரிய சிங்கம். சிங்கம் போன்ற இராமபிரான். அவ்வெம்மடங்கலை யுன்னி வெதும்புவாள். (சு : 348) (யுத் : 3868)

வெம்மா – யானை. மும்மாமத வெண்ணிற முன்னுயர்தாள் வெம்மா மிசையான். (யுத் : 79)

வெம்மின் – கொடிய மின்னல். வெம்மின் என வெம்பகழி. (யுத் : 3406)

வெம்முனை – கொடும்போர். வெம்முனை விளைதலினன்று. (யுத் : 368) (யுத் : 370)

வெம்மை – 1. விருப்பம். அன்பு. பூழி வெங்கானம் நண்ணி. (அ : 292) வெம்மை நீங்கினுய். (யுத் : 3984)
2. விரைவு. கடுமை. செருவில் சால வெவ்வியராதல் நன்றே. (ஆ : 436)
3. வெகுளி. கோபம். திங்கின்பால் வெம்மையில் ஒழுக்கத்தில் மெய்ம்மை மேவினீர். (அ : 85)
4. வெப்பம். அழகு. வெம்மா மிசையான். (ஆ : 79)
5. உக்கிரம். என் முறை தன்னுள் அடைத்திவன் வெம்மை யகற்றிய பின்னை. (ஆ : 1095)
6. வலி. வெவ்வரக்கன். (சு : 159)
7. மிக்க வெகுளி; கொடுமை. மலைத்தலை வெம்மையுற்றெழுவ மீளுவ. (யுத் : 3379) வெம்மை பயின்றுன். (யுத் : 2253) வெவ் வம்பு. (சு : 653) வெவ்வெகுளி. (சு : 988) வெம்மைத் தொழில். (ஆ : 911) வெம்மை ஒழுக்கினன். (ஆ : 860)

8. விரும்பத்தக்க தன்மை. மும்மடங்கு பொலிந்த முகத்தினன் வெம்மடங்கலையுன்னி வெதும்புவாள். (சு : 348) [பா:பே]

9. அன்பு. விருந்துளவோ வெம்மை நீங்கினுய். (யுத் : 3984)

10. துன்பம். பிறவிகள் உலப்பில் கோடிகள் தண்மையில் வெம்மையில் தழுவினவ் வெனும் வண்மை. (அ : 1136)

11. வெறுப்பு. (உ.வி) (அ : 85)

12. பராக்கிரமம். உம்மையினின்று நான் உலகம் மூன்றும் என் வெம்மையின் ஆண்டது. (யுத் - 1680)

13. செருக்கு. அரக்கரும் வெம்மை தீர்வார். (சு : 1005)

14. மனத்தின் வேகம். வெந்ததோ இலங்கையோடு அரக்கர் வெம்மையும். (யுத் : 51)

15 ஆற்றல். (அண்) (யுத் : 51)

வெய்தின் – 1. விரைவில். வெய்தின் ஊறு ஒரு சிறியோன் செய்யு முனிதியோ உவகை உள்ளம் ஆறுதி. (சு : 569) வெய்தின் எய்தினன். (அ : 609) (அ : 920)

2. உக்கிரமாக. வெய்தின் நீ வருதல் நோக்கி வெருவி. (கி : 614)

வெய்தின் நின்ற-தவித்தன. (வை.மு) வெகுளியுடையனவாய் நின்ற. (அண்) வெய்தின் நின்ற குரக்கும் வெருக்கொளா. (கி : 601)

வெய்து – 1. கொடிய வருத்தம். மனவேதனை. வெய்துற ஒடுங்கும் மேனி. (க : 526) வெய்யன் வரதிப மென்னைகொல் எனவெய் துறும் ஏல்வை. (பா : 1363)

2. மனம் வெம்புதல். மின்னுலயர்வுறும் வாளரவென வெய்துற லுற்ருன். (பா : 1372)

3. விரைவு வெய்தின். (சு : 569)

4. வெகுளி. வெய்தின் நின்ற. (கி : 601)

வெய்துயிர்த்தல் – வெம்மையாகப் பெருமுச்சு விடல். கொல்லன் ஊதுலையிற் கனலென்ன வெய்துயிர்த்தான். (அ : 197)

வெய்துயிர்ப்பு-வெம்மையுடன் வெளிப்படுகின்ற பெருமுச்சு. வில்லை யூன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும். (அ : 1034)

வெய்துயிர்ப்புற்ருன் – வெம்மையாகப் பெருமுச்சு விட்டான். மிடுக் கிலாமையின் இராவணன் வெய்துயிர்ப்புற்ருன். (யுத் : 1174)

வெய்துரை – கடுமையான மொழிகள். நங்கை வெய்துரை சொல்லச் சீறிக் கோறல் மேற்கொண்டு விட்டான். (சு : 1318)

வெய்துறல் – 1. மனம் வெதும்புதல். மன்னன் வெம்பி விழுந் தழும் விம்மல் கண்டு வெய்துற்றும்பர் நடுங்கினர் (அ : 201) வெய்துறு மேல்வை. (பா : 1363)
2. மனந்தவித்தல். விம்மினன் விம்மி வெய்துற்று ஏங்கினன் இருந்த வீரன். (யுத் : 2168)
3. துன்பமடைதல். உம்பரும் வெய்துற்று அழுதாரால். (ஆ : 1174)

வெய்ய - வெப்பந் தருவன. நீண்ட சோதி நெய்விளக்கம் வெய்ய வென்றங்கவை நீக்கி. (பா : 632)

வெய்யகானம் – கொடிய காடு. வெய்யகானத்திடையே வேட்டை வேட்கைமிகவே. (அ : 369)

வெய்யபாதகம் – கொடிய பாவங்கள். வெய்ய பாதகந் தீர்த்து விளங்கினுள். (அ : 642)

வெய்ய பாறை - வெப்பமுள்ள பாறை மொய்கொள் தீயிடை வெந்து முருங்கிய வெய்ய பாறை. (ஆ : 302)

வெய்யவர் - 1. சூரியர். வேலைவாய் வந்து வெய்யவர் அனைவரும் விடியுங்காலை யுற்றென. (யுத் : 3617)
2. கொடியவர்கள். வெய்யவர்க்கு ஆதியன். (யுத் : 3816)

வெய்யவள் - காம விருப்புள்ளவள். வெய்யவள் சோரும் வெள்குறும் துணுக்கெனும். (ஆ : 307)

வெய்யவன் – சூரியன். வெய்யவன் குலமுதல் வேந்தர். (அ : 14) வயங்கு வெய்யவன் (யுத் : 1495)

வெய்யவன் குலமுதல் வேந்தர் – சூரிய குலத்தில் தோன்றி முன்னர் வேந்தராயிருந்தவர்கள். (அ : 14)

வெய்யவன் படை - சூரிபாத்திரம். (கலா) ஆக்கினேயாஸ்திரம். (வை.மு)(அண்) வேற்றுளதாங்க வென்று வெய்யவன் படையை விட்டான். (யுத் . 1878)

வெய்யவினையோர் – கொடிய செயலையுடையவர். படைத்தலைவர். அவ்வெய்ய வினையோர் தம்மின மனைத்தையும் முனைந்தெதிர் தடுத்தனர். (யுத் : 3406)

வெய்ய வெங்கதிர்கள் - வெப்பமுடைய கிரணங்களை யுடைய சூரியன் விரும்பத்தக்க கிரணங்களையுடைய சந்திரன் என்பன. வெய்ய வெங்கதிர்களை விழுங்கும் வெவ்வரா. (ஆ : 1152)

வெய்ய வெங்கொடுந்தொழில் - மிகப்பெரிய கொடுமையான தொழில். வந்த ஓர் வெய்ய வெங்கொடுந் தொழில் விளைவு கேள்என. (ஆ : 128)

வெய்யன் - வெப்பம் மிக்கவன்; கொடுமை மிக்கவன். கதிரோன் ஊழி இறுதியின் வெய்யன் ஆனான். (சு : 956) [பா : பே]

வெய்யான் - கொடியன். (யுத் : 827)

வெய்யோர் - கொடியவர். வெய்யோர் யாரே விராதன் துணை வெய்யோர். (ஆ : 744)

வெய்யோன் - 1. சூரியன். வெய்யோனொளி தன்மேனியின் விரி சோதியின் மறைய. (அ : 618)
2. கொடியவன். வெய்யோன் நான். (அ : 873) (யுத் : 2385

வெய்யோன் மகன் - சுக்கிரீவன். வெய்யோன் மகன் முதலாகிய விறலோர். (யுத் : 3053) (யுத் : 4329)

வெய்யோன் மண்டலம் - சூரிய வட்டம். (ஆ : 988) (யுத் : 498)

வெயர் - வெயர்வை. விற்றங்கு புருவம் நெற்றி வெயர்வரப் பசலை விம்ம. (பா : 1160) வெயர்ப்ப. (யுத் : 1897) வெயர்த்திலன். (சு : 803)

வெயில் - 1. சூரியன். வெயில் கரந்தது. (பா : 330) வெயிற் கதிர்க்கற்றை. (சு : 728) வெயிலினும் மெய்யன. (சு : 369)
2. தாபம். துன்பம். நீ புரக்கும் பல்லுயிர் வெயிலிலதே குடை. (கி : 692) (யுத் : 2261)
3. சூரியகாந்தி. சூரியன் போலப் பிரகாசிக்கின்ற ஒளிக்கு. இலக்கணை. பொன் துன்னியன்ன வெயில் வீசுகின்ற பொருள் கண்டு. (யுத் : 2214) வெயில் விரிக்கின்ற மெய்யர். (சு : 759)
4. உக்கிரம். (வை.மு) ஒளி. (அண்) வெயில் பகுவாய் குன்றிறத் தெழித்துரப்பின. (சு : 466)
5. வெம்மை. வேயுற்ற நெடுங்கிரிமீ வெயிலுலாந்தியுற்றன போன்ற சினக்கரியே. (யுத் : 2929) வெயில் வெங்கானம். (ஆ : 1070)

6. சூரிய கிரணம். வெயில்விரி வயிரமார்பு. (யுத் : 283)

7. வெம்மையான நெருப்புப்பொறி. வெயிலுக விழித்து விரக் கைபல பிசைந்து. (யுத் : 1641)

8. வெயில் போன்ற ஒளி. வெயில்களும் நிலாக்களும் புரள. (யுத் : 2491)

வெயில் கடந்திலாத - சூரியன் கடந்து செல்லாத. வெயில் கடந் திலாத காவன் மேருவின் மேலும் நீண்ட எயில். (யுத் : 933)

வெயில்கள் – வெயிலொளிகள். அயிற்கடுங்கணை வெயிற்கள்போல் புற்றடைந்த கொடு வெவ்வராவினொடு நாகலோகமது புக்கவால். (யுத் : 2018)

வெயில்கால் பொன்னுலியன்ற நகை ஓடை - சூரியகாந்தி போன்ற ஒளியை உமிழ்கின்ற பொன்னாலாகிய ஒளியினையுடைய நெற்றிப் பட்டம். (யுத் : 2200)

வெயில் தின் எயிறு – கதிரவன் ஒளியை மழுங்கச் செய்யும் தந்தம். (யுத் : 226)

வெயில்விரி கனகக்குன்று – சூரியனொளி பரவுதற்குக் காரணமான சுவர்ண மலையாகிய மேரு. (அ : 665)

வெயில்விரி வயிர மார்பு - வெயிலைப் போன்று ஒளிவீசும் திண்ணிய மார்பு. (யுத் : 283)

வெயிலயில் - வெயில் அயில். ஒளியுடைய வேலாயுதம் வெயிலயிலா மென விழியா. (ஆ : 455)

வெயிலன - நெருப்புப் பொறிகளையுடையன. வெங்கண்ணுமிழ் வெயிலன. (கி : 713)

வெயிலிடைத் தந்த விளக்கு - வெயிலிலே ஏற்றி வைத்த தீபம். வெயிலிடைத் தந்த விளக்கென ஒளியிலா மெய்யாள். (சு : 333)

வெயிலுகவிழித்தல் – வெம்மையான தீப்பொறி சிதற விழித்தல். வெயிலுக விழித்து விரக்கைபல பிசைந்து. (யுத் : 1641)

வெயிலின் மண்டிலம் – சூரிய மண்டலம். (யுத் : 2749)

வெயிலினும் மெய்யன – சூரியனைக்காட்டிலும் தவறாது பலிப்பன. பயில்வன பழுதில பரிவினுண்டன வெயிலினும் மெய்யன விளம்பக் கேட்டியால். (சு : 368)

வெயிலோன் - சூரியன். வெயிலோன் தென்பாலெழுந்து வடபால் நிமிர்ந்து வருகின்ற செய்கை தெரிய. (யுத் : 2199)

வெயிற்கதிர் - 1. சூரியன். வெயிலாகிய கிரணங்களையுடைய சூரியன். வெயிலுங் கண்டுளங்கதிர் குறைந்திட. (ஆ : 8) [பா:பே]
2. சூரிய கிரணம். மின் திரிவ ஒத்த வெயிற்கதிரு மொத்த. (சு : 705)

வெயிற்கதிர் வேந்தன் - வெப்பமான கிரணங்களையுடையவனும் சுடர்க்கெல்லாம் தலைவனுமாகிய சூரியன். (சு : 193)

வெயிற்கள் - வெயில்கள் பார்க்க.

வெயிற்பிழம்பு - சூரிய கிரணத்தின் தொகுதி. மின்னென விளக்கென வெயிற்பிழம்பெனத் துன்னிய தமனியத் தொழில். (பா : 132)

வெயிற்று - வெயிலையுடையது. மின்னைக் கொல்லும் வெயிற்றின் எயிற்றால். (யுத் : 226)

வெயிற்க்கொடமைந்தவேல் - வெயிலின் தன்மையும் தீயின் தன்மையும் தன்பால் கொண்டமைந்துள்ளவேல். மின்குற்றெளிரும் வெயில் திக்கொடமைந்த வேலோய். (அ : 425)

வெயின் முறைக் குலக்கதிரவன் - வெயிலை இயல்பாகவுடைய சிறந்த சூரியன். (வை.மு) வெயில் தரும் முறைமையை மேற்கொண்டுள்ள சிறந்த சூரியன். (அண்) வெயின் முறைக் குலக் கதிரவன் முதலிய மேலோர். (அ : 161)

வெயின்முறைக் குலத்திறையவன் - சூரிய குலத்துத் தோன்றிய மனு. (கலா) வெயின் முறைக்குலத் திறையவன் முதலிய மேலோர். (அ : 161) [பா:பே]

வெயின் முறைக்குலம் - சூரியகுலம். (கலா) (அ : 161) [பா:பே]

வெரிந்(ன்) - முதுகு. ஒடித்தனன் வெரிநை வீழ்ந்தார் ஒளிவினை மகளிரெல்லாம். (பா : 427)

வெரிந் பார்த்தல் - முதுகுகாட்டி ஓடும்படி செய்தல். உயிர்கொண்டு மீண்டானை வெரிந் பண்டு பார்த்தானே. (ஆ : 237)

வெரிநை ஒடித்தல் - முதுகை ஒடித்தல். (பா : 427)

வெரிஇ – அஞ்சி. தூங்குதேன் கோலடிப்ப வெரீஇக் குல மள்ளர் கள் சாலடித்தருஞ் சாலியின் வெண்முளை துவைப்பன. (கி:930)

வெரு - அச்சம். அக்கைக் கரியின் குரலேயன்றி தென வெருவா. (அ : 371) வெருக்கொளத் தோன்றுவான். (யுத் : 1337)

வெருக்கொளல் (வெருக் கொள்ளுதல்) – அஞ்சுதல். வெருக் கொண்டு. (யுத் : 1024) வியந்தவர் வெருக்கொள விசும்பின் ஓங்கினன். (பா : 453)

வெருட்டுதல் - அச்சமுறுத்தல். வெருட்டியெழும் கணபணத்தின் வியாளமெலாம் கத்துருவாமின்னு மின்ருள். (ஆ : 204)

வெருண்டார் – அச்சமுற்றவராய். வெருண்டார் சிந்தை வியந்து விம்முவார். (கி : 996)

வெருண்டு – அஞ்சி. பொங்கிய உவகையர் ஆங்கே வெருண்டு. (அ . 32)

வெருவர – அஞ்ச. தவஞ்செய்வோர்கள் வெருவரச் சென்றடை காமவெகுளியென. (பா : 327)

வெருவருதல் – அஞ்சுதல். வெருவந்த வெற்பின் நின்றவன்கண்ணர். (யுத் : 722)

வெருவருந்தகையினர் – அஞ்சத்தக்கதன்மையர். வெருவருந்தகை யினர் விமுவர் நின்றெமுவரால். (கி : 186) [பா:பே]

வெருவருந்தகைவிலார் – அஞ்சுந் தன்மையில்லாதவர்கள். (கி:186) [பா:பே]

வெருவல் காணுதல் – 1. அச்சுறுத்தல். எழுந்துபோனன் வினை களைக் கற்பின் வென்ற விளக்கினை வெருவல்காண்பான். (யுத் :1585)
2. அசைத்தல். (கலா) (வை.மு) கயிலையை வெருவல் கண்டாய். (யுத் : 1254)

வெருவன்மின் – அஞ்சவேண்டா. வினையம் நீங்கிய மனித்தரை வெருவன்மினென்ற. (ஆ : 508)

வெருவா - அஞ்சி. (அ : 371)

வெருவி விம்முதல் – அஞ்சிக்கலங்குதல். விண்ணுளோர் வெருவி விம்ம. (சு : 946)

வெருவுதல் - அஞ்சுதல். வெருவன்மின் நீர். (ஆ: 139) வெருவுதி போலாம். (யுத் : 1254) சிலவெருவலுற்றன. (யுத் : 1086)) வெருவலன் ஒருபோதும். (அ:68) வெருவலை நின்றனை. (ஆ:825) வெருவலம். (ஆ:865) வெரீஇ. (யுத்:1336) வெருவு. (ஆ:801)

வெருவுமாலம்-யாவரும் அஞ்சும் ஆலகால விஷம். வெருவுமாலமும் பிறையும் வெவ்விடையவற் கீந்து. (பா : 503)

வெருவுறல் - அச்சங்கொள்ளல். மிப்பாவிய இமையோர் குலம் வெருவுற்றது. (யுத் : 3041)

வெருளுதல் - அஞ்சுதல். வெருண்டார் சிந்தை வியந்து விம்முவார், (கி : 997) வெருண்டு. (அ : 32)

வெருளும் வெம்புகை - வெருளச் செய்யும் வெம்மை மிக்க புகை வெருளும் வெம்புகைப் படலையின் மேற்செல வெருவி. (சு:1219)

வெல் செரு - வெல்லும்போர். வெல்செரு உடற்றலால்.(யுத்:2022)

வெல்லப்பட்ட அஞ்செனும் புலன்கள் - வெல்லப்பட்ட ஐம்புலன்கள். வெல்லப்பட்ட அஞ்செனும் புலன்களொத்தார் அவனும் நல்லறிவு போன்றான். (சு : 926)

வெல்லலம் - வெல்லமாட்டாதவராவோம்.(அண்)வெற்றி பெறுதற்கு இடையூறு விளைத்தவராவோம். போர்த்தொழில் வெல்லலம் பின்னை என்றிடை விலக்கினன். (யுத் : 403)

வெல்லுதல் - 1. வெற்றியடைதல். ஆரமர் வெல்லுதும். யுத்:1682) வென்றவர். வெல்குவர். (யுத்:1255) இவையனைத்தும் இவனை வெல்லா எனா. (யுத்:3857)வெல்லலம். (யுத்:403) வெல்குவேன். (யுத் : 465) வெல்லுதல். (சு : 1004) என்னையும் வென்றி. (யுத் : 1867)

2. வெறுத்துவிட்டிருத்தல். செல்வத்தை வென்ற போதத்த விரனும். (யுத் : 4132)

வெல்லுமத்தனையல்லது தோற்றிலா விறலோன் - போர் புரியின் வெல்லுமளவே யல்லாமல் தோற்றிலாத பெருவலி படைத்த இராவணன். (யுத் : 1210)

வெல்லோம் வெல்லோம் - வெல்ல மாட்டோம் வெல்ல மாட்டோம். வெல்லோம் வெல்லோம் என்றனன் வன்னி. (யுத் : 3445)

வெல்வாய்-வெல்ல வல்லமையுடையாய். வெல்வாய் நீயேல் வேறி. (சு : 182)

வெல்வாய் வெல்வாய் - வெல்லுவாய் வெல்லுவாய் வள்ளால் வெல்வாய் வெல்வாய் என்றனர் வானோர் மெலிகின்றார். (யுத் : 3795)

வெல்வித்தல் - வெல்லுமாறு செய்தல். வெல்வித்தான் மகனே என்று பகர்வரோ. (யுத் : 2162) வெல்விக்க. (யுத் : 2843)

வெம் - வெம்மை. வலி. வெவ்வளவரக்கனை மனக்கொள வியந்தான். (சு : 159)

வெவ்வரம் பயில்சுரம் - கொடிய அரம் போன்று கூரிய பரற்கள் பொருந்திய காடு. வெவ்வரம் பயில்சுரம் விரவு என்றான் அலன். (அ : 460)

வெவ்வரம் பொருத வேல் - கொடிய அரத்தினால் அராவிக் கூர் செய்யப்பட்ட வேல். வெவ்வரம் பொருத வேலோய். (யுத்:4118) வெவ்வரம் பொருத வேல் அரசை வேர் அறுத்து இவ்வரங் கொண்டநீர். (அ : 867)

வெவ்வலி - கடுமையான பராக்கிரமம். கொடிய வன்மை தோற்ற எம்பக்கல் ஐய வெவ்வலி தொலைய வந்தாய். (யுத் : 1354) வெவ்வலி வீர. (ஆ : 1020) (யுத் : 665)

வெவ்வழி - தீய நெறி. துன்மார்க்கம். வெவ்வழி விளங்கி நன்னெறியை மேவினான். (யுத் : 474)
2. வெம்மை வெளிப்படுகின்ற. வெவ்வழியாசனம். (யுத் : 17)
3. அதரும வழி. வெவ்வழி மாயையொன்று வேறிருந் தெண்ணி. (யுத் : 1582)
4. கொடிய வழி. வெவ்வழி இருள்தர. (சு : 142) வெவ்வழி வருந்தினிர். (ஆ:852) வெவ்வழி அரக்கர் கோமான். (யுத்:3491)

வெவ்வழி இராவணன் - தீநெறியிற் செல்பவனாகிய இராவணன். வெவ்வழி இராவணன் கொணர. (கி : 196)

வெவ்வழிப்பூதம் ஐந்து - இறைவனுடைய விருப்பின்வழி காரியப் படுகின்ற ஐந்து பூதங்கள். (சு : 589)

வெவ்வழியாசனம் - வெம்மை வெளிப்படுகின்ற ஆசனம். (யுத்:17)

வெவ்வழியிருள்தர -இருள் வெவ்வழிதர-இருள்வெவ்விதாய் வழியவும். (அண்) வெம்இருள் வழிதர - கொடிய இருளும் அவர்களுக்கு வழிகொடுக்க. (கலா) கொடிய வழியிலே இருள் செறிந்திருக்க. (வை.மு) வெவ்வழி இருள்தர மதித்து மீச்செல்வார். (அண்) (கலா) வெவ்வழி இருள்தர மிதித்து மீச்செல்வார். (வை.மு) (சு : 142)

வெவ்வளவரக்கன் - (வெம்மைவளம் அரக்கன்) வலிமையாகிய வளத்தையுடைய அரக்கனாகிய இராவணன். (சு : 159)

வெவ்வாளரசன் - கொடியவாளையுடைய அரசன். தயரதன். வெவ்வாளரசன் நிலைகண்டு என்னும் வினைவென்றுன்னு. (அ:330)

வெவ்வாறு - வெம் ஆறு. யாவரும் விரும்புதற்குரிய அருள்மயமான மார்க்கம். அறத்தாறே எனத்தெளிந்த அருளினாறும் வெவ்வாறுமெனக் குளிர்த்து. (கி : 765)

வெவ்விடம் - கொடிய நஞ்சு. வெவ்விடத்தினை அமுதென்வேண்டுவான். (சு : 430) வெவ்விட மென்னப் பொங்கி. (யுத் : 1889) அழல் வெவ்விடத்தினையுண்டவர் மீண்டென. (யுத் : 2096)

வெவ்விடர்க்கடல் - கொடிய இடர்க்கடல். (அ : 1036)

வெவ்விடை - வலிய இடபம். வெவ்விடை போலிள வீரன். (ஆ : 1074)

வெவ்வியதாய்-கொடியதாய். அவ் வெவ்விய தாயிற்றீய விதியினின் மேலென் போலாம். (அ : 550)

வெவ்விலை வேல் - கொடிய இலைபோன்ற வேல். (ஆ : 342)

வெவ்வழி - கொடியகண்கள். வெவ்விழி நெருப்புக. (யுத் : 1085)

வெவ்விழைவு - கொடிய ஆசை. வெவ்விழைவில் சிந்தை நெடுமாருதி. (கி : 872)

வெவ்வினை - கொடிய கருமங்கள். விழைந்த வெவ்வினை வேரறவீசினான். (சு : 264)

வெவ்வுருவமைந்தோன் - கொடியவடிவத்தைப் பொருந்தினவனான இராவணன். வெவ்வுரு அமைந்தோன் தங்கை என்பது மெய்ம்மையாயின். (ஆ : 264)

வெவ்வுரை - விரும்புகின்ற உரை. ஒரு வெவ்வுரைத் தூதுவன். (யுத் : 1960)

வெவ்வெயில் - கொடிய வேல். வெவ்வெயில் ஆகத்தழுத்தியும். (யுத் : 988)

வெவ்வேலவர்-கொடிய வேற்படையை யுடைய அரக்கர்.(யுத்:1832)

வெவ்வேறடைவினின் - தனித்தனியாக. மற்றுமத் திறத்திஞேரை வெவ்வேறடைவினின் முதன்மைகூறி. (யுத் : 4271)

வெவ்வேறிட்டு ஓதுதல்-வெவ்வேருக வகுத்துச் சொல்லுதல். வேத நாயகன் வெங்கணை வழக்கத்தின் மிகுதியை வெவ்வேறிட்டோதுகின்றதென். (யுத் : 1542)

வெவ்வேறு - தனித்தனியே. எவ்வேலை எம்மேகம் எக்காலொடெக்கால வெந்தி வெவ்வேறு உலகத்திவன் மேனியை மானும் என்ருன். (கி : 268)

வெவ்வேறு ஓதமவை ஏழு - வெவ்வேருக ஏழு சமுத்திரங்கள். வெவ்வேறு ஓதமவை ஏழும் மலைஏழும் உலகேழும். (யுத்: )

வெவ்வேறே புறங்கிடப்ப - வேறுவேருகப் பிரிந்து கிடந்த நிலையில். வித்தகமும் விதிவசமும் வெவ்வேறே புறங்கிடப்ப. (பா : 768)

வெள்குதல் - 1. நாணுதல். வெள்குதியோ விம்மல் நோயால் மாண்டு போதியோ. (அ : 169) ஈவதின்மையால் வெள்கிய மாந்தர். (கி : 547) வெள்காரோ. (ஆ : 1183)

2. பின்வாங்குதல். வென்று மீளுதும் வெள்குதுமேல் மிடலில்லாப் புன்றெழிற் குலமாதும். (யுத் : 3251)

3. கூச்சப்படுதல். வெள்குகின்ருர். (சு : 133)

வெள்வளை - வெண்ணிறமான சங்கினை அறுத்துச் செய்த வளை. சுடரும் வெள்வளைத் தோளி. (யுத் : 2314)

வெள்வேல் - வெள்ளிய வேற்படை. மின்னுயிர்க்குந் திவாய் வெயிலுயிர்க்கும் வெள்வேலோய். (அ : 1127)

வெள்ளஉவகை - மகிழ்ச்சியாகிய பெருக்கு. (யுத் : 3946)

வெள்ளக்கடலிடைத்துயில்வான் - வெள்ளக் கடலின்மீது யோக நித்திரை புரியும் திருமால் (இராமன்)மிடலுடைப் பிணமிமிசைத் தான் பண்டை வெள்ளக் கடலிடைத்துயில்வானன்ன தம்பியைக் கண்டான். (யுத் : 2590)

வெள்ளக்கலிப்பறை - வெள்ளம் வருவதையுணர்த்தும் ஒலிமிக்க பறை. கிணை. காத்தகால் மள்ளர் வெள்ளக் கலிப்பறை கறங்க. (பா : 29)

வெள்ளடை - வெற்றிலை. மேனகை வெள்ளடையுதவ. (சு : 408)

வெள்ளடைத்தம்பல் - வெற்றிலைத்தம்பலம். வெள்ளடைத்தம்பற் குப்பை சிதர்ந்தென விரிந்தமாதோ. (கி : 472)

வெள்ளணி - பிறந்தநாளில் ஒப்பனை. வெண்மையான ஆடை அணிதல். மகர கேதனன் வெள்ளணி ஒத்தது வேலை ஞாலமே. (அ : 1050)

வெள்ளத்தின் சடிலத்தான் - கங்கையைத்தாங்கிய சடையையுடைய சிவபெருமான். வெள்ளத்தின் சடிலத்தான்தன் வெஞ்சிலையிறுத்த விரன் (பா : 1207)

வெள்ளத்துப் பெரியகண்ணார் - கடலினும் பெரிய கண்களையுடைய மகளிர். பானல்பூத்த வெள்ளத்துப் பெரிய கண்ணார்:(பா:1151)

வெள்ளநீர் - பெருக்குநீர். கடல். (வை.மு) வெள்ளநீர் உலகு. (அ : 18)

வெள்ளநீர் மிதிலை - பிரவாகமான நீரையுடைய மிதிலை. (சு : 478)

வெள்ளநீர் வேலை - வெள்ளநீரைக்கொண்ட கடல். வெள்ளநீர் வேலைதன்னில் வீழ்ந்தநீர்விழ வெங்கண் உள்ளநீர் எல்லாம் மாறி உதிரநீர் ஒழுக நின்றான். (யுத் : 1387)

வெள்ளநீருலகு-மிக்கநீரையுடைய கடலாற் சூழப்பட்ட மண்ணுலகம். (அ : 18)

வெள்ள நெடுஞ்சுடர்மின் - மிக்க பெரிய ஒளியையுடைய மின்னல். மிக்க நெடுஞ்சுடர் மின்னின் மின்ன நக்கான். (அ : 191)

வெள்ளம் - 1. நீர்ப்பெருக்கு. வெள்ளத்திடை வாழ்வடவனல். (அ : 61) வெள்ளமும் பறவையும்... ஒருவழி ஓடநின்றவன். (பா : 173) வெள்ளம்போற் கண்ணி. (யுத் : 844)

2. மிகுதி. மகளிர் வாரும் பொலன்கொள் தார்ப் புரவி வெள்ளம். (பா : 891)

3 கடல். வெள்ளத்துப் பெரிய கண்ணார். (பா : 1151)

4. கடற்கரை. (ஆகு) ஏழுபத்தின் பெருவெள்ளம் மகர வெள்ளத் திறுத்ததால். (யுத் : 2)

5. பெருந்திரள். கூட்டம். மறுவறு மாந்தரும் மகளிர் வெள்ள மும். (அ : 1054)
6. நன்னீர். விளிம்பும் வெள்ளமும் மெய்தெரியாது. (சு : 249)
7. ஒரு பேரெண். (ஆகு) சேனை. ஏழுபத்தின் பெரு வெள்ளம். (யுத் : 2)
8. ஒரு பெருந்தொகை. படையளவு. மிகப்பல அக்கு ரோணி கொண்டது. அக்கு ரோணி எட்டுக் கொண்டது ஏகம். ஏகம் எட்டு கோடி; கோடி எட்டு சங்கம்; சங்கம் எட்டு விந்தம்; விந்தம் எட்டு குமுதம்; குமுதம் எட்டு பதுமம்; பதுமம் எட்டு நாடு; நாடு எட்டு சமுத்திரம்; சமுத்திரம் எட்டுப் பங்கு கொண்டது வெள்ளம். வெள்ள மேழு பத்துள்ள. (கி : 124)
9. பாற்கடல். வெள்ளந்தரும் இன்னமுதே. (யுத் : 238)

வெள்ளம் போற்கண்ணி – வெள்ளம் பொற் பெருகிய நீரை யுடைய கண்ணையுடைய சீதை. வெள்ளம் போற்கண்ணி யமுதலும் இராவணன் தன்மேல் உள்ளம் போற் செலுங் கழுகினுக் கரசனும் ஒத்தான். (யுத் : 844)

வெள்ள மணைத்தவன் – சிவபெருமான். வெள்ளமணைத்தவன்வில். (பா : 779)

வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசியர் உள்ளமும் ஒரு வழி ஓட நின்றவன் - பலவழியாலும் கவர்பட்டு ஓடவல்ல ஆற்றுநீர்ப் பெருக்கும் பறவையும் விலங்கும் பரத்தையர் மனமும் என்றும் ஒரு படித்தாய்ச் செந்நெறியிற் செல்லும்படி ஆண்டு வந்தவன். தசரதன். (பா ; 173)

வெள்ளவாரி – வெள்ளநீரைக் கொண்ட கடல் வெள்ளவாரி விரி வொடு அவ்விடணத்தள்ளவாரி நிலைமையும். (யுத் : 747)

வெள்ளவாரிவிரி – வெள்ளநீரைக்கொண்ட கடல் போன்ற சேனை யின் பரப்பு. (யுத் : 747)

வெள்ளாடு - வெள்ளாடு. கரிய வெள்ளாட்டிருங் குருதி, (யுத்:2557)

வெள்ளி – 1. வெண்மை. வெள்ளியந்தனிக்குடை. (பா : 488)
2. அறிவற்றவன். வெள்ளியையாதல் விளம்பினை. (பா : 447)
3. சுக்கிரன். தடுப்பது நினக்கழகிதோ தகவில் வெள்ளி. (பா : 451) வெள்ளியும் பொன்னுமென்பார். (யுத் ; 4317)

வெள்ளிக்கும்பம் – வெள்ளி மயமான பூரணகும்பம். கீழ்பால் திசையின் மிசைவைத்த வெள்ளிக்கும்பத்திளங் கமுகின் பாளை போல்று விரிந்துளதால். (பா : 635)

வெள்ளிடை – 1. ஒன்றுமில்லாத இடம். மரஞ்செடி முதலிய முளைக்காத வெற்றிடம். வெளியிடம். வெள்ளிடை யரிதவ்வீதி. (பா : 1165) (யுத் : 1113) வெற்ற வெள்ளிடை. (யுத் : 2018)
2. ஆகாயம். வெள்ளிடை மருங்குலார். (சு : 206) (ஆ : 1131)

வெள்ளிடைப்படுத்தல் – வெற்றிடமாகச் செய்தல். (யுத் : 563)

வெள்ளிடை மருங்குலார் – ஆகாயம் போன்ற (வடிவு தோன்றாத) இடையை யுடையவர்கள்.(சு : 206)

வெள்ளிநாகம் – கைலாச மலை. வெள்ளிநாகத்தை எடுக்கப்பெற்ற மிடுக்கினுன். (யுத் : 1089)

வெள்ளிப் பருப்பதம் – கயிலாய மலை. செம்பொன் பனிவரையும் நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள். (பா : 742)

வெள்ளிப் பெருங்கிரி – வெள்ளிப் பெருமலையான கைலாசம். வெய்யோன் கரத்தால் தள்ளத்தளர் வெள்ளிப் பெருங்கிரியாமெனச் சலித்தான். (யுத் : 1147)

வெள்ளிமலை – கயிலை மலை. முந்து வெள்ளிமலை பொன்னின் மலையோடு முரண. (ஆ : 17)

வெள்ளிமலை யெடுத்துலக மூன்றுங் காவலோன் – வெள்ளிமயமான கைலாச மலையைக் கைகளாற் பெயர்த்தெடுத்து மூன்றுலகங்களையும் காத்தலில்வல்ல இராவணன். (ஆ : 263)

வெள்ளி மால்வரை – வெள்ளிமயமான கயிலை மலை. (யுத் : 1450)

வெள்ளியகன் மனை – வெள்ளியினுலியன்ற அகன்ற மனைகள். ஆசடை குன்ற வெள்ளியகன்மனை யன்னமாக. (யுத் : 790)

வெள்ளியங்கிரி – கைலாயம். வெள்ளியங்கிரியைப் பண்டவ் வெந்தொழிலரக்கன் வேரோடகழ்ந்தனன் என்ன. (சு : 743)

வெள்ளியங் குன்றம் – கைலாய மலை. குலுங்கும் வன்றுயிர் நீங்குமால் வெள்ளியங் குன்றம். (சு : 864)

வெள்ளியந்தனிக் குடை – வெண்கொற்றக் குடை. கோல மாமதி குறைவற நிறைந்தொளி குலாவ மேலிவர்ந்தென வெள்ளியந் தனிக்குடை விளங்க. (பா : 488)

வெள்ளியம் பிறங்கல் – வெள்ளியங்கிரி. பெய்யு மாமுகில் வெள்ளியம் பிறங்கல் மீப்பிறழும். (பா : 486)

வெள்ளியம் பெருங்கிரி – அழகிய பெரிய வெள்ளி மலை. (யுத்:514) [பா : பே]

வெள்ளியம் பெருந்தடங்கிரி – கைலாய மென்னும் அழகிய பெரிய மலை. வெள்ளியம் பெருந் தடங்கிரி வேரொடும் வாங்கி அள்ளி விண்தொட எடுத்தனன். (யுத் : 514)

வெள்ளிய முறுவல் முத்தம் – வெண்மையான முத்துப் போன்ற பற்கள். வெள்ளிய முறுவல் முத்தம் வெளிப்பட வீரன் நக்கான். (ஆ : 288)

வெள்ளியாம் பல்வி-வெள்ளிய ஆம்பல் மலர்கள். மீனென விளங்கிய வெள்ளியாம் பல்வி வானெனும் மணித்தடம் மலர்ந்த போலுமே. (அ : 776)

வெள்ளியை – அறிவின்மை யுடையாய். புல்லறிவுடையை. (பா:447)

வெள்ளியோர் – சிற்றறி வுடையோர். அறிவிலிகள். கடற்படு பவிலமும் கன்னிப் பூகமும் மிடற்றினுக்குவமை யென்றுரைக்கும் வெள்ளியோர்க்கு உடற்பட வொண்ணுமோ. (சு : 539)

வெள்ளிலைத்தம்பல் - வெற்றிலைத்தம்பலம். மேவருங் கோபமன்ன வெள்ளிலைத் தம்பல் கண்டார். (பா : 940)

வெள்ளிவீழ் – வெள்ளிய சங்கிலித் தொடர். (அண்) வெள்ளி விழுதுகள். (கலா) வெள்ளிக் கோல். (வை.மு) (பா : 15)

வெள்ளி வெண்ணிறப் பாற்கடல் – வெள்ளிபோலும் வெண்மை நிறமுடைய பாற்கடல். வெள்ளி வெண்ணிறப் பாற்கடல் மேலைநாட் பள்ளி நீங்கிய பான்மையிற்றேன்றினன். (அ : 636)

வெள்ளி வெண்படம் – வெள்ளிபோலும் வெண்ணிறமுள்ள படம். சேடன் வெள்ளி வெண்படங் குடைந்து கீழ் போகியவோ. (கி : 167)

வெள்ளி வெண்மாடம் – வெள்ளிபோல் வெண்ணிறமான மாளிகை வெள்ளி வெண்மாடத்தும்பர். (பா : 53)

வெள்ளி வெண்முறுவல் - வெள்ளிபோல் வெளுத்த பற்கள். வெள்ளி வெண்முறுவல் தோன்று முகத்தியர். (சு : 133) [பா : பே]

வெள்ளி வெற்பு – வெள்ளி மலை: விழிதரு நெற்றியான்தன் வெள்ளி வெற்பெடுத்த தோட்குப் பழிதரும். (ஆ : 897)

வெள்ளெயிறு – வெள்ளிய பற்கள். மின்னும் வெள்ளெயிற் றரக்கர். (யுத் . 2304)

வெள்ளெருக்கு – வெண்ணிறமுள்ள எருக்கமலர். வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த திருமேனி. (யுத் : 3906)

வெள்ளை – 1. கள். (அண்) வெள்ளை இன்னமிழ் தனைய தீஞ் சொல். (பா : 1062)

2. வெண்ணிறம். வெள்ளைப்பிள்ளை வாளராபோன்ற. (யுத் : 712) யுத் : 282)

வெள்ளைக் கடல் – வெண்ணிறம் வாய்ந்த பாற்கடல். (யுத் : 2590)

வெள்ளைக் குருந்து - வெண்மையான இளவொளி. வெள்ளைக் குருத் தெழுகின்ற நீலக்கொண்டல். (ஆ : 265)

வெள்ளைப் பிள்ளை வாளரா – ெண்ணிறமுள்ள பாம்புக் குட்டி. (யுத் : 712)

வெள்ளை மருப்பு – வெண்மை நிறமுள்ள தந்தங்கள். விடாமதக் குன்றின் வெள்ளை மருப்பு. (யுத் : 3383)

வெள்ளை மனத்தவன் – அறிவற்ற மனமுள்ள அச்சனகன். வெள்ளை மனத்தவன் வில்லையெடுத்திப் பிள்ளை முன்னிட்டது பேதைமை யென்பார். (பா : 779) [பா:பே]

வெள்ளை யின்னமுதனைய தீஞ்சொல் – வெண்ணிறமுள்ள இனிய அமிர்தத்தையொத்த இனிய பேச்சு. (வை.மு) வெண்மை நிற மான கள்ளால் இனிய அமுதத்தை யொத்த இனிய சொல். (அண்) ஒருத்தி வெள்ளை யின்னமிழ்தனைய தீஞ்சொல் இடைதடு மாறியென்ன. (பா : 1062)

வெள்ளை வண்ணவிடம் – வெண்மை நிறமுள்ள தோர்விடம். உயிரைத் துருவிட வெள்ளை வண்ணவிடமுமுண்டாங் கொலோ. (பா : 709)

வெள்ளை வள்ளுகிர் – வெண்ணிறமான கூரிய கைந்நகங்கள். வான்தருவள்ளல் வெள்ளை வள்ளுகிர் வயிர மார்பின் வான்றலும். (யுத் : 282)

வெளி - 1. வெற்றிடம். திறந்த இடம். நின்ற கால் மீண்டது வெளி பெருமையே. (பா : 454) (யுத் : 3377)
2. சமபூமி. வெளியிடம். வெற்ற வெள்ளிடை விரிந்து போவதொரு மேடு பள்ளம் வெளியின்மையால் உற்ற செங்குருதி வெள்ளம் ஓத வேலையொடும் ஒத்ததால். (யுத் : 2018)
3. ஆகாயம். வெளியன்ன தொர் இடையாள். (அ : 619)
4. நல்லவழி. (வழியாகிய இடைவெளி) அன்னவை தீரும் வெளி பெற்றேம். (கி : 1011)
5. துயருக்குப் புறம்பான நிலை. வழி. (அண்) வெம்புதுயரம் நீயுழக்க வெளிகாணாது மெலிகின்றேம். (யுத் : 2621)
6. ஒளி. வெளியோடு இருளில்லை. (அ : 101)
7. இடைவெளி. மேருவை நிறுத்தி வெளி செய்தது கொல். (சு : 161)

வெளித்தல் - 1. வெளிப்படையாதல். கருநிறத்தோர் பால் வெளித்து வைகுதல் அரிதென. (சு : 231)
2. வெண்ணிறத்தை யடைதல். (உ.வி) (சு : 231)

வெளிப்படல் - வெளிப்பட்டுத் தோன்றுதல். வேண்டிய உலக மெல்லாம் வெளிப்பட. (சு : 21) (ஆ : 288)

வெளியன்ன தொர் இடையாள் - ஆகாயம் போன்ற இடையினை யுடையவள். (அ : 619)

வெளியிடை - திறந்த வெளியான இடம். வெளியிடை விண் டோய் மலையென நின்றான். (சு ; 770)

வெளியிற்றாக - வெளிப்படையாக. வீட்டினுக்கமைவதான மெய்ந் நெறி வெளியிற்றாகக் காட்டுறுமறிஞர். (ஆ . 1203)

வெளிர்ப்பன - வெளுத்திருப்பவை. வெளிர்ப்பன கறுப்பவான வேற்கணாள். (பா : 1164)

வெளில் - கட்டுத்தறி. வெளில் ஈர்த்த வரை புரையும் மிடலரக்கர். (யுத் : 3568)

வெளிறிலா மரம் - முழுவயிரமுள்ள மரம். வெளிறிலா மரமே கொடுவீசினான். (யுத் : 1007)

வெளிறிலாமை - வயிரமான தன்மை. (யுத் : 1007)

வெளிறு – 1. குற்றம். மேருவின் சிகரம்போன்ற தென்னினும் வெளிறுண்டாமால். (யுத் : 1185) வெளிறு நீங்கிய பாலையை மெல்லெனப் போனுர். (அ : 736)
2. வெண்ணிறம். வெளிறு சேர் நிணம். (ஆ : 522)
3. யாது மில்லாமை. (உ.வி) வெளிறு நீங்கிய பாலே. (அ: 736)
4. அசாரம். வெளிறிலா மரம். (யுத் : 1007)
5. வயிர மின்மை. வெளிறிலா மரம். (யுத் : 1007)
6. அறியாமை. (கலா) அறியாமை யென்னும் குற்றம். (யுத் : 1185)

வெளிறு நீங்கிய பாலே – வெம்மையாகிய குற்றம் நீங்கிய பாலே. (அ : 736)

வெற்பணி புயம் – மலேயை ஒத்த தோள்கள். வெற்பணி புயத்து மாரிசன். (பா : 373)

வெற்பினம் – மலேத்தொகுதிகள். வேகமாக் கவிகள் வீசும் வெற்பினம் விழுவ மேன்மேல். (யுத் : 1893)

வெற்பு – 1. பெரும் பாறை. வெற்பு மிறுத்தன. (கி : 598)
2. மலே. (ஆகு) யானே. வெற்பிடை மதமென வியர்க்கும் மேனியன். (ஆ : 838)

வெற்ற – வெறுமையான. வெற்றவிண். (ஆ : 28) வெற்ற வெம் பொடி. (யுத் : 1538)

வெற்றம் – வெற்றி. வெற்ற எழுவை மழுவா யம்பால் அறுத்து வீழ்த்தினுன். (சு : 857)

வெற்றரசு – பெறு பயனில்லாத அரசு. வெற்றரசெய்தி எம்பி விட்டர சனக்கு விட்டான். (கி : 362)

வெற்ற விண் – நட்சத்திரங்களில்லாத விண். (ஆ : 28)

வெற்ற வெம்பொடி யாயின–வெறுமையாக வெவ்விய பொடியாகிப் போயின. சுடுபொறித் தொகை தாவி வெற்ற வெம்பொடி யாயின அல்லவுங் கண்டிலர். (யுத் : 1538)

வெற்ற வெள்ளிடை – வெட்ட வெளி. வெறுமையான வெள்ளிடை (யுத் : 2018)

வெற்றனற் பொறி–வெறும் நெருப்புப் பொறி. மூட்டிய வெற்றனற் பொறிக் கண்ணினன். (யுத் : 744)

வெற்றிக் கொலை பெற்ற கூர்வேல் – வெற்றி பொருந்திய கொலைத் தொழிலையுடைய கூர்மையான வேற்படை. கொற் பெற்ற வெற்றிக் கொலைபெற்ற கூர்வேலோய். (அ : 1126)

வெற்றி கூறுதல் – வெற்றியைப் பாராட்டுதல். வெற்றி கூறிய வானவர். (ஆ : 543)

வெற்றிடம் – காலியான இடம். வெறுமையான இடம். உலகங்கள் பலவின் மெத்தியேர்னிக ளேறினும் வெற்றிடம் மிகுமால். (யுத் : 4079)

வெற்றித்திரு – வீரலட்சுமி. வெற்றித்திருவின் குளிர் வெண்ண கை போல். (ஆ : 83) (பா : 1017)

வெற்றி மேலும் நன்று – வெற்றிக்கு மேம்பட்டது. புரிந்த தன்மை வெற்றிமேலும் நன்று. (யுத் : 3332)

வெற்றியர்–வெற்றியை அடையவல்ல வீரர். (இலக்குமணர்) வெற்றி யருளரெனின் மின்னின் நுண்ணிடைப் பொற்றொடிக்கிந்நிலை புகுதற் பூாலதோ. (ஆ : 953) உந்தை மேலும் வெற்றியர் தம்மைச் செல்லச் சொல்லினன். (யுத் : 1609)

வெறி – 1. மணம். வாசனை. வெறி பொழில்களின் வாய். (பா:311) மலரினில் வெறியும். (யுத் : 250)

2. முடை நாற்றம். வெறிந்த செம்மயிர். (பா : 396)

3. புலால் மணம். வெறித்தாரை வேலரக்கர். (ஆ : 361)

4. ஆவேசம் வீராவேசம். வெறிப்போர்த் திர வாழ்க்கை. (ஆ : 514)

5. கோபம். வெறிப் பொறிப்புலியினர். (யுத் : 4330)

6. மூர்க்கத்தனம். (உ.வி) வெறிப் பொறிப்புலி. (யுத் : 4330)

7. அச்சம். வெறிப் பொறிப்புலி. (யுத் : 4330)

வெறித்த குஞ்சியர் – நெருங்கிய சிகையை யுடையவர். (கலா) மணம் பொருந்திய மயிர்முடி. (அண்) வில்லினர் வாளினர் வெறித்த குஞ்சியர். (பா : 833)

வெறித்தல் - 1. திகைப்படைதல். தேவரஞ்சி வெறித்தார். (ஆ : 926)

2. மயக்கங்கொள்ளுதல். வெருளுதல். வெறித்துயிர் பதைப்ப. (சு : 1015)

வெறித்தாரை வேல் – புலால் நாற்றம் வீசுகின்ற வேல். வெறித் தாரை வேலரக்கர். (ஆ : 361)

வெறித்து – வெருண்டு திடுக்கிட்டு. பரந்த பல்லுரு மேற்றினம் வெறித்துயிர் பதைப்ப. (சு : 1015)

வெறிதல் – செறிதல். வெறிந்த செம்மயிர். (யுத் : 1040)

வெறிந்த – முடை நாற்றம் வீசுகின்ற. (அண்) செறிந்த. (கலா) வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற்றுள். (பா : 396)

வெறி நீர் – நறுமணமுள்ள நீர். வெறி நீர்ப் பொய்கை தாமரை பூத்தெனப் பொலிந்தது புணரி. (யுத் : 566)

வெறிப்பு – நடுக்கம். வெறிப்புறு நோக்கின வெருவுகின்றன. (ஆ : 1141)

வெறிபூத்தல் – நாற்றம் தோன்றப் பெறுதல். நாற்றம் வீசுதல். (அண்) நாண் மலர்ப் பூவின் மாலை புலால் வெறி பூத்தலால். (யுத் : 3687)

வெறி போர்த்தல் – வெறிக்குணம் மிகுதல். வெறி போர்த்தன இருள் போர்த்தன. (யுத் : 3717)

வெறிமணம் – ஒப்பற்ற நறுமணம். மீளுந்தாறு மோர் வெறிமணங் கமழுமால் வேலை. (சு : 112)

வெறிய – 1. மணம் மிக்க. வெறி (பித்துப்) பிடித்தவை.
2. வறிதாக. வில்லி சாரதியொடும் படத்திரிந்தன வெறிய. (யுத் : 2449)

வெறியர் – 1. வெறுமை யுடையவர். இல்லாதவர். வெறியரன்றே குணங்களான் விரிஞ்சன் முதலாம் மேலசனோர். (சு : 608)
2. தோல்வியுற்றவர். மற்றை மனிதரை வெறியராக்கி. (யுத் : 2521)

வெறியன – இல்லாமை. வீண் துன்பங்கள். வெறியன எய்தி நொய்தின் வெந்துயர்க் கடலின் விழ்ந்தேன். (கி : 421)

வெறியன மிழற்றல் – பிதற்றுகின்ற வார்த்தைகளைப் பேசுதல். (அண்) மயக்கத்தை யுடைமையால் மிழற்றுதல். (கலா) பசுநறுந் தேறன் மாந்தி வெறியன மிழற்றுகின்ற. (பா : 578)

வெறியுடைக் கலவை – மணம் மிக்க பலவகைப் பொருள்கள். மான்மதத் தெக்கரும் வெறியுடைக் கலவையும். (பா : 1126)

வெறுக்கை - 1. செல்வம். பெரு வெறுக்கை வெறுக்க விசி. (யுத் : 2624) வேந்தர்கட்கரசொடு வெறுக்கை தேர்பரி. (பா : 276)
2. மிகுதி. வெறுத்த பூண் வெறுக்கையாலே. (சு : 135)

வெறுக்கை வெறுக்க வீசி - செல்வத்தை வெறுப்படையும்படி வாரி யிறைத்து. (யுத் : 2624)

வெறுங்கை - 1. ஆயுத மின்றி யுள்ள கை. கொன்றலுன்னிலன் வெறுங்கை நின்ருனெனக் கொள்ளா. (யுத் : 1213)
2. எவ்விதக் காரியப் பயனுமில்லாத கை. ஒன்றுமில்லாத கை. வாளும் வீரமும் களத்தே போட்டு வெறுங்கையோடு இலங்கை புக்கான். (யுத் : 1218) வெற்றுங்கை பெயரேன் ஒருவராலும் விளியாதேன். (சு : 610)

வெறுத்தல் - வெறுப்புக் கொள்ளுதல். வெறுத்து நீத்த பொற்கலன் கிடந்த வீதி. (பா : 569)

வெறுந்துகள் - வெறும் புழுதிகள். விண்டலத் தெறிந்த குன்றம் வெறுந்துக ளாகி வீழக் கண்டனன். (யுத் : 2984)

வெறு நிலம் - வெறுந்தரை. தின்மகன் அவந்தனுய் வெறுநிலத் திருக்கலானபோது உவந்தவாறென். (அ : 152)

வெறுப்பன கிளத்தல் - வெறுக்கத்தக்க சொற்களைச் சொல்லுதல். வெறுப்பன கிளத்தலுறு மித்தொழிலைவிட்டு. (அ : 760)

வெறுப்பு - வெறுத்தல். வெறுப்புண்டாய ஒருத்தி. (சு : 1143)

வெறுமை - 1. ஏழைமை. வறுமை. பிரிந்து வேறெய்துஞ் செல்வம் வெறுமையிற் பிறிதொன்ருமோ. (கி : 428) (யுத் : 3059)
2. விசேடத் தன்மை இன்மை. (வை.மு) (கலா) எளிமை. தரித்திரம். (வெ.ப) வெறுமை கண்டபின் யாவரும் யாரென விரும்பார். (யுத் : 548) நிலத்து நீ மலைதல் வேறுகாட்டுமோர் வெறுமையை. (யுத் : 1181)
3. வெறுமையாய் இருந்த நிலை. வெறுமைகள் கெடுவன விழிகுழி கழுதுகள். (யுத் : 1809) வெற்ற வெம்பொடியாயின. (யுத் : 1538)
4. ஒன்றுமில்லாமை. இறுதியுங்காவலுமியற்றும் ஈசரும் வெறு வியர். (யுத் : 2437)

வெறுமை கண்டபின் யாவரும் யாரென விரும்பார் - விசேஷத் தன்மை யாது மில்லாமையைக் கண்டபின் யாவரும் யாரென்று அறியவும் விருப்பங்கொள்ளார். (யுத் : 548)

வெறுமை கூர்தல் - காலியாதல். விண்ணினு டுறைவிடம் வெறுமை கூரவே. (யுத் : 1989)

வெறுவிது - 1. வீணானது. வெறுவிதுன் வீரம். (யுத் : 1308)
2. பயனற்றது. வேலைகுப்புறு கொள்கைத் தாதல் வெறுவிது. (சு : 15)

வெறுவிது ஆக்குதல் - வெறிச்சென்று செய்தல். எழுபது வெள்ள மும்மான வெறுவிதாக்குவன் உலகினைக் கணத்தினேர் வில்லால். (யுத் : 2457)

வெறுவியர் - ஒன்றுமில்லாதவர். வெறுமையுறுவர். ஈசரும் வெறுவியர். (யுத் : 2437)

வென் - முதுகு. வென்னிலன்றி விழித்திலார். (யுத் : 1341)

வென்ற - 1. கடந்த. உம்பரை வென்ற கால் மீண்டது வெளி பெருமையே. (பா : 454)
2. வெற்றியடைந்த. சிறியோர் நாள் பருகினரென்றால் வென்ற நலத்தின் பழியன்றே. (ஆ : 734)

வென்றமை - வெற்றி கொண்டமை. வென்றமை போந்த தன்மை உரை செய. (சு : 1256)

வென்ற வென்றி - வென்ற வெற்றியின் இயல்பு. வாளரக்கர் பண்பு சால் விதம் புலர்ந்த தென்னின் வென்ற வென்றி சொல்ல வேணுமோ. (யுத் : 3336)

வென்றி - 1. வெற்றி. நிலஞ் சுரந்தெழும் வென்றி யென்றும்பரின் நிமிர்ந்தான். (யுத் : 2558) வேறினி அவர் வயின் வென்றி யாவதோ. (யுத் : 90)
2. வென்றவனாவாய். என்னை நீ பொருது வெல்லின் அவனை யும் வென்றி. (யுத் : 1867) [பா : பே]

வென்றி இளையவன் - வெற்றியையுடைய இளையவனாகிய இலக்குமணன். ஏத்தும் வென்றி இளையவற்கு ஈதொரு வார்த்தை கூறுதி. (சு : 637)

வென்றிச் செங்கண் வெம்மை யரக்கர் – வெற்றியை விளக்கும் செவ்விய கண்ணையும் கொடுமையையுமுடைய அரக்கர். (யுத் : 3449)

வென்றி சேர் இலங்கையான் – வெற்றியையுடைய இலங்கை நகரத் தரசன். வென்றி சேர் இலங்கையானை வென்ற மால் வீரம் ஓத நின்ற இராமாயணம். (பாயி : 15)

வென்றி சேர் முரசு - வெற்றி பொருந்திய பேரிகைகள். வென்றி சேர் முரசொலி கறங்கிட. (பா : 317)

வென்றிசை – வெற்றியிலாய புகழ். மாருதிநீயலால் வென்றிசைக் குரியார் பிறர் வேண்டுமோ. (கி : 750)

வென்றி நெடுந்தகை வீரன்–வெற்றித்திறமும் உத்தம குணங்களும் உடைய வீரனான இராமபிரான். வென்றி நெடுந்தகை வீரனும் ஆர்வத்து இன்துணை அன்னனும் எய்தி இருந்தார். (பா : 1330)

வென்றியிர் – வெற்றியுடையவர்களே. வென்றியிர் இருத்திரென்று விடைபெற்று விரைவிற் போனான். (யுத் : 78)

வென்றிவாள் – வெற்றியைத்தரும் உடைவாள். வென்றிவாள் புடைவிசித்து. (பா : 336)

வென்றிவீரர் - வெற்றிவீரர். (இராமலக்குமணர்) மாதவ நின்னருள் இன்றுதானுளதேல் அரிது யாது இந்த வென்றி வீரர்க்கு எனவும் விளம்பி. (பா : 652)

வென்றி வெந்திறலினான் – வெற்றியும் கொடிய பராக்கிரமுமுடைய விபீடணன். வென்றி வெந்திறலினானும் அவனடித்தலத்து வீழ்ந்தான். (யுத் : 1385)

வென்று – வெற்றிகொண்டு. வென்று புணர்வது பூவுண் வாழ்க்கை ஒரு குரங்கு. (சு:755) வென்றிவண் வருவன் என்றுரைக்கிலேன். (யுத் : 1312)

வென்னம் – அழகு. வர்ணம். வர்ணம் என்பதன் திரிபாகிய வண்ணம் வென்னம் என ஆயிற்று. அயன்தன் வண்ணப் போர்ப்படை. (யுத் : 2484)

வென்னற்போர்ப்படை – வெல் நல் போர்ப்படை. வெற்றியைத்தரும் நல்ல படைக்கலமாகிய பிரமாஸ்திரம். (யுத் : 2484)

# வே

வேகடஞ் செய்தல் - சாணை பிடித்தல். பனிக்கனி வாய்ச்சியர் வேகடஞ் செய் மணியென மின்னினர். (பா : 1035) நன்மணி வேகடஞ் செய்தன்ன தூத. (யுத் : 3949)

வேகடம் - சாணை. பள்ளியான் பரந்த மார்பிடை மணியின் வேகடம் வகுக்குமாறு போல். (அ : 125)

வேடகடம் வகுத்தல்-சாணை பிடித்தல். மாசு போக்குதல். (அ:125)

வேகநாகம் - சினமுள்ள பாம்பு. (ஆதிசேடன்) மேருவை முழுதுஞ் சூழ்ந்து மீதுற்ற வேகநாகம். (சு : 35)

வேகம் - 1. கொடுமை. உக்கிரம். வேகவலி கெட்டு. (அ : 34) காகமுற்று மோர் கண்ணில வாக்கிய வேகவென்றி. (சு : 357)
2. அச்சம். வேகம் விண்டு சயந்தன். (சு : 683c)
3. விரைவு. வேகம் ஒய்ந்தது வீழ்வதன் முன்னம். (சு : 918)
4. மனக்கலக்கம். வேக வெம்பழி சுமந்துழல வேண்டலேன். (ஆ : 1162)

வேகம் ஒய்தல் - வேகம் ஒய்ந்து போதல். (சு : 918)

வேகம் விடாதன விசிகம் - வேகத்தை நீங்காதன வாகிய அம்புகள். விட்டனன் விசிகம் வேகம் விடாதன. (யுத் : 2046)

வேகர் - ஒற்றர். வேந்தனுக் குரைத்தனர் வேகர். (பா : 516) [பா : பே]

வேகரம் - கொடுமை. உக்கிரம். வேகரத்த வெங்கண் உமிழ் வெயிலன. (கி : 713)

வேகவலி - உக்கிரமான பலம். குருதியாறு பெருகிச் சொரிய வேக வலி கெட்டு உணர்வு சோர்வுறுதலும். (ஆ : 34)

வேக வெஞ்சிலைத் தொழில் - விரைவுமிக்க கொடிய விற்றொழி லாகிய போர். (யுத் : 1678)

வேக வென்றி - உக்கிரமான வென்றி. (சு : 357)

வேகின்ற உள்ளம் - கொதிக்கின்ற மனம். வேகின்ற உள்ளத்தானை வெஞ்சிறையகத்து வைத்தான். (கி ; 1004)

வேகின்ற சிந்தை - தவிக்கின்ற மனம். ஏகென்றிருக்கின்றிர் தமியிர் என்று பின் வேகின்ற சிந்தையான் விடை கொண்டேகினன். (ஆ : 828)

வேங்கடம் - திருவேங்கட மலை. தண் சாரல் ஓங்கிய வேங்கடம். (கி : 769)

வேங்கை - வேங்கை மரம். மலையிலுள்ளது. கொடிச்சி மார்க்குக் கணித்தொழில் புரியும் வேங்கை. (பா : 1930)

வேங்கையின் கொம்பர்கள் - வேங்கை மரத்தின் கிளைகள். கோல வேங்கையின் கொம்பர்கள். (அ . 752)

வேங்கையின் கொம்புகள் - வேங்கை மரத்தின் கிளைகள். (அ : 752) [பா : பே]

வேசரி - கோவேறு கழுதை. விரி மணித்தார்கள் பூண்ட வேசரி வெரிநிற் றேன்றும்... நல்லார். (பா : 881)

வேசறுதல் - ஆசைப்படுதல். வம்புறு மறுவைப்பற்றி முயலென வாங்கும் வண்ணம் எம் பெருங்களிறே காண வேசற்றேன் எழுந்திரர்யோ. (யுத் : 3194)

வேசியர் - வேசையர். வேசியர் உடுத்த கூறை வேந்தர்கள் சுற்ற. (யுத் : 4291)

வேசை மங்கையர் - வேசைப் பெண்கள். மூசு வண்டினம்...... வேசை மங்கையராமென மீண்டவே. (யுத் : 677)

வேட்கின்ற வேள்வி பிழைத்தது - இயற்றுகின்ற வேள்வி தவறிற்று (யுத் : 2974)

வேட்கும் - கொள்ளக்கடவேம். மீண்டவர் தம்மைக் கொல்லும் வேட்கையை வேட்கு மன்றே. (யுத் : 2251)

வேட்கை - 1. விரும்பிய அளவு. வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி. (பா : 442)

2. விருப்பம். நளிர் கடல் நாரம் நாவுற வேட்கையிற் பருகிய மேகம் மின்னுவ. (கி : 448)

3. ஆசை. அரக்கர் தங்குலத்தை முற்றும் வென்று நின்றருளுங் கோலம் காணிய கிடந்த வேட்கை. (யுத் : 1604) வேட்கை பூண்டு. (யுத் : 2253)

4. காதல். வேட்கை இவ்வழி இலங்கை வேந்தன் செய்தது. (யுத் : 1582)

வேட்கை விசித்த தீர்ப்ப – ஆசை வலியப் பிடித்ததாகி இழுப்ப. வேருய பிறப்பிடை வேட்கை விசித்தது ஈர்ப்ப மாருேர் உடலுற் றென. (ஆ : 720)

வேட்ட – விரும்பியவை. யாவையும் வேட்ட வேட்டவர் கொண் மின் விரைந்தென. (அ : 823)

வேட்டங் கொண்ட – வேட்டையாடிக் கொன்ற. இலங்கையில் வேட்டங் கொண்ட நீல மாமுகில். (யுத் : 4223)

வேட்டது – காமம். வேட்டதே வேட்டுவீயும் உம்மை. (யுத்:3066)

வேட்டதே வேட்டு வீதல் – காமத்தையே விரும்பி இறத்தல். (யுத் : 3066)

வேட்டம் – வேட்டையாடுதல். முனிந்துள வேட்டமுற்றல்...... புகழுடைத் தாமன்று. (ஆ : 794)

வேட்ட முற்றல் – வேட்டையாடுந் தொழிலை நிறைவேற்றுதல். முன்னின்ருர் முறையினின்ருர் முனிந்துள வேட்டம் முற்றல்... புகழுடைத் தாமன் றென்ருன். (ஆ : 794)

வேட்ட மேற்ருெடர்தல் – வேட்டைத் தொழிலில் தொடர்ந்து வருதல். தோழமா மதிலிலங்கை மால் வேட்ட மேற்ருெடர்ந்தார். (யுத் : 3275)

வேட்டல் – 1. விரும்புதல். வேட்டுமோ. (யுத் : 373) அழலுறு குஞ்சியர் அமரை வேட்டுவந்து. (ஆ : 410) வில்லாளனு மதுகண்டவை விலக்குந் தொழில் வேட்டான். (யுத் ; 3718) வேட்கிற்பாயலலை. (யுத் : 1382) மீண்டவர் தம்மைக் கொல் லும் வேட்கையே வேட்குமன்றே. (யுத் : 2251)
2. திருமணஞ் செய்தல். மெய்ந் நிறை மூவரை மூவரும் வேட்டார். (பா : 1346)
3. ஓமச் சடங்கியற்றல். கரிய வெள்ளாட்டிருங் குருதி வெம்பு வெந்தசை முறையினிட் டெண்ணெயால் வேட்டான். (யுத் : 2557)

வேட்டவர் வேட்டபின் – வேட்டு அவர் வேட்ட பின். விரும்பி மணந்த பின். (பா : 1347)

வேட்டவர் வேட்கையின் மேற்பட ஈந்தான் – வேண்டியவர் விருப்பத் திற்கு அதிகமாக ஈந்தான். (பா : 1347) [பா : பே]

வேட்டவரம் - விழைந்த வரம். வேட்ட வரமெலாம் வழங்கும். (யுத் : 1684)

வேட்டு - விரும்பி. அமரை வேட்டு. (ஆ : 410) வெம்மையிற் றருமம் நோக்கா வேட்டதே வேட்டு வியும் உம்மை. (யுத்:3066)

வேட்டை - வேட்டையாடுதல். (அ : 369)

வேட்டை வேட்கை - வேட்டையாடும் விருப்பம். வெய்ய கானத் திடையே வேட்டை வேட்கை மிகவே. (அ : 369)

வேட்டோர் - விரும்பினவர். கொடைத் தொழில் வேட்டோர்க் கெல்லாங் கொடுத்தனன். (யுத் : 3087)

வேடம் - வேஷம். உருவம். அரியின் சேனையை வெருக்கொளத் தோன்றுவான் கொண்ட வேடமோ. (யுத் : 1313) மாணிட வேடமாகி. (சு : 54) விட்டது மாய வேடம், (ஆ : 876)

வேடர் - வேடர்கள். மன்னவர் நெஞ்சினில் வேடர் விடும் சரம் வாயாவோ. (அ : 1008)

வேடருளீர் - வேடர்களே. வேடர்களா யுள்ளவர்களே. வெம்பிய வேடருளீர் துறை யோடம் விலக்கிரோ. (அ : 1011)

வேடன் - வேடன். பாவி வேடன்கைப் பார்ப்பென. (சு : 1073) தன்னைப்பிடிக்க வந்தடைந்த பேதை வேடனுக் குதவிசெய்து விறகிடை வெந்தீ மூட்டி. (யுத் : 418)

வேடன் கைப் பார்ப்புற - வேடன் கையிலே குஞ்சு அகப்பட்டுக் கொள்ள. பாவி வேடன் கைப் பார்ப்புறப் பேதுறுந் தூவி யன்ன மன்னுள். (சு : 1073)

வேடு - வேட்டுவர் கூட்டம். வேடு கொடுத்தது பாரெனும் இப் புகழ் மேவிரோ. (அ : 1014)

வேடை - நீர் வேட்கை. வேடை ஓடி. (சு : 1260)

வேடை ஓடி - தாகம் மிகுந்து. (சு : 1260)

வேண் - ஆசை. வேண்தரு விண்ணு டென்னும் மெய்ம்மை கண் டுள்ளம் மீட்டான். (சு : 2)

வேண்டரு விண்ணுடு - ஆசையைக் கொடுக்கின்ற வானுடு. (சு : 2)

வேண்டல் - விரும்புதல். பரத்துவன் வேண்டலால். (யுத் : 4164)

வேண்டலர் – பகைவர். வேண்டலர் அறிவரேல் நும் கேண்மை நீர்விளையிற் ருமால் (கி : 631)

வேண்டலராயினும் – வேண்டாதவராயினும். ஒன்றும் வேண்டலராயினும். (யுத் : 543)

வேண்டா – விரும்பாத. வேண்டா அரசாட்சி. (அ : 1129)

வேண்டாதார் – விரும்பப்படாதவர். விண்டாரே யல்லாரோ வேண்டாதார். (ஆ : 355)

வேண்டா வேண்டா – செய்ய வேண்டாம் செய்ய வேண்டாம். நீயினி மாள்வார் தொழில் செய்ய வேண்டா வேண்டா. (ஆ : 745)

வேண்டாவோ – வேண்டத்தக்கன அல்லவோ. (யுத் : 2605)

வேண்டி – வாங்கி. நல்வழி நல்க வேண்டி. (யுத் : 2235)

வேண்டிய – விரும்பிய. அலை கடற்றலை யன்றணை வேண்டிய நிலையுடைக் கவி நீத்தம் அந் நீத்தமே. (பா : 20)

வேண்டிற் றீயும் நெஞ்சினர் – இரப்போர்க்கு வேண்டிய பொருளைக் கொடுக்கும் வள்ளன்மை மனமுள்ளவர். (பா : 583)

வேண்டிற்று – வேண்டியது. இது நின்னை வேண்டிற்று என்ருன். (அ : 549)

வேண்டிற்று முடித்தல் – விரும்பப்பட்ட காரியம் நிறைவேறுதல். வேண்டிற்று முடிந்ததன்றே வேதியர் வேதன் நின்னைக் காண்டற்கு விரும்புகின்ருன். (யுத் : 3659)

வேண்டினர் – விரும்பினேர். வேண்டினர் வேட்கையின் மேற்பட விசி நீண்டகையாய். (பா : 442)

வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசுதல் – விரும்பினேர் விரும்பிய அளவினும் மிக வரையாது வழங்குதல். (பா : 442)

வேண்டுதல் – 1. விரும்புதல். வேண்டினர்க் குதவுவான். (பா:1302) வேண்டிச் செய்தி. (சு : 477) வேண்டின பெற்று. (யுத்:1383) வேண்டல வேண்டு போதும். (பா : 986)
2. கருதுதல் யாம் விளிவது செய்குவர் என்ன வேண்டுதல். (யுத் : 402)

வேண்டுதிறத்தார் – ஆசை கொண்டு எப்பொருளையும் விரும்புகின்றவர். வேண்டு திறத்தாரும் வேண்டா அரசாட்சி. (அ : 1129) [பா : பே]

வேண்டுந்திறத்தார் – ஆசை கொண்டு எப்பொருளையும் விரும்புகின்றவர். (அ : 1129)

வேண்டுவரேல் – வேண்டுவராயின். ஒன்றும் வேண்டலராயினும் ஒருவர்பால் ஒருவர் சென்று வேண்டுவரேல் அவர் சிறுமையிற்றீரார். (யுத் : 543)

வேண்டேன் வேண்டேன் – விரும்பேன் விரும்பேன். அடுக்கு வெறுப்பு மிகுதியை உணர்த்திற்று. இனி நான் வாழுநாள் வேண்டேன் வேண்டேன் என்றான். (அ : 353)

வேணி – தலைமயிர்ச் சட்டை. கூந்தற் சடை. வேணியை அரம்பை மெல்ல வரன் முறைசுகிர்த்து விட்டாள். (யுத் : 3963)

வேணு – மூங்கில். இடை மிடைந்த வேணுவின் காடு. (யுத் : 588) தாருவோ வேணுவோ. (யுத் : 101) வேணுயர் நெடுவரை. (யுத் : 1064) வேணு மால்வரைகள். (யுத் : 2017)

வேணுமால்வரைகள்–மூங்கில் நிறைந்த பெரிய மலைகள். (யுத்;2017)

வேணுமோ – வேண்டுமோ. நாயேற்கித்தனை வேணுமோ தான். (யுத் : 603) வென்ற வென்றி சொல்ல வேணுமோ. (யுத்:3336)

வேத்தவை – அரசவை. வேத்தவை முனிவரோடு விருப்பொடு களிக்கும் மெய்ம்மை ஏத்தவை. (அ : 286) வேத்தவைக் கீழுளோர்கள். (யுத் : 2781)

வேத்திரக் கையர் – பிரம்பைக் கையிலுடையவர்கள். மின்னுறு வேத்திரக்கையர். (ஆ : 575)

வேத்திரக்கையோர் – பிரம்பைக் கையிலுடையவர்கள். (யுத்:3966,2)

வேத்திரத்தாசனம் – பிரம்பினாற் செய்த ஆசனம். ஏத்தினனெய்தலும் இருத்திர் ஈண்டென வேத்திரத் தாசனம் விதியின் நல்கினான். (ஆ : 846)

வேத்திரத்தர் – பிரம்பையுடையவர். வேத்திரத்தர் எரிவிசி விழிக்கும் நேத்திரத்தர். (யுத் : 820)

வேத்திரம் – பிரம்பு. வேத்திரம் பற்றும் அங்கையினன். (யுத்:744)

வேதக் கொழுஞ்சுடர் – வேதத்தினுல் விளக்கப்பட்டுள்ள பரஞ் சோதியாகிய திருமால். வேதக் கொழுஞ்சுடரை நாடி நெடு மேனுள் ஒதத்தினூடு வரு கைடவன். (சு : 77)

வேத கீத வமிழ்து – சாம வேதமாகிய அமிழ்தம். வேத கீத வமிழ் தள்ளி விழுங்க. (யுத் : 813)

வேதங்கண்ணிய பொருள் – மறைகளின் உட்பொருள். வேத புருடனுகிய தலைவன் தன் சொற்களின் துணைக்கொண்டு உயிர் களுக்கு அறிவிக்கக் கருதிய பொருள். வேதங்கண்ணிய பொருளெலாம் விரிஞ்சனே ஈந்தான். (யுத் : 131)

வேதங்கள் காண்கிலாமை வெளிநின்றே மறையும் வீரன் – (இறை நிலையை உணர்ந்து வெளியிடுதற்கென்றே அமைந்த) வேதங்களும் காணமுடியாமல் புறத்தே நின்று மறைகின்ற சொருபத்தை யுடைய மகாவீரனுகிய திருமால். (இராமன்) (ஆ : 1027)

வேதச்சொல் – வேதச்சொற்கள். வேதச் சொல்லென்த் தொலை யாத் தூணி தூக்கி. (யுத் : 3347)

வேதத்தலைவர் – நான்மறைகளில் வல்ல தலைவரான அந்தணர். தவன் நுணங்கியரும் வேதத் தலைவரும் உணரும் சிவன். (யுத் : 1333)

வேதத்தின் அறிவை வென்றுன் - வேதங்களின் அறிவைக் கடந் துள்ளவனுகிய இராமபிரான். தமியை வேறிடத்துச்சார வெருவு வென் நங்கை என்றுன் வேதத்தின் அறிவை வென்றுன். (ஆ : 277)

வேதத்தின் சிரத்தின் போதம் – வேதத்தின் சிரமென்று புகழப் படுகின்ற பரம்பொருள். வேத மொத்தனன் மாருதி வேதத்தின் சிரத்தின் போத மொத்தனன் இராமன். (யுத் : 1183)

வேதத்தின் வரம்பின் தேற்ற மெய்ப்பொருள் – வேதங்களின் எல்லை யாகிய உப நிடத்துக்களின் சித்தாந்தமான தத்துவப்பொருள். (யுத் : 175)

வேதத்தின் வேதமன்ன அரிந்தமன் – வேதத்திற்கும் மேலான வேதம் போன்ற பகைவரை அழிக்கவல்ல இராமபிரான். (யுத் : 2676)

வேதத்துச்சி – உபநிடதம். வேதத்துச்சியின் மெய்ப்பொருட் பெயரினை விரித்தான். (யுத் : 152)

வேதத் தோட்டியின் தொடக்கு - வேதமாகிய அங்குசத்தின் பிணிப்பு. வேதத் தோட்டியின் தொடக்கில் நிற்கும் துணைக் கைம்மால் யானையன்னான். (யுத் : 2195)

வேத நன்மணி - துளையிட்டு உபயோகித்தற்குரிய நல்ல இரத்தினம். (யுத் : 3949)

வேத நன்னூல் - வேதமாகிய நன்னூல். வேதசாஸ்திரங்கள். வேத நன்னூல் மன்னுமுனிவர். (பா : 216) [பா : பே] (சு : 1227)

வேதநாதன் - வேதங்களுக்குத் தலைவனாகிய இராமபிரான். வென்றி வில்லை வேதநாதன் நாணெறிந்த வேலைவாய். (யுத் : 3335)

வேத நாயகன் - 1. வேதங்களாற் புகழப்படும் தலைவனாகிய திருமால். பூத நாயகன் புவிமகள் நாயகன் பொருவில் வேத நாயகன். (பா : 493)

2. திருமாலின் அவதாரமான இராமபிரான். வேதநாயகன் தனித்துணைவன். (சு : 1107) வேதநாயகனே உன்னைக் கருணையால் வேண்டிவிட்டான். (யுத் : 1371)

வேதநாயகன் தனித்துணைவன் - வேதங்கட்குத் தலைவனான் இராமபிரானுக்கு ஒப்பற்ற உதவி செய்பவனான அனுமான். (சு : 1107)

வேதநீதி விதிவழி - வேதங்களிற் கூறப்பட்ட நியாயமான முறைமை வழி. வேத நீதி விதிவழி மேல்வருங் காதல் நீ அறத்தெல்லை கடத்தியோ. (சு : 1142)

வேதநூல் - வேதங்கள். தொன்மைதான் வேண்ட நின்ற வேத நூல். (ஆ : 70)

வேத நூன் மரபு - வேதங்களிற் கூறிய முறைமை. வேதநூன் மரபுக் கேற்ற ஒழுக்கமே பிடிக்க வேண்டும். (யுத் : 1359)

வேத நூன் முறைபின் விதி - வேத சாஸ்திரங்களிற் கூறப்பட்ட விதி. வேத நூன் முறையின் யாவும் விதியுளி நிறுவிவேறும் நீதுளதுடைத்தி. (ஆ : 1024)

வேதப் பலிக்கடன் - வேத விதிப்படி செய்தற்குரிய பிண்டபலி முதலிய கடமைகள். பல்வகைத் துறையும் வேதப் பலிக்கடன் பலவும் முற்றி. (ஆ : 1037)

வேதப் பொருள் - வேதத்திற் கூறப்பட்ட பொருளாயிருப்பவன். வேதப் பொருளே விளையாடுதியோ. (யுத் ; 240)

வேதபாரகர் – வேதங் கரை கண்டவர். வேதம் முழுவதையும் தாம் ஐயந்திரிபற வுணர்ந்து பிறர்க்கு ஓதுவிக்கவும் வல்லவர். (பாரம் – கரை; பாரகர் – கரையை யடைந்தவர். அடைதல் – அறிதல்) ஓதநீர் உலகையும் உயிர்கள் யாவையும் வேதபாரகரையும் விதிக்க வேட்டநாள். (கி : 5) (பா : 1219)

வேதபாரகன் – நான் மறைகளைக் கண்டவன். வேதங்களின் எல்லையை யறிந்தவன். வேத பாரகன் அவ்வுரை கூறலும். (யுத் : 157)

வேதபாரன் – வேதத்தின் கரை கண்டவன். வசிட்டனும் கோசிக வேதபாரனும் மேவிய மண்டபம். (பா : 1189)

வேதம் - 1. நன்மை தீமைகளை அறிவிப்பது. வேத மனைத்தும் தேர்தர வொட்டா ஒரு மெய்யன். (கி : 1012)
2. துளையிடுகை. வேத நன்மணி வேகடஞ் செய்தன்னதூத. (யுத் : 3949)

வேதம் பொய்த்தல் – வேதவாக்குப் பொய்யாகப் போதல். வெல்வதும் பாவமோ வேதம் பொய்க்குமோ. (ஆ : 945)

வேதம் முதல் நாதன் – வேதத்திற்கு முக்கியப் பொருளாய்த் தலைவனாகின்ற இராமபிரான். வேதம் முதல் நாதன் விலக்கினனால். (யுத் : 1722)

வேதம் விளம்பிய பொருள் - மந்திரங்கள். வேதநான்கினும் விளம்பிய பொருள்களால் விளியான். (யுத் : 148)

வேதமா நவையில் சாலியின் வேலியன்னவன் – வேதங்களாகிய குற்றமில்லாத நெற்பயிருக்கு வேலியைப் போல் பாதுகாப்பாயுள்ளவன். (உருத்திரமூர்த்தி) (கி : 115) [பா : பே]

வேதமுங் காணுவள்ளல் – வேதங்களாலும் காணமுடியாத மகா உதாரனான இராமபிரான். வேதமுங் காணு வள்ளல் விழித்தனன் கண்ணை மெல்ல. (யுத் : 2856)

வேதமுடிவு – வேதத்தின் சித்தாந்தம். வேதத்தின் முடிந்த பொருள். (அண்) இதுவே வேதமுடிவு இது சரதம் என்றான். (யுத் : 252)

வேதமுதல் - வேதங்களிற் சித்தாந்தஞ் செய்யப்பட்ட முதற்கடவுளாகிய இராமபிரான். என்றான் வேதமுதல். (ஆ : 262)

வேதமும் போதமுங் காண்கிலாதான் – வேதநூல்களாலும் சிறந்த ஞானத்தாலும் காணமுடியாதவனாகிய இராமபிரான். ஏந்திழை யரங்கள் காட்டக்கண்டான் உயர் வேதமும் போதமுங் காண் கிலாதான். (சு : 579) [பா : பே]

வேதமு மறிவருமிகு பொருளுணர் வோன் – வேதங்களும் அறிதற் கரிய பரதத்துவத்தை உணர்பவனான சரபங்கன். (ஆ : 115)

வேதல் – வெந்தழிதல். உன்னை வென்றவன் புரங்கள் வேவத் தனிச்சரம் துறந்தமேரு. (சு : 451)

வேதவதி - குசத்துவ மகாமுனிவருடைய புதல்வி. இராவணனுக்குச் சாபமிட்டவள். (யுத் : 93) அன்றெரியில் விழு வேதவதியிவள் காண் உலகுக்கோர் அன்னையென்று கூறினேன். (யுத் : 3889)

வேதவித்தாய மேலோன் – பரசுராமன் தந்தையாகிய சமதக்கினி முனிவன். (பா : 1384)

வேதவித்து – வேதங்களை நன்கறிந்தவன். வேத வித்தாய மே லோன் மைந்தன் நீ. (பா : 1384)

வேத வேத்தன் – மறைகளால் அறியத்தக்கவனான இராமபிரான். வேத்தன் என்பது வேத்யன் என்பதன் திரிபு. பொருவில் வேத வேத்தன். (யுத் : 4036) [பா : பே]

வேத வேதாந்தம் – வேதம் வேதாந்தம் என்பன. வேதமும் வேதாந்த மும். வேத வேதாந்தம் கூறும் பொருளை விரிக்கின்றார் போல். (யுத் : 3214)

வேத வேதியர் – மறைகளில் தேர்ச்சி பெற்ற நான்மறையோர் (யுத் : 2762)

வேத வேந்தன் – வேதங்களுக்குத் தலைவனான இராமபிரான். வேத வேந்தனுமவன் மலர்த்தாள் மிசை விழுந்தான். (யுத் : 4036)

வேத வேலை – நான்மறை யாகிய கடல். வேத வேலையின் கரை யுளது. (யுத் : 186)

வேத வேலையின் கரையுளது – நான்மறை யாகிய ஆழியின் எல்லை யாக உள்ளது. (யுத் : 186)

வேத வேள்வியின் கரையுளது – மறைகளுக்கும் யாகங்களுக்கும் முடிந்த எல்லையாக உள்ளது. (யுத் : 187)

வேதனை - துன்பம். வேதனை முற்றிட வெந்து வெந்து. (அ : 197) மேயின அடியினின்ற வேதனை கனைய வெந்த தீயிடைத் தணிந்த தென்னத் சிதைபாற் றுயரந் தீர்ந்தான். (யுத் : 2869) (ஆ : 403)

வேதனைக்காமம் - வேதனையை யுண்டாக்குங்காமம். துன்பத்தை உண்டாக்கும் காம உணர்வு. (அண்) வேதனைக் காமம் அந்தோ வேரொடுங் கெடுத்தது. (யுத் : 905)

வேதனைக் கூனி - 1. மனத்தில் வேதனையை யுடைய கூனி. வேதனைக் கூனி பின் வெகுண்டு நோக்கி. (அ : 151)
2. முடிவில்லாத வேதனைக்குக் காரணமான கூனி. வேதனைக் கூனியை வெகுண்டும் என்னினும். (அ : 989)

வேதனைத்திருமகள் - துன்பத்தால் வாடுகின்றவளான மண்மகள். இராச்சியலட்சுமி. (அ : 1118)

வேதனையுழத்தல் - வேதனையால் வருந்துவது. வெய்யவன் கொன்று னென்றல் வேதனையுழப்பது இன்னம் உய்யவோ கருணை யாலோ. (யுத் : 2859)

வேதனை வெயிற்கதிர் - வேதனை தருகின்ற சூரிய கிரணங்கள். வேதனை வெயிற் கதிர் தணிக்க. (அ : 963)

வேதாந்தம் - வேதமுடிபு. உபநிடதம். வேத வேதாந்தங் கூறும் பொருள். (யுத் : 3214)

வேதாளக்கரம் - வேதாளத்தின் கை. வேதாளக் கரத்திவர். (யுத் : 3224)

வேதாளம் - பேய். பிசாசு. (யுத் : 3224)

வேதி - 1. வச்சிராயுதம். வலங்கையின் வயிரவேதி வைத்த வன். (சு : 37)
2. மேடை. வயிரமின் ஒளியினும் மரகத மணிவேதி. (பா : 1271) (சு : 708)

வேதிகை - 1. மேடை. பாடல் வேதிகை பட்டிமண்டபம் முதல் பலவும். (சு : 228)
2. மணவறை. தருப்பையில் ஒன்பதம் வைத்த வேதிகைச் செய்தி மனக்கொள்வாள். (சு : 353)
3. வேறுபடுத்தல். திண்டளவில் வேதிகைசெய் தெய்வணி கொல்லோ. (சு : 557)

வேதித்தல் - மாற்றுதல். பேதித்தல். வேதியாத பொழுது வெகுண்டு அவன் சாதியாது அவர் சொல்தரத்தக்கனே. (கி : 572)

வேதியர் — முனிவர்கள். மறையோர். வேதியர் அபயமென்றுர்க்கு. (யுத் : 424) (யுத் : 3124)

வேதியர் ஆகுதிப்புகை - மறையோர் ஓமகுண்டத்திற் பெய்யும் ஆகுதியால் எழுந்த புகை. அரிய வேதியர் ஆகுதிப் புகை யொடும் அளவி. (அ : 754)

வேதியர் தேவன் — 1. பிரமன். வேதியர் தேவன் சொல்லால் விளி விலா ஆயுப்பெற்றுய். (யுத் : 1353)

2. வேதியர் தலைவனுன இராமபிரான். வேதியர் தேவன் தன்னே வேண்டினே பெற்று. (யுத் : 583) (யுத் : 1383)

வேதியர் நாயகன் — அந்தணர்க்கெல்லாம் தலைவனுன பிரமன். வேதியர் நாயகன்தர நெடுந்தவத்தின் நண்ணினன் தூயவன். (யுத் : 361)

வேதியர் வாழ்த்தொலி — வேத முணர்ந்த அந்தணர் வாழ்த்துகின்ற வாழ்த்தொலி. முரசுமிழ் ஒதையை வீறு கொண்டன வேதியர் வாழ்த்தொலி. (அ : 809)

வேதியர் வேதத்து மெய்யன் — அந்தணர்கள் ஓதுகின்ற வேதத்தின் உண்மைப் பொருளாகிய இராமபிரான். வேதியர் வேதத்து மெய்யன் வெய்யவர்க்கு ஆதியன் அணுகிய அற்றம் நோக்கி ஞன். (யுத் : 3816)

வேதியர் வேதன் — வேத முணர்ந்த முனிவர்களால் தியானிக்கப் படுகின்ற இராமபிரான். வேதியர் வேதன் நின்னேக் காண்டற்கு விரும்புகின்ருன். (யுத் : 3959)

வேதியா — 1. வேறுவேருய். (வை.மு) வேதியா இறுவதேயன்றி. (பா : 1385)

2. வேதியனே. (அண்) வேதியா இறுவதேயன்றி. (பா : 1385)

3. வேதங்களினுல் விளக்கம் பெறுகின்ற பெருமானே. அரசரு ருக் கொண்ட வேதியா இன்ன முனக்கடைக்கலம் யான் வேண்டினேன். (யுத் : 1575)

வேது — வெய்து. (வெம்மை) வேது கொண்டதென்ன மேனி வெந்து வெந்து விம்முதி. (ஆ : 650)

வேது கொள்ளுதல் – வேது பிடித்தல். (ஆ : 650)

வேந்தமை இருக்கை – அரசர் தங்குதற் குரிய இருப்பிடங்கள். வேந்தமை இருக்கை எம்போல் விரதியர் விழைதற் கொவ்வா. (கி : 429)

வேந்தர்க்கு வேந்தன்–அரசர்களுக் கெல்லாம் அரசன். இராமபிரான். வெல்க வேந்தர்க்கு வேந்தன். (யுத் : 3669)

வேந்தர்க் கெல்லாம் வேந்தே – வேந்தர்களுக் கெல்லாம் பெரு வேந்தே. மெய்யின் மெய்யே உலகின் வேந்தர்க் கெல்லாம் வேந்தே. (அ : 365)

வேந்தர்கள் – அரசர்கள். வேதியர் அருந்தவர் விருத்தர் வேந்தர் கள். (அ : 938)

வேந்தர் கோன் – அரசர் கோமகன். (சனகன்) வேந்தர் கோன் ஆணை நோக்கான். (பா : 1158)

வேந்தர் கோன் ஆணை–அரசர் கோமகனாகிய சனகனது ஆணையின் சிறப்பு. (பா : 1158

வேந்தர் தம்வேந்தன் – தசரதன். (அ : 264) தாண் மலர் விழுந் தனன் வேந்தர்தம் வேந்தன். (பா : 253)

வேந்தராதி – அரசர் முதலாக. வேந்தராதி சிவிகையின் விங்கு தோள் மாந்தர் காறும். (அ : 1077)

வேந்தருக்கரசன் – மன்னர் மன்னனாகிய இராமன். (யுத் : 3409)

வேந்த வெற்பு – தலைமையுள்ள மலை. அரசத்தன்மையுள்ள மலைகள் வேந்த வெற்பை ஒருவன் விரல்களால் ஏந்தி இட்டது என் னுள்ளத்திலிட்டதால். (யுத் : 737)

வேந்தன் – அரசன். (தசரதன்) வேந்தன் பணியினால் கைகேசி மெய்ப்புதல்வன்... பாரளிப்பானாயினான். (அ : 387)

வேந்து – அரசன். இராமபிரான். இமையோர் இடுக்கண் காத்த கழல் வேந்தை. (அ : 1)

வேம் – வேகும். விடியுமேல் வெயிலும் வேம். (பா : 347) (யுத் : 2832)

வேமின் – வேகின்ற மின்னல். வீரன் சுடுசரம் வேமின் போல் வன விழ்வதன் முன்னம். (யுத் : 960)

வேமெரி - எரிகின்ற நெருப்பு. வேமெரி யதனிடை விறகிட்டென் னவே. (பா : 605)

வேய் - 1. மூங்கில். வேய் உயர்கானம். (அ : 590) வாங்கு வேய் வைத்த மென்பணைத் தோள் அஞ்சொலார். (பா : 102)

2. புனர் பூசம். வேய் புனர் பூசமும் விண்ணுளோர் புகழ் தூயகர்க் கடகமும் எழுந்துதுள்ளவே. (பா : 282)

3. புல்லாங்குழல். பயிர்கிளி வேயின் கீதம். (பா : 789)

4. ஒற்றர்கள். வேள்வி கொண்ட நல் வேந்தனுக் குரைத்தனர் வேய்கள். (பா : 516)

5. ஒற்று. ஒற்று ஒற்றியுணர்தல். வாயுரைத்த கலக் களிவாசம் வேயுரைப்பதென விளம்ப. (யுத் : 819) மாய வேய்தெரிந்து. (யுத் : 723)

6. தூது. (உ.வி) (யுத் : 819)

7. மூங்கிலாலாகிய வங்கியம். (யுத் : 2397)

வேய்கள் - ஒற்றர்கள். (பா : 516)

வேய் கொள் தோளி - மூங்கில் போன்ற தோளையுடைய ஒருத்தி. கூயள் அன்னை குறுகுதிர் ஈண்டென வேய் கொள் தோளி ஒருத்தி விளம்பினள். (அ : 833)

வேய்ங்குழல் - கொன்றைப்பழம் அன்றி மூங்கிலைத் தொளைத்து ஆக்கப்பட்ட புல்லாங் குழல். கொன்றை வேய்ங்குழற் கோவலர். (அ : 723)

வேய் செறி கானம் - மூங்கில்கள் நிறைந்த காடு. விடரகங்களும் வேய் செறி கானமும். (ஆ : 144)

வேய்த்தோள் - மூங்கில் போன்ற தோள். பணைத்த வேய்த்தோள் (பா : 218)

வேய்தல் - 1. சுடுதல். துறுமலர் வேயும் செய்கை வெறுத்தனர். (பா : 1013)

2. தாங்குதல். (அண்) துணைக்கண் தசும்பு வேய்ந்தவர் ஒத்தார். (அ : 772)

3. மூடுதல். (கலா) (அ : 772) வெந்தழலால் வேய்கேனே. (சு : 925)

4. கவிழ்த்தல். பூக்கிளர் நாணலின் புல்லுவேய்ந்து. (அ : 781)

5. அடைவித்தல். வினையின் நல்லதோர் இசையை வேய்த லோ. (அ : 1174)

வேய்தெரிதல் – ஒற்றறிதல். மாய வேய்தெரிந்துரைக்க வந்தேம் வினையினால் விர என்றார். (யுத் : 723)

வேய்ந்த – மேலெழுப்பிய. அம்பொன் மாளிகை வேய்ந்த காரகிற் புகை. (பா ; 134)

வேய்படைத்துடைய கானம் – மூங்கில் நிரம்பியுள்ள காடு. (யுத் : 3487)

வேய் புனர்பூசம் – மூங்கில் என்றொரு பெயருடைய புனர்பூச நட்சத்திரம். (பா : 282)

வேய்மென்றோள் – மூங்கில் போலும் மெல்லிய தோள். (கி : 641)

வேய்வயின் மென்றோள் கொண்டாள் – மூங்கிலினிடத்து மெல்லிய தோளைப் பெற்றவள். மின்வயின் மருங்குல் கொண்டாள் வேய் வயின் மென்றோள் கொண்டாள். (ஆ : 626)

வேய்வைத்த மென்பணைத் தோள் – மூங்கிலை வைத்தாற் போன்ற மெல்லிய பணைத்த தோள்கள். வாங்கு வேய் வைத்த மென் பணைத்தோள் அஞ்சொலார் பயிலும் அயோத்தி மாநகர். (பா : 102)

வேயிடைத் தோளினாள் – மூங்கிலின் தன்மையைத் தம்மிடத்தே கொண்ட தோள்களையுடையவள். (தாரை) வேயிடைத் தோளி னாள் இடை விலக்கினாள். (கி : 250)

வேயிடை தோளினாள் – மூங்கிலும் ஒப்பாகாமற் பின்னிடும் படியான தோளழகையுடையவள். (சீதை) அமுதின் வந்த அருந்ததிக் கற்பின் அஞ்சொல் வேயிடை தோளினாள். (ஆ : 289 (கி : 250) [பா : பே]

வேயிளந் தோள் – இளமூங்கில் போன்ற தோள். வேயிளந் தோட் சேயரிக் கண் வென்றிமாதர். (ஆ : 562)

வேயினம் – மூங்கிற் கூட்டம். மணி நிறத்திணி கல் தொடர்ந்த பாறையில் வேயினம் சொரி கதிர் முத்தம். (அ : 763)

வேயுரைத்தல் – ஒற்றுரைத்தல். கலவைக் களிவாசம் வேயுரைப்ப தென வந்து விளம்ப. (யுத் : 819)

வேயொத்த தோளினர் – மூங்கில் போன்ற தோள்களையுடைய பெண்கள். மின்னொத்த இடையினரும் வேயொத்த தோளினரும். (பா : 1019) [பா : பே]

வேர் - 1. கரு. வேரு மொழியாவகை வென்றலது மீளேன். (யுத் : 76)
2. வேர்வை. வேர்த்துளி. மாதர் மெய் பொடித்த வேர் புறத்துகு நறவம் போன்றதே. (பா : 1068) (யுத் : 3005) (யுத் : 4007)
3. மலையின் அப்புறம். வேர் மேற்பட வன்தலை கீழ்ப்பட நூக்கி. (சு : 53)
4. மூலம். (உ.வி) உலகின் வேரொத்தன செருவொத்திகல் அரக்கன் விடு விசிகம். (யுத் : 3005) வேர்படைத்த வெம்பிறவி. (யுத் : 2576) கீழ் போகிய வேர. (கி : 167)

வேர் உண்ட மாமரன் - வேர்களால் நீரை உட்கொள்ளும் பெரிய மரங்கள். வேர் உண்ட மாமரனின் அம்மலையின் வாயுறையு நீர் மண்டு பாரதனின். (கி : 823)

வேர்கள் - வேர்த்துளிகள். உதிர்ந்த வேர்களும் வாடின இல்லையால். (யுத் : 4007)

வேர்த்தல் - 1. அச்சத்தால் அன்றிக் கோபத்தல் வேர்த்தல். இந்திரனைப் போர் தொலைத்து வேர்த்தானை உயிர் கொண்டு மீண்டானை. (ஆ : 327) வேராநின்றுள். (சு : 172)
2. மனம் புழுங்குதல். வேர்த்தனர் திசை காப்பாளர். (சு : 953)
3. கோபித்தல். எய்த வாளியனைத்தையும் அறுத்து மாற்றி வேர்த்து. (யுத் : 1869)

வேர்த்தான் - அச்சத்தினுல் வேர்த்தவன். (இந்திரன்) (ஆ : 327)

வேர்ப்பித்தீர் - உடம்பை வேர்க்கும்படி செய்தீர். தென்றல் தூற்ற வேர்ப்பித்தீர். (யுத் : 1592)

வேர் படைத்த வெம் பிறவி - வேருன்றிய கொடிய பிறவி. (யுத் : 2575)

வேர்பறிதல் - 1. வேரோடு கெடுதல். பாவமும் அருந்துயரும் வேர் பறியு மென்பார். (அ : 283)
2. நிலை பெயர்த்து. மேருவும் வேர் பறிந்தாலென விழ்ந்தான். (கி : 295)

வேர் பனித்தல் - வியர் வரும்புதல். வேர் பனித்த. (யுத் : 3943)

வேர் பொடித்தல் - வேர்வை நீர் அரும்பல். வேர் பொடிப்பத் தாங்கும் வெள்ளிடை மருங்குலார். (சு : 206)

வேர் முதல் – அடிவேர். நிருதர் வேர் முதலும் வீய. (யுத் : 103)

வேர் விழுத்தல் – வேர் இறங்க விடுதல். துன்னு பொன் வேர் விழுப்பது போன்ற விண்ணெலாம். (சு : 1202)

வேர – வேரினையுடையவை. சேடன் வெள்ளி வெண்படங் குடைத்து கீழ் போகியவேர. (கி : 167)

வேரம் – சயித்தம். மலை. வில்லிடு வேரந்தன்னை வேரொடும் வாங்கி. (சு : 747)

வேர் அற நூறும் வினை – மூலமற அழிக்கும் தீவினை. மெய்யே என் தன் வேர் அற நூறும் வினை நோக்கி நையா நின்றேன். (அ : 218)

வேர் அற விளிதல் – வேரோடு அழிந்திடும்படி கொல்லுதல். வேர் அற மிதிலையோரை விளிகிலேன். (யுத் : 1630)

வேர் அற வெல்லுதல் - நீர் மூலமாம் படிகொன்று வெல்லுதல். வேர் அற அரக்கரை வென்று. (ஆ ; 955)

வேரறுத்தல் – அடியோடு தொலைத்தல். ஆர் அறத்தினொடன்றி நின்றார் அவர் வேரறுப்பன். (ஆ : 139)

வேரா நின்றாள் – வியர்வையுண்டாக நின்றாள். (சு : 172)

வேரி – 1. கள். வேரி ஒளித்தவர் உண்டு மீண்டிவ்வுலகெலா முணர ஓடிக் களித்தவர். (கி : 657)
2. தேன். வேரியந் தெரியலான். (பா : 1088)
3. நறுமணம். பரிமளம். வேரியங்கமலத்தோன். (பா : 1376) (ஆ : 722) (ஆ : 790)
4. கட்குடிப்போர் முழக்கம். (அண்) (கலா)
5. மதுபானம். (வை.மு) வேரியுமடங்கின. (சு : 253)

வேரியங்கமலை – நறுமணமுள்ள அழகிய தாமரையில் வாழ்பவளாகிய திருமகள். வேரியங்கமலை நோக்கும். (பாயி . 23)

வேரின் – வேரோடு. பிறவியை வேரின் வாங்க. (யுத் : 444)

வேரொடு – அடியோடு. வென்றேன் அவ்விராவணன் தன்னையும் வேரொடென்றான். (சு : 1006)

வேரொடு மடங்க நூறுவது – வேரோடும் ஒரு சேர நீறுக்குதல். வானரரையெல்லாம் வேரொடு மடங்க நூறுவதுவே கருமம். (யுத் : 68 )

வேரொடு முல்கைச் சுடுதல் - உலகத்தை அடியோடு சுட்டழித்தல். வேரொடு முல்கைச் சுட்டனன் எனத் துணுக்கமுற் றமாருஞ் சுருண்டார். (யுத் : 3770)

வேரோடு பாரைக்கல்லுதல் - பூமியை அடியோடு பெயர்த்தல். பாரைக்கல்லுவன் வேரோடென்னும். (யுத் : 2176)

வேல் - ஆயுதம். நேமியும் குலிசவேலும். (யுத் : 3126)

வேல் கொள்ளல் - வேற்படையைக் கைக்கொள்ளல். கொற்றவேல் கொள்ளின். (யுத் : 3268)

வேல் கிடந்தனைய நாட்டம் - வேற்படை கிடந்தாற் போலும் கண்கள். வேல் கிடந்தனைய நாட்டத்தெல்லியன் மதியமன்ன முகத்தியர். (பா : 787)

வேல் தடங்கணாள் - வேலைப்போன்ற பெரிய கண்களை யுடையவள். (யுத் : 2655)

வேல் வலிகாட்டுதல் - வேலின் வலிமையைப் போரிற் காட்டுதல். வெம்போர் வேல்வலி காட்டினார்க்கும் வில்வலி காட்டினார்க்கும். (யுத் : 882)

வேல் விழிக்கும் மாதர் - வேலாகிய விழிகளால் சினந்து விழிக்கின்ற பெண். கண்களாம் வடித்த வெங்குருதி வேல் விழிக்கும் மாதர். (அ : 1068)

வேலி - 1. நிலம்.
2. காவல். மன்னற வேலி. (கி : 326) வேலிமாமதில்கள் சூழ் இலங்கை. (யுத் : 4223)

வேலுழவன் - வேற்படையுள்ள அரசன். கொற் கொல் வேலுழவ. (பா : 665)

வேலுள நோக்கினாள் - வேல் போன்ற கண்களையுடையவள். வேலுள நோக்கினாள் ஓர் மெல்லியல். (பா : 1106)

வேலுறு சேனை - வேலை ஏந்திய சேனை. (யுத் : 2942)

வேலை - 1. கடல். வேலை யென்னும் மண்ணும் மணி முழவதிர. (பா : 716) வேலைப் பள்ளம் ஒருகை நீர் அள்ளிக் குடிக்கப் போதும் பான்மையதோ. (சு : 604)
2. எல்லை. சோலை மாநிலம் துருவியாவரே வேலை கண்டு தாமீளவல்லவர். (பா : 91)

3. பாற்கடல். தனி மந்தா மேரு வேலைத்திரிகின்றது போல். (அ : 416)
4. கரை. வடவனலை அஞ்சி வேலை கடவாத பள்ளக் கடல். (அ : 617)
5. சமயம். திரிகின்ற வேலை. (அ : 416)

வேலைக் கலம் – கடலிற் செல்லும் கப்பல். வேலைக் கலமெனக் கலங்கிற்று அண்டம். (யுத் : 2055)

வேலைக் குட்டம் – குட்டை போன்ற கடல். வேலைக் குட்டத்தைச் சேது கட்டி. (யுத் : 941)

வேலை கட்டினேன் - சேதுபந்தஞ் செய்தவனாகிய நளன். வேலை கட்டினேன் ஆயிரம் பகழியால் விழ்ந்தான். (யுத் : 2570)

வேலைகடந்தவன் – கடலைக் காலாற் கடந்தவனாகிய அனுமான். உலகு சுற்று மெயிற்றின் இடந் தெழுந்தவனை 'யொத்தவன் வேலைகடந்தவன். (யுத் : 829)

வேலை கடைந்தவர் – பாற்கடலைக் கடைந்த தேவாசுரர்கள். எறிநீர் வேலை கடைந்தவர்க்காகி ஆல முண்டவற் கண்டிலிரோ. (யுத் : 417)

வேலை கோலுதல் – கடலை வளைத்தல். வேலை கோலி யடைத்துழி. (யுத் : 954)

வேலைதட்டல் – கடலுக்கு அணைகட்டுதல். வேலை தட்டவன். (யுத் : 2570) [பா · பே]

வேலைதட்டவன் - சமுத்திரத்திற்கு அணை கட்டியவன். நளன். (யுத் : 2570) [பா : பே]

வேலை நீருடுத்த பார் – கடல் நீரை ஆடையாக உடுத்த பூமி. ஒல்லொலி வேலைநீர் உடுத்த பாலர ஓர் மெல்லியல் என்றவர் மெய்யரே கொலாம். (அ : 969)

வேலைப்பரப்பு – கடற்பரப்பு. (ஆ : 1181)

வேலைப்பள்ளக் குண்டகழி – கடல் என்று கூறப்படுகின்ற பள்ளமாகிய ஆழ்ந்த (இலங்காபுரியின்) அகழி. வேலைப்பள்ளக் குண்டகழிக்கும் விராதற்கும் வாலிக்கும்மே யாயின வாறென் வலியம்மா. (யுத் : 2608)

வேலைப்பள்ளம் – கடற்பள்ளம். (யுத் : 2608)

வேலைப்பள்ளம் நீர் – கடலின் ஆழமான நீர். வீரன்சேனை இவ் வேலைப்பள்ளம் ஒருகை நீர் அள்ளிக்குடிக்கப் போதும் பான்மை யதோ. (சு : 604)

வேலை மகரம் – கடலிலுள்ள மகரமீன். காலமழை யெனப்பொருத வேலை மகரமும் மத்தமாவும். (யுத் : 640)

வேலை மடு ஒத்து – கடல் ஒரு சிறு பள்ளம் போன்று விளங்க. வேலை மடு ஒத்து அங்கதின் வங்கமு மன்றுயக் குடுவைத் தன்மைய தாயது குன்றம். (யுத் : 231)

வேலை முரசு – வேலை யாகிய முரசு. மினிர்வேலை முரசியம்ப. (அ : 600)

வேலையன்ன மாலுள சிந்தை – கடலையொத்த காம மயக்கம் நிறைந்த சிந்தை. வேலையன்ன மாலுள சிந்தை ஆங்கோர் மழையுள தடக்கையாற்கு. (பா : 1106)

வேலையாடையின் மண் – கடலை ஆடையாக வுடைய உலகம். வேலையாடையின் மண்முது காற்றவுங் காண்டி வள்ளல் நீ. (அ : 1099)

வேலையான் – கடற் கிறைவனுகிய வருணன். ஊக்க மிக் கொண்ட வேலையான். (யுத் : 541)

வேலையினுர்ப்பினன் – கடல் போன்ற ஆரவாரத்தையுடையவன். மடித்த வாயினன் வேலையினுர்ப் பினன்... பிசாசன் தோன்று வான். (யுத் : 2285)

வேலையுலகு – கடலாற் சூழப்பட்ட உலகம். (யுத் : 3384)

வேலைவாயமுதன்னுள் - பாற்கடலில் தோன்றிய அமுதம் போல்பவளா கிய சீதாபிராட்டி. வேலைவா யமுதன்னுளும் வீரனும் விரித்த நாணல் மாலைவாய்ப் பாரின் பாயல் வைகினர். (அ : 665)

வேலை விளிம்பார் மண் – சுற்றிலும் கடல் சூழப்பெற்ற பூமி. (வை.மு) விண்ணினை வேலைவிளிம்பார் மண்ணினை ஓடி வளைந்தார். (சு : 1234) [பா : பே]

வேவ – வேகும்படி. புரங்கள் வேவத் தனிச் சரந் துரந்த மேரு. (சு : 451)

வேவாத - வேவாதன. வெந்து போகாமலிருப்பன. மின்னினேடு இடியும் வேமென்னில் வேறு யாவை வேவாதவே. (பா : 347)

வேழக் கன்று - யானைக் கன்று சின வேழக் கன்று. (யுத் : 211)

வேழக்குலம் - யானைக் கூட்டம். வெள்ள நூற்றை யோர் வில்லின் வேழக் குலங்களினேடுங் கொல்லக்கூடுமோ என்ன. (யுத் : 2553)

வேழத்தரசு - அரச யானை. (அ : 598)

வேழ நெடும்படை - பெரிய யானைப்படை. வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ. (அ : 1007)

வேழம் - 1. யானை. மானும் வேழமும் நாகமும். (பா : 952)
2. மூங்கில். மாதர் தோள் மானும் வேழமும் நாகமும் மாடெலாம். (பா : 952)
3. வாத்தியங்களின் இசை. வெருவரு முழக்கென வேழ மார்த்தெழ. (யுத் : 4192)
4. கரும்பு. கண்புக்க வேழவில்லால் நாரநாண் மலர்க் கணை யால் எய்யும் மாரனுர். (யுத் : 3911)

வேழம் ஆர்த்தெழல் - வாத்தியங்களின் இசைகள் ஆராவாரித்தெழுதல். (யுத் : 4192)

வேழம் பிணிப்போர் - யானைகளைக் கட்டுபவர். புதுக்கொண்ட வேழம் பிணிப்போர் புனைபாட லோதை. (பா : 973)

வேழ முத்து - யானையினிடம் தோன்றிய முத்து. குங்குமப் பொதியிற் கலந்த வேழமுத்திமைப்பன காணுய். (அ : 742)

வேழவில் - கரும்புவில். கண்புக்க வேழவில். (யுத் : 3911)

வேழவில் தடக்கைவீரன் - கரும்பு வில்லையுடைய உருவிலியாகிய மன்மதன். மேவலாந் தகைமைத்தல்லால் வேழவில் தடக்கை வீரற்கு ஏவெலாங்காட்டுகின்ற இணை நெடுங்கண் ஓர் ஏழை. (பா : 1028)

வேள் - மன்மதன். வேளை வென்ற உழத்தியர். (பா : 55)

வேள்வி - 1. யாகம். அபிசார யாகம். (மரணத்தைக் கருதிச் செய்யும் யாகம்) வேள்வியின் அந்தணர் ஆக்கி ஆணையின் வந்துறவிடுத்ததோர் வயவெம் பூதமோ. (சு : 1114)

2. விவாகம். உன் புதல்வன் வேள்விதான் விரைவின் இன்று ஒரு பகல் முடித்தல் வேட்கையோ. (பா : 814)

3. விவாக ஓமம். வேள்வி தொடங்கிய வெங்கனல் சூழ்வரு போழ்தில். (பா : 1335)

வேள்விச் செல்வம் – பல வேள்விகள் செய்ததனால் வந்த சுவர்க்க போகம். வேள்விச் செல்வம் துய்த்திகொல். (அ : 599)

வேள்வித்துறை - யாகத்துறைகள். உயர்ந்த வேள்வித் துறை யெலாங்கரையுங் கண்டாய். (யுத் : 1616)

வேள்வி நிரப்பல் – வேள்விகளை நிறைவுறச் செய்தல். நெய்யார் பெருவேள்வி நிரப்பி. (யுத் : 2643)

வேள்வி நெடும் பகை – வேள்விக்குப் பெரிய சத்துரு. நெய்யழல் வேள்வி நெடும்பகை நேர் விண்தைவரு சூரிய சத்துரு. • (யுத் : 2273)

வேள்விமுயலல் – யாகத்தைச் செய்து முடித்தல். புதல்வரை அளிக்கும் வேள்வி நிதற முயலின் ஐய சிந்தை நோய் தீரும் என்றான். (பா : 209)

வேள்வியின் பகைஞன் – யஜ்ஞஹா. செருவின் வானை வென்றுளான் வேள்வியின் பகைஞன் ஓர் வெய்யோன். (யுத் : 498) (யுத் : 56)

வேள்வியுண்பாய் நீ ஊட்டுவாய் நீ – யாகங்களில் அவிர்ப்பாகத்தை ஏற்றுக் கொள்பவனும் நீ அதை உண்பிக்கின்ற யஜமானனும் நீ. மண்பால் அமரர் எண்பால் உயர்ந்த எரி யோங்கு நல்வேள்வி உண்பாய் நீ ஊட்டுவாய் நீ. (ஆ : 1185)

வேள்வி யோம்புவோர் – யாகத்தை விதிமுறை தவறாது செய்பவர்கள். ஓராவுதி கடைமுறை வேள்வி யோம்புவோர் அராவணைய மலனுக்களிப்பரால். (யுத் : 198)

வேள்வி வகுத்தல் – யாகத்தைச் செய்தல். வகுப்பலியான் வேள்வி. (பா : 672)

வேளையே காயும் நெற்றிவிழியினன் – மன்மதனையே எரிக்கவல்ல நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான். வேளையே காயுநெற்றி விழியினன் மேவு மென்பூப் பூளையே சூடுவானைப் பொருவு மாமுனிவன். (யுத் : 4306)

வேளை வென்ற முகத்தியர் - மன்மதனையும் வென்ற முகத்தையுடைய பெண்கள். (பா : 55) [பா : பே]

வேளை வென்ற விழிச்சியர்-மன்மதனையும் தம் கண்களால் வென்ற மங்கையர். வேளை வென்ற விழிச்சியர் வெம்முலை ஆளைநின்று முனிந்திடும் அங்கொர் பால். (பா : 55)

வேற்கடற்றனை - வேற்படைத் தொகுதியைத் தன்னகத்தே கொண்ட சேனை. (யுத் : 918)

வேற்கண் - வேல் போலுங் கண். திட்டாத வேற்கண். (அ : 408) (அ : 753)

வேற்கணர் - வேல் போலும் கண்களையுடைய மங்கையர். கொற் கொள் வேற்கணர். (அ : 753)

வேற் பெருங்கடல் - வேற்படையை யுடைய காலாட் சேனையாகிய சமுத்திரம். (சு : 301)

வேற்ற - வேறுபட்டவை. பறவையும் விலங்கும் வேற்றவும் அஞ்ச தொழிலஞ்சின சித்திரத்தினே. (யுத் : 22)

வேற்றடங்கலர் - நம்மோடு வேறுபட்ட பகைவர். வேற்றடங்கலர் ஊரென மெல்லிதால். (அ : 829)

வேற்றலை - வேல்தலை. வேலின் நுனி. உயிரது குடிக்கும் கூர்த்த எள் வேற்றலை வெரிநிற் காண்பெனல். (யுத் : 1681)

வேற்றவர் - வேறானவர். (அரக்கர்) பகைவர். அமரரும் அச்ச மெய்தினர் வேற்றவர் ஆர்த்தனர். (யுத் : 3746)

வேற்றூர்கள் - அயலார்கள். வேற்றூர்கள் திறத்திவன் தஞ்சமென் வீர என்றான். (கி : 270)

வேற்றுக்கொடியாள் - மாற்றவளாகிய கொடியவள். (அண்) பெற்ற தாய்க்கு வேறுபட்ட கொடியவள். (வை.மு) வேற்றுக்கொடியாள் விளைத்த வினைக்கு விம்மி. (அ : 417)

வேற்றுக்கோல் - வேறு வாளிகள். (வை.மு) மாறான அம்புகள். (அண்) வேற்றுக்கோல்கொடு விலக்கினன். (யுத் : 3511)

வேற்றுப்புலத்தோன் - பகைவன். வேற்றுப்புலத்தோன் அலன். (சு : 58)

வேற்றுமை - வேறுபாடு. உருவின் வேற்றுமை நண்ணினர். (யுத் : 1065)

வேற்ரோர் - பகைவர். வேற்ரோர் ஏவ இத்தலே எய்தினனே. (சு : 1157)

வேறல் - வெல்லுதல். வேறல் வினையன்ருல். (சு : 608)

வேறழைத்தல் - வேருகச் சொல்லப்படுதல். அமுதுடைக் கோர நீக்கி வேறழைத்த தீ விடத்தினை அருந்தலாகுமோ. (அ : 25)

வேறி - வென்றுகொள். வெல்வா நீயேல் வேறி. (சு : 182) தீயனவயெல்லாம் வேறி. (சு : 682)

வேறிடம் - வேறு தனியிருக்கை. வேறிடமியற்றினன் மிதிலே நாடிக்கும். (அ : 782)

வேறிலாமன்னர் - வேறுபட்ட கருத்தில்லாத மன்னர். வேறிலா மன்னரும் விரும்பி இன்னது கூறினர். (அ : 78)

வேறு - 1. மற்றும். வேரோர் கட்டுரை (பா : 728) வீரரை வேறு அஞ்சுற்றூ. (ஆ : 771) (அ : 1055)
2. மாறு. வேறு செய்வதோர் வினை பிறிதின்மையான். (சு : 1033)
3. தனிமை. வேறு இருத்தி மற்றினைய சொல்லினன். (அ : 557)

வேறுகாட்டும் - தனியே எடுத்துக் காட்டும். வேறு காட்டுமோர் வெறுமையை. (யுத் : 1080)

வேறுகாண்டல் - தனித்தனி பிரித்து நோக்குதல். வெவ்வேருகப் பகுத்துநோக்குதல். விங்கிய பொருளெலாம் வேறு காண்பன. (யுத் : 190)

வேறு கொண்டிருத்தல் - தனியே அழைத்துக்கொண்டு ஓரிடத்தில் இருத்தல். காண்டியெனிற்குறி கேட்டி என வேறு கொண்டிருந்து கழறலுற்ருன். (கி : 775) வென்றியான் அடியேன் தன்னை வேறு கொண்டிருந்து கூறி. (சு : 523)

வேறுசெய்தல் - வெளிப்படுத்தல். வெண்ணகை வேறு செயா. (யுத் . 1753)

வேறுதல் - வெல்லுதல். உலகெல்லாம் வேறமெனும் நுங்கள் குலம். (ஆ : 614)

வேறு நீங்குறு - விட்டு நீங்கி. மிகுந்திறன் மைந்தரை வேறு நீங்குறு. (பா : 383)

வேறுபடர் படர - வேருகச் செல்லுதலைப் பொருந்த. நிரையிலுடல் தழுவி வேறுபடர் படர. (யுத் : 3421)

வேறுபடல் - 1. மாறுபடல். புந்திவேறுற்ற போழ்தில். (கி : 363) 2. வேறுபல பேதப்படல். யாவரும் எவருமாய் எண்ணில் வேறுபட்டு. (யுத் : 193)

வேறுபாடு - பாகுபாடு. (வை.மு) பேதங்கள். (வெ.ப) மாறுதல். (கலா) பூதமைந்தும் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம். (சு : 1)

வேறுபாடுற்ற வீக்கம் - திரிபுணச்சியால் உண்டாகிய அறியாமையின் மிகுதி. (கலா) பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்குகின்ற கற்பனையாகிய அறியாமையின் மிகுதி. (அண்) (சு : 1)

வேறுபெயர்தல் - வேறிடத்துக்குச் செல்லுதல். வேறு பெயராத வகை வேரொடு மடங்க நூறுவதுவே கருமம். (யுத் : 68)

வேறும் - 1. வென்று விடுவோம். உலகெல்லாம் வேறுமெனும் நுங்கள் குலம். (ஆ : 614) (ஆ : 1020)
2. மற்றுமுள்ள. வேத நான் முறையின் யாவும் விதியுளி திறுவி வேறும் நிதுள துடைத்தி என்ருன். (ஆ : 1024)

வேறுமுறைமை - மாருன முறைமை. (வை.மு) பழியுடைத் தாக்கினன் பரதன் பண்டெனும் மொழியுடைத் தாக்கலின் முறைமை வேறுண்டோ. (அ : 866)

வேறு மோரணை - வேருெரு அணை. கொற்றவன் கொலையம்பால் வேற்றுக் கையையும் வேலையின் இட்டனன் வேறுமோர் அணையாக. (யுத் : 1568)

வேறு வேறு - வெவ் வேறு. வேறு வேறு துணிசெய்து. (ஆ : 32)

வேறு வேறு படுதல் - வெவ்வேருகத் தாக்குதல். வெவ்வேருகப் படுதல். (அண்) நூறு மாயிர முங்கணை நொய்தினின் வேறு வேறுபடுதலின் வெம்பியே. (யுத் : 1032)

வேறு வேறுற - 1. வேறு வேருன. வேறு வேறறச் சில மொழி விளம்பினுள். (பா : 1093)
2. தனித்தனி யாகுமாறு. வேறு வேறுற நொறுக்கி நுண் பொடி யாக்கினுன். (யுத் : 2023)

வேறுள மகளிர் – (அவரின்) வேறான பெண்கள். மாதர்கள் கற்பின் மிக்கார் கோசலை மனத்தை ஒத்தார்... வேறுள மகளி ரெல்லாம் சீதையை ஒத்தார். (அ : 251)

வேறுளோர் – வேறுபட்ட பகைவர். வேறுளோர் செற்றது மில்லை. (அ : 856)

வேற்ற – வேறுபட்ட. வேற்ற மனத்தவன். (சு : 577)

வேறுருவகை – வேறுபட்டுத் தோன்றுதபடி. மேவுரும் அணுவும் ஓர் வேறுரு வகை. (யுத் : 622)

வேறோர் கூற்றம் தேடிக்கொண்டேன் – வேறோர் யமனைத் தேடிக் கொண்டவளானேன். பாவி தேவியாகக் கொண்டேனல்லேன் வேறோர் கூற்றந் தேடிக் கொண்டேன். (அ : 343)

வேனகு சரம் – வேல் போற் கூரிய அம்பு. வேனகு சரமும் வில்லும் வாங்கினான் விரையலுற்றான். (ஆ : 798)

வேனகு நெடுங்கண் – வேற் படையை அவமதிக்கின்ற நீண்ட கண்கள். வேனகு நெடுங்கட் செவ்வாய் மெல்லியல். (யுத்:1229)

வேனல் – வசந்த காலம். வேனல் வேள். (பா : 1181)

வேனல் வேள் – வசந்த காலத்துக் குரிய மன்மதன். (பா : 1181)

வேனில் – 1. இள வேனில், முது வேனில், சித்திரை முதல் இவ்விரு மாதம். வசந்தருது. சிசிர நீங்கி வேனில் வந்திறுத்த தன்றே. (ஆ : 658)

2. கோடை காலம். வேனில் விளையாடு சுடரோன். (சு : 709)

வேனில் ஓடு அருந்தேர் – வேனிற் காலத்தில் நீரோடுவது போன்று தோன்றும் அரிய பேய்த்தேர். வானிலோடு மகளிர் மயங்கினார் வேனிலோடருந் தேரிடை வீழ்ந்தனர். (சு : 1198)

வேனில் மதன் – வேனிற் காலத்துக்குரிய மன்மதன். வேனின் மதனை மதனழித்தான் மீண்டான் என்ன. (அ : 613)

வேனில் விளையாடு சுடரோன் – கோடை காலத்தில் மிகுதியாகக் காய்கின்ற சூரியன். (சு : 709)

வேனில் வேள் – 1. மன்மதன் வேனில் வேளொடு. (பா : 1181) [பா : பே]

2 இராமன். வானவர் குலத்தெம் வரத்திருல் வரும் வேனில் வேள். (பா : 822)

வேனிலான் – மன்மதன். வசந்தகால மன்னன். வேனிலானன்ன இலக்குவன். (யுத் : 1438)

வேனிலின் வேந்தன் – கோடைக் காலமாகிய அரசன். காய்ந்த அக் கடுவனங் காக்கும் வேனிலின் வேந்தன். (பா : 355)

## வை

வை – கூர்மை. வையராவிய மாரன்வாளி. (அ : 239) வைவாய் எஃகு. (யுத் : 1227) வைஎயிறு. (யுத் : 893)

வைகல் – 1. நாள். பகல். வைகல் தானும் வைகினுர். (ஆ : 73)
2. துயிறல். தூங்குதல். கரியவன் வைகுறும் வெள்ளப்பாற் கடல். (பா : 704)
3. காலம். வந்தெணைக்கரம் பற்றிய வைகல் வாய். (சு : 640)

வைகலான் – சூரியன். நாள் செய்வான். வைகலானும் வைகினுன். (ஆ : 73) [பா : பே]

வைகலும் – ஒவ்வொரு நாளும். வைகலும் புனல்குடைபவர் வானர மகளிர். (கி : 19)

வைகறை – விடியற்காலம். வளைந்தில வைகறை மலருமாமலர். (ஆ : 683)

வைகுதல் – 1. தங்குதல். கழித்தல். சேர்ந்து தங்குதல். முனி பணியால் பையுள் நகரம் வைகிட. (அ : 617) பாரின் பாயல் வைகினர். (அ : 665) வைகுதிர். (அ : 722) வைகுதியெனின். (அ : 674) கடலுள் வைகுவார். (யுத் : 569)
2. செல்லுதல். தானையான் வானில் வைகிட. (அ : 886)
3. நிலைத்திடல். வைகலும் வாழ்வெனப் பொழுது போக்கினுர். (யுத் : 3901)
4. அத்தமித்தல். வைகலானும் வைகினுன். (அ : 73) [பா : பே] எரிகதிரும் வைகினுன். (கி : 38)
5. காலங்கழித்தல். நீ வருந்திணை இருப்ப யான் வாழ்வின் வைகினேன். (கி : 695)
6. வாழ்தல். மன்னுயிர் காத்திருங்காலம் வைகினேன். (சு : 600)

7. பயிலுதல். அருமறை வைகும் நாவினன். (ஆ : 853)
8. பொருந்தியிருத்தல். மோக வென்றிமேல் முயல்வின் வைகிடச் சோக மெய்தினேன். (சு : 131)

வைகுந்தம் – திருமால் உலகம் மாமறை தூய பாற் கடல் வைகுந்தஞ் சொல்லலாம் ஆயசாலே. (அ : 785)

வைகுறுதல் – தங்குதல். என்னை நீங்கி இடர்க்கடல் வைகுறும் மன்னர் மன்னன். (அ : 315) வைகலிர். (ஆ : 861)

வைகுறும் – தங்கும். இடர்க்கடல் வைகுறும் மன்னர் மன்னன். (அ : 315)

வைகுறை – தங்கும் படியான உறை. அவ்வூர் வைகுறை ஒக்கும் நயனத்தாள். (சு : 176)

வை கொள் வேல் – கூர்மையான வேல். வை கொள் வேலெனக் காலனு மற்குறுங் கண்ணாய். (ஆ : 7720)

வைத்த – ஏற்றப்பட்ட. (பா . 841)

வைத்தமா நிதி – பிற்காலத்துத் தனக்கு உதவுமாறு சேமித்து வைத்தனவாகிய பெருஞ் செல்வம். உய்த்து வாழ்தா வேறொரு பொருளிலான் உதவ வைத்தமா நிதி. (ஆ : 971)

வைத்தல் – 1. அனுக்கிரகித்தல். வந்தொர் கண்மணி நிற்கென வைத்ததும். (சு : 688.d)
2. கூறுதல். நிற்கென வைத்ததும் வைப்பாய். (சு :688.d)
3. வைத்தலைச் செய்தல் வைத்த மண்ணெடும் விங்கு தோள்மீக் கொண்டு விண்ணினேகினன். (ஆ : 949)
4. செய்தல். ஒரு மன்னென வைக்குவெனல். (யுத் : 1714)
5. சேமித்து வைத்தல். வைத்த மாநிதி. (ஆ : 971)
6. ஏற்றுதல். பாண்டிலின் வைத்த ஓர் பாவை. (பா : 840)
7. நுழைதல். புண்மேல் வைத்த தீ. (யுத் : 2604)

வைத்தலை வயங்கு வாளிகள் – கூரிய முனையோடு விளங்கும் அம்புகள். (யுத் : 1505)

வைதருப்ப மண்டலன் - விதர்ப்ப மென்னும் நாடு. (கலா) விதர்ப்ப தேசத்தைச் சேர்ந்த பூமி. (கலா) விதர்ப்பநாடு. (அண்) வைதர்ப்ப மண்டலனில் வந்து புக்கு. (கி : 907)

வைதல் - 1. சபித்தல். வைகின்றுாலல்லர். (யுத் : 2418) நிய வைவனே உலகை என்னும். (யுத் : 1614) வையுமேல். (யுத் : 4015) நியவைவலோ. (யுத் : 1614) [பா : பே]
2. வசவு மொழி கூறல். வருணனை வைத மாதோ. (யுத்:597) வைது கொன்றனரே. (யுத் : 1462) மன்னனை வைதுரையா. (யுத் : 1683)

வைத வெஞ்சொல் – திட்டிய கொடிய சொல். வைத வெஞ் சொலின்... எய்த. (கி : 925)

வைதவைவின் – சபித்த சாப மொழியால். வைதவைவின் மராமரம் ஏழ்தொளை எய்த எய்தவற் கெய்திய மாக்கதை. (பா : 5)

வைதவைவினில் – திட்டிய வசவு போல. செய்த மாதவத் தொரு வனைச் சிறு தொழிற்றீயோன் வைதவைவினில் ஒழிந்தன. (யுத் : 3521)

வைத வைவு – சபித்த சாப மொழி. (பா : 5) திட்டிய வசவு. (யுத் : 3521)

வைதாலன்ன வாளிகள் – (முனிவர்கள்) சபித்தாற் போன்ற அம்புகள். வைதாலன்ன வாளிகள் கொண்டுன் வழியோடுங் கொய்தானன்றே கொற்ற முடித்துன் குழுவெல்லாம். (ஆ:742)

வைதாலென – சபித்தாற் போன்று. (யுத் : 1120)

வைதாவின வடிவாளிகள் - கூர்மை பொருந்தியவாக இனமான வடிக்கப்பட்ட அம்புகள். இற்றீகென இடையே வைதாலென வைதாவின வடி.வாளியின் அறுத்தான். (யுத் : 1120)

வைது கொல்லல் - சபித்து ஒழித்தல். வைது கொலினல்லது. (யுத் : 3409)

வைதெனக் கொல்லும் விற்கை மானிடர் – சாபம் பெற்றாற் போலக் கொல்லுகின்ற வில்லைக்கொண்ட மானுடர். வைதெனக் கொல் லும் விற்கை மானுடர் மகர நீரை நொய்தினின் அடைத்து. (யுத் : 757)

வைதேவி – சீதாபிராட்டி. விதேக நாட்டரசன் மகள். நையா இடை நோவா நடத்திடுவாள் வைதேவி. (ஆ : 775)

வைப்பு - 1. ஊர். இடம். நிலம். மருதவைப்பு. (பா : 384)
2. தானம். வேத முற்றியங்கு வைப்பின். (சு : 1155)
3. பொருள். வரம் பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும்- (அ : 1)
4. உலகம். (உ.வி) (சு : 1155)
5. வெற்றிடம். ஞாலமும் விசும்பும் வைப்பறத் தூயினன். (யுத் : 3813)

வையகங் காவன் மதலே - உலகங்களைக் காத்தல் வல்ல தசரத சக்கரவர்த்திக்குத் திருமகனே. வையகங் காவன் மதலை வந்த தோர் வெய்ய வெங் கொடுந்துயர் விளைவுகேளெனு. (ஆ : 128)

வையகந் துறத்தல் - இராச்சியத்தைக் கைவிடுதல். வையகந் துறந்து வந்தடவி வைகுதல் எய்திய துனக்கென. (அ : 1105)

வையகப் போனகன் - உலகமுண்ட திருமாலின் அம்சமான இராம பிரான். ஏனை நீதி இனையன வையகப் போனகற் கியம்பி. (அ : 119).

வையகம் - 1. உலகம். எற்பின் வையகம் மறுகுறும் என்பதோர் மறுக்க முண்டரோ. (பா : 182)
2. பூமி. பகழிகள் பாகரைத்தடிந் தோடிக் குடைந்து வையகம் புக்குற. (யுத் : 1539)

வையகமுற்று நடந்த வாய்மை மன்னன் - உலகம் முழுமையும் பிரசித்திபெற்ற சத்தியத்தையுடைய தயரதன். நெஞ்செரியுற் றென நெஞ்சழிந்து சோரும் வையகமுற்று நடந்த வாய்மை மன்னன். (அ : 208)

வையஞ்சிலையாறு - வை அம் சிலை ஆறு. கொண்டுள்ள அழகிய வில்லின் வழியால்- அஞ்சனை கான் முளைமேல் வையஞ்சிலையாறு வழங்கினனுல். (யுத் : 2321)

வையஞ் சேர்தல் - 1. இறந்து விழுதல். வையஞ் சேர்வான் அழைத்த வல்லோசை. (சு : 569)
2. பூமியில் சோர்ந்து விழுதல். வையஞ் சேர்ந்தான். (யுத் : 2160)

வையத்தேவர் - அந்தணர். வையத்தேவரும் வானந்தன்னில் தேவரும். (ஆ : 728)

வையநாதன் - உலகநாதன். வையநாதன் சரணம் வணங்கியே. (யுத் : 690)

வையநாயகன் – இராமபிரான். வையநாயகன் வடிக்கணை குடித்திட வற்றி. (யுத் : 561)

வையநுகர் கொற்றவன் – உலகனைத்தையும் உண்ட வெற்றி வீரனாகிய இராமபிரான். வைய நுகர் கொற்றவனு மாதவரு மல்லார் கைகள் தலைபுக்கன. (பா : 1235)

வையப்போனகன்-உலகையுண்ட திருமால். இராமபிரான். ஏனை நீதி இனையன வையப்போனகற்கு இயம்பி. (அ : 119)

வையம் – 1. பூமி. உலகம். வையந்துஞ்சும் வன்பிடர் நாகம். (யுத் : 3805) செத்திலன் வலியன் நின்றேன் என்றுபோய் வையஞ் சேர்ந்தான். (யுத் : 2160)

2. உலகத்தார். வையமென்னை இகழவும். (பா : 6)
3. அறிஞர்கள். (உ.வி) (பா : 6)
4. வண்டி. பாண்டிலின் வையத்தோர். (பா : 841)
5. நாடு. நகரம். வனத்திருக்க இவ்வையம் புகுதுக யுத் : 4137) வையம் பற்றிய மங்கையர். (பா : 1180)
6. உலகத்துயிர்கள். இனி வையம் மாநரகத்திடை வைகுமோ. (அ : 642)

வையம் துஞ்சும் வன்பிடர் நாகம் – இவ்வுலகம் தங்குகின்ற வலிய பிடரையுடைய ஆதிசேஷன். (யுத் : 3805)

வையம் பற்றிய மங்கையர் – அந் நகரத்தினிடத்துப் பொருந்திய மாதர்கள். வையம் பற்றிய மங்கையர் எண்ணிலர். (பா : 1180)

வைய மங்கை – பூமியாகிய மங்கை. வைய மங்கை பொலிந்தனள் மங்கலச் செய்ய கோலம் புனைந்தன்ன செய்கையாள். (யுத் : 3393)

வைய மருகா வினைபுரிவான் – நிலவுலகிலுள்ளவர்க்கு அணுகி நோக்குவதற்கும் இயலாத சிற்பத் தொழிலைப் புரிபவனான விசுவகன்மன். வையம் அருகா வினைபுரிவானுளன் அவனுலமைவனவாம். (பா : 1374)

வைய மாளுடை நாயகன் – பூமியை ஆளுதலையுடைய இராமபிரான். வைய மாளுடைய நாயகன் மலர்ச் சரண் வணங்கி. (யுத்:4076)

வையமும் வானும் வாய்மடுத்துண்டவன் – மண்ணையும் விண்ணையும் தன் வாயில் இட்டுண்ட திருமால். வையமும் வானும் வாய் மடுத்துண்டவன் மணியணி யுதர மொத்ததே. (பா : 129)

வைய முற்றும் வயிற்றினடக்கிய ஐயன் - உலக முழுவதையும் தன் வயிற்றிலே ஒரு காலத்து அடக்கிவைத்த தலைவன். (இராமபிரான்) வைய முற்றும் வயிற்றின் அடக்கிய ஐயனிற் பெரியார் இனி யாவரே. (பா : 1167)

வையமேழுமொ ரேழும் ஆருயிரோடு கூடவழங்கும் அம் மெய்யன் - உலகம் பதினான்கையும் அரிய உயிரோடு சேர்த்துக் கொடுக்கும் அம் மெய்ம்மையாளன். தசரதன். (அ : 244)

வைய மையல் - உலகமயக்கம். வையமையல் தோன்று நெறிவாழ் துணைத்தம்பி. (அ : 431)

வைய மையல்தோன்று நெறி வாழ்துணைத்தம்பி - பரதன். (அ : 431)

வையெயிறு - கூரிய பற்கள். (யுத் : 893)

வைவன - பிறர் இகழ்ந்து கூறும் பழிச்சொற்கள். வைவன வந்த போதும் வசைஇல இனிது கூறல். (கி : 420)

வைவன முனிவர்சொல் - சபிக்கின்றனவான முனிவரின் சாபச் சொற்கள். வைவன முனிவர் சொல்லனைய வாளிகள். (யுத் : 1792)

வைவு - சாபம். வெகுண்டு கூறும் சொல். வைதவைவின் மரா மரம் ஏழ்தொளை எய்த எய்தவற் கெய்திய மாக்கதை. (பா : 5) தெய்வ நாயகன் தெரிசுணை திசைமுகத் தொருவன் வைவு இதாமெனப் பிழைப்பில. (யுத் : 566) தீயவைவோ உலகை. (யுத் : 1614) வைவன முனிவர் சொல். (யுத் : 1792)

## வெள

வெள - வெளவுதல். கவ்வுதல். வெள விலங்கு வளர்த்தவர். (யுத் : 648)

வெளவிலங்கு - வெளவிக் கொள்ளுந் தன்மையுடைய விலங்கு. (யுத் : 648)

வெளவுதல் - அபகரித்தல். கவர்தல். இரவலர் அருநிதி எறிந்து வெளவினேன். (அ : 891) மாயையால் வஞ்சித்தன்றோ வெளவுதல் அவளை என்றான். (ஆ : 765) வெளவினன். (கி:147) அரசு வெளவ. (அ : 1167)

வெளவுதல் செய்தான் - கவர்ந்தான். மாவலி யென்பான் வானமும் வையமும் வெளவுதல் செய்தான். (பா : 436)

கம்ப ராமாயண அகராதி முற்றும்.

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 18 | குட்டற்தேயு | குட்டற்கேயு |
| 79 | 9 | மலங்கிளர் | மலங்கினர் |
| | 10 | (அ : 1037) | (அ : 1047) |
| 83 | 3 | ஒப்பற்றலைவனுமாகிய | ஒப்பற்ற தலைவனுமாகிய |
| 88 | 22 | காற்றடித்ததும். | காற்றடித்தலும். |
| 114 | 6 | மாயை யுணர்த்துவன் | மாயை புணர்த்துவன் |
| 130 | 15 | சேலும் | சேறும் |
| 146 | 20 | கீதம் | சீதம் |
| 156 | 28 | யீனுயர்த்தவன் | மீனுயர்த்தவன் |
| 170 | 9 | மூடுக வந்தான். | முடுகவந்தான. |
| 179 | 4 | கோள்கிலேன் | கொள்கிலேன் |
| | 25 | நினைந்திட | நினைத்திட |
| 188 | 1 | முரட்டடத்தண்டு | முரட்டடந்தண்டு |
| 189 | 13 | அகரனுக்கு | அசுரனுக்கு |
| 192 | 31 | கணங்கின | சுணங்கின |
| 209 | 3 | துய்ப்பன் | தென்புலத்துய்ப்பன் |
| 215 | 15 | வேடங்கொண்ட | கோபங்கொண்ட |
| 232 | 8 | மெய்யறு | மெய்யது. |
| 240 | 15 | இமுங்கணையால் | இருங்கணையால் |
| 242 | 23 | வேன்ருய் | வென்ருய் |
| 249 | 8 | வீளைவை | விளைவை |
| 294 | 3 | என்பர் | என்பவர் |
| 301 | 29 | வரமுளி | வரமுனி |
| 306 | 10 | சிரணியாக | சீரணியாக |
| 307 | 2 | யிம்மணரசராய் | யிம்மண்ணரசராய் |
| 308 | 1 | வலியு | வலிய |
| 331 | 24 | வருவதுண்டேர | வருவதுண்டோ |
| 332 | 8 | வற் மாயின் | வற்கமாயின் |
| 335 | 16 | துறந்தான் | துறந்தாள். |
| 336 | 14 | வன்புலித்போத்து | வன்புலிப்போத்து |
| 337 | 2 | நமக்கெள | நமக்கென |
| 356 | 32 | தார்க்குறு | வார்க்குறு |
| 359 | 5 | வராலேயோ | வாரலேயோ |
| | 14 | வாராதன் போல | வாராதான்போல |
| 361 | 12 | பாலகில்லரும் | வாலகில்லரும் |
| 375 | 19 | மறிற்றென | மறிந்தென |
| 382 | 15 | சமர்த்தியம் | சாமர்த்தியம் |
| 386 | 2 | விசைய | விசைய |
| 394 | 7 | செலித்துபவனுன | செலுத்துபவனுன |
| 405 | 28 | பயைப்படப்பட | படை படப்பட |
| 414 | 20 | விரும்பு | விரும்பி |
| 435 | 18 | விற்றிருதுதன் | விற்றிருநுதன் |
| 492 | 28 | வண்ணப் | வென்னப் |
| 522 | 20 | நெஞ்செரி | நெய்யெரி |

# சுலபமாகத் திருத்தக்கூடிய பிழைகள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 18 | கடல் | [illegible]டல். |
| 32 | 5 | (பா : 4959) | [illegible]:495) |
| 65 | 11 | மழவர்தனமணிய | மழவர்தமணியன. |
| 80 | 6 | பழியடையுண்டாம் படிசெய்த | பழியுண்டாம்படிசெய்த. |
| 97 | 3 | கோடு | கேடு |
| 104 | 3 | (வசிட்டன் | (வசிட்டன்) |
| 113 | 17 | ஞ்சனைஒற்று. | வஞ்சனை ஒற்று. |
| 126 | 18 | (யுத் : 2139 | (யுத் : 2139) |
| 136 | 14 | என | என் |
| 150 | 5 | மீட்டுக்கொண்டாயே | மீட்டுக் கொண்டாயோ |
| 156 | 27 | மனமதன் | மன்மதன் |
| 191 | 22 | முருட்டொடும | முருட்டொடும் |
| 192 | 22 | விலங்கென | விலங்கென் |
| 225 | 3 | மூரிகவெஞ்சிலை | மூரிவெஞ்சிலை. |
| 248 | 11 | வரப்போவது | வரப்போவது. |
| 267 | 13 | சிறிதும் | சிறிதும். |
| 286 | 16 | பயிலல் | பயிலல். |
| 292 | 7 | வதைத்தலாகிய கல்வி | வதைத்தலாகிய கல்வி. |
| 302 | 29 | தோஷம் | தோஷம். |
| 315 | 5 | லங்கடிந்து | வலங்கடிந்து |
| 323 | 7 | வழிக்கடன்வகுத்தி | வழிக்கடன்வகுத்தி– |
| 334 | 7 | கொடன்றியும | கொடன்றியும். |
| 355 | 23 | நாகன் | நாகன். |
| 352 | 13 | வெண்மணற்குன்று | வெண்மணற்குன்று |
| 369 | 3 | நணம் | நாணம் |
| 375 | 7 | பறித்தகுழி | பறித்த குழி |
| | 8 | (சு : 72) | (சு 725) |
| 378 | 28 | தனே | தானே |
| 381 | 19 | ஒருபொருட் பன்மொழி | ஒருபொருட் பன்மொழி. |
| 383 | 25 | லங்கற்றேள் | விலங்கற்றேள் |
| 384 | 16 | விடைவலோன் | விடைவலான் |
| 396 | 26 | மேகம் | மேகம். |
| 401 | 12 | (வை.மு. | (வை. மு.) |
| | 25 | தோற்றுவித்தல | தோற்றுவித்தல். |
| 411 | 3 | கலத்தல் | கலத்தல். |
| 413 | 21 | (சாம்பவான் | (சாம்பவான்) |
| 417 | 9–10 | போன்றவன் | போன்றவன். |
| 420 | 15 | விலங்கிபபோதல் | விலங்கிப்போதல் |
| 424 | 4 | வில்லெடும் | வில்லொடும் |
| 432 | 27 | நிகழ்ந்தல் | நிகழ்தல் |
| 433 | 9 | ளையாடி | விளையாடி |
| 442 | 7 | விதல் | வீதல் |
| 448 | 10 | வீடுதல் அழிதல் றத்தல் | வீடுதல் அழிதல். இறத்தல். |
| 453 | 4 | பொருள | பொருள் |
| 455 | 25 | 4. வேவவேறுதல் | 4. வெவ்வேறுதல் |
| 465 | 8 | கரு நருப்பினிடையே | கருநெருப்பினிடையே |
| | 13 | மெலவதே | மெல்வதே. |
| 484 | 26 | வேர். | வேர. |
| 522 | 3 | (அ : 1 | (அ : 1) |